# சங்க இலக்கியத்தில்
# வாழ்வியல் உரிமைகள்

முனைவர் (பிஎச்.டி.) பட்டப் பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெற்ற ஆய்வேடு


ஆய்வாளர்

**ப. எழிலன்,** எம்.ஏ., எம்.ஃபில்., பி.எல்.,
முனைவர் பட்ட ஆய்வாளர்
(பகுதிநேரம்)
தமிழ்த்துறை

நெறியாளர்

முனைவர் **கி. ஆதிநாராயணன்,** எம்.ஏ., எம்.ஃபில், பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
அரசினர் ஆடவர் கலைக்கல்லூரி (தன்னாட்சி)
நந்தனம், சென்னை–600 035.





**தமிழ்த்துறை**

**அரசினர் ஆடவர் கலைக் கல்லூரி**

**(தன்னாட்சி)**

நந்தனம், சென்னை - 600 035.

**ஜனவரி – 2017**

**முனைவர் கி. ஆதிநாராயணன்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அரசினர் ஆடவர் கலைக் கல்லூரி (தன்னாட்சி),
நந்தனம், சென்னை–600 035.

# நெறியாளர் சான்றிதழ்

**"சங்க இலக்கியத்தில் வாழ்வியல் உரிமைகள்"**

என்னும் தலைப்பில் **ப. எழிலன்** அவர்கள் முனைவர் பட்டப் பேற்றிற்காக (பகுதிநேரம்) நிகழ்த்தியுள்ள இந்த ஆய்வு என் மேற்பார்வையின் கீழ் ஆய்வாளரின் சொந்த முயற்சியினால் உருவாக்கப்பட்டது என்றும் இதற்கு முன் இந்த ஆய்வேடு வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கோ ஆய்வரங்கிற்கோ அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம் : சென்னை–600 035.

நாள் :

**(கி. ஆதிநாராயணன்)**

நெறியாளர்

முனைவர் கி. ஆதிநாராயணன்
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
அரசினர் ஆடவர் கலைக்கல்லூரி (தன்னாட்சி)
நந்தனம், சென்னை – 600 035

**ப. எழிலன்,** எம்.ஏ., எம்.ஃபில்., பி.எல்.,
முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்),
தமிழ்த்துறை,
அரசினர் ஆடவர் கலைக் கல்லூரி (தன்னாட்சி),
நந்தனம், சென்னை–600 035.

# ஆய்வாளர் உறுதிமொழி

**“சங்க இலக்கியத்தில் வாழ்வியல் உரிமைகள்”**

என்னும் தலைப்பில் முனைவர் பட்டப் பேற்றிற்காக (பகுதிநேரம்) நிகழ்த்தப் பெற்றுள்ள இந்த ஆய்வு என்னுடைய சொந்த முயற்சியில் உருவாக்கப்பட்டது என்றும் இதற்குமுன் இந்த ஆய்வேடு வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கோ ஆய்வரங்கிற்கோ அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம்: சென்னை–600 035.
நாள் :

(ப. எழிலன்)
ஆய்வாளர்

# நன்றியுரை

எல்லாம் வல்ல இறைவனுக்கு முதற்கண் என் மனமார்ந்த நன்றி உரித்தாகட்டும்.

சங்ககாலத் தமிழர்தம் வாழ்வியல் உரிமைகளை உலகறியச் செய்யும் வகையில் 'சங்க இலக்கியத்தில் வாழ்வியல் உரிமைகள்' என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய விழைந்த எனக்கு வாய்ப்பளித்த சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு என் நன்றி.

இவ்வாய்வினைச் செய்ய அனுமதி அளித்த நந்தனம் அரசினர் ஆடவர் கலைக்கல்லூரியின் முதல்வர் அவர்களுக்கும் மற்றும் தமிழ்த்துறைத் தலைவர் அவர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நந்தனம் அரசினர் ஆடவர் கலைக்கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியர் முனைவர் கி. ஆதிநாராயணன் அவர்கள் இன்முகத்தோடு என்னை ஆய்வு மாணாக்கராக ஏற்று ஆய்வு நிகழ்த்த வழிகாட்டியும் மேற்பார்வை செய்தும் நெறிப்படுத்தினார்கள் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வாய்வேட்டினைத் திருத்தவும் செப்பம் செய்யவும் ஆலோசனைகளைத் தந்து உதவிய நண்பர் பேராசிரியர் முனைவர் கெ.இரவி அவர்களுக்கு என் நன்றி.

எங்களை ஆளாக்க தங்களை நூலாக்கிய என் பெற்றோர் திரு.த.மா. பலராமனார் மற்றும் திருமதி. மு. தமிழரசி அம்மையார் அவர்களுக்கு என் நன்றி.

ஆய்விற்குத் துணைநின்று அமைதியான சூழலை ஏற்படுத்திதந்து உதவிய ஆவடி ஏழாம் நாள் அட்வெந்து திருச்சபை போதகர் மற்றும் விசுவாசிகள் அனைவருக்கும் என் நன்றி.

சிறுவயது முதற்கொண்டு என் மீது கொண்ட மிகுந்த அன்பின் காரணமாக ஆய்வினை விரைந்து முடிக்க ஊக்குவித்த என் மாமா திரு.மு. அன்பழகனார் அவர்களுக்கு என் நன்றி உரியது.

ஆய்விற்குத் தேவையான புத்தகங்களை வாங்கிக் கொடுத்து உதவிய மரியாதைக்குரிய திரு.ச. ஜெயபால் அவர்களுக்கு என் சிறப்பான நன்றி.

என் வளர்ச்சியில் எப்பொழுதும் அக்கறை கொண்டு மகிழும் என் சித்தப்பா திரு.த.மா. வாசுதேவன் அவர்களுக்கு என் நன்றி.

நான் இவ்வாய்வு செய்யத் தூண்டுகோலாயிருந்து ஆய்வின் தொடக்கம் முதல் இறுதிவரை அனைத்து நிலைகளிலும் பல்லாற்றானும் உதவிகள் செய்து என்னை ஆற்றுப்படுத்தி ஊக்குவித்த ஜெ. ஜெபசீலி அவர்களுக்கும் நன்றியுடையேன்.

என் இளம் பருவம் முதற்கொண்டு என்னுடன் நட்பு பூண்டு ஆய்விற்கு உதவிய நண்பர்கள் திரு. இரா. கோபால் மற்றும் திரு. பெ. சிவக்குமார் அவர்களுக்கும் என் நன்றி.

என் தம்பி பிள்ளைகள் மு. கயல்விழி, மு. ஜீவன், இ. டேனியேல் ஜோஷ்வா மற்றும் இ. அபிகாயேல் ஆகியோருக்கு என் நன்றி.

ஆய்விற்குத் தேவையான நூல்களைக் கொடுத்து உதவிய சென்னைப் பல்கலைக்கழக நூலகத்தார்க்கும், ரோஜா முத்தையா நூலகத்தார்க்கும், கன்னிமாரா நூலகத்தார்க்கும். டாக்டர். உ.வே.சா. நூலகத்தார்க்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வேட்டினை மிகச்சிறந்த முறையில் வடிவமைத்து அழகுபடுத்தி உதவிய டுடே கிராபிக்ஸ் உரிமையாளர் திரு. பாபு அவர்களுக்கும் ஊழியர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | – | அகநானூறு |
| ஆசாரக். | – | ஆசாரக் கோவை |
| இன்னா. | – | இன்னா நாற்பது |
| இன்னி. | – | இன்னிலை |
| இனியவை. | – | இனியவை நாற்பது |
| ஏலாதி. | – | ஏலாதி |
| ஐங்குறு. | – | ஐங்குறுநூறு |
| கலித். | – | கலித்தொகை |
| குறள். | – | திருக்குறள் |
| குறிஞ்சி. | – | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | – | குறுந்தொகை |
| சிலம்பு. | – | சிலப்பதிகாரம் |
| சிறுபஞ்ச. | – | சிறுபஞ்சமூலம் |
| சிறுபாண். | – | சிறுபாணாற்றுப்படை |
| திரிகடு. | – | திரிகடுகம் |
| திருமுருகு. | – | திருமுருகாற்றுப்படை |
| தொல். | – | தொல்காப்பியம் |
| நற். | – | நற்றிணை |
| நாலடி. | – | நாலடியார் |
| நான்மணி. | – | நான்மணிக்கடிகை |

| | | |
|---|---|---|
| நெடுநல். | – | நெடுநல்வாடை |
| பட்டினப். | – | பட்டினப்பாலை |
| பதிற்றுப். | – | பதிற்றுப்பத்து |
| பழமொழி. | – | பழமொழி நானூறு |
| பரி. | – | பரிபாடல் |
| புறம். | – | புறநானூறு |
| பெரும்பாண். | – | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | – | பொருநராற்றுப்படை |
| மணி. | – | மணிமேகலை |
| மதுரை. | – | மதுரைக்காஞ்சி |
| முதுமொழி. | – | முதுமொழிக்காஞ்சி |
| முல்லை. | – | முல்லைப்பாட்டு |
| மலை. | – | மலைபடுகடாம் |
| மேலது | – | மேற்கண்ட நூல் |

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் சங்க இலக்கியங்கள் சிறப்பிடம் பெற்று விளங்குகின்றன. முடியாட்சி காலத்தில் புலவர்களும், சான்றோர்களும் தாம் உணர்ந்த உணர்வுகளையும், எண்ணிய எண்ணங்களையும் வாழ்வியல் கருத்துகளாக மன்னனுக்கும், மக்களுக்கும் அறிவுறுத்தி நல்வழிப்படுத்தவும், அமைதியான நல்வாழ்வு பெறவும் நெறிபடுத்தியுள்ளனர். அவ்வாழ்வியல் கருத்துகள் வாழ்வியல் உரிமைகளாக உருப்பெற்று இன்று மனித உரிமைகளாக வளர்ச்சியடைந்துள்ளன.

ஒவ்வொரு மனிதனும் தன் மதிப்பை உணர்ந்து மற்றவர்களின் உணர்வுக்கு மதிப்பளித்துச் சுதந்திரமாக வாழும் நிலையே வாழ்வியல் உரிமையாயிற்று. தனிமனித உரிமைகளுக்கு எவ்வித பாதிப்பும் இல்லாத நிலை இருந்தால் தான் ஒரு சமுதாயம் நல்ல நாகரிகமுடையது என ஏற்றுக்கொள்ள முடியும். தனிமனித உரிமைகளின் வளர்ச்சியே சமுதாயத்தின் முன்னேற்றத்திற்கு அடிகோலுகிறது.

தனிமனித உரிமைகள் எல்லையற்றதாக அமைந்திடினும், சமுதாய நலனை முன்னிட்டு அதனைக் கட்டுப்படுத்துவதும் அரசின் கடமை என்ற வகையில் அது தன் கடமையை நிறைவேற்றச் சட்டம் வகுத்தது. அரசின் ஒப்புதல் பெற்ற தனிமனித நலன்களே உரிமைகளாக மாற்றமடைந்தன.

மனிதன் பிறக்கும்போதே அவனுக்கான உரிமைகளும் இயற்கையாகவே அமைந்து விடுகின்றன. அவ்வகை உரிமைகள் எவராலும் பறிக்க இயலாதன. சாதி, மதம், பால், இனம், மொழி, நிறம் ஆகியவற்றிற்கு அப்பால் ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் பொதிந்திருக்கக்கூடிய

பிறப்புரிமைகளுடன் அவனது வாழ்விற்கும், கண்ணியத்திற்கும், நலன்களுக்கும் அவசியமானவைகளே மனித உரிமைகளாகும்.

மனித உரிமைகள் வாழ்வியல் உரிமைகளின் உள்ளடக்கம். தனிப்பட்ட மனிதனுக்கு மட்டும் இன்றி ஒட்டுமொத்தச் சமுதாயத்திற்கும் அவசியமான மனித உரிமைகள் நாடு, பண்பாடு என்ற எல்லைகளைக் கடந்து எல்லா மதங்களுக்கும், நம்பிக்கைகளுக்கும், ஒழுக்கக்கோட்பாடுகளுக்கும் பொதுவானவை.

மனிதனின் ஆளுமைக்கும், அவன் வளர்ச்சிக்கும், மகிழ்ச்சிக்கும் தேவைப்படும் மனித உரிமைகளின் பொருண்மை காலம், இடம், சமுதாயம், பொருளாதாரச் சூழல் போன்றவற்றிற்கு ஏற்ப மாறுபடுகின்றது.

மனித உரிமைகள் என்பது நேற்றோ இன்றோ உருவானதல்ல. காலங்காலமாக நம் சமுதாயம் பின்பற்றி வருகின்ற ஒன்று. உரிமைகள் பெற்ற ஒவ்வொருவருக்கும் கடமையும் கண்முன் நிற்கின்றது. உரிமையும் கடமையும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்களைப் போன்று பிரிக்க இயலாதன. வாழும் மக்கள் அனைவர்க்கும் உரிமைகள் உள்ளதைப் போன்று அவரவர்க்குரிய கடமைகளும் உள்ளன. தனிமனிதனாயினும், சமுதாயமாயினும், உரிமைகளும் கடமைகளும் இணைந்த வாழ்க்கை முறையே வாழ்வியல் உரிமைகளாகும்.

சங்க இலக்கியங்களில் புலவர்களின் அறிவுரைகளாகவும் சான்றோர்களின் அறக்கருத்துகளாகவும் அமைந்த வாழ்வியல் உரிமைகள் அவர்களால் பேசப்பட்டும் கடைப்பிடிக்கப்பட்டும் நடைமுறைப்படுத்தப்பட்டும் இருந்திருக்கின்றன. இவ்வுரிமைகளே இக்காலத்தில் பெரிதும் போற்றக்கூடிய மனித உரிமைகளாகப் புது வடிவம் பெற்றிருக்கின்றன.

## ஆய்வின் தேவை

மக்கள் கூடி வாழும் வாழ்வை மையப்படுத்தியதே சமுதாயம் ஆகும். தனிமனிதர்கள் ஒன்றாகச் சேர்ந்த நிலையில் இனக்குழுக்கள் பலவாக அமைந்தன. திணை சார்ந்த தமிழ்ச் சமுதாய மக்களிடையே உணவு, உடை, பழக்கவழக்கங்கள், பண்பாட்டுக் கூறுகள், சடங்குகள், நம்பிக்கைகள் போன்றவற்றால் அவரவர் விரும்பிய சமயத்தைப் பின்பற்றவும், வழிபடவும் தொடங்கினர். நாகரிக வளர்ச்சியும் பகுத்தறிவுச் சிந்தனையும், கல்வியறிவின் இன்றியமையாமையும் புதிய புதிய சிந்தனைகளையும் தோற்றுவித்தன. மனிதனின் தேவைகள் மிகுதியாயிற்று. மக்கள் பல இடங்களுக்கும் இடம் பெயர்ந்து குடிகளை அமைத்துக்கொண்டு வாழ்வாதாரங்களைப் பெருக்கிக் கொண்டமையால் தனிபட்ட ஒவ்வொருவரும் தம் உரிமைகள் நிலை நாட்டப்படவேண்டும் என்ற திண்ணிய எண்ணத்தால் உரிமைகள் பற்றிய சிந்தனை மலரத்தொடங்கியது.

சமத்துவம், சகோதரத்துவம் ஒற்றுமை இவற்றின் அடிப்படையில் அடிப்படையான உரிமைகள் மனித வாழ்வில் நிலைபெற்றிட ஆக்கப்பூர்வமான செயல் திட்டங்கள் வகுக்கப்பட்டு அவைகளே பிற்காலத்தில் சட்டங்களாயின.

தனிமனிதனுக்கும், சமுதாயத்திற்கும் என உருவாக்கப்பட்ட சட்டதிட்டங்கள் ஒரு சில வரன்முறைகளோடு ஏற்றுக்கொள்ளப்பட்ட நிலையில் நாட்டுக்கும், மக்களுக்கும் தேவையான அடிப்படை உரிமைகளை வரையறை செய்தன. சட்டத்தால் அங்கீகரிக்கப்பட்ட வாழ்வியல் உரிமைகள் மனித உரிமைகளாயின. இத்தகைய மனித உரிமைகள் பற்றிய சிந்தனைகள் தமிழ் இலக்கியங்களில் அகப்பாடல்களிலும், புறப்பாடல்களிலும் அதிகமாகக் காணப்படுகின்றன. சங்க இலக்கியங்களில் காணப்படும் வாழ்வியல்

உரிமைகள் அனைத்தும் தற்காலத்தில் மனித உரிமைகளாக வளர்ச்சியடைந்த நிலையினையும், சட்டத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டு நடைமுறைப்படுத்தப்பட்ட நிலையினையும் சமுதாயத்திற்கு எடுத்துரைக்க வேண்டியதன் விளைவே "சங்க இலக்கியத்தில் வாழ்வியல் உரிமைகள்" என்ற இந்த ஆய்வுத் தலைப்பாகும்.

## ஆய்வுத்தலைப்பு

சங்க இலக்கியத்தில் வாழ்வியல் உரிமைகள் என்னும் பொருளில் இந்த ஆய்வு அமைகிறது. பாடபேதம், திணை, துறை, கூற்று போன்றவை பற்றிய கருத்து வேறுபாடுகள் இந்த ஆய்வில் இடம்பெறவில்லை.

## ஆய்வுநோக்கம்

பழந்தமிழர்கள் வாழ்வியல் உரிமைகள் உடையவர்களாகவும் நேர்மையான வாழ்க்கை முறைமைகளைப் பின்பற்றியும் வாழ்ந்தனர். சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள வாழ்வியல் உரிமைகளை ஆய்வது இந்த ஆய்வின் நோக்கம்.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் ஆய்வு எல்லையாக அமைகிறது.

## ஆய்வு அணுகுமுறை

சங்க இலக்கியத்தில் வாழ்வியல் உரிமைகள் என்னும் இந்த ஆய்வு, பகுப்புமுறை, விளக்கமுறை, மதிப்பீட்டு முறை ஆகிய அணுகுமுறைகளைப் பின்பற்றி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வு முன்னோடி

திரு. கா. கலைமணி அவர்களின் சங்க இலக்கியத்தில் மனித உரிமைகள் எனும் தலைப்பில் மார்க்ஸிய நோக்கில் அமைந்த ஆய்வும், ஆ. அரிகிருஷ்ணன் அவர்களின் பாரதிதாசன் பாடல்களின் மனித உரிமைகள் என்னும் ஆய்வும் இந்த ஆய்விற்கு முன்னோடிகள் எனினும் வாழ்வியல் உரிமைகள் எனும் தலைப்பில் இதுவரை எவரும் சங்க இலக்கியத்தில் ஆய்வு நிகழ்த்தப்பெறாமையால் இந்த ஆய்வு முன்னோடியாகத் திகழ்கிறது.

## ஆய்வு மூலங்கள்

சங்க இலக்கியத்தில் வாழ்வியல் உரிமைகள் என்னும் இந்த ஆய்வுக்கான மூலங்கள் இருநிலைகளில் அமைந்துள்ளன. அவை,

1. முதன்மை மூலங்கள்
2. துணைமை மூலங்கள்

## 1. முதன்மை மூலங்கள்

சங்க இலக்கியத் தெளிவுரை, விளக்கவுரை நூல்கள் முதன்மை மூலங்கள்.

## 2. துணைமை மூலங்கள்

சங்க இலக்கியம் பற்றிய ஆராய்ச்சி நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வேடுகள், திறனாய்வு நூல்கள், அகராதிகள் மற்றும் மனித உரிமைகள் பற்றிய அறிஞர்களின் கட்டுரைகள், துணைமை மூலங்கள்.

## ஆய்வேட்டின் அமைப்பு

இந்த ஆய்வேடு முன்னுரை முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பாகுபடுத்தப்பட்டுள்ளது. அவை,

இயல் ஒன்று : **மனித உரிமைகள் தோற்றம், வளர்ச்சி, வரலாறு**

இயல் இரண்டு : **வாழ்வியல் உரிமைகள்**

இயல் மூன்று : **அரசியல் உரிமைகள்**

இயல் நான்கு : **சமூகப் பண்பாட்டுப் பொருளாதார உரிமைகள்**

இயல் ஐந்து : **மனித உரிமைகள் அன்றும் இன்றும்**

என்பனவாகும்.

## இயல் விளக்கம்

### முன்னுரை

முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறை, ஆய்வு முன்னோடி, ஆய்வேட்டின் அமைப்பு, இயல் விளக்கம் ஆகியவை இடம் பெற்றுள்ளன.

### இயல் ஒன்று: மனித உரிமைகள் தோற்றம், வளர்ச்சி, வரலாறு

இவ்வாய்வின் முதலியலில் மனித உரிமைகள் தோற்றம் வளர்ச்சி வரலாறு எனும் தலைப்பில் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. மனிதன் – மனிதம் பொது நிலை – மனிதநேயம் – இனக்குழுக்கள் – மனிதனும் சமூகமும் – மனித வழக்கங்களும் சட்டமும் – மனிதனும் உரிமையும் – இயற்கை உரிமை – உரிமைகள் பொருள் விளக்கம் – மனித உரிமைகள் வரையறை – மனித உரிமைகளின் வளர்ச்சி – மனித உரிமைக்கான தேவைகளும் எதிர்ப்பார்ப்பும் பன்னாட்டளவில் மனித உரிமைகள் – இந்தியாவில் மனித உரிமைகள் –

மனித உரிமைகள் தொடர்பான இந்தியச் சட்டங்கள் – இந்திய அரசியலமைப்புச்சட்டத்தில் மனித உரிமைகள் – இலக்கியங்கள் காட்டும் பொதுவான வாழ்வுரிமைகள் – மனையறம் – அரசாட்சி முறை – பொதுமை அறம் – போர் போன்றவை பொதுநிலையில் ஆராயப்பெற்று விளக்கம் பெறப்பட்டுள்ளன.

## இயல் இரண்டு : வாழ்வியல் உரிமைகள்

வாழ்வியல் உரிமைகள் எனும் இவ்வியலில் சங்ககாலத்தில் மக்கள் பெற்றிருந்த வாழும் உரிமை – அமைதியான வாழ்வு – மாண்புடன் வாழும் உரிமை – நோயற்ற வாழ்வு – பிற உயிர்களையும் தன்னுயிர் எனப் போற்றியப் பண்பு – தனிக்குடித்தனம் – குடிகளைக் காக்கும் முறை – வீரம் – காதல் – கொடை – உணவு பெறும் உரிமை – உறைவிடம் – தெய்வ நம்பிக்கைகள் – பேய் – பாம்பு – மனிதன் குறித்த நம்பிக்கைகள் – வழிபாட்டுரிமை – இல்லற உரிமை – திருமண உரிமை – சுதந்திர உரிமை – நட்புரிமை – ஒன்றாகக் கூடும் உரிமை – விரும்பிய இடங்களுக்குச் செல்லும் உரிமை – பொழுதுபோக்குரிமை – தொழில்கள் போன்றவற்றை வாழ்வியல் உரிமைகளோடு தொடர்புபடுத்தி ஆராய்பெறுகிறது.

## இயல் மூன்று : அரசியல் உரிமைகள்

அரசியல் உரிமைகள் எனும் இவ்வியலில் மக்கள் பகையின்றி மனவளம் காத்தல் – அரசுரிமை – குட வோலை முறைத் தேர்வு முறையிலான வாக்களிக்கும உரிமை – வரிவசூலிக்கும் உரிமை – ஐம்பெருங்குழு எண்பேராயம் – நீதி பெறும் உரிமை – தூது – ஆட்சியின் மாட்சி போர் முறைகள் – மன்னிப்புபெறும் உரிமை – வழக்காடும் உரிமை – சிறைப்பிடிக்கப்பட்டவர்கள் மாண்புடன் நடத்தப்படுவதற்கான உரிமை – அரசுப் பணி செய் உரிமை – அரசினை விமர்சிக்கும் உரிமை

வெளிப்படையான விசாரணைக்கான உரிமை – மேல்முறையீட்டு உரிமை – பாதுகாப்பு உரிமை ஆகியன ஆராயப்பெறுகின்றன.

## இயல் நான்கு : சமூகப் பண்பாட்டுப் பொருளாதார உரிமைகள்

சமூகப் பண்பாட்டுப் பொருளாதார உரிமைகள் எனும் இவ்வியலில் சமத்துவ உரிமை – ஆண்பெண் சமத்துவம் – சடங்குகள் – பொருளிட்டும் உரிமை – கடல் கடந்து வாணிகம் செய்யும் உரிமை – பண்டமாற்று, நுகர்வோர் உரிமை – சுற்றுச் சூழல் காப்புரிமை – விளையாட்டு – சமய உரிமை – பெண்களுக்கான உரிமை – மகப்பேறு உரிமை – பரத்தையருக்கான உரிமைகள் போன்றவை குறித்த விளக்கங்கள் இவ்வாய்வில் இடம்பெறுகின்றன.

## இயல் ஐந்து : மனித உரிமைகள் அன்றும் இன்றும்

மனித உரிமைகள் அன்றும் இன்றும் எனும் இவ்வியலில் குற்றமும் தண்டனைகளும் – பொய் வழக்கு – அடிமைநிலை – கல்வி பெறும் உரிமை – குழந்தை நலம் பேணுதல் – இற்செறித்தல் – சிறைக்கைதிகளுக்கான உரிமை – ஏறு தழுவுதல் – சொத்துரிமை – கலப்புமணம் – பெண்ணுரிமை பாதுகாத்தல் – களவு மணங்களின் போக்கு – உரிமைகளும் கடமைகளும் – தற்கொலை போன்ற இலக்கியங்கள் காட்டும் வாழ்வியல் உரிமைகள் இன்றைய சட்ட விதிகளோடு ஒப்பு நோக்கி ஆராய்கின்றது.

## முடிவுரை

ஒவ்வொரு இயலிலும் கண்டறியப்பட்ட ஆய்வு முடிவுகள் அந்தந்த இயலின் இறுதியில் தொகுப்புரையாகத் தரப்படுகின்றன. ஐந்து இயல்களிலும் கூறப்பட்ட கருத்துகள் ஆய்வின் முடிவுகளாகத் தொகுத்துரைக்கப்படுகின்றன. மேலாய்வுக்களங்களும் சுட்டப் பெறுகின்றன.

## துணைநூற்பட்டியல்

ஆய்விற்குப் பயன்படுத்தப்பட்ட முதன்மை நூல்கள், துணைமை நூல்கள் என்ற நிலையில் அகர நிரலில் இடம் பெறுகின்றது.

## பின்னிணைப்பு

அனைத்து உலக மனித உரிமைகள் பிரகடனம்.

மனித உரிமைகள் பாதுகாப்புச் சட்டம்.

மனித உரிமைகள் குறித்த மாதிரிப்புகார் படிவம்

போன்றவைகள் பின்னிணைப்பில் இடம் பெறுகின்றன. இவ்வாறு இவ்வாய்வேடு அமைக்கப்பட்டுள்ளது.

முன்னர் ஒரியலில் ஒரு காரணம் பற்றி உணர்த்தப் பெற்ற வாழ்வியல் கருத்து, அவற்றைத் தெரிவிக்க வந்த விளக்கங்கள் முதலியன பின் வரும் சில இயல்களின் வேறு காரணம் பற்றி இடம் பெறுவது தவிர்க்க இயலாததாயிற்று. அவை வெவ்வேறு சூழல்களின் காரணம் பற்றி ஆளப் பெற்றனவேயாம்.

இயல் - ஒன்று

# மனித உரிமைகள் தோற்றம், வளர்ச்சி, வரலாறு

## முன்னுரை

உலக அளவில் பல்வேறு வகையான புதுப்புதுக் கொள்கைகளும், கோட்பாடுகளும், சிந்தனைகளும் உருவாகி வளர்ச்சி நிலைக்கு அடித்தளம் அமைக்கின்றன. இத்தகைய புது விதமான சிந்தனையின் வெளிப்பாடும், சீர் தூக்கிப் பார்த்து அறிந்திட முற்படும் மனப்போக்கும், சிந்தித்துச் செயலாற்றும் எண்ணமும் மனித வளர்ச்சியில் செல்வாக்குப் பெற்று வருகின்றன.

மனித இனம் அனைத்திற்கும் பொதுவானதும் தேவையானதாகவும் திகழ்கின்ற மனித உரிமைக் கோட்பாடானது தற்காலத்தில் சமூக, அரசியல், பொருளாதாரச் சூழலில் தவிர்க்க முடியாத காரணியாகக் காணப்படுகின்றது.

மனித உரிமைகள் என்பது மனிதன் மனிதனாக வாழ அவன் கையாளும் நெறி முறைகளை உள்ளடக்கியதாகும். சமூக நலன் கருதி சில வரைமுறைகளோடு ஏற்றுக் கொள்ளக் கூடியதே மனித உரிமைகளாகும். இத்தகைய உரிமைகள் காலத்தின் தேவைக்கேற்பப் பரந்து விரியும் தன்மை கொண்டது. காலச் சூழலில் இவ்வுரிமைகள் மாற்றம் பெற்று பல்வேறு வடிவம் கொண்டு வளர்ந்து வருகின்றன. மாற்றம் என்பது தவிர்க்க முடியாதது. இல்லையெனில் வளர்ச்சி என்பது தேக்க நிலையை அடைந்து விடும். அமைதியான வாழ்வு, சமத்துவம், சகோதரத்துவம், சுதந்திரம், தனிமனித மாண்பு, சமமான வாய்ப்பு, சட்டத்தின் முன் அனைவரும் சமம், வர்க்க

பேதங்களற்ற சமுதாயம் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு கட்டமைக்கப்பட்டதே மனித உரிமைகள் என்னும் கருத்துருவாக்கம்.

வளர்ச்சியடைந்த நாடுகளும், வளர்ந்து கொண்டிருக்கும் நாடுகளும் செயல்படுத்தத் துடித்துக் கொண்டிருக்கும் மனித உரிமைகள் என்ற கருத்துரு திடீரென்று இன்றோ நேற்றோ தோன்றி விடவில்லை. அது நீண்ட நெடிய வரலாற்றைத் தன் பின்புலத்தில் கொண்டதாகும். எங்கெல்லாம் ஆளும் வர்க்கமும், அதிகாரப் போக்கும் ஒடுக்கப்பட்டவர்களின் உரிமைக் குரல் வளையை நசுக்க முற்பட்டதோ அங்கெல்லாம் இவ்வுரிமைகளின் எச்சங்கள் கருக்கொண்டிருந்ததைக் காண முடியும். பல்வேறு போராட்டங்கள் மற்றும் கலகங்களின் வழியே பிரசவித்ததே மனித உரிமைகள். இதனை,

> **“இது இன்று நேற்று துவங்கியதல்ல ஆதிக்கத்துக்கு எதிராக முதலில் எங்கெல்லாம் கலகங்கள் எழுந்ததோ அங்கெல்லாம் மனித உரிமைப் போட்டத்தின் புராதனக் கூறுகளைக் காணலாம்”**[1]

என்பர் சு.பொ. அகத்தியலிங்கம்.

மனிதன் மனிதனாக வாழ அவன் கையாளும் நெறிமுறைகளோடு கூடியவை மனித உரிமைகள் சமூக நலன் கருதி ஏற்றுக்குக் கொள்ளப்பட்ட இவ்வுரிமைகளின் தோற்றம், வளர்ச்சி, வரலாறு, சங்க இலக்கியத்தில் காணப்படும் பொதுவான வாழ்வுரிமைகள் குறித்து பொது நிலையில் இவ்வியல் மனித உரிமைகள் தோற்றம், வளர்ச்சி, வரலாறு குறித்து ஆய்கிறது.

**மனிதன்**

உலக உயிரினங்களிடையே சிந்தனை, பேச்சு, செயல் அறிவு, ஆற்றல் என அனைத்திலும் உயர்ந்து நிற்பவன்; நிலைப்பவன் மனிதன். ஆறறிவுடைய இனம் மனித இனம் என்பதை,

**"மக்கள் தாமே ஆறறி வுயிரே"** [2]

என்று தொல்காப்பியம் பறைசாற்றுகிறது. மேலும்,

**"பிறவும் உளவே அகக்கிளைப் பிறப்பே"** [3]

என்றும்,

**"ஒரு சார் விலங்கும் உளவென மொழிப"** [4]

எனும், தொல்காப்பிய நூற்பாவடிகள் ஆறறிவுடையோர் தேவர், அசுரர், இயக்கர், கிளி, குரங்கு என மொழிந்தாலும் எதனையும் சிந்தித்துச் சீர்தூக்கிப் பார்த்து செயலாற்றும் சிந்தனைச் செயல்திறன் மனித இனத்திற்கு மட்டுமே உண்டு என்பதால் ஆறறிவுள்ள இனம் மனித இனம் மட்டுமே என்று கொள்ளலாம். பிற உயிர்களிடமிருந்து வேறுபட்ட மனிதன் சில பொதுவான இயல்புகளையும் பண்புகளையும் தன்னகத்தே கொண்டு தனித்து இயங்குபவன். சிந்திக்கும் ஆற்றலும், செயலாக்கும் திறனும் கொண்டு நாகரிக வாழ்க்கையை மேற்கொள்பவனாகவும், புது உலகம் படைப்பவனாகவும் பரிணாம வளர்ச்சியடைந்திருக்கிறான். அறிவுப் பெருக்கத்தினால் அறிவியல் வளர்ச்சிக்கு ஆணி வேராய் நின்று புதுப்புது கண்டுபிடிப்புகளின் மூலம் நாகரிக வாழ்வினை வளரச் செய்கின்றவன் மனிதன்.

> **"நம் அறிவுக்கு எட்டியது; இவ்வுலகில் நாம் கண்டது. எதை எடுத்துக் கொண்டாலும் சரி; அற்புதமான படைப்புகள் மற்றும் கண்டுபிடிப்புகள், விஞ்ஞானத்தில் இன்றைக்கு உச்சகட்டத்தை அடைந்திருக்கும் பிரம்மிக்கத்தக்க கண்டுபிடிப்புகள் என்று எதனை எடுத்துக் கொண்டாலும் சரி அதனை மனிதனுடன் ஒப்பிட்டால் எல்லாவற்றையும் மிக**

**நுண்ணியமான அமைப்புகளைக் கொண்டு சிக்கலான ஈடு இணையற்ற படைப்பு தான் மனிதன்"[5]**

என்பர் பால தண்டாயுதம்.

படைக்கப்பட்ட அனைத்து உயிர்களிலேயும் மனிதன் மட்டுமே கடவுளின் சாயலாகப் படைக்கப்பட்டிருக்கின்றான். இதை,

**"தேவன் தம்முடைய சாயலாக மனுஷனை சிருஷ்டித்தார் அவனை தேவ சாயலாகவே சிருஷ்டித்தார்; ஆணும் பெண்ணுமாக அவர்களைச் சிருஷ்டித்தார்"[6]**

என்கின்றது விவிலியம்.

மானிடப் பிறவி தான் சமுதாயத்தை உருவாக்கி நிலை நிறுத்தியது அதனால் தான்,

**"அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது"[7]**

என்றார் ஔவை.

பொருள் உற்பத்தியாளர், பயன்படுத்துவோர், சமூக அமைப்பு அரச முறை, நிர்வாகம் போன்றவற்றில் தன் ஆதிக்கத்தைச் செலுத்தி அனைத்தையும் தன் வசமாக்கிக் கொண்ட ஆற்றல் நிறைந்த சக்தியே மனிதன்.

## மனிதம் பொது நிலை

மனிதம் என்பதைப் பொது நிலையில் காணுகின்றபொழுது வரையறைக்குள் அடங்காத, முழுமையான ஆற்றல்களையும் செயல் விளைவுகளையும் உடையது எனக் கொள்ளலாம். இதுவரை பெற்றிருக்கின்ற இனிப் பெறப் போகின்ற அனைத்து உரிமைகளுடன் மனிதனுடைய பண்புகளும், தன்மைகளும் சேர்ந்ததே மனிதம்.

சமுதாயத்திலுள்ள பெரும்பாலான மக்கள் உழைக்கும் வர்க்கத்தினரே; உழைக்கும் மக்கள் நாள்தோறும் புத்தம் புதிய மாற்றங்கள் பலவற்றை உருவாக்கி மனித வாழ்க்கையை உயர்வடையச் செய்கின்றனர். உழைக்கும் மனித இனத்தின் தன்னலம் கருதாத தொண்டினால் பொது நலனை மேற்கொண்டு அதன் வழி பொதுவுடமைச் சமுதாயம் காணவே விரும்புகின்றனர். மனித உரிமைகள் பற்றிய சிந்தனையின் முகிழ்ப்பே மனித உறவு என்று பரந்து விரிந்து செல்வதைக் காண முடிகிறது.

இந்த உலகம் என்பது மனிதர்களின் ஒன்றுபட்ட தொகுதியாகும். மானுடம் என்பது உலகத்தின் ஒட்டு மொத்த மக்களையும் ஒருங்கிணைக்கின்ற உயர்ந்த இலட்சியமாகும்.

மனித இனமே தனிமையைச் சார்ந்தது. எண்ணவும், எண்ணியவற்றைப் பேசவும், பேசிய வண்ணம் செயல்படுத்தக் கூடிய ஆற்றலும் மனித இனத்திற்கு மட்டுமே உரிய தனிச்சிறப்பாகும்.

உண்பதும், உடுப்பதும் அதற்கென உழைப்பதும் மனித இனத்தின் அடிப்படைத் தேவைகளாகும். இவற்றைப் போலவே நுகர வேண்டிய நுகர்ச்சிகளும் பொதுவாகவே அமைந்துள்ளன. இருப்பினும் நடை முறை வாழ்வில் மனித இனம் ஏற்றத் தாழ்வுகள் நிறைந்ததும் சாதி, மதம், மொழி, இனம், நிறம் போன்றவைகளால் சிறுமைப்பட்டும், பிளவுற்று அடிமைப்பட்டும் வாழும் அவல நிலை இருப்பதனைக் காண முடிகிறது.

அடிமை நிலை, வறுமை வாழ்க்கை இவற்றால் ஏற்படும் அவலங்களைப் போக்கவும், பிரிவு நிலைக்கக் காரணமானவைகளை நீக்கவும், உரிய வழிமுறைகளைக் காணவும் எண்ணற்ற முயற்சிகள் காலம் காலமாகத் தோன்றிய வண்ணம் உள்ளன.

இம்முயற்சிகள் உலகில் எந்த மூலையில் தோன்றி இருப்பினும் அவற்றின் நோக்கம் மனித ஆற்றலை உணர்த்தி மனிதப் பண்பை உயர்த்துவதே ஆகும். பசியும் பிணியும் நீங்கிய சமதர்ம சமுதாயத்தை உருவாக்குவதே சான்றாண்மை மிக்க படைப்பாளிகளின் நோக்கமாக அமைந்திருக்கின்றது.

மனிதனை மனிதன் மதிக்க வேண்டுமானால் மற்றவர்கள்பால் அன்பு செலுத்த வேண்டும். அன்பின் அடிப்படையிலேயே இவ்வுலகம் இயக்கம் பெறுகின்றது. அன்புதான் இன்பத்தின் ஊற்று அதுவே மனித இனத்தில் படிந்துள்ள மாசுக்களைப் போக்கவல்லது. வள்ளுவரும்,

***"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை***
***பண்பும் பயனும் அது"*** [8]

என்கிறார்.

நாடு, மொழி, இனம் எனும் எல்லைகளையெல்லாம் கடந்து மனித இனத்தின் நாகரிகப் பண்பாட்டு வளர்ச்சியோடு பின்னிப்பிணைந்து நிற்பது மனித உரிமை. மனிதப் பண்பை வளர்த்து அன்பைப் புகட்டி மனிதநேயத்துடன் ஏழை எளிய மக்களின் உரிமைக்காகப் போராடிய மனித நலச் சிந்தனையாளர்களால் முன்பே உரைக்கப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

மனிதம் என்னும் மாண்பினைக் கீழ்க்காணும் முறையில் வரையறை செய்யலாம்.

1. மனிதப் பெருமையை உறுதி செய்தல்
2. எந்த மதிப்பும் மனிதனைக் காட்டிலும் பெரியதன்று என்று உறுதி மேற்கொள்ளுதல்
3. மனித உழைப்பிற்கு மதிப்பளித்துப் போற்றுதல்

4. மனித ஆற்றலிலும் அறிவிலும் நம்பிக்கைக் கொள்ளுதல்
5. சுதந்திரமான வளர்ச்சியில் மனிதனுடைய உரிமைக்கு இடமளித்தல் ஆகும்.

மனித உரிமைகளையும் ஆற்றல்களையும் மதித்துச் செயல்படுவதும் நல்லனவற்றில் நல்லதையும் தீயவற்றில் தீயதையும் பகுத்தறியும் அறிவு பெற்றவர்கள் மனிதர்கள் என்பதும் அத்தகைய அறிவும் அவரது மனத்தோடு தொடர்புடையது என்பதனையும் அறிய முடிகிறது.

## மனித நேயம்

பழங்காலத் தமிழ்ச் சமுதாயத்தில் அறங்கள் மலிந்திருந்தன. எல்லா உயிர்களையும் தன்னுயிர் போல் நினைத்து அன்பு செலுத்தும் பாங்கு பொது வாக அனைத்து மக்களிடமும் பரவலாகக் காணப்பட்டன. ஏற்றத் தாழ்வுகள் நிறைந்த சமூகத்திலும் கூட மக்களின் அடிப்படைத் தேவைகள் நிறைவேற்றப்பட்டன. ஐந்தறிவுடைய விலங்குகளுக்கும் மனிதர்களைப் போன்று சம நீதி வழங்கப்பட்டிருப்பதை இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன. எது மனித நேயம் என்பதற்குப் பாரதிதாசன்,

> **“மனிதனது பெருமையும் உரிமையையும் மதிக்கும் வகையில் அமைந்ததொரு பண்பாகவே மனிதநேயம் அமைகிறது. மனிதனது ஆளுமைப் பண்புகளை மதிக்கவும் அவனது நலன்களைப் பேணி வரவும் சமூக வாழ்வின் அனைத்துத் துறைகளிலும் மனிதன் முழுமையான வளர்ச்சி பெறவும் துணை புரிவது, சமயம், இனவெறிக் கொடுமை, சமயக் காழ்ப்பு, மற்றவர் கருத்தை வெறுத்தல் ஆகிய அனைத்து இயல்புகளையும் நீக்குவது இதன் நோக்கமாகும். மனித இனத்தின் விடுதலைக்காக உரத்து முழங்குவதுடன்**

> **சமயங்களையும் அதன் சடங்குகளையும் எதிர்த்து சம உரிமையை நிலைநாட்டுவதே மனித நேயமாகும்.”**[9]

என்று வரையரை செய்வதாக ஆ.அரிகிருட்டிணன் கூறுகிறார்.

மற்றவர் பால் தனக்குள்ள கடமையும், உரிமையும் உணர்ந்து சங்க காலத் தமிழ் மக்கள் வாழ்ந்திருந்தனர். மக்களிடையே பரந்து விரிந்து காணப்பட்ட மனிதநேயப் பண்பே அதற்குக் காரணமாக அமைந்தது. மனிதன் பசியால் வாட, தான் மட்டும் உண்டு கொழுத்து வாழ்ந்தவர் அல்லர். தமிழ் மக்கள் 'மருந்தேயாயினும் விருந்தோடு உண்' என்ற அறநெறிக் கருத்துப்படி தனக்குக் கிடைத்ததைத் தான் மட்டும் அனுபவிக்காமல் மற்றவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்துண்ணும் பங்கீட்டு முறை அக்காலத் தமிழ் மன்னர்களிடம் காணப்பட்ட ஒன்று. எல்லா மக்களும் எல்லா உரிமைகளையும் உடமைகளையும் பெற வேண்டும் என்று எண்ணி சகோதர உணர்வு மேலோங்கிய சமுதாயம் தமிழ்ச் சமுதாயம். உலகு இன்புறக் கண்டு தான் இன்புற்று இருந்தனர். வறுமை நிலையிலும் தனக்கென மட்டும் வாழாமல் பிறர்க்கெனவும் வாழ்ந்த பெருந்தகையாளர்களால்தான் இவ்வையம் நிலை பெற்று வந்திருக்கின்றது.

> **“ஆற்றுப்படுத்தல் என்பது வறிய புலவர் ஒருவர் மன்னனைப் புகழ்ந்து பாடி பரிசில் பெற்றுத் திரும்பும் வழியில் தென்பட்ட வறிய பாணனை நோக்கி தனக்குப் பரிசில் கொடுத்த மன்னனின் புகழை எடுத்துக் கூறி அவரிடம் செல்லுமாறு ஆற்றுப்படுத்தல் என்பதே உரிமைகளின் தொடக்கம். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்று விழைந்தனர். எல்லா மக்களும் எல்லாம் பெற வேண்டும் என்று நினைத்தனர். ஆகையால் தன்னுடைய பரிசிலை அவனுக்குக் காட்டி ஆற்றுப்படுத்தினர் தன்னைப் போல் பிறரையும்**

**நேசித்தல் என்ற பண்பு தான் மனித உரிமைகளின் அடிப்படை கட்டமைப்பு ஆகும்”[10]**

என்பர் தமிழண்ணல்.

பண்டைக் காலத் தமிழ் மக்களிடையே பால், இனம், சாதியை அப்படையாகக் கொண்ட ஏற்றத் தாழ்வுகள் காணப்படவில்லை. எல்லா மக்களையும் தம் சொந்த மக்களாகவே மதித்தனர். செய்யப்படும் தொழில் காரணமாக ஏற்றத் தாழ்வுகள் காணப்பட்ட போதிலும் மனிதனை மனிதனாக நடத்தப்பட்டதை இலக்கியங்கள் இயம்புகின்றன என்பதை,

**“பண்டைத் தமிழ் மாந்தர் எல்லாரையும் ஒரு குலத்தவராகவே மதித்துப் போற்றினர். ஒத்த அறிவும் செயலும் உடைய மக்களைப் பல்வேறு சாதியினராகப் பிரித்துப் பார்த்து வேறுபாடு கற்பிக்கும் இழி நிலை சங்க காலத் தமிழறிடையே காணப்படாததொன்றாம். மக்கள் செய்யும் தொழில் வேற்றுமை காரணமாகவே அவர்களிடையே உயர்வு தாழ்வுகள் உண்டாகும்”[11]**

என்கின்றார் க.வெள்ளைவாரனன்.

இலக்கியங்கள் மனித நேயத்தின் பிரதிபலிப்புகளாகக் காட்சியளிக்கின்றன. குறைந்த அறிவுடைய, உயிர்களுக்கும் தீங்கு நேராவண்ணம், அவைகளின் வாழும் உரிமையைப் பறிக்காது தம் கடமையை நிறைவேற்ற முயன்றிருக்கின்றனர் நம் முன்னோர்.

கடற்கரை ஓரத்தில் தலைவன் தேர் ஏறி தலைவியைக் காண வந்துக் கொண்டிருக்கும் நேரம் தலைவன் தேரோட்டியை நோக்கி நிலவொளியில் நண்டுகளுக்கு இடையூறு ஏற்படாமல் விலக்கி ஓட்டுமாறு கட்டளையிடுவதை,

*“புணரி பொருத பூமணல் அடைகரை*
*ஆழி மருங்கின் அலவன் ஓம்பி*
*வலவன் வள்புஆய்ந்து ஊர*
*நிலவுவிரிந் தன்றாற் கான லானே”* [12]

என்ற நற்றிணைப் பாடல் வழி அறிய முடிகிறது.

## இனக்குழுக்கள்

தனிமனிதனாகச் சுற்றித் திரிந்துக் கட்டுப்பாடற்ற பாலினப்புணர்ச்சியும், காட்டுமிராண்டித்தனமான நாடோடி வாழ்வினையும் மேற்கொண்டவனுக்கு நான், என்னுடையது, என்ற எண்ணம் மேலோங்கிய நிலையில் ஓரிடத்தில் தங்கி வாழத் தலைப்பட்டான். குறிப்பிட்ட நிலப்பரப்பைத் தனக்கு என்று ஏற்படுத்தி, பாலுணர்வினை வகைப்படுத்திக் கொண்டு பிற மனிதனோடு அன்பு கொண்டு ஒழுகுவதன் மூலம் தனக்கான பாதுகாப்பை உறுதி செய்து கொண்டான். இயற்கையில் எழும் பாலுணர்ச்சியின் அடிப்படையிலேயே தொன்மைக்கால குடும்ப அமைப்புகள் உருவாகின. இதை,

> **“பிள்ளைபேறு பெற்றிட வேண்டும் என்ற ஆசை, பாலின ஊக்கத்தை திருப்தி செய்து கொள்ளும் நாட்டம், அன்பு, ஆதரவு, பாதுகாப்பு ஆகியவற்றை ஒருவர் மற்றவரிடமிருந்து பெறுவதற்கான விழைவு, கனிவு, பாசம், பக்தி சிரத்தை ஆகியவற்றைப் பெறும் விருப்பம், பொருளாதார அனுகூலத்தைப் பெறும் ஆர்வம் போன்றவை தான் அவற்றில் முக்கியமானவையாகும். இவை தான் உண்மையில் குடும்பம் தோன்றக் காரணங்களாகும்”**[13]

என்பர் பாஸ்கல் கிஸ்பர்ட். மேலும்,

**"சமுதாயம் பல்வேறு அமைப்புகளையும் படிநிலைகளையும் உடையது. அரசு, மதம், குடும்பம் என்பன ஒரு சமுதாயத்தின் அடிப்படைக் கூறுகள். இவற்றில், குடும்பமே தொன்மையானதும் எல்லாக் காலச் சமுதாயங்கள் சார்ந்ததும் ஆகும். பல்வேறு வகைப்பட்ட பரிமாணங்களையும் பெற்று வளர்ந்து வருவதும் குடும்பமே"[14]**

என்ற பெ.மாதையன் அவர்களின் கூற்றுப்படி, சமுதாயத்தின் அடிப்படை அலகு குடும்பம் என்பதும் அது காலத்திற்கேற்பப் புதுப்புது வடிவங்களைக் கொண்டு விளங்குகின்றது என்பதும் கண்கூடு. இதனை,

**"குடும்பம் என்பது இயக்கமுள்ள கோட்பாட்டைக் குறிக்கிறது. அது ஒரு போதும் இயங்காதிருப்பதில்லை. சமூகம் கீழ்நிலையிலிருந்து மேல் நிலைக்கு முன்னேறுகின்றபொழுது அதுவும் கீழான வடிவத்திலிருந்து மேலான வடிவத்திற்கு முன்னேறுகிறது"[15]**

என்று மார்கன் கூறுவதாக எங்கல்ஸ் குறிப்பிடுகின்றதையும்,

**"குழு மணக் குடும்பம், பூனலுவா குடும்பம், இணைக் குடும்பம், பலதாரமணமுறைக் குடும்பம் ஒரு தார மணமுறைக்குடும்பம் என்ற ஐந்து வகையான குடும்பங்களைக் குறிப்பிட்டுள்ளார்."[16]**

என்று மார்கன் கூறுவதாக பெ. மாதையன் குறிப்பிடுவதையும் எண்ணிப் பார்க்கத்தக்கது.

ஒத்த கருத்து, பண்பு, நிலப்பரப்பு, பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் போன்ற காரணிகளைக் கொண்ட குடும்பங்கள் ஒன்று சேர்ந்து இனக்குழு சமுதாயத்தை உருவாக்கின. இனக்குழு சமூகத்தின் அடிப்படை அலகு குடும்பம்.

**"குறிப்பிட்ட பொது நோக்கங்களை அடைவதற்காக ஒரு சில நிலையான உறவு முறைகளினால் விளைவிக்கப்பட்டுள்ள மனிதன் கூட்டுத் தொகுதியே சமூகம் என்கிறோம்"[17]**

என்று பாஸ்கல் கிஸ்பர்ட் சமூகத்திற்கான வரையறையைத் தருகிறார்.

**மனிதனும் சமூகமும்**

சமூகத்தின் அடிப்படை அலகாகக் குடும்பம் இருப்பது போலவே குடும்பத்தின் அடிப்படை அலகாக மனிதன் இருக்கிறான். தனக்கான உரிமைகளைப் பாதுகாக்கவும், நடைமுறைப்படுத்தவும் அதன் வழியாக அச்சம் தவிர்த்துப் பாதுகாப்பைப் பெற்றிடவும் ஏனைய மனிதர்களுடன் சேர்ந்து கூட்டாகச் செயல்படவும், செயல்படுத்தவும் முயன்றிருக்கிறான். அதுவே சமூகம் தோன்ற காரணமாகியது. இதை,

**"சமூகம் தோன்றுவதற்கு முன்பாக மனிதர்கள் சமூகத்திற்கு முற்பட்ட இயற்கையான நிலையில் வாழ்ந்தனர். அவர்களிடையே ஏற்பட்ட ஒப்பந்தம் காரணமாகத்தான் சமூகம் உருவாகியது."[18]**

என்றும்,

**"ஹாப்ஸ் கருத்துப்படி மனிதன் தனது இயற்கை நிலையில் சுற்றுப்புறத்தாருடன் ஓயாமல் பூசலிட்டுக் கொண்டிருந்தான். ஒரு மனிதன் பிரிதொரு மனிதனுடன் ஓநாய் போன்று சண்டையிட்டு பழகினான். அவனது வாழ்க்கைத் தனியாகவும் அருவருப்பானதாகவும், மிருகத் தனமானதாகவும், குறைவானதாகவும் இருந்தது. இத்தகைய இழிவான நிலையில் உழன்ற மனிதன் ஏனையோருடன் ஒப்பந்தம் செய்து கொண்டு சமூகத்தை உருவாக்கி வாழ எண்ணினான்"[19]**

எனவும் பாஸ்கல் கிஸ்பர்ட் கூறும் கருத்துகள் ஈண்டு கவனிக்கத்தக்கன.

சமூகத்தை எவரும் புதிதாகத் தோற்றுவிக்கவில்லை. மனிதன் உருவானது போலவே சமூகமும் உண்டானது. மனித இனம் குழுவாகச் சேர்ந்து வாழத் தலைப்பட்ட அன்றே தானாகவே சமூகம் உருவானது. இதை,

> **“மனிதன் தோற்றத்தினைப் போலவே சமூகத்தின் தோற்றமும் என்று தொடங்கியது என்று நாம் சொல்லத் தேவையில்லை. சமூகவியல்பு மனிதனுடன் முதலிலேயே தோன்றிய ஒன்று ஆகும். ஏனையோருடன் அவன் முதலிலேயே சேர்ந்து வாழ முற்பட்டுவிட்டதனால் சமூகம் உடனேயே தோன்றி விட்டது. ஒரு ஒப்பந்தத்தினாலோ வேறு உடன்படிக்கையினாலோ பிறகு மனிதனுடன் சேர்க்கப்பட்ட ஒன்றல்ல சமூகம் அது தானாகவே தோன்றி இயல்பாகவே வளர்ந்த ஒன்று ஆகும்.”[20]**

என்கிறார் பாஸ்கல் கிஸ்பர்ட்.

இடப்பெயர்ச்சி தடைப்பட்டு நிலையாக இருப்பிடம் அமைத்து கால்நடைப் பெருக்கம், விவசாயப் பெருக்கம் போன்ற பிற காரணங்களால் இனக்குழு சமுதாயம் நாகரிகச் சமுதாயமாக மலரத் தொடங்கியது. அக்காலம் நாகரிக வளர்ச்சியின் ஆரம்ப நிலையாக அமைந்தது. இதை,

> **“சில இடங்களில் கால்நடைப் பொருளாதாரத்திற்கும் விவசாய பொருளாதாரத்திற்கும் மாறின் இவற்றின் முன்னேற்றம் இனக்குழு முறை சிதைய வழி செய்தன. இவ்விரு வழிகளும் மக்களை நாகரிகத்திற்கு இட்டுச் சென்றன”[21]**

என்பர் கா. சுப்பிரமணியம்.

இனக்குழு மக்கள் ஒன்றாகச் சேர்ந்து பகிர்ந்துண்ணும் கூட்டு வாழ்க்கை முறையினை மேற்கொண்டிருந்தனர். இம்மக்களிடையே ஏற்றத்தாழ்வுகள், வர்க்க பேதங்கள், சுரண்டல் போன்றவைகளுக்குப் பதிலாக மற்றவர்களுக்கு உதவும் பண்பே மேலோங்கி இருந்தது என்பதை,

**“இனக்குழு மக்கள் கூட்டு வாழ்க்கை நடத்தினர் கிடைத்ததைப் பகுத்துண்டனர். வேட்டை வாழ்க்கை புராதான விவசாயம் ஆகிய பொருளாதாரங்களை அடிப்படையாகக் கொண்டு இக்கூட்டு வாழ்க்கை அமைந்தது”**[22]

என்ற கா.சுப்பிரமணியம் அவர்களின் கூற்றோடு ஒப்பு நோக்கத்தக்கது.

## மனித வழக்கங்களும் சட்டமும்

இனக்குழு தோன்றி சமூகமாக வளர்ச்சியடைந்த நிலையில் தங்களுக்குள்ளாகவே சில வரையறைகளை வகுத்துக் கொண்டு வாழ முற்பட்ட போது இடையீடு இல்லாமல் புறத்தூண்டுதலின்றித் தாமாகவே வந்தேறிக் கடைபிடிக்கப்பட்டு வந்த செயல்கள் அனைத்தும் நாளடைவில் வழக்கங்களாக மாறத் தொடங்கின. அனைவராலும் பொதுவாகக் கடைபிடிக்கப்பட்ட செயல்கள் காலப்போக்கில் தனித்தனிக் குழுக்களாகப் பிரிந்து சென்று வாழ்ந்த போது ஒவ்வொரு குழுக்களுக்குமான செயல்களாக மாற்றம் பெற்றன.

**“நம் முன்னோர் தத்தம் பெரு முயற்சியால் வருந்திப் பயின்று தேறிய பழக்கங்கள் காலப் போக்கில் வழக்கங்களாக மாறுகின்றன. இங்ஙனமே நம் முன்னோர் வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் பழகிப் பழகிச் செய்தனவற்றை**

**இன்று வழக்கம் என்ற பெயரால் நாம் பெரு முயற்சியின்றி செய்து வருகிறோம்"[23]**

என்பர் மா. இராசமாணிக்கனார்.

வழக்கம் புனிதமானது, தொடர்ந்து கடைபிடிக்க வேண்டியது, மனித வாழ்க்கையின் அங்கமாகக் கலந்து விட்ட ஒன்று. இவை தானாகவே தோன்றியதால் புனிதமானதாகவும், இறைவனிடம் இருந்து வந்ததாகவும் நம்பப்பட்டன. இதை,

**"சமூக வாழ்க்கைக்கு அதி அத்தியாவசியமானதும், நிலவி வருகின்ற மரபு, புனைந்துரைக் கதைகள் ஆகியவற்றுடன் தொடர்பு கொண்டிருப்பதுமான வழக்கங்கள் புனிதமானவை என்றும் கடவுளால் படைப்பிக்கப்பட்ட கட்டளைகள் என்னும் எண்ணப்படுகின்றன."[24]**

என்கின்றார் பாஸ்கல் கிஸ்பர்ட்,

இனக்குழு சமுதாயத்தின் அங்கமான தனிப்பட்ட மனிதனிடம் இயல்பாகவே காணப்படும் செயல் பழக்கம் எனப்பட்டது. தொடர்ந்து கடைபிடிக்கப்படும் பழக்கம் நாளடைவில் அக்குழுவின் வழக்கமாக மாறி விடுகின்றது. வழக்கத்தை மீறுதல் சமூகக் குற்றமாகக் கருதப்பட்டது. குறிப்பிட்ட சமூகத்தினரிடையே ஒரு பழக்கம் தொடர்ந்து இடையீடின்றிப் பின்பற்றப்படுமானால் முடிவில் அது வழக்கமாகி விடுகின்றது. எல்லாப் பழக்கங்களும் வழக்கமாகி விடுவதில்லை. எல்லா வழக்கமும் பழக்கங்களை அடிப்படையாகக் கொண்டவை. இதனை,

**"பலரிடையே விரவி நிற்பதினால் மட்டும் பழக்கம் வழக்கமாகாது. அது ஒரு நடத்தை விதியுமாகும். குழுவிலுள்ள பலருடைய மனவெழுச்சி, உணர்ச்சி**

**ஆகியவைகளுடன் இயைந்து நிற்பது வழக்கம் என்பதாம். எனவே அதை மீறினால் ஏனையோருடைய கண்டிப்புக்கும் கேலிக்கும் ஆளாக நேரிடும்."[25]**

என்று பாஸ்கல் கிஸ்பர்ட் குறிப்பிடுகின்றார்.

குறிப்பிட்ட இனக்குழுக்களிடையே காணப்படும் வழக்கமே காலப்போக்கில் சட்டமாவதற்கு அடிப்படையாய் அமைந்து விடுகின்றது. வழக்கத்திற்கு எதிராக உருவாகும் சட்டம் நிலை பெறாது. இதை,

**"ஏற்றுக் கொள்ளப்பட்ட நடைமுறை வழக்கங்கள் வழக்காறுகள் ஆகியவற்றுக்குச் சட்டம் ஆட்பட்டிருக்க வேண்டும்"[26]**

என்று மிதாக்ஷராவின் கருத்தாக, பாஸ்கல் குறிப்பிடுவதும்,

**"பொது மக்கள் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டதுமான வழக்கத்திலிருந்து சட்டம் இயற்றப்படுவதால் சட்டம் திண்மையானதாகத் திகழ்கிறது."[27]**

என்றும்,

**"நடைமுறையிலுள்ள ஒரு வழக்கம் தற்காலச் சமூகத்திற்கு மிக அவசியமானதென்றால் உடனே அது சட்டமாக ஆக்கப்படும்"[28]**

என்று கூறும் பாஸ்கல் கிஸ்பர்ட் என்பாரின் கருத்தும் ஈண்டு கவனிக்கத்தக்கது.

சட்டத்தின் சொற்களைத் தெளிவாகப் புரிந்து கொள்வதற்கும் சரியான பொருள் விளக்கம் காண்பதற்கும் உரியவை வழக்கங்களே. வழக்கத்தின் சரியான பொருள் கண்டால் சட்டத்தினைத் தெளிவாக அறிந்து கொள்ள முடியும். இதை,

**"எல்லாச் சட்டங்களும் அநேகமாகப் பல வழக்கங்களின் மூலம் தான் நடைமுறைக்குக் கொண்டு வரப்படுவதனால் வழக்கம் சட்டத்திற்குச் செம்மையான விளக்கம் தருகிறது. எனவே காலப் போக்கில் சட்டத்தின் பொருளோ மதிப்போ பொலிவிழந்து விட்டால் எந்த வழக்கங்களில் இருந்து உருவாயிற்றோ அல்லது எந்த வழக்கங்களின் மூலம் செயற்பட்டதோ அந்த வழக்கங்கள் பொலிவிழந்த சட்டத்தைப் புரிந்து கொள்ள உதவி புரிகின்றன."**[29]

என்கின்றார் பாஸ்கல் கிஸ்பர்ட்.

இனக்குழு சமுதாயம் வளர்ந்து நாகரிகச் சமுதாயமாக மலர்ந்து அரசாக உருக்கொண்டு அனைத்து மனிதர்களுக்கும் பொதுவானதும், அனைவராலும் கடைபிடிக்கக் கூடியதாகவும் ஏற்றுக் கொள்ளக் கூடியதுமான விதிகளை வகுத்து ஆணைகள் பிறப்பிக்கத் தொடங்கியது. அவ்வாணைகளே சட்டங்களாகப் பரிணமித்தது.

சட்டங்கள் அரசினால் உருவாக்கப்பட்டவையாயினும் இறைவனால் கொடுக்கப்பட்ட உரிமைகளோடு முரண்பாடு தோன்றாமலில்லை. முன்னது மாறுதலுக்குட்பட்டது. பின்னது என்றும் நிலைத்த தன்மையுடையது. அது இயற்கைச் சட்டம் அல்லது இறைவனின் சட்டம் என்பதன்பாற்பட்டது. சட்டமும் உரிமையும் நெருங்கிய தொடர்புடையன. சட்டத்தின் நோக்கம் உரிமையை நிலை நாட்டல் ஆகும். உரிமைகள் சட்டத்தால் பேணி பாதுகாக்கப்படுகின்றன. எல்லா உரிமைகளும் சட்டங்களால் மட்டுமே வழங்கப்படவில்லை.

சமூகத்தின் நலனைப் பாதுகாக்கவும் தனிமனித உரிமைகள் நிலை நாட்டப்படவும் மனிதகுலம் அனைத்திற்கும் பொதுவானதாகவும் செயல்படுத்தக் கூடியதுமானவைகளே சட்டங்கள். இதை,

**“சமுதாயத்தின் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிற மேலாண்மை பெற்ற ஒருவராலோ (அ) பலராலோ சமூகத்தின் மொத்த நன்மைக்காகப் பகுத்தறிவிற்கு ஏற்ற முறையில் திட்டமிட்டு உருவாக்கப்பட்ட ஆணையே சட்டமாகும்”**[30]

என்பர் எப்.ஜே.ஆஸ்.

உரிமைக்கும் சட்டத்திற்கும் தொடர்பு உண்டு. சட்டம் ஏற்றுக் கொள்கின்ற வகையில் எது என்னுடையது என்று எண்ணப்படுகிறதோ அது உரிமையாகும். உரிமையின் மறுபக்கம் கடமை. சட்டம் சில உரிமைகளை அளித்தால் கடமையையும் அது உள்ளடக்கியதாகும்.

**“அரசாங்கம் சட்டம் இவற்றில் உரிமைகள் என்னுடைய அந்தஸ்தையும் அதிகாரத்தையும் வெளிப்படுத்துகின்றன. அவை தாம் என்னுடைய முழு ஆளுமையைப் புலப்படுத்தும் சமூகத்தின் ஒழுங்கு முறையில் என்னுடைய பங்கையும், மதிப்பையும் விளக்கிக் காட்டுவன உரிமைகள்தாம்.”**[31]

என்கிறார் பார்க்கர்.

### மனிதனும் உரிமையும்

உலகில் மனிதன் தோன்றிய நாள் முதல் அவனுக்கான உரிமையும் உயிர் பெற்றது. வாழ்கின்ற காலத்தில் இயற்கை அளித்த கொடையான சில அடிப்படை உரிமைகளோடுதான் மனிதன் வளர்ச்சியடைந் திருக்கிறான். மனித இனத்தின் வளர்ச்சியோடு உரிமைகளின் வளர்ச்சியும் ஒரு சேரப் பின்னிப்பிணைந்து வளர்ந்தது. தொடக்க காலத்தில் எவை உரிமைகள் என்று தெளிவாக அறிந்து கொண்டு வாழ்ந்திருக்க வாய்ப்பில்லை. இருப்பினும் இயற்கை அளித்த உரிமைகள் தடைபட்ட போதும், மறுக்கப்பட்ட

நேரங்களிலும் மனித இனம் முடங்கிப் போய் விடாமல் உரிமையைப் பெறவும் மீட்டெடுக்கவும் முயன்றன.

பிறக்கும் போதே மனிதன் உரிமைகளுடனே பிறக்கிறான். அவ்வுரிமைகள் இயற்கை அவனுக்கு அளித்த கொடை. அனைத்து உயிர்களும் சமமாகவே படைக்கப்பட்டிருக்கின்றன. உரிமைகளும் சமமாகவே பகிர்ந்தளிக்கப்பட்டிருக்கின்றன அத்தகைய உரிமைகள் இல்லாமல் மனிதன் மனிதனாக வாழ முடியாது. அவ்வுரிமைகள் எக்காலத்தும் எவராலும் பறிக்க முடியாதனவாகவும், மனிதனினின்றும் பிரிக்க இயலாதனவாகவும் உள்ளன.

> **“அனைத்து மனிதர்களும் சமமாகவே படைக்கப் பட்டிருக்கிறார்கள். அவர்களைப் படைத்தவர்கள் அவர்களுக்கு வாழ்க்கை, சுதந்திரம் மற்றும் மகிழ்ச்சியாக வாழ்வது போன்ற சில பிரிக்க முடியாத உரிமைகளை வழங்கியுள்ளனர். மனித உரிமைகள் அத்தகைய தன்மையிலானவை அவையன்றி ஒருவர் மனிதனாக வாழ முடியாது”**[32]

என்று எம்.கே. ஸ்ரீவத்சவா அவர்கள் சாந்தகுமார் எழுதிய மனித உரிமைகள் என்ற நூலின் முன்னுரையில் குறிப்பிட்டிருப்பதும்,

> **“மனிதனுடைய உரிமைகள் என்பவை கடவுளுடைய பரிசாகும். அவர் உருவாக்கியவற்றின் விளைவு அது. இயற்கை உருவாக்கியது. மற்றும் மனிதனுடைய பகுத்தறிவையும் தீர்ப்பையும் ஆகாஷிக்கிறது என்ற முறையில் அவை இயற்கையானதே”**[33]

என்ற எஸ்.சாந்தகுமார் அவர்களின் கூற்றும்,

> **“மனிதனை இறைவன் சில அடிப்படை உரிமைகளோடு படைத்துள்ளான் என்பது, காலங்காலமாகவே அந்த**

**உரிமைகள் பறிக்கப்பட்டு நசுக்கப்பட்டவர்களால் மட்டும் உணரப்பட்டுள்ள உண்மை"[34]**

என்ற கருத்தும் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கன.

இயற்கையின் வாயிலாக அல்லது இறைவனிடமிருந்து பெற்ற உரிமைகள் மாற்றித் தரத்தக்கதும் விட்டு விடத்தக்கதுமான ஒன்றன்று. அவ்வுரிமைகள் கருவில் உருவாகி, கூடவே வளர்ந்து இவ்வுலகில் வாழும் காலத்தில் நிலை பெற்று கல்லறை சென்று சேரும் வரை மனிதனை விட்டு அவ்வுரிமைகள் பிரிக்கப்பட முடியாதவை.

**"மனிதன் மண்ணில் பிறந்தவுடன் அந்த மண்ணுக்கு உரிமை கொண்டாடுகிறான். பிறக்கும் போதே உரிமை உடன் வந்து வருகிறது. உரிமை என்ற சொல் மனித இனத்துக்கே உரியதாகும். தாயின் கருவறையில் இருந்து நிலவறைக்குச் செல்லும் வரை ஏன் நிலத்தில் மீளாத்துயில் கொள்ளும் இடத்திலும் உரிமை என்பது ஒரு தொடர் கதையாகத்தான் தொடர்ந்து கொண்டிருக்கிறது"[35]**

என்பர் எஸ். சாந்தகுமார்.

உரிமைகள் என்பவை தனி மனிதனை மட்டும் சார்ந்தது அன்று. நாம் மற்றவர்களிடமிருந்து எதை எதிர்ப்பார்க்கின்றோமோ அதுவும் மற்றவர்கள் நம்மிடமிருந்து என்ன எதிர்ப்பார்க்கின்றார்களோ அதுவும் சேர்ந்தது ஆகும். ஒருவருடைய உரிமை மற்றொருவருடைய கடமையைச் சார்ந்தது.

## இயற்கை உரிமை

எந்த உரிமைகள் இன்றி மனிதன் கண்ணியத்துடனும் மாண்புடனும், சுதந்திரமாகவும் இன்பமாகவும் வாழ முடியாதோ அவ்வுரிமைகளே இயற்கை

உரிமைகள். இயற்கை மனிதனுக்கு மரியாதையுடன் வாழ்வதற்கேற்ற வகையில் உரிமைகளை வழங்கி இருக்கின்றன.

**“அந்த விதிகள் எங்கும் காணப்படுகின்றன. மனிதர்கள் எல்லாருடைய அறிவும் மனமும் அடிப்படையில் கிட்டத்தட்ட ஒன்றாக இருப்பதனால் அவை தோன்றுகின்றன. எல்லோரும் இணைந்து செயற்பட வேண்டும் என்று இயற்கை வகுத்த கொள்கைகளின் விளைவுகள் தாம் இவ்விதிகள் எனவே அவற்றை இயற்கை விதிகள் என்கிறோம். அவை ஏனைய வழக்கங்கள் விதிகள் போன்றவை தோன்றுவதற்கு முன்னமேயே தோன்றியவை. எண்ணத்திலும் தோற்றத்திலும் மனிதனால் உருவாக்கப்பட்டவற்றை விட முந்தையவை”[36]**

என்று பிரைஸ் பிரபு குறிப்பிடுவதாக பாஸ்கல் கூறுகின்றார். மேலும்

**“ஒவ்வொரு மனிதனும் நிறுவனமும் இந்த விதிகள் அளிக்கின்ற உரிமைகளை மதித்து நடக்க வேண்டும். தற்காலக் குடியாட்சி அரசாங்கங்களில் இவ்விதிகள் வெவ்வேறு பெயர்களில் இடம் பெற்றிருக்கின்றன. இந்த உரிமைகளெல்லாம் அரசாங்கத்தால் உருவாக்கப் பட்டவையல்ல. ஆனால், அரசாங்கத்தின் ஆதரவு பெற்றவை. வாழும் உரிமை, சுதந்திரம், சொத்து, மதம், குடும்ப வாழ்க்கை போன்றவை காப்பாற்றப்படுகின்ற உரிமை ஆகியவையெல்லாம் இவற்றின் பாற்படும்”[37]**

என்கிறார் பாஸ்கல் கிஸ்பர்ட்.

**உரிமை - அகராதி பொருள் விளக்கம்**

> **"உரிமை என்பதற்கு, உரியத்தன்மை, சுதந்திரம், இனம் கடமை, சிநேகம், இஷ்டம், உரித்து, மனைவி"[38]**

என்று வின்சுலேவின் தமிழ் ஆங்கில அகராதியும்,

> உரிமை என்பதற்குச் "சொத்து"[39]

எனத் தமிழ் அகராதியும்,

> **"உரிமை – "உரித்தாந்தன்மை, உரித்தான சொத்து, உரிமை நாட்டுதல், மனைவி"[40]**

என்று செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் பேரகரமுதலியும் குறிப்பிடுகின்றது. மேலும்,

> **"உரிமை என்பதற்கு ஆட்சி, இஷ்டம், இனம், உரித்து, ஒவ்வொன்றிற்குத் தருவது, கடமை, குணம், சிநேகம், சுதந்திரம், மனைவி" [41]**

என்று நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ் மொழியகராதியும்,

> **"உரித்தாந்தன்மை, மனைவி, அடிமை, குணம், நட்புப் பற்றிய சுதந்திரம், சுவாதீனம்"[42]**

என்று செந்தமிழ் அகராதி,

> **"இயல்பு, இனம், சுதந்திரம், உரித்து, சிநேகம், மனைவி, சுவாதீனம்"[43]**

என்றும் தரங்கம்பாடி அகராதி பொருள் விளக்கம் தருகின்றன.

உரிமையும் கடமையும் நாணயத்தின் இரு பக்கங்களைப் போல்வன. ஒன்று விட்டு நீங்கி மற்றொன்று தனித்து இயங்க வல்லது அன்று. கடமை

பெற்றெடுத்த செல்லக் குழந்தையே உரிமை. மற்றொருவரின் உரிமைகளுக்கு ஊறு விளைவிக்காமல் நடந்து கொள்வதும் வாழ்வின் இன்பத்தைத் துய்க்க எவ்வகையிலும் தடையீடு ஏற்படுத்தாமலும் இருப்பது ஒவ்வொருவரின் கடமையுமாகும். இதை,

> **"ஒருவனுடைய கடமையினால் மற்றொருவனுக்கு இலாபம் அல்லது நன்மை அல்லது பாதுகாப்பு ஏற்பட்டால் அவனுக்கு அதனால் உரிமை கிடைக்கிறது. ஆகையால் கடமை என்பது உரிமையின் தாய் என்று விளங்கும்."[44]**

என்று விளக்கம் தருகின்றது கலைக்களஞ்சியம்.

## மனித உரிமைகள் வரையறை

மனித உரிமைகள் இவையென்று ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் அடக்க இயலாது. காலந்தோறும் பரிணாம வளர்ச்சி பெற்று மாறும் தன்மையது. மக்களின் பண்பாடு கலாச்சாரம், நாகரிக வளர்ச்சிக்கேற்பப் பரந்து விரிந்து செல்வன. குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட சமுதாயத்தில் நிலவும் கருத்துகளைச் சார்ந்தது. வரையறைப்படுத்த முடியாது என்பதால் அதைப் புறக்கணிக்கவோ புறந்தள்ளவோ முடியாது. அறிஞர்கள் காலத்திற் கேற்பப் பல்வேறு வகையில் மனித உரிமையை வரையறை செய்ய முயன்று இருக்கிறார்கள். அதுவே முழுமையானதும் முடிவானதும் நிலைத்ததும் அன்று,

> **"வலிமை வாய்ந்தவர்களின் அடக்குமுறை, நிறப்பாகுபாடு, மத ஆதிக்கம், மதவழி மக்களைப் பிரிக்கும் சாதிப் பாகுபாடு, தீண்டாமை, அநீதி, பெண் உரிமை மறுப்பு, அறிவுத்தடை மூடநம்பிக்கை முதலானவற்றை உடைத்தெறிய உரிமை கோருவதே மனித உரிமை"[45]**

என்பர் ஆ.அரிகிருட்டிணன். மேலும்,

**"உரிமை என்பது சமூகத்தால் அங்கீகரிக்கப்பட்டு நாட்டில் நடைமுறைப்படுத்தப்படும் செயலாகும்"[46]**

என்ற சிவகாமி பரமசிவம் அவர்களின் கருத்தும் எண்ணத்தக்கன. மேலும்,

**"நான் அனுபவிக்கும் எந்தக் குறிப்பிட்ட உரிமையும் என்னால் அடையப்பட்டு சட்டத்தால் பாதுகாக்கப்பட்ட ஒன்றாகும்"[47]**

என்கின்றார் எர்னால்டு வால்கர்.

**"மனிதனை மனிதனாக மதிப்பதே மனித உரிமை"[48]**

என்று சு.பொ. அகத்தியலிங்கம் மனித உரிமையை வரையறுக்கிறார்.

**"மனித உரிமைகள் என்ற தொடருக்கு இந்திய அரசியல் சட்டத்தில் வழங்கப்பட்ட உரிமைகளான மனித உயிர் சுதந்திரம், சமத்துவம் மற்றும் தனிமனித பிறப்புகள் பற்றிய மனித உரிமைகள்"[49]**

என்று விளக்கம் தருகிறார் கே.எஸ்.இராதாகிருஷ்ணன். மேலும்,

**"உரிமை என்ற சொல்லுக்குப் பாத்யதை என்று பொருள் பாத்யதை என்பது கேட்காமலேயே எவருடைய தயவையும் பொறுத்திராமல் தானாகவே கிடைக்க வேண்டியது எனப் பொருள்படும். மனித உரிமைகள் ஒவ்வொரு மனிதனுக்கும் அவன் எங்கிருந்தாலும் கிடைத்தாக வேண்டியவை. மனிதன் கண்ணியத்துடன் வாழ்க்கையை நடத்தி தனக்குள்ள இயல்புகள் எல்லாம் முழு வளர்ச்சி காண்பதற்கு இந்த உரிமைகள் மிக மிக அவசியம் என்று கருதப்படுகிறது. இது ஒவ்வொருவருக்குமுள்ள மனிதப் பிறப்புரிமை"[50]**

என்று விளக்குகிறார் ஏ.ஜி. வேங்கடாச்சாரி.

**“எல்லா மனிதர்களும் சுதந்திரமாகவும் அவர்கள் உரிமையிலும் மதிப்பிலும் சமமானவர்களாகவும், மனசாட்சியும் உடையவர்களாகவும் அவர்கள் ஒருவருக்கொருவர் சகோதரர்களாக பழகுதல் வேண்டும்”**[51]

என்று அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனம் உறுப்பு (1) வரையறை செய்கின்றது.

மேற்கண்ட வரையறைகளிலிருந்து, இயற்கையாகப் பெற்று சட்டத்தால் அங்கீகரிக்கப்பட்டு நடைமுறைப்படுத்தப்படுகின்ற கண்ணியமான, வாழ்க்கைக்கு இன்றியமையாத உரிமைகள் மனித உரிமைகள் எனலாம்.

**“இந்திய அரசியலமைப்புச் சட்டத்தால் உத்திரவாதம் அளிக்கப்பட்டு (அ) சர்வதேச உடன்படிக்கைகளில் உள்ளடக்கப்பட்டு இந்தியாவில் உள்ள நீதிமன்றங்களால் வலியுறுத்திச் செயல்படுத்தத்தக்க தனிநபரின் வாழ்க்கை, சுதந்திரம், சமத்துவம் மற்றும் மதிப்பு ஆகியவற்றிற்குத் தொடர்புடைய உரிமைகள் எனப் பொருளாகும்”**[52]

என்று 1993ஆம் ஆண்டின் மனிதஉரிமைப் பாதுகாப்புச் சட்டம் விளக்கம் தருகிறது.

மேற்கண்ட வரையறைகளிலிருந்து மனித உரிமைகளுக்கான கூறுகளைப் பின்வருமாறு பகுக்க முடிகிறது.

1. தனிமனித மற்றும் மனிதக் குழுக்களின் உரிமைகளை உள்ளடக்கியது.
2. இவ்வகையான உரிமைகள் மனிதன் பிறப்பினாலேயே கிடைக்கின்றன.

3. எவ்வகை யானும் விட்டுக் கொடுக்கவோ மாற்றியளிக்கவோ, விட்டு விடவோ முடியாதன.

4. சட்டம் மற்றும் உலகச் சட்டங்களின் அடிப்படை ஆதாரமாகும்.

5. மனிதன் சமமாகவும், மாண்புடனும் சகோதரத்துவமுடனும் வாழ நிறம், பால், மொழி, இனம் போன்ற எவ்விதமான பாகுபாடும் இன்றி அனைவரும் சுதந்திரமாகவும் கொடையாகவும் இயற்கையிடமிருந்து பெறப்பட்டது.

6. சமுதாயத்தில் ஓர் மதிப்புடைய அங்கமாகத் திகழ அடிப்படைக் கூறானது.

7. ஒவ்வொரு நாட்டிலும் அங்கீகரிக்கப்பட்ட சட்டத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டு நடைமுறைப்படுத்தப்பட வேண்டிய காரணி. இதனை,

> **“நம் இன்ப வாழ்விற்கு ஏற்றவையெல்லாம் நம் நலன்கள். அந்நலன்களிலே எவை சட்டத்தால் பாதுகாக்கப் படுகின்றனவோ அவை மட்டுமே நம் உரிமைகள். சட்டம் மனிதர்களது எந்த நலனை ஏற்றுப் பாதுகாக்கிறதோ அந்த நலன்கள் தான் உரிமைகள் ஆகின்றன. சட்டத்தால் பாதுகாக்கப் பெறாத நலன்கள் உரிமைகள் ஆவதில்லை”**[53]

என்கின்றார் மா. சண்முகசுப்பிரமணியம்.

## மனித உரிமைகளின் வளர்ச்சி

மனிதனை மனிதன் அடிமைப்படுத்தியிருந்த காலம் மறைந்து நாகரிக வளர்ச்சி மற்றும் அறிவியல் முன்னேற்றம் காரணமாக மனித வாழ்க்கையில் பல மாற்றங்கள் குடியேறின. காலச் சக்கரம் உருண்டோடிய நிலையில், மனிதன் முன்னேற்றப் பாதையில் அடியெடுத்து வைக்க முயன்ற போதே அவனுடைய உரிமைகளும் முன்னேற்றமடையத் தலைப்பட்டன.

மனிதனின் ஆளுமைத் திறன், அடக்கியாளும் தன்மை, அதிகாரங்கள், செல்வாக்குப் போன்ற காரணிகளால் மனிதப் பண்புகளும் உரிமைகளும் சிறப்படையலாயின. அப்பொழுது தான் மனித உரிமை பற்றிய எண்ணங்களும் அதற்கான தீர்வுகள் பெறப் போரட்டங்களும் எழுகின்றன. இதை,

**"தனிமனித உரிமைகள் அடக்குமுறைக்கு உள்ளாகும் போது ஒரு புரட்சியே நிகழ வாய்ப்பிருக்கிறது"[54]**

என்று சி.எஸ்.தேவ்நாத் அவர்களும்,

**"இவ்வகைப் போராட்டங்கள் ஆதி முதற் கொண்டு மனித வரலாற்று நெடுகிலும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. மக்கள் நாடோடிகளாக வாழ்ந்த காலத்தில் எழுந்தொன்று இது. ஆங்காங்கே மக்கள் கும்பல் கும்பலாகத் தங்கியிருந்தனர். அக்கும்பல்கள் தாங்கள் தங்கியிருந்த இடத்தை வளம் செய்து செழிப்பாக்கி உழவுத் தொழிலையும் பண்டமாற்றுதலையும் பெருக்கி உறுதியாக நிலைத்து வாழ முயன்று கொண்டிருந்தனர். இச்சமயத்தில் நாடோடி கும்பல்கள் நிலைத்து வாழ முயற்சிக்கும் இக்கும்பல்களுடன் அடிக்கடி போர் செய்து அவர்கள் சமாதான வாழ்வைக் குலைக்க முயன்றனர் இப்படி ஒரு காலம் இருந்தது. இந்த நிலை பல நூற்றாண்டுகள் நீடித்திருந்தது"[55]**

என்பர் சாமி. சிதம்பரனார். மேலும்,

**"இது இன்று நேற்று துவங்கியதல்ல. ஆதிக்கத்திற்கு எதிராக முதலில் எங்கெல்லாம் கலகங்கள் எழுந்ததோ அங்கெல்லாம் மனித உரிமைப் போராட்டத்தின் புராதனக் கூறுகளைக் காணலாம்"[56]**

என்றும்,

**"மனித உரிமைகள் என்பது கருணைப் பார்வையோ அருட்கொடையோ அல்ல." "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" எனத் தமிழ்ப்பனுவல் கூறுவது போன்று பிறப்பிலேயே எல்லோரும் சமம். கண்ணியமும் சுயமரியாதையும் மனிதனுக்கு இயல்பாக உரியன. இதை மதிப்பதும் அங்கீகரிப்பதும் அவசியம். இதற்கான போராட்டமே மனித உரிமைப் போராட்டம்"[57]**

என்றும் சு.பொ. அகத்தியலிங்கம் கூறுவனவற்றை ஒப்புநோக்க எளிதில் விளங்கும்.

மன்னன் தன்னை ஆண்டவன் பிரதிநிதியாக நினைத்துக் கொண்டு, வாயினின்று வரும் வார்த்தைகளே சட்டமாகக் கருதி நாட்டு மக்களின் சுதந்திரத்தையும், இன்பமான வாழ்க்கையையும் பறிக்க எப்பொழுதெல்லாம் அவைகள் செயல்படுத்தப்பட்டனவோ, ஆணைக்கு கட்டுப்படாதவர்கள் கொடுந்தண்டனைகளுக்கு ஆட்படுத்தப்பட்டனரோ அப்பொழுதெல்லாம் தங்களின் உரிமைகளைக் காப்பாற்றிக் கொள்ள, இழந்த உரிமைகளை மீட்டெடுக்க மக்கள் கொதித்தெழுந்து போராட்டங்களையும் கலகங்களையும் முன்னிருத்தினர் என்பது வரலாறு.

**"அரசனை ஆண்டவன் பிரதிநிதியாகக் கருதிய அக்கால கட்டத்தில் அரச கட்டளைகள் ஆண்டவனின் கட்டளைகளாகவே கருதப்பட்டு வந்த காலம். அச்சூழலில் இவை மனித மதிப்பை, சுயமரியாதையை, இயற்கை நியதியை மதிப்பதாக மக்கள் கருதத் தலைப்பட்டனர். இந்த உணர்வு மெல்ல மெல்ல மேலோங்கி கலகங்களாக, எழுச்சிகளாக, புரட்சிகளாகப் பூத்தன அவற்றின் ஒரு**

**முக்கிய மைல்கள் தான் பிரெஞ்சுப் புரட்சியும் சமத்துவம் சகோதரத்துவம் என்கிற பிரகடனமும்"[58]**

என்பர் சு.பொ. அகத்தியலிங்கம்.

கி.பி.1215 ம் ஆண்டு குறிப்பிட்ட சில பிரிவினரின் நல உரிமைகள் குறித்து நீதி வழங்குமாறு பிரிட்டிஷ் மன்னர் ஜானிடம் சமர்ப்பிக்கப்பட்ட மனுக்களே பேருரிமைப்பத்திரம் (magna carta) எனப்பட்டது. பண்டைய இங்கிலாந்தின் பண்டைய சட்டங்கள், வழக்கம் மற்றும் வழக்காறுகளைப் புறக்கணித்ததன் விளைவே ஜான் மன்னன் அப்பேருரிமை பட்டயத்தில் கையெழுத்திட்டதற்குக் காரணமாக அமைந்தது.

மனித உரிமை கேட்புக்கான போராட்டத்திற்கு அடித்தளமிட்டதன் வாயிலாக மக்கள் விரும்பினால் தேவாலயங்களுக்குச் சென்று வழிபடுவதற்குச் சுதந்திரமும் வரைமுறைப்படுத்தப்பட்ட வரிச்சுமையும், அபராதமும், அனைவருக்கும் நீதி போன்ற உரிமைகள் பெறப்பட்டது மட்டுமல்லாமல் இவ்வுரிமைகள் மறுக்கப்படும் காலத்தில் தக்க நிவாரணம் பெறவும் அப்பேருரிமைப் பட்டயத்தில் வகை செய்யப்பட்டிருந்தன.

## மனித உரிமைக்கான தேவைகளும் எதிர்ப்பார்ப்பும்

மனித உரிமைகள் என்னும் கருத்துரு அண்மைக் காலங்களில் தவிர்க்க முடியாத முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாக உலகெங்கும் வாழும் மக்களின் அன்றாட வாழ்வின் அங்கமாகத் திகழ்கின்றன. சாதி, மதம், இனம், மொழி, பால், நிறம் கடந்து உலகப் பொதுக் கொள்கையாகப் பரவிக் கிடக்கின்றன. மனிதன் மரியாதையுடனும், மாண்புடனும் நடத்தப்பட விரும்புகிறான். தன் சுயமரியாதைக்கு எவ்வகையிலும் மற்றொருவரால் இழுக்குவராமலும், காலங்காலமாகத் துய்த்து வரும் உரிமைகள் பறிக்கப்படாமலும் அரசின் சட்டம் என்ற கட்டுப்பாட்டிற்குள் அடங்கி எல்லாச்

சமூக நலன்களையும் தான் பெற்று அனுபவிப்பதோடல்லாமல் மற்றவரின் உரிமைகளில் தலையிடாமல் இருக்கச் செய்வதும் மனித உரிமைகளின் நோக்கமாகும்.

> **"தான் சமுதாயத்திற்குக் கடன்பட்டிருப்பது போலவே சமுதாயமும் தனக்குக் கடன்பட்டிருக்கின்றது என்ற சிந்தனை தான் தனிமனிதனுக்குச் சமுதாயத்தின் மீது கேட்புகளைத் (Claim) தந்தது. அதுவே உரிமைக்கு வித்திட்டது"**[59]

என்பர் சி.எஸ்.தேவ்நாத்.

உள்ளார்ந்த உரிமைகள் பிறருக்கு மாற்றியளிக்க இயலாத தன்மையன. இவைகள் திடீரென்று தோன்றி விடவில்லை. இயற்கையாகவே அவைகள் உள்ளடங்கியுள்ளன. இயற்கையாகவே மனிதன் பெற்றிருக்கின்ற உரிமைகளில் மற்றவர்களின் தலையீடு ஓங்கி வளர்ந்ததே அவ்வுரிமைகள் குறித்து சிந்திக்கவும், பேசவும், சட்டமியற்றவும், செயல்படுத்துவதற்குப் தேவை அதிகரித்தது. இயற்கை உரிமை பெற்றெடுத்த குழந்தை மனித உரிமைகள். இதனை,

> **"இருபதாம் நூற்றாண்டில் பேசப்படுகின்ற மனித உரிமை என்ற கருத்து திடீரென்று வானத்திலிருந்து குதித்து விடாது. எந்தப் புதுக் கருத்தோட்டம் ஆயினும் வரலாற்று ரீதியாக ஏற்பட்ட வளர்ச்சியின் சங்கிலித் தொடர்ச்சியே ஆகும். அப்படித்தான் மனித உரிமைகள் என்ற கருத்தோட்டமும் காலக் கிரமத்தில் வளர்ச்சி வடிவம் பெற்றதே"**[60]

என்று சு.பொ. அகத்தியலிங்கம் மனித உரிமைகள் வளர்ச்சியினைக் குறிப்பிடுகின்றார்.

பண்டைக் காலத்திலும் இடைப்பட்ட காலத்திலும் மனித உரிமைகள் என்னும் கருத்து அறியப்படவில்லை. முடியாட்சிக் காலத்தில் மன்னன் கடவுளுடைய அவதாரமாக மக்களால் கருதப்பட்டான். கடவுளைப்போன்று தன் நாட்டினையும் குடி மக்களையும் காப்பாற்றும் வல்லமைப் படைத்தவனாகத் தன்னை முன்னிறுத்திக் கொண்டான். மன்னனின் வாயிலிருந்து வரும் ஆணைகள் அனைத்தும் சட்டங்களாகக் கருதப்பட்டு வந்தன. இதனை,

> **"மன்னர்கள் தெய்வாம்சங்கள் அவர்களுடைய உரிமை கடவுளிடமிருந்து வந்தது என்பது தொன்மையான தத்துவம்"**[61]

என்பர் ஏ.ஜி. வேங்கடாச்சாரி.

நான், எனது, என்னுடையது என்ற எண்ணம் மனிதனுக்குத் தோன்றிய அன்றே மனித உரிமைக்கான வளர்ச்சி நிலையும் தொடங்கி விட்டன. இதை,

> **"இது என்னுடைய உடைமை, இதனை நான் மட்டுமே அனுபவிப்பேன் என்கின்ற உணர்வு மனிதனுக்கு ஆதிகாலந் தொட்டே இருந்து வந்திருக்கின்றது. அந்த உணர்வில் எழுந்ததே தனிமனித உரிமை"**[62]

என்று சி.எஸ்.தேவ்நாத் குறிப்பிடுகின்றார்.

குடிமக்கள் அனைவரும் சட்டத்திற்குக் கட்டுப்பட்டு அடங்கி நடப்பது கடமையாக்கப்பட்டது. மன்னராட்சிக் காலத்தில் தனக்குள்ள உரிமைகள் மறுக்கப்பட்ட போதும் எவை தன்னுடைய உரிமைகள் என்று தெளிவாக அறிந்து உணர்ந்து கொள்ள முடியாதவர்களாக மக்கள் இருந்த காரணத்தால் மனித உரிமைகள் மங்கிக் கிடந்தன.

மன்னராட்சி முடிவுற்று மக்களாட்சித் தொடங்கிய அண்மைக் காலத்தில் குறிப்பாக இரண்டாம் உலகப் போருக்குப் பின் மனித உரிமைகள் என்னும் கருத்துரு உலகின் எல்லா நாடுகளிலும் வளரத் தொடங்கியது. தொடர்ந்து பல நூற்றாண்டுகளாக இவ்வுரிமைகள் குறித்துப் பேசப்பட்டும் எழுதப்பட்டும், பல உடன்படிக்கைகள், அறிக்கைகள், மாநாடுகள் வாயிலாகச் சட்டமாக்கப்பட்டு, செயல்படுத்தப்பட்டு வருவதோடு நீர்த்து விடாமல் கண்காணிக்கப்பட்டும் வருகின்றன.

பரிணாம வளர்ச்சியின் வழி இயல்பாகப் பெற்ற ஆறாவது அறிவினால் மட்டுமே மனிதன் மனிதனாக ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. இயற்கை வழங்கிய உரிமைகளைக் கொண்டு மேற்கொள்ளும் வாழ்க்கை முறையினால் மனிதன் மனிதனாக மதிக்கப்படுகிறான். மனித உரிமைகளைப் பெற்றுக் கொள்வதற்கு மனிதனாகப் பிறந்ததன்றி வேறெந்தத் தகுதியும் வேண்டுவதில்லை. அவ்வுரிமைகளைப் பொருளீட்டுபவர்கள் மூலமாகவோ ஈட்டிய பொருளைக் கொண்டு வாங்கவோ, விற்கவோ, பிறருக்கு மாற்றியளிக்கவோ இயலாதன. ஆளும் வர்க்கமோ, அதிகார வர்க்கமோ நம்பிக்கைகளோ, சடங்குகளோ, எதுவும் மனித உரிமைகளைத் தடை செய்ய இயலாது, மறுக்கவும் முடியாது. மனிதனின் புற வளர்ச்சிக்கும் ஆளுமைத் திறனாக்கத்திற்கும் சமூகத்தில் நல்ல குடிமகனாகத் தன்னை நிலை நிறுத்திக் கொள்வதற்கும் இவ்வுரிமைகள் இன்றியமையாதன. மேலும்,

***“விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்***
***கற்றாரோடு ஏனை யவர்” [63]***

என்றும்

***“உரமொருவர்க்கு உள்ள வெறுக்கை அஃதிலார்***
***மரம் மக்களாதலே வேறு” [64]***

என்று வரும் குறட்பாக்களில் முறையே கல்வி மற்றும் செல்வம் இல்லாதவனை விலங்காகவும் மரமாகவும் குறிப்பிடுகின்றார். ஆனால் உரிமைகள் இன்றி வாழும் மனிதன் விலங்கினும் மரத்தினும் கீழான நிலைக்குத் தள்ளப்படுகிறான். இவ்வகையில் மனிதனை முழுமையான வனாக மாற்றும் ஆற்றல் அவன் பெற்றுள்ள உரிமைக்கு மட்டுமே உரித்தானது. மனித உரிமைகள் மனிதன் தோன்றிய போது இயற்கையின் கொடையாகக் கொடுக்கப்பட்டதன்றிச் சமூகமோ, மற்றொரு தனி மனிதனோ, குழுவோ அளித்து விடவில்லை. இதற்கு

> **"கடவுளின் படைப்புகளில் மனிதனே மிகச் சிறந்தவன்; மனிதனாகப் பிறந்தவன் நன்றாக வாழ வேண்டியவன் வாழ்வு செம்மையாக அமைவதற்குச் சில உரிமைகளும் சுதந்திரங்களும் இன்றியமையாதவை. இவற்றுடன் அவனுக்குச் சில கடமைகளும் உண்டு. ஆயினும் மனிதன் விலங்கு போல் இல்லாமல் மனிதனாக வாழ உரிமையுள்ளவன்"[65]**

என்றும்,

> **"மனிதன் உயிர் வாழ உரிமையுள்ளவன் கண்ணியமாக நடத்தப்பட வேண்டியவன் சுதந்திரமாகச் செயலாற்ற வேண்டியவன்"[66]**

எனவும் ஏ.ஜி. வேங்கடாச்சாரி கூறும் கருத்துக்கள் அரணாக அமைகின்றன. மேலும்,

> **"மனித உரிமைகள் என்பவை மக்களோடு தோன்றியவை. அவர்களால் தக்க வைக்கப்பட்டுள்ளவை. அவை அவர்களுக்கு மானியமாக வழங்கப்படவில்லை. சமூகம் அவர்களுக்கு ஒன்றையும் வழங்கவில்லை"[67]**

என்று எஸ். சாந்தகுமாரும்,

**“மனித உரிமைகள் என்பது கருணைப் பார்வையோ அருட்கொடையோ அல்ல. கண்ணியமும் சுயமரியாதையும் மனிதனுக்கு இயல்பாக உரியன. இதை மதிப்பதும் அங்கீகரிப்பதும் அவசியம்”[68]**

என்று சு.பொ. அகத்தியலிங்கமும் கூறும் கருத்துகள் எண்ணிப் பார்க்கத்தக்கன.

சகிப்புத் தன்மை, பரிவு காட்டல், கட்டுப்பாடுகள், கடமைகள், நம்பிக்கைகள் போன்றவைகள் இயற்கையிலேயே மனிதனிடம் காணப்படக் கூடிய பண்புகளாகும். இவைகள் மனித உரிமைகளை அடைவதற்கும், பெறுவதற்கும் வழி கோலுகின்றன. கடமைகள் உரிமைகளோடு இணைந்து உருப்பெறும் போது வளர்ச்சியும், கடமை மேலோங்கி உரிமை மறுக்கப்படும் போது வீழ்ச்சியும் அடைய ஏதுவாகின்றன.

**“ஒவ்வொருவரும் தன்னைப் போலவே மற்றவர்களையும் கருத வேண்டும். தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முனைவதைப் போல, மற்றவர்களையும் காக்க வேண்டும் என்ற பொறுப்புணர்வுகள் தோன்றாதபோது உரிமைகள் பற்றிய சிந்தனை தலைதூக்குகின்றது. மனிதர்கள் யாவரும் மற்றவர்களைச் சார்ந்தே வாழ வேண்டியுள்ளது. அதனால் ஒவ்வொருவரும் உரிமைகளைப் பெற்றிடல் அவசியமாகிறது.”[69]**

என்று ச.ஈஸ்வரன் குறிப்பிடுகின்றார்.

மனித உரிமைகள் பற்றிய சிந்தனையும் செயலாக்கமும் இன்றைய சூழ்நிலையில் மனித குலத்தின் தவிர்க்க முடியாத கருத்துரு ஆகும். இனப்படுகொலை, மொழிப்போர், நிறப் பாகுபாடு, முதலாளி வர்க்கத்திற்கும்

தொழிலாளி வர்க்கத்திற்கும் இடையேயான போராட்டங்கள், தீவிரவாதங்கள் யாவும் மனித உரிமைகள் பேணப்படாமல் மீறப்படுவதன் விளைவேயாகும். இவைகளைக் களைந்து புதியதொரு சமுதாயத்தை உருவாக்குவது காலத்தின் தேவையாகும் என்பதை,

> **"அடிப்படையான உரிமைகளைப் பறிக்காமல் தனிமனிதனது கண்ணியத்துக்குக் குறைவு இல்லாமல் தரும நியாயம் தவறாதபடி நல்வாழ்வை எல்லோருக்கும் அளிக்கக் கூடிய, புது சமுதாய அமைப்பைத் தோற்றுவிப்பது தான் இன்றைய உலகின் மகத்தான பிரச்சினை"**[70]

என்பர் ஏ.ஜி.வேங்கடாச்சாரி.

மனிதன் மட்டுமே அனைத்துப் பிறவிகளிலும் உயர்வானவன். பிற உயிரினங்களைப் போலவே வாழ்வதற்கு முழு உரிமை படைத்தவன், மரியாதையுடனும், கண்ணியத்துடனும் நடத்தப்பட வேண்டியவன். பிறரது நலன்களையும், உரிமைகளையும் மதித்து, தம்முடைய கடமைகளை நிறைவேற்றி நடந்திட வேண்டியவன். அரசியல், சமூக, கலாச்சார, பண்பாடு போன்ற உரிமைகள் அனைத்தும் பெற்று வாழத்தகுதியுடையவன். இவைகளின்றி வாழும் வாழ்க்கை விலங்கின வாழ்வினும் கேவலமானது.

> **"இருபத்தோராம் நூற்றாண்டின் அரசியல் சமூக பண்பாட்டுப் போர்க்களத்தில் மனித உரிமைகள் என்பதும் முக்கியமான பொருளாகும்"**[71]

என்பர் சு.பொ. அகத்தியலிங்கம்.

தனிமனிதர்களின் தொகுதி குடும்பம், குடும்பங்களின் தொகுதி, சமுதாயம், சமுதாயங்களின் தொகுதி நாடு, நாடுகளின் தொகுதி உலகம். உலகம் அமைதி பெற்று உயர்வடைய வேண்டுமானால் தனிமனிதனின்

உரிமைகள் பேணப்பட வேண்டும். தனிமனிதனுக்கு எதிரான உரிமை மீறல்கள் தொடர்ந்து வளர்ந்து வந்தால் நாளடைவில் அழிவிற்கு வழி வகுக்கும். தனிமனித உரிமைகளின் வளர்ச்சியே ஒரு நாட்டின் முன்னேற்றத்தின் பிரதிபலிப்பு ஆகும் என்பதை,

> **"தனிமனித உரிமைகளின் வளர்ச்சியே சமுதாயத்தின் முன்னேற்றம் என்றும் கொள்ளலாம்"**[72]

என்றும்,

> **"தனி மனித உரிமைகளுக்கு எவ்வித பாதிப்பும் இல்லாத நிலை தான் ஒரு சமுதாயம் நாகரிகமுடையது என்பதைக் காட்டும்"**[73]

என்னும் கருத்தும் எண்ணத்தக்கது.

மனித உரிமைகளைப் பாதுகாக்கும் அரணாகவும், செயல்படுத்தும் அமைப்பாகவும், கண்காணிக்கும் பொறுப்பு மிக்க முதன்மையான அங்கமாகவும் விளங்குவது அரசாங்கமும், சட்டமும் தான். இருப்பினும் அரசுக்கெதிராகவும் உரிமை மீறல்கள் ஆங்காங்கு நடைபெற்றுக் கொண்டு தான் வருகின்றன.

> **"தற்காலத்தில் மனித உரிமை என்பது சட்டத்தின் மூலமாகவும் அதே சமயம் அரசுக்கு எதிராகத் தனி மனிதனால் எழுப்பப்படும் கோரிக்கைகளாகவும் இருக்கின்றன"**[74]

என்பர் ஆ.பாண்டியன்.

சட்டத்தின் துணைக் கொண்டு தான் மனித உரிமைகள் என்னும் குழந்தையை முழுமைப் பெற்றதாக வளர்த்தெடுக்க, தனிமனிதனும் சட்டமும் அரசும் கைக்கோர்த்துக் கொண்டு செயல்படுத்த வேண்டிய தேவை இப்பொழுது உருவாகிக் கொண்டு வருகின்றது. இதை,

**“ஒரு பக்கம் நாம் நாகரீக வளர்ச்சிப் பெற்றுக் கொண்டிருந்தாலும் இன்னொரு பக்கம் நம் உரிமைகளைப் பாதுகாக்கச் சட்டத்தின் துணையும் அவசியமானது”**[75]

என்று சட்டத்தின் இன்றியமையாமையை வலியுறுத்துகிறார் சி.எஸ்.தேவ்நாத்.

அரசாங்கத்தின் செயற்பாடுகளை அளவிடும் அளவுகோலாக இன்று மனித உரிமைகள் உணரப்படுகின்றன. மனித உரிமைகள் பற்றிய அரசியல் நிலைகளும் அவற்றின் தீர்வுகளும் ஒவ்வொரு நாட்டிலும் பல்வேறு கோணங்களில் அலசப்படுகின்றன. ஒழுக்க நெறிகளின் உயரிய வெளிப்பாடு மனித உரிமைகளின் தோற்றமாகும்.

அரசாங்கம் என்ற அமைப்பு உருவானதால் மக்களின் உரிமைகளுக்கும் பாதுகாப்பிற்கும் நிலையான உத்திரவாதமும், சமூக அங்கீகாரமும் கிடைத்திருக்கின்றது. உரிமைகள் மீறப்படும் போது தக்க நடவடிக்கைகள் விசாரணைகள் நடைபெற்று தண்டனைகள் வழங்கப்பட்டன. இத்தகைய உரிமைகளே தற்காலச் சூழலுக்குத் தகுந்த நிலையில் மாற்றங்கள் பல கண்டறியப்பட்டு மனிதர்கள் மாண்பமையுடையவர்களாகவும் வாழ்வதற்கான இன்றியமையாத உரிமைகள் பெற்றிடவும் மனித உரிமைகள் வரையறுக்கப்பட்டது.

மனித உரிமைகளின் தேவைகளைப் பேராசிரியர் வ.நா.விசுவநாதன் ஆறு நிலைகளில் வகைப்படுத்துவர்.

முதலாவதாக,

ஒருவன் மனிதனா? அல்லது மிருகமா என்பதனைச் சாட்சியங்களோடு நிரூபித்தல் இயலாது. இரண்டு கால்களையும் கொண்டு நடப்பதனால் அவனை மனிதன் என்று ஏற்றுக் கொள்ளுதல் இயலாது.

ஒழுக்க மாண்பும், மனிதநேயமும் ஒருவருக்கு இருக்குமென்றால் அவரைச் சார்ந்த மனித உறவுகளுக்கு மனித உரிமைகள் தேவைப்படாது. ஒருவனின் மிருக குணத்தை வெளிப்படுத்துங்கால் அவன் சார்ந்த மனித உறவுகளுக்கு மனித உரிமைகள் தேவைப்படுகிறது.

உரிமைகள் நன்னெறிகளை வளர்க்க முயல்வதால் அது நமக்குத் தேவைப்படுகிறது. உடல் ரீதியாக மனிதனாகப் பிறந்து செய்கைகளால் மிருக உணர்வை வெளிப்படுத்தினால் பாதிக்கப்பட்டவர்க்கு மனித உரிமைகள் மிகவும் அவசியமானதாகத் தேவைப்படுகிறது.

இரண்டாவதாக,

உரிமைகளின் கோட்பாட்டில் சமத்துவம் முக்கியக் கருப்பொருளாய் இருப்பதால் சமத்துவத்தை நிலை நாட்ட உரிமைகள் தேவைப்படுகின்றன. மனித உரிமைகள் மற்றும் சமத்துவம் ஒன்றை ஒன்றுத் தழுவி நிற்பனவாகும். சமதர்மச் சமுதாயத்தை நாம் நிறுவமுற்படின் அதற்குச் சமத்துவம் என்ற அடித்தளம் அவசியம்.

மூன்றாவதாக,

இயற்றப்படும் சட்டங்கள் மற்றும் சமூகக் கோட்பாடுகள் மதிக்கப்பட வேண்டுமென்றால் அதற்குப் பின்புலமாக மக்கள் ஆதரவு இருத்தல் அவசியம். மனித உரிமைகளைப் பாதிக்காத சட்டங்கள் மற்றும் வழக்காறுகள் போற்றிப் பின்பற்றப்பட வேண்டும். மனித உரிமைகளைப் பாதிக்கும் எந்தவொரு சட்டத்தையும் மிக எளிதில் செயல்படுத்த முடியாது. ஒரு சட்டம் செயலாக்கப்பட வேண்டுமென்றால் அதற்குச் சமூக அமைப்பில் உள்ள அனைவருக்கும் மனித உரிமைகள் வழங்கப்படல் அவசியம்.

நான்காவதாக,

நம்மை முன்னிலைப்படுத்துகிற அடிப்படை உணர்வு நம்மிடம் இருக்கின்ற காரணத்தால் நமக்கு மனித உரிமைகள் தேவைப்படுகின்றன. தன்னிச்சையாகத் தன்னை முன்னிலைப் படுத்துகிறவர்கள் மற்றவரது உரிமைகளைப் போற்றுவர்.

ஐந்தாவதாக,

உரிமைகள் தனிமனிதனைச் சார்ந்திருப்பினும் அவை ஒட்டு மொத்தச் சமூக நலன் கருதிச் செயல்படுத்தப்படுகின்றன. சமூக நலன் பேண முற்படும் ஒரு அரசியல் கொள்கையாக நாம் உரிமைகளைக் காட்டலாம்.

ஆறாவதாக,

மனித உரிமைகளை மீறுகிற எந்த ஒரு சமுதாயமும் சமூகப் பொருளாதார மற்றும் அரசியல் வளர்ச்சியினைப் பெறுவது இல்லை. இதன் காரணமாய் நமக்கு மனித உரிமைகள் தேவைப்படுகின்றன என்ற கருத்துகள் மனித உரிமைகளின் இன்றியமையாமையே உணர்த்துகின்றன என்று வகைப்படுத்துவதை எண்ணிப்பார்க்கத்தக்கது.

மனிதனின் வளர்ச்சியில் மனிதனை மனிதன் மதிக்கும் நிலையில் அவனுடைய எண்ணங்களும் காலத்திற்கேற்ப மேற்கண்ட ஆறு நிலைகளில் வளர்ச்சியடைந்தாலும் அவற்றின் கோட்பாடுகள் நீண்ட நெடிய பயணத்தை உடையன எனலாம்.

## பன்னாட்டு அளவில் மனித உரிமைகள்

மனித உரிமைகள் பற்றிய சிந்தனையும் செயலாக்கமும் வலுப் பெற்றதன் விளைவாக 1628ஆம் ஆண்டின் உரிமைகள் மனு (Petittion of

Rights) 1689ஆம் ஆண்டின் உரிமைகள் மசோதா (Billor rights) 1789ஆம் ஆண்டின் மனித உரிமைகள் பிரகடனம், 1487ஆம் ஆண்டின் அமெரிக்க சுதந்திர பிரகடனம் 1862ஆம் ஆண்டின் வாஷிங்டன் உடன்படிக்கை, 1890ஆம் ஆண்டின் பிரசல்ஸ் மாநாட்டு ஆவணங்கள், 1885ஆம் ஆண்டின் பெர்லின் மாநாட்டுத் தீர்மானங்கள், பன்னாட்டுச் சங்கம், இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் 1941 ஆண்டின் அட்லாண்டிக் பட்டயமும், 1944 ம் ஆண்டின் டம்பர்டன் ஒக் திட்டங்களும், 1945ஆம் ஆண்டின் ஐக்கிய நாடுகள் சபை வழங்கிய பட்டயம் வாயிலாக ஐக்கிய நாடுகள் சபையின் பொருளாதார மற்றும் சமுதாயக் குழு வழங்கிய பொறுப்பை நிறைவேற்ற திருமதி எலினா ரூஸ்வெல்ட் தலைமையிலான மனித உரிமைகள் மீதான ஐக்கிய நாடுகள் ஆணையம் வழங்கிய 1946ஆம் ஆண்டின் மனித உரிமைகளின் அனைத்துலக பிரகடனத்தின் முதற்பகுதியான மனித உரிமைகள் மீதான அனைத்துலக பிரகடனம் (1948 டிசம்பர் 10) வரைவிற்கான காரணகர்த்தாவும், மனித உரிமைகளின் தந்தையாகப் போற்றப்படுகின்ற "ரினிகேசின்", 1966ஆம் ஆண்டின் வாழ்வியல் மற்றும் அரசியல் உரிமைகள் மீதான சர்வதேச உடன்படிக்கை, பொருளாதார மற்றும் கலாச்சார உரிமைகள் மீதான சர்வதேச உடன்படிக்கை, போன்ற பிரகடனங்கள், அறிக்கைகள், உடன்படிக்கைகளே மனித உரிமைகளுக்கு மதிப்பளிக்கச் செய்து உலக நாடுகள் அனைத்தும் பின்பற்ற வழி வகை செய்தன. மனித உரிமைகள் என்ற சொல் முதன் முதலாக அமெரிக்க சுதந்திர பிரகடனத்தில் கையாளப்பட்டிப்பதை அறிய முடிகிறது.

## இந்தியாவில் மனித உரிமைகள்

உரிமைகள் குறித்து அறியப்படாத காலந்தொட்டு மனுநீதி, சுக்ரநீதி போன்றவை மக்களின் உரிமைகளை வலியுறுத்தி வந்திருக்கின்றன. அவைகள் யாவும் சமமான உரிமையை வலியுறுத்தியதாகத் தெரியவில்லை.

பிறப்பினால் உயர்வு தாழ்வு கற்பிக்கப்பட்டு சாதிக்கொரு நீதியாக அமைந்தது. மனிதனின் மதிப்பை விட சாதி சமயத்தின் கொள்கைகளும், கோட்பாடுகளும், ஆச்சாரங்களும் முதன்மை பெற்று விளங்கின. உயர்குடியினரல்லாத ஏனையோர் உரிமைகளின்றி விலங்கினம் கீழாக நடத்தப்பட்டனர். அதுவே அவர்களின் விதி என்றும் கற்பிக்கப்பட்டது. இந்நிலை சுதந்திர இந்தியாவிலும் தொடர்ந்து இருந்து வந்தது. சமூகச் சீர்த்திருத்தவாதிகளும், சமயப் பெரியார்களும் எதிர்த்து நின்று உரிமைகளுக்கு உயிர் கொடுக்க உதவிக்கரம் நீட்டினார் என்பது வரலாறு. இந்தியாவில் சமூக நீதிக்கான போராட்டங்களே உரிமைக்கான போராட்டங்களானது.

> **“இந்தியாவைப் பொறுத்தவரைச் சமூகச் சீர்த்திருத்த இயக்கங்கள், சமூக நீதிக்கான போராட்டம், மனித உரிமைக்கான போராட்டம் இவற்றைத் தனித்தனியே பிரித்துப் பார்க்க இயலாது. இராமானுஜரும், இராமலிங்க அடிகளும், இராஜராம் மோகன்ராயும், கேசவ சந்திரசென்னும், ஜோதிபா பூலேயும், பசவரும், நாராயண குருவும், அம்பேத்காரும், பெரியாரும், முத்துக்குட்டி சுவாமிகள், இரட்டைமலை சீனிவாசன், அயோத்திதாசர் இன்ன பிற சமூக நீதி, சமூகச் சீர்த்திருத்தப் போராளிகள் நடத்திய போராட்டங்கள் முக்கியத்துவம் பெறுகின்றன”[76]**

என்று சு.பொ.அகத்தியலிங்கமும்.

> **“பாரத நாடு பழம்பெரும் நாடு” என்றான் பாரதி. இருபதாம் நூற்றாண்டில் அனைத்து நாட்டினராலும் பேசப்படுகின்ற மனித உரிமைகள் என்ற கருத்தோட்டம் இந்தியாவில் பழங்கால முதலாகவே மனித உரிமைகள் என்ற நிலையில்**

**பயன்படுத்தபடாமல் சமூக நீதி, சீர்த்திருத்தக் கருத்துகள், அறக்கருத்துகள் என்ற பல்வேறு நிலைகளில் மகாபாரதம், கீதை, இராமாயணம் போன்றவைகளில், பல்வேறு நிலைகளில் பரந்து காணப்பட்டன. மனித உரிமைகளின் பிரகடனத்தில் காணப்படும் கருத்துகளில் பழைய அடிப்படைகளின் வலிவையும் புதிய சித்தாந்தங்களின் பொலிவையும் ஒரு சேரக் காணலாம்"[77]**

என ஏ.ஜி. வேங்கடாச்சாரியும் குறிப்பிடுகின்றார். சமூகச் சீர்த்திருத்த வாதிகள், சமய வாதிகள் பலர் தம் புரட்சிக் கருத்துகளால் மக்களுக்கு உரிமை உணர்வினை ஊட்டினர்.

கௌடல்யர் எழுதிய அர்த்த சாஸ்திரம் மனு எழுதிய மனுதர்மம் போன்றவைகள் சட்டங்களையும் உரிமைகளையும் கடமைகளையும் சாதியை மையப்படுத்தி வரையறுத்தது. உரிமைகளையும் கடமைகளையும் ஒரு சேர தொகுக்கப்பட்ட நூலாக அவைகள் திகழ்ந்தன.

**"அர்த்த சாஸ்திரமும் மனுவும் சமூகத்தின் சட்ட திட்டங்களைச் சாதி அடிப்படையில் தீர்மானித்தது என்றாலும் ஒரு சமூகத்தில் முறையாகத் தொகுக்கப்பட்ட சில குடிமை உரிமைகள், கடமைகள் கொண்ட நூலாக அது அமைந்தது. காட்டு மிராண்டித்தனமாகவேனும் தனக்குத் தானே சில ஒழுங்குமுறைகளை விதித்துக் கொண்டு சமூக அமைப்பாக இந்தியா விளங்கியது"[78]**

என்ற கருத்து அறிஞர்கள் வழியே பெற முடிந்த ஒன்றானது. மேலும்,

**"மனித உரிமைகள் என்பவை நமது தேசத்துக்குப் புதியவை அல்ல. அறநெறி என்றும் தர்மம் என்றும் சமூகம் தோன்றிய**

**காலம் முதல் இவை அவ்வப்பொழுது உருவாகி வளர்ந்து வந்துள்ளன”**[79]

என்ற கருத்தும் நோக்கத்தக்கது.

இந்து சமயம் சார்ந்த சட்டங்களான மனு, உபநிடதங்கள், வேதங்கள் மற்றும் புராணங்கள், ஸ்மிருதிகள் யாவும் சாதி, தீண்டாமை மற்றும் ஏற்றத் தாழ்வுகளின் அடிப்படையிலேயே சட்டங்களை உருவாக்கின. இந்தியாவில் மனித உரிமைகள் மீதான போராட்டம் என்பது சாதி, மத, இன வேறுபாடுகளால் அடக்கி ஒடுக்கப்படுவதற்கு எதிராகக் கிளர்ந்தெழும் போராட்டங்களாகவே காணப்படுகின்றன.

## மனித உரிமை தொடர்பான இந்தியச் சட்டங்கள்

அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனம், 1948ஆம் ஆண்டு ஐக்கிய நாட்டுப் பொதுச் சபையால் நிறைவேற்றப்படுவதற்கு முன் 1946ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் இந்திய அரசியல் நிர்ணய சபை (Indian Constitutent Assembly) மனித உரிமைகள் காப்பாற்றப்படவும் சட்டத்தால் அங்கீகரிக்கப்பட்டு, நடைமுறைப்படுத்தப் படவும், மனித உரிமைகளுக்கு எதிரான செயல்களிலிருந்து தீர்வழிகள் பெறவும், அரசியலமைப்புச் சட்டத்தில் வழி வகைகளை ஏற்படுத்த எண்ணியதன் விளைவு, சுதந்திர இந்தியாவில் மனித உரிமைகள் குறித்து இந்திய அரசமைப்புச் சட்டத்தின் முகப்புரையில் நீதி, சுதந்திரம், சமத்துவம் போன்ற சொற்கள் அணி செய்தன. அத்துடன் மட்டுமல்லாமல் பகுதி III ல், வழங்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளும், பகுதி IV ல் வழங்கப்பட்டுள்ள அரசின் நெறியுறுத்துக் கோட்பாட்டுக் கொள்கைகளும் அவற்றிற்குச் சிறப்பு சேர்த்தன. 1976ஆம் ஆண்டு மேற்கொள்ளப்பட்ட இந்திய அரசியலமைப்புச் சட்டத்திருத்தம் 42 ன்படி, இறையாண்மை பூண்ட சமதர்ம, சமயச் சார்பற்ற

மக்களாட்சி குடியரசு (Sovereign, Socialist, Secular Democratic Republic) போன்ற பொருள் பொதிந்த வார்த்தைகள் மனித உரிமைகளைப் பறைசாற்றி நிற்கின்றன என்றாலும் இந்திய நாட்டின் விடுதலைக்குப் பின் மத்திய மாநிலங்களால் இயற்றப்பட்ட பல்வேறு வகையான சட்டங்கள் மனித உரிமைகளின் பாதுகாவலர்களாகச் செயல்பட்டு வருகின்றன.

1. மனித உரிமைகள் பாதுகாப்புச் சட்டம் 1993
2. சிறுபான்மையினருக்கான தேசிய ஆணையச் சட்டம் 1992
3. மகளிருக்கான தேசிய ஆணையச் சட்டம் 1990
4. தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினருக்கெதிரான வன்கொடுமைகள் தடுப்புச் சட்டம்–1989
5. குடிமை உரிமைகள் தடுப்புச் சட்டம் –1995
6. மனித வியாபாரத் தடுப்புச் சட்டம்
7. மகளிரை இழிவுபடுத்தம் வகையில் விளம்பரத் தடுப்புச் சட்டம்–1956
8. வரதட்சணை தடுப்புச் சட்டம்– 1961
9. சதித் தடுப்புச் சட்டம் 1823
10. தாய்மைப்பேறு நலன்கள் சட்டம்–1961
11. குழந்தைத் திருமண தடைச்சட்டம்–1929
12. சிறார் சட்டம்–1960
13. குழந்தைத் தொழிலாளர் தடுப்பு மற்றும் வரைமுறை சட்டம் – 1986
14. சாதி இல்லாமை நீக்கச் சட்டம்–1950
15. மனநலச் சட்டம்–1967
16. கொத்தடிமை ஒழிப்புச் சட்டம்–1976
17. சுற்றுச் சூழல் பாதுகாப்புச் சட்டம்–1986

18. பெண்சிசுக்கொலைத் தடுப்புச் சட்டம்–1876

19. விதவை மறுமணச் சட்டம்–1856

20. பலதார மண ஒழிப்புச்சட்டம் 1872

21. குறைந்தபட்ச சம்பளச் சட்டம்–1948

22. வாழ்வுரிமை பாதுகாப்புச் சட்டம்–1955

23. சிறார் குற்றவாளி நீதிச் சட்டம் – 1986

24. மனித உறுப்புகள் மாற்றச் சட்டம்–1994

25. கருக்கலைப்புச் சட்டம்–1971

26. தமிழ்நாடு கேலிசெய்தல் தடுப்புச் சட்டம்–1997

27. தமிழ்நாடு பெண்களைக் கிண்டல் செய்தல் தடுப்புச் சட்டம்–1998

28. தகவல் பெறும் உரிமைச் சட்டம்–2002.

29. மனிதக் கழிவு பணியாளர்களை நியமித்தல் உலர் கழிப்பகம் கட்டுதல் தடைச் சட்டம்–1993.

போன்ற சட்டங்கள் மனித உரிமைகளைக் காப்பாற்றுவதற்காக இந்தியாவில் இயற்றப்பட்டிருக்கின்றன.

## ஆணையங்கள்

தேசிய மனித உரிமைகள் ஆணையம்.

மாநில மனித உரிமைகள் ஆணையம்.

தேசிய பெண்கள் ஆணையம்–1990.

தேசிய சிறுபாண்மையர் ஆணையம்–1992.

தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினருக்கான தேசிய ஆணையம்.

பிற்படுத்தப்பட்டோருக்கான தேசிய ஆணையம்–1993.

போன்ற ஆணையங்கள் மனித உரிமைகளுக்கு அரணாக அமைகின்றன.

## இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் மனித உரிமைகள்

மனித உரிமைகளைப் பேணவும் நடைமுறைப்படுத்தவும் மக்கள் அனைவரும் சட்டத்தினால் பாதுகாக்கப்படவும் மனித உரிமைகளை இந்திய அரசியலமைப்புச் சட்டம் ஏற்றுக்கொண்டு அதற்கான வழிவகைகளை மேற்கொண்டுள்ளது.

“இந்திய அரசமைப்புச் சட்டத்தின் தொடக்கத்திற்கு உடன் முன் இந்திய நிலவரையில் அமுலிலுள்ள இந்தப் பகுதியின் வகையங்களுடன் முரண்படும் சட்டங்கள் இல்லா நிலையதாகி (void) விடும்” –உறுப்பு 13 (1)

“இந்தப் பகுதியில் அளிக்கப்பட்டுள்ள உரிமைகளை எடுத்துக் கொள்ளக் கூடிய (அல்லது) இல்லாமையாக்கக் கூடிய சட்டம் இல்லா நிலையாகும்.” உறுப்பு (13) (2)

“இந்த உறுப்பு வேறு பொருள் குறித்தாலன்றிச் சட்டம் என்பது அவசர பிரகடனம், கட்டளை, துணை விதி, விதி, ஒழுங்குமுறை, அறிவிக்கை, வழக்கம் அல்லது வழக்காற்றை உள்ளடக்கும்” உறுப்பு 13 (3) (அ)

மேற்கண்ட சட்டபிரிவுகளை உற்றுநோக்கின், இந்திய அரசமைப்புச் சட்டம் பகுதி III ன் உறுப்பு (13) மனித உரிமைகளின் பாதுகாவலனாக விளங்குகின்றது என உணரமுடிகிறது.

எந்த நபருக்கும் சட்டத்தின் முன் சம உரிமையையும் இந்திய நிலவரையில் சட்டத்தின் மூலம் சமமான பாதுகாப்பையும் அரசு மறுக்க கூடாது உறுப்பு (14) என்று சமத்துவ உரிமையை உச்ச நீதிமன்றம் குறிப்பிடுகிறது.

அரசியலமைப்புச் சட்டத்தின் அடிப்படை அம்சங்களை இந்திய நாட்டின் நாடாளுமன்றமும் சட்டமன்றமும் மீற முடியாது என்பதை **இந்திரா**

**ஷாவ்னே எதிர் இந்திய அரசு** என்ற வழக்கில் உச்சநீதிமன்றம் வலியுறுத்தியுள்ளது.

சமயம், இனம், சாதி, பாலினம், பிறந்த இடம் அல்லது வேறு எதன் பேரிலும் குடிமகனுக்கு எதிராக அரசு வேறுபாடு காட்டக்கூடாது. உறுப்பு (15) (1).

சமயம், இனம், பாலினம் பிறந்த இடம் அல்லது வேறு எந்தக் காரணத்தின் பேரிலும் எந்தக் குடிமகனையும், கடைகள், பொது உண்டிச்சாலை, உணவகங்கள் பொதுவான பொழுது போக்கு இடங்கள் ஆகியவற்றில் நுழையவிடாது தடுத்தல் கூடாது உறுப்பு 15 (2) (அ) அல்லது கிணறுகள், குளங்கள், குளிக்கும் இடங்கள், சாலைகள், அரசின் முழு நிதியத்தைக் கொண்டு அல்லது ஒரு பகுதி நிதியத்தைக் கொண்டு பராமரிக்கப்பட்டு வரும் பொது மக்கள் கூடுமிடம் அல்லது பெரிது மக்கள் பயன்படுத்துவதற்காக அர்ப்பணிக்கப்பட்ட இடத்தைப் பயன்படுத்துவதைத் தடுத்தல் கூடாது உறுப்பு 15 (2) (ஆ).

பொது வேலையில் சமவாய்ப்பு என்ற அடிப்படையில் ‘‘அரசின் கீழுள்ள அலுவலகத்தில் வேலை அல்லது பணி நியமிப்புத் தொடர்பான காரியங்களில் அனைத்துக் குடிமக்களுக்கும் சம வாய்ப்பு அளித்தல் வேண்டும். உறுப்பு 16 (1)

குடிமகன் எவரையும் சமயம், இனம், சாதி, பாலினம், பாரம்பரியம், பிறப்பிடம், உறைவிடம் அல்லது வேறு ஏதேனும் ஒன்றைக் காரணங்காட்டி அரசுப் பணியில் நியமிக்கப்படுவதற்கும் அல்லது வேறு எந்தப் பணி ஆற்றுவதற்கும் தகுதியற்றவர் என்று கூறவும் பாகுபாடு காட்டவும் கூடாது உறுப்பு 16 (2)

மேற்கண்ட சட்டப் பிரிவுகள் குடிமக்களுக்குச் சமத்துவ உரிமையை அளித்து குடிமக்களை வேறுபாடுகளிலிருந்து பாதுகாக்கின்றது.

இந்திய அரசமைப்புச் சட்டம் உறுப்பு (19) சுதந்திர உரிமையை மக்களுக்கு அளித்து பேச்சு சுதந்திரம் உள்ளிட்ட சில உரிமைகளுக்குப் பாதுகாப்பளிக்கின்றது. இதை,

பேசவும் எடுத்துச் சொல்லவும் சுதந்திரம் – உறுப்பு 19 (1) (அ)

ஆயுதங்களின்றி அமைதியாகக் கூட உரிமை – உறுப்பு 19 (1) (ஆ)

அமைப்பு அல்லது சங்கங்களை ஏற்படுத்த உரிமை – உறுப்பு 19 (1)(இ).

இந்திய நிலவரை முழுவதும் சுதந்திரமாகச் சென்று உலவிடும் உரிமை – உறுப்பு 19 (1) (ஈ)

இந்திய நில எல்லைக்குள் எந்தப் பகுதியிலும் வசிக்கவும் மற்றும் தங்கிடவும் உரிமை – உறுப்பு 19 (1) (உ)

மக்கள் எந்தத் தொழிலையும் செய்வதற்கும், வர்த்தகம் அல்லது வணிகம் எதையும் செய்வதற்கான உரிமை உறுப்பு 19 (1) (எ)

என்ற மேற்கண்ட சட்டப் பிரிவுகள் மனித உரிமைகளை நிலைநிறுத்தியுள்ளன. குற்றஞ்சாட்டப்பட்ட காலத்தில் அமலிலுள்ள ஒரு சட்டத்தின்படி குற்றம் எனக் கருதப்படும் செயலுக்காக, அத்தகைய சட்டத்தை மீறிச் செயற்படுவதற்கன்றி வேறு எதற்கும் எந்த நபரும் தண்டிக்கப்படுதல் கூடாது. அத்தகைய குற்றத்திற்காக நடைமுறையில் உள்ள சட்ட விதிப்படி விதிக்கப்பட வேண்டிய தண்டனையினைக் காட்டிலும் அதிகமான தண்டனையை அந்த நபருக்கு அளித்தல் கூடாது. உறு. 20(1)

ஒரே குற்றத்திற்காக ஒருவர் ஒரு முறைக்கு மேல் வழக்கு தொடுக்கப்படவோ தண்டிக்கப்படவோ கூடாது. உறுப்பு 20 (1) (உ)

ஒருவரை அவருக்கெதிரான குற்றத்தில் அவரையே அவருக்கெதிராகச் சாட்சியாக இருக்கக் கட்டாயப்படுத்தல் கூடாது. உறுப்பு 20 (1) (3) என்று குற்றங்களுக்கான தீர்ப்பிலிருந்து மனிதர்களுக்குப் பாதுகாப்பளிக்கின்றது.

இளஞ்சிறார்கள் வேலைக்கு அமர்த்தப்படுவதிலிருந்து காப்பாற்றவும் சமுதாயத்தில் சிறந்த குடிமகன்களாக்கக் கல்வி உரிமையைக் கட்டாய மாக்கியுள்ளது.

ஆறு வயது முதல் 14 வயது வரையுள்ள அனைத்துக் குழந்தைகளுக்கும் இலவசமாகவும் கட்டாயமாகவும் கல்வி வழங்க மாநில அரசாங்கச் சட்டத்தின் வாயிலான உரிய முறையில் வழிவகை செய்ய வேண்டும். உறுப்பு 21 (அ) பதினான்கு வயதுக்குட்பட்ட குழந்தைகளைத் தொழிற்சாலை அல்லது சுரங்கத்தில் வேலை செய்யப் பணியமர்த்துதல் கூடாது அல்லது அபாயகரமான பணிக்கு அமர்த்துதல் கூடாது. உறுப்பு (24)

மேலும் முறையற்ற சிறைவைத்தலுக்கு எதிராக ஒருவர் எந்தக் காரணத்திற்காகக் கைது செய்யப்பட்டுள்ளார் என்ற காரணத்தைத் தெரிவிக்காமல் அவரைக் காவலில் வைத்தல் கூடாது. உறுப்பு 22 (1)

மனிதனுக்குரிய மாண்பு காப்பாற்றப்பட வேண்டும் விலங்குகளைப் போலவும், பொருட்களைப் போலவும் வாங்குவதும் விற்பதும் குற்றமாகவும் தண்டனைக்குரியதாகவும் எண்ணப்படுகிறது. இதை, மனித உயிரினங்களை வாங்குவது விற்பது, பிச்சை எடுக்கச் செய்வது, வேலைக்குக் கட்டாயப் படுத்துவது ஆகியன தடை செய்யப்பட்டுள்ளன. இந்த வகையத்திற்காக முரண்பட்டு செயல்படுவது குற்றமானதும் தண்டனைக்குரியதாகும் உறுப்பு 23 (1) அடிமை முறைக்கு எதிரான உரிமையை நிலைநிறுத்துகின்றது.

மக்கள் தாம் விரும்பும் மதத்தை ஏற்றுக் கொள்ளவும் மதக் கருத்துகளைப் பரப்புவதற்குமான மதத்திற்கான சுதந்திர உரிமையை உறுப்பு (25) அளிக்கின்றது.

இந்தியாவின் நிலவரைக்குள் அல்லது அதன் பகுதி எதிலும் வாழ்கிற மக்களின் எந்தப் பிரிவினரும் தமக்கென்று பெற்றிருக்கின்ற மொழி, வரி வடிவம், நாகரிகத்தைப் பேணிப் பாதுகாக்க உரிமை உண்டு. உறு 29 (1)

அரசால் (அ) அரசாங்கத்தின் நிதி உதவியைப் பெற்று நடத்தப் பெறுகின்ற கல்வி நிலையம் ஒன்றில் எவருக்கும் இனம் சாதி மொழி அல்லது வேறு எவற்றையும் காரணங்காட்டி அனுமதி மறுக்கக் கூடாது. உறு 29 (2) என்று பண்பாட்டு மற்றும் கல்வி உரிமைகளை அரசமைப்புச் சட்டம் பாதுகாக்கின்றது.

மனிதன் சுதந்திரமானவன் சட்டத்தால் இன்றிக் கட்டுப்பாடுகளற்றவன் தனக்கான சுதந்திரங்களும் உரிமைகளும் பறிக்கப்படும் போதும் நசுக்கப்படும் போதும் தன் உரிமையை நிலைநாட்டிக் கொள்வதற்கும், பாதுகாத்துக் கொள்வதற்கும் சட்டம் தீர்வழிகளை அளித்துப் பாதுகாக்கின்றன.

அரசமைப்புச் சட்டம் பகுதி IIIல் சொல்லப்பட்ட, உத்திரவாதம் அளிக்கப்பட்டுள்ள உரிமைகளை அடைவதற்காக நாட்டின் உயர்ந்த அதிகாரம் படைத்த உச்ச நீதிமன்றம் வரை சென்று தீர்வு பெறலாம் உறு 32 (1).

ஐந்து வகையான நீதிப்பேராணைகள் மூலம் உரிமைகளை மீட்டெடுக்க வழிவகை செய்யப்பட்டுள்ளது. பல்வேறு சட்டத்திருத்தங்களின் வாயிலாக அரசமைப்புச் சட்டத்தின் முகப்புரையில் சேர்க்கப்பட்டுள்ள இறையாண்மை மிக்க சமதர்ம, சமயசார்பற்ற மக்களாட்சி குடியரசு,

சகோதரத்துவம் போன்ற வார்த்தைகள் மனித உரிமைகளை நிலைநிறுத்தும் தூண்களாகும்.

## இலக்கியங்கள் காட்டும் பொதுவான வாழ்வியல் உரிமைகள்

எது இலக்கியம் என்ற கேள்விக்கு முழுமையானதும் பொருத்தமானதுமான விடையளிப்பது என்பது இன்றளவும் இயலாத ஒன்றாகவே இருந்து வருகின்றது. குறிப்பிட்ட வரையரைக்குள் அடங்காததும் அடக்க முடியாததுமாக இலக்கியம் காணப்படுகின்றது. இலக்கியத்தைச் சுவைத்தவர்கள் உணர்ந்த சுவைக்குத் தக்கவாறு வரையறை செய்ய முயன்று வருகின்றனர். அதில் முழு வெற்றியே கண்டிருக்கின்றனர் என்று உறுதியாகச் சொல்லி விடமுடியாது. இலக்கியக் கடலில் மூழ்கி முத்தெடுத்து மாலை தொடுக்கப் பலர் இன்றளவும் முயன்று தான் வருகின்றனர்.

இலக்கியம் இயம்புவது இது தான் என்று அறுதியிட்டு உறுதியாகச் சொல்லி விட முடியாது. முடியுமாயின் அது இலக்கியம் ஆகாது. நவில்தோறும் புதுப்புதுக் கருத்துகளைத் தரும் தன்மை கொண்டதும், சிந்தனையைச் சிறகடிக்கச் செய்வதுமே இலக்கியம்.

> **"பொதிந்துள்ள கருத்துகளின் சுவை யாவையும், பொருள்கள் அனைத்தையும் முதல் அணுகலிலேயே தந்து விடாமல் பயில் தோறும் புதிய நயங்கள் அளிப்பதாகவும் தொடர்ந்து ஆர்வமூட்டுவதாகவும் இருக்கும் இலக்கியங்களே சிறப்புப் பெறும்"[80]**

என்ற கருத்து குறிப்பிடத்தக்கது.

இலக்கியத்தின் நோக்கம் மனிதனைச் செம்மைப்படுத்துவது, செழுமைப்படுத்துவது என்பதோடு மட்டும் நின்று விடாமல், தான் கண்ட சமுதாயத்தின் மேன்மையினைப் பறைசாற்றுவதும், சீர்கேடுகளைக்

களைவதும், காண விழைந்த சமுதாயத்தை உருவாக்குவதன்றி அழகியலும், கற்பனை வளமும் நிறைந்த பெட்டகமாக இருப்பதன்று.

> **“தனி மனிதனைப் பண்படுத்தி மேம்பட்ட வாழ்க்கையை அவன் நுகர பயன்பட வேண்டும் என்பது மட்டுமல்ல சமுதாயத்தையே செம்மையுறச் செய்வதும் இலக்கியத்தின் தலையாயக் குறிக்கோள்களுள் ஒன்று”**[81]

என்று இலக்கியத்தின் குறிக்கோளைக் கோடிட்டுக் காட்டுகின்றார் பேரா. இராஜமுத்திருளாண்டி.

தனிமனித ஒழுக்கம், சமூக அக்கறை, சமுதாயச் சீர்த்திருத்தம், மக்கள் நலன் போன்ற கூறுகளை உள்ளடக்கியதாகவும் மாக்கள் தன்மை கொண்டவர்களையும் பண்பில் சிறந்த மக்களாக மாற்றவல்லதுமான இலக்கியங்களே உலகில் அழியாப் புகழ் பெற்று நிற்கும்; நிலைக்கும்.

இலக்கினை இயம்புவது இலக்கியம் ஆகும். தொல் சமுதாயத்தின் பிரதிபலிப்பு, முன்னை நாகரிகம், வாழ்க்கைப் பதிவின் எச்சம், வரலாற்றுச் சுரங்கம், பண்பாட்டுக் களஞ்சியமாகக் காணப்படும், அத்தகு இலக்கியம் காலத்தால் தொல்காப்பியத்திற்கும் முந்தியது என்பதை இலக்கண நூலான தொல்காப்பியத்தில்,

> *“என்மனார் புலவர்”* [82]
> *“என மொழிப”* [83]
> *“நூலென மொழிப நுணங்குமொழிப் புலவர்”* [84]
> *“நுனித்தகு புலவர் கூறிய நூலே”* [85]
> *“புகரின் றென்மனார் புலமை யோரே”* [86]
> *“இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே”* [87]
> *“வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே”* [88]

எனவரும் மேற்கண்ட நூற்பாவடிகள் வழி தொன்மைத் தமிழ்ச் சமுதாயம் நெறிபட்ட வாழ்வினை மேற்கொண்டிலங்கியது என்பதை அறிய முடிகிறது. எனினும் அதற்கான சான்றுகள் கிடைக்கப்பெறவில்லை என்பதனை மறுக்க இயலாது.

**மனையறம்**

களவு, கற்பு என்ற இரு பகுதிகளைக் கொண்ட சமூக வாழ்வில் கற்பிற்கு முன்னதாகத் தலைவன் தலைவி இருவரும் களவு வாழ்க்கை மேற்கொண்டிருந்தனர். களவு வெளிப்படுவதற்கு முன்னரும் களவு வெளிப்பட்ட பின்னரும் கற்பு வாழ்வு வாழ்ந்தனர். இதை,

*“வெளிப்படை தானே கற்பினோ டொப்பினும்”* [89]

என்ற நூற்பாவில் சுட்டிக் காட்டுகின்றார் தொல்காப்பியர்.

பழஞ் சமுதாயத்தில் களவு வாழ்வே மேலோங்கி இருந்தாலும் தலைவனும் தலைவியும் கற்பு நெறியோடு வாழ்ந்தனர். திருமணச் சடங்கு இல்லாமல் ஒருமித்து இல்லறம் நடத்தினர். பெரியோர்கள் கரணத்தைக் காரணமாய் அமைத்துச் சடங்கினைத் தோற்றுவித்தனர். என்பதை,

*“பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்*
*ஐயர் யாத்தனர் கரணம் என்ப”* [90]

என்ற நூற்பா மூலம் அறிய முடிகிறது.

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளோடு முன் தோன்றிய மூத்த குடியான தமிழ்க்குடியின் நாகரிகம், பண்பாடு, வரலாற்றுச் சிறப்புகள், பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் போன்ற வாழ்வியலுக்கான அனைத்துக் கூறுகளையும் உள்ளடக்கிய பாட்டும் தொகையும் என்று பகுக்கப்பட்ட பதினெண் மேற்கணக்கு நூல்களாகிய சங்க இலக்கியங்களும்

அறநூல்களான கீழ்க்கணக்கு நூல்களும் இரட்டைக் காப்பியங்களும் பழந்தமிழ்ச் சமுதாயத்தினைப் படம் பிடித்துக் காட்டும் காட்சிப் பேழையாகும்.

1215ஆம் ஆண்டு கருக்கொண்டு 18, 19ஆம் நூற்றாண்டுகளில் உருப்பெற்று இருபதாம் நூற்றாண்டில் ஆலமரமாக வளர்ந்த மனித உரிமைச் சிந்தனைகள் என்ற கருத்து, தமிழ்ச் சமுதாயத்திற்குப் புதியன அன்று உரிமைகள் என்ற சொல்லில் கையாளப்படாமல் மனித சமுதாயத்தை மேலோங்கி இருக்கச் செய்ய ஆற்றல் வாய்ந்த அறக்கருத்துகளாகவும், அறிவுரைகளாகவும், சமய போதனைகளாகவும், வாழ்வியல் முறைகளாகவும் மனித நேயச் சிந்தனைகளாகவும் பல்வேறு கோணங்களில் பயிலப்பட்டும் பயிற்றுவிக்கப்பட்டும் வந்திருக்கின்றன.

> **"மனித உரிமைகள் என்ற கோட்பாடு தமிழ்ச் சமுதாயத்தால் போற்றப்பட்டதொரு மிக மிகப் பழமையான கோட்பாடு ஆகும் என்றால் அது மிகையாகாது. 2000 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே பண்பட்ட நாகரிகத்தை வளர்த்து உலகிற்கே வழி காட்டும் முறையில் மனித சமுதாயத்தையே ஒரு குடும்பமாகக் கருதி வாழ்க்கை நடத்தியவர் தமிழர்"[91]**

என்பர் தி.ச.மோகன். மேலும்,

> **"அறம் என்ற சொல்லின் பொருளை அவ்வாறே உணர்த்தும் சொல் ஆங்கிலத்தில் இல்லை. அறம் என்பது அரசால் இயற்றப்படாதது. சான்றோர்கள் உள்ளத்திலே இயல்பாய் எழும் உயர்ந்த எண்ணங்களைக் கொண்டது. இயற்றப்படாமல் இயல்பாய் எழுவதால் 'அறம்' என்பதை இயற்கைச் சட்டம் என்று ஆங்கிலத்தில் கூறுகின்றனர். இயற்கைச் சட்டம் என்ற தொடர் அறம் என்ற கருத்தினை**

**உணர்த்துவதற்குப் போதுமானதன்று என்பதால் இயற்கை நீதி என்றும் அதைக் கூறுவார்கள்"[92]**

என்பர் மா.சண்முகசுப்பிரமணியம்.

அறக் கருத்துக்களே சட்டங்களாகக் கோலோச்சி இருக்கின்றன என்பதைச் சங்க இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன.

## அரசாட்சி முறை

'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' அரசு என்பது மக்கள் தங்களைத் தாங்களே உயர்த்திக் கொள்ள ஏற்பட்ட அமைப்பாகும். மக்களைப் பாதுகாக்கவும் வழி நடத்திடவும் ஏற்பட்ட அரசமைப்பு நாளடைவில் மக்களை அடக்கிஆள நினைத்ததும் அடிமைப்படுத்தத் துடித்ததும் முடியாட்சிகள் நிலை பெறாததற்குக் காரணங்களாயின.

**"அரசாங்கத்தை நடத்துவோர் குடி மக்களின் குறைகளைப் பற்றிச் சிந்தியாமல் தங்கள் இன்பத்தையும் தங்கள் அதிகாரத்தையுமே பெரிதாக எண்ணுவார்களானால் அவர்களால் நடத்தப்படும் அரசாங்கம் நிலைத்து நிற்காது. குடிமக்கள் வெறுப்புக்கும் அவமதிப்புக்கும் ஆளான எந்த அரசாங்கமும் இவ்வுலகத்தில் நிலைத்திருந்ததில்லை"[93]**

என்கின்றார் சாமி. சிதம்பரனார்.

மக்களை ஒன்றுபடுத்திடவும், பாதுகாக்கவும், தோன்றிய அரசமைப்பு மக்களைக் காப்பாற்றி இன்புற்று வாழ விடுவதை விடுத்து அவர்களை அடக்கி அடிமைப்படுத்திடவும், அடக்கியாளவும் நினைத்து முடியாட்சிகள் போன்று செயல்பட்ட நாடுகளின் வீழ்ச்சியினை நன்கறிய முடிகின்றது.

மன்னன் நிலங்களை அளவீடு செய்து, குடவோலை முறையில் தேர்தலை நடத்தி, கொடுங்கோலனாக இல்லாமல் மக்கள் நலனையே தன் நலம் என்ற நிலைபாட்டினை மேற்கொண்டதன் விளைவாகக் கொடுங்கோலாட்சி என்ற பெயர் இடம் பெறாமல் நல்லாட்சி நடத்தினர். 'குளம் தொட்டு வளம் பெருக்கினர்'. மக்கள் தம் நாடு காக்க வீட்டுக்கொருவர் புறப்படுதலை மரபாகக் கொண்டனர். 'வரப்புயர நீர் உயரும் நீர் உயர நெல் உயரும் நெல்லுயர குடியுயர்ந்து கோன் உயர்வான்' என்றமையால் குடிமக்கள் மன்னன் நிழலில் அமைதி வாழ்க்கை வாழ்ந்தனர். அமைதியான கால அளவில் பல்வேறு கலைகளும் சிறந்திட மக்களும், மன்னர்களும் ஆர்வம் காட்டினர். நாட்டில் நல்லாட்சி நடந்தமையால் தீங்கின்றி மக்கள் மனநிறைவோடு தங்களுக்குரிய கடமையில் சிறந்தனர்.

சங்க காலத்தே முடியாட்சியானும் குடியாட்சியின் பண்பட்டச் சூழலே விளங்கியது. அரசனே குடிகளுக்கெல்லாம் தலைவன் என்றமையால்,

**"மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்"**

என்ற மரபு ஏற்றுக் கொள்ளப்பட்டது. மக்கள் நல்வாழ்வு வாழ வேண்டும். அதுவே மக்களுக்கு நாம் ஆற்றும் கடமை என்று எண்ணினர் மன்னர்கள்.

சங்க காலத்தில் தோன்றிய முடியாட்சியில் மன்னர்களுக்கு, அறிவுரை கூறி அறத்தை நிலை நாட்டும் பணியினை மேற்கொள்ள அமைச்சரவையும், ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் துணை நின்றன. மன்னரும் ஆட்சிக் கட்டிலில் அமர்ந்து குடி மக்களின் நலன் காத்தனர். தங்களைக் காக்கும், வழி நடத்தும் கடவுளாக மன்னனை மக்கள் கருதினர். மன்னனும் தம் குடிகளை உயிராகக் கருதினார்.

இறை எனும் சொல் மன்னனைக் குறிக்கும் சொல்லாகவும் அமைந்தது. இறை எனப்பட்ட அரசன் தவறு செய்ய நேர்ந்த சமயங்களில்

புலவர் பெருமக்களால் இடித்துரைக்கப்பட்டான். அவ்வுரிமையைப் புலவர்கள் குறைவரப் பெற்றிருந்தனர். நாட்டு மக்களும் தம் கருத்தினை எடுத்துரைக்கும் பேச்சுரிமை, கருத்துரிமை, விரும்பும் தொழில் செய்யும் உரிமை, விரும்பும் இடங்களுக்குச் சென்று வர உரிமை, சமய உரிமை, பொருளீட்டும் உரிமை, இல்லறம் நடத்தும் உரிமை, அரசுப் பணி செய் உரிமை முதலிய உரிமைகள் பெற்று இன்புற்றிருந்தனர்.

> **"நாட்டு மக்களுக்கு உரிமை வழங்காது அவர்களை அடிமைகளாக அடக்கியாளுங் கொடுங்கோலாட்சி முறை சங்க காலத் தமிழ் மன்னர்க்கு கனவிலும் தெரியாத ஒன்றாகும். தவறு கண்டால் அரசனையும் இடித்துரைத்துத் திருத்தும் உரிமையும் தம் உள்ளக் கருத்தினை அஞ்சாது எடுத்துரைக்கும் பேச்சுரிமையும், தாம் விரும்பிய முறையில் கடவுள் வழிபாட்டினை அமைத்துக் கொள்ளும் சமய உரிமையும், விரும்பிய இடங்களுக்குத் தடையின்றிச் செல்லும் போக்குவரத்துரிமையும் தமக்கு இயன்ற தொழில்களைச் செய்து பொருளீட்டுதற்குரிய தொழிலுரிமை ஆகிய இவையெல்லாம் குடி மக்களின் உரிமைகளாகவே கருதப்பட்டு அக்காலத் தமிழ் வேந்தர்களால் காக்கப் பெற்றன"[94]**

என்ற க.வெள்ளைவாரனன் அவர்களின் கூற்றும் இங்கு கவனிக்கத்தக்கது.

> ***"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்"***

என்ற வள்ளுவரின் கருத்தும்,

> ***"யாதும் ஊரே யாவரும் கேளிர்"***

என்ற புறநானூற்றுப் புலவனின் சிந்தனையும் சங்க காலம் தொடங்கி காலந்தோறும் மக்களை உரிமைகளோடும் கடமைகளோடும் வாழ வகை

செய்தன. சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்ற கோட்பாடானது சங்க காலத்திலும் அறநூல் காலத்தும் காப்பிய காலத்திலும் சமுதாயத்தில் கடைபிடிக்கப்பட்டு வந்திருக்கின்றது என்பதைத் தெளிவுபடுத்துகின்றன.

மக்கள் தம் உரிமைகளைப் பற்றிப் பேசும் போது அவர் தம் கடமைகளையும் பழந்தமிழ் இலக்கியங்கள் சொல்லாமலில்லை அனைத்தையும் அறநெறிக் கருத்துகளாகப் பதிவு செய்யப்பட்டு மக்கள் மனதில் பதிய விடப்பட்டதை இலக்கியங்கள் உணர்த்தி நிற்கின்றன.

> **“அரசுபால் மக்களுக்குள்ள கடமை மக்கள்பால் அரசுகளுக்குள்ள பொறுப்பு ஆகியவை நமது பழைய நூல்கள் பலவற்றிலும் விவரிக்கப்பட்டுள்ளன. உரிமைகள் என்று தனியாக இந்நாட்டில் பழங்காலத்தில் பிரித்துப் பேசப்பட்டதில்லை. உரிமைகளையும், கடமைகளையும் இணைத்தே தரும் சாத்திரங்கள் (அறநூல்கள்) வழி வகுத்துக் கூறியுள்ளன. அறவழிப் பற்றிய குறள்களில் திருவள்ளுவரால் உரிமைகளையும் கடமைகளையும் இந்நாட்டுப் பண்பாட்டிற்கேற்பச் சேர்த்தே கூறியுள்ளார்”**[95]

என்ற ஏ.ஜி. வேங்கடாச்சாரியின் கருத்துக் குறிப்பிடத்தக்கது.

## பொதுமையறம்

சங்க காலச் சமுதாயம் வேற்றுமைச் சிந்தனை அற்றதாகவே இருந்திருக்கின்றது. உலக உற்றுமையைக் காண விழைந்திருக்கின்றது. பிற நாட்டு மக்களையும் தம் மக்களைப் போலப் பாவித்துப் புலவர்களும் வலியுறுத்தி அறம் பாடியிருக்கின்றனர். இதற்கு,

*‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’*

என்ற புறநானூற்றுப் பாடல் சான்றாகின்றது. நாடு, மொழி, இனம் குறித்து வேறுபாடு காணப்படவில்லை. தமக்கு, தன் குடும்பத்தார்க்கு, தம் நாட்டிற்கு எனத் தனிப்பட்ட நீதியும் நடைமுறையும் இருந்ததை அறிய இயலவில்லை. மன்னனும் மக்களும் சமமாகவே விதிமுறைக்கு உட்படுத்தப் பட்டிருக்கின்றனர்.

தன்னலம் கருதாது உலகம் சார்ந்த பொது நலத்தை நாடியிருந்தனர். யான் பெற்ற இன்பம் வையகம் முழுவதும் பெற வேண்டும் என்று விழைந்தனர். அனைத்தையும் பொதுவாக வைத்து எண்ணியபாங்கு கொண்டோராய் இருந்தனர் என்பதற்கு,

***"உண்டால் அம்மஇவ் வுலகம்"*** [96]

***"உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு"*** [97]

***"இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின், பரந்து***
***கெடுக உலகியற்றியான்"*** [98]

மேற்கண்ட பாடலடிகள் பண்டைத் தமிழரின் பரந்து பட்ட பார்வைக்கு சான்றாக அமைகின்றன. இதனை,

> **"உலகம் என்ற சொல்லையே தமிழர்கள் போற்றிப் புகழ்ந்தார்கள். இச்சொல்லை மங்கல மொழியாகக் கொண்டனர். உலகம் என்ற சொல்லை முதலில் வைத்து எழுதப்படும் பாடல்களையெல்லாம் தெய்வத்தன்மைப் பெற்ற பாடல்களாகக் கொண்டனர். பழந்தமிழர்கள் உலகத்தைக் குறுகிய கண் கொண்டு காணவில்லை. பரந்த நோக்கமுடன் உலகம் முழுவதையும் பார்த்தனர்"**[99]

என்கின்றார் சாமி. சிதம்பரனார்.

தமிழ்ச் சமூகம் உலக ஒற்றுமையைக் காண விரும்பியது. மனித இனம் ஒன்றுபட்டு வாழ்தலையும் மற்றவர்களுடைய உரிமையையும்

தன்னுடைய கடமைகளையும் சிந்தித்துச் செயலாற்ற முற்பட்டது. அனைத்து மக்களும் வளத்திலும், வாழ்விலும் மேன்மையடைய வேண்டும் என்ற எண்ணம் மக்களிடையே காணப்பட்ட பொதுப் பண்பாக இருந்தது,

**“பண்டைத் தமிழர்கள் மனிதத் தன்மையைக் காப்பாற்றுவதிலே முனைந்து நின்றனர். மனித சமுதாயத்தை ஒன்றெனக் கருதினர். மனித சமுதாயம் ஒன்று பட்டு வாழ வேண்டும்; உயர்ந்த நிலையில் வாழ வேண்டும். இதற்காக உழைப்பது தமது கடமை என்று கருதினர்”** [100]

நாடு தழைக்கவும், வாழ்வு சிறக்கவும் இன்றியமையாதது மனிதப் பண்பு. அறச் செயல்களைச் செய்வித்தலும் குற்றம் தவிர்த்தலும் முன்னோர் கண்டவழி. குற்றம் செய்யும் கால் தண்டித்தலை விடத் திருத்த முனைந்தனர் என்ற நம் முன்னோர்களின் உள்ளக் கிடக்கையைச் சங்க இலக்கியங்களும், அற இலக்கியங்களும் அறிவுறுத்துகின்றன. எல்லா உயிர்களையும் தம் உயிராய் எண்ணினர்.

***“ஆன்முலை அறுத்த அறன்இ லோர்க்கும்***
***மாண்இழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்”*** [101]

என்ற இப்பாடல் மனித நேயத்தின் தன்மையை எடுத்துக் காட்டுகின்றது.

தாம் கண்டுணர்ந்த உண்மையை, உலகத்தின் தன்மையை சான்றோர்கள் காலந்தோறும் மக்களுக்கு உணர்த்தி நல்வழிப் படுத்தியிருக்கின்றனர். தாம் சார்ந்த இனம் மொழி சமய மக்களுக்கு என்றிராமல் உலக மக்கள் அனைவரும் அன்பில் மூழ்கவும் பண்பில் சிறக்கவும் அறிவுரைகளை அறங்களாகப் பாடினர். சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் பன்னிரு நூல்கள் அறநூல்களாக இருப்பனவே இதற்குச் சான்று. இம்மையில் பிறர்க்கு

நன்மைச் செய்ய துணியவில்லையாயினும் தீமை செய்வதை விட்டொழிக்க முயல்தல் வேண்டும் என்று வலியுறுத்தியுள்ளனர். இதனை,

*"பல்சான்றீரே; பல்சான் றீரே;*
*கயல்முள் அன்ன நரைமுதிர் திரைகவுள்*
*பயனின் மூப்பிற் பல்சான் றீரே;*
*கணிச்சீக் கூர்ம்படைக் கடும்திறல் ஒருவன்*
*பிணிக்கும் காலை இரங்குவீர் மாதோ;*
*நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்*
*அல்லது செய்தல் ஓம்புமின்; அதுதான்,*
*எல்லோரும் உவப்பது அன்றியும்*
*நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரஅதுவே"* [102]

என்ற பாடல்வழியே அறிய முடிகின்றது.

இம்மை மாறி மறுமையாயினும் தாம் செய்த நன்மை தீமைக்குத் தக்கப் பலனை அடைய நேரிடுவதால் மற்றவர்களுக்கு நன்மை செய்ய வேண்டும் முடியாவிட்டால் தீமையேனும் செய்யாதிருக்க வேண்டும் என்ற கருத்து மனித உரிமைச் சிந்தனையின் அடிப்படை நாதமாகச் சங்க இலக்கியங்களில் ஒலித்துக் கொண்டு இருப்பதைக் காண முடிகிறது. இதை,

*"கல்பொருது இரங்கும் மல்லல் பேர்யாற்று*
*நீர்வழிப் படூஉம் புணைபோல், ஆருயிர்*
*முறைவழிப் படூஉம் என்பது திறவோர்*
*காட்சியில் தெளிந்தனம்"* [103]

என்ற கணியன் பூங்குன்றனாரின் பாடலடிகளுடன் ஒப்பு நோக்கச் சிறக்கும்.

## போர்

சங்க காலத்திற்கு முந்திய தொல்காப்பியர் காலத்தில் நிலவுரிமை காரணமாக அரசுரிமை உருவாகி அரசு தோன்றியிருந்தது என்பதைப் புறத்திணை விளக்குகின்றது. மண்ணாசை காரணமாக மன்னர்கள்

தங்களுக்குள் போரிட்டு மகிழ்ந்தனர். சேர சோழ பாண்டியர்களின் ஆட்சியைத் தொடர்ந்து பல சிற்றரசர்களும் கடையெழு வள்ளல்களும் ஒன்றுப்பட்ட தமிழகத்தை ஆட்சி புரிந்த காலத்தில் முடியாட்சியில் குடியாட்சியின் தன்மையைக் காண முடிகின்றது. போரின் போது அரசன் முன்னின்று படைளை நடத்தி போர்புரிந்து போரின் வெற்றியில் விளைந்த செல்வத்தை அவரவர் தகுதிக்கேற்ற வகையில் பிரித்தளித்தும், மக்கள் வாழ்வில் அமைதி பெற வளம் பெருக்கியும் தம் குடியைக் காத்து வந்தனர். இனக்குழு சமூகத்தில் வீரம் செறிந்த தலைவனே மக்களைத் தலைமையேற்று வழி நடத்தியவன். இவனே மக்களைக் காவல் காத்தான் பின்னாளில் அரசர்களாயினர்.

> **“மக்கள் தாம் செய்த பயிர்களை அழிப்பதற்கு வரும் விலங்குகளை விரட்டியடிக்கக் காவலர்களை ஏற்படுத்தினர். இக்காவலர்கள் நல்ல பலசாலிகளாகவும் முரடர்களாகவும் பார்த்துத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இக்காவலர்களுக்குத் தாங்கள் பயிரிட்டு அறுக்கும் தானியங்களிலே பங்கு கொடுத்து வந்தனர். இந்தக் காவலர்கள் தான் பின்னால் அரசர்களானார்கள். அரசர்களுக்குக் காவலர் என்று பெயர் அமைந்நிதருப்பதே இவ்வுண்மையைக் குறிக்கும்”**[104]

என்றும்

> **“ஆரம்ப காலத்தில் காவலர்கள் – மன்னர்கள் – மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தனர். நாளடைவில் தான் மன்னர்கள் பரம்பரையாக ஆளும் உரிமை பெற்றவர்கள் ஆனார்கள்”**[105]

என்பர் சாமி சிதம்பரனார்.

போர் செய்து தம் மக்களைக் காப்பாற்றுவது அரசனின் தலையாய கடமையாக இருந்ததால் பண்டைக் காலத்தில் போர் தவிர்க்க முடியாததொன்று அது அறமாகவும் கருதப்பட்டது. போரின் போதும் மனித உரிமைகளின் வீச்சு சங்க காலத்தில் இருந்தது என்பதைக் காண முடிகிறது.

போருக்கு முன் நாட்டில் உள்ள பெண்கள், குழந்தைகள், பிணியுற்றோர், முதியோர், நோய்வாய்ப்பட்டோர் போன்றோர் போரினில் சண்டையிடாமல் உயிர் விடும் சூழல் நிலவுவதால், மன்னன் போர் செய்யும் சூழலில் அப்பாவி மக்கள் உயிர் விட நேரிடாமல் இருக்கும் உரிமையை,

*“ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்*
*பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்”* [106]

என்ற பாடல் வழி அறிய முடிகிறது.

போர் செய்து குடிகளைக் காப்பது அல்லால் போரினைத் தவிர்த்து எதிரியிடம் சரணடைந்தாவது குடிமக்களைக் காப்பாற்றுவது மன்னனின் கடன் என்பதைச் சங்க காலச் சான்றோர்கள் நேர் முகமாக மன்னனிடம் அறிவுறுத்தியுள்ளனர்.

*“இரும்பிடித் தொழுதியொடு பெரும்கயம் படியா*
*நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅ*
*திருந்தரை நோன்வெளில் வருந்த ஒற்றி*
*நிலமிசைப் புரளும் கைய வெய்துயிர்த்து*
*அலமரல் யானை உருமென முழங்கவும்*
*பாலில் குழவி அலறவும்; மகளிர்*
*பூஇல் வறுந்தலை முடிப்பவும் நீரில்*
*வினைபுனை நல்லில் இனைகூஉக் கேட்பவும்*
*இன்னா தம்ம! ஈங்கினி திருத்தல்;*
*துன்அரும் துப்பின் வயமான் தோன்றல்*
*அறவை ஆயின் நினதெனத் திறத்தல்*
*மறவை ஆயின் போரொடு திறத்தல்*

*அறவையும் மறவையும் அல்லை ஆகத்*
*திறவாது அடைத்த திண்ணிலைக் கதவின்*
*நீள்மதில் ஒருசிறை ஒடுங்குதல்*
*நாணுத்தக உடைத்துஇது, காணும் காலே"* [107]

என்று கோவூர்கிழார் நெடுங்கிள்ளிக்கு அறிவுறுத்துதல் நோக்கத்தக்கது.

குடிகளைக் காப்பாற்றவும், வேண்டியவற்றைச் செய்து கொடுக்கவும் அரசுக்கு வருவாய் தேவைப்பட்டது. குடிகளின் மேல் வரி விதிக்கப்பட்டு பெறப்பட்டது. நிலவரியும் சங்க வரியும் பொருளீட்டுவதற்கு உதவின. அரசனும் நெறியறிந்து வரி விதித்தான். வாணிகத்தின் மூலம் வருவாய் வெகுவாய் ஈட்டப்பட்டது. வரிகள் மக்களின் மீது சுமையாய் மாறிய போதும், அளவிற்கு அதிகமாக வரி வசூலிக்கப்பட்ட போதும் நடைமுறையில் ஏற்றுக் கொள்ளக்கூடாது என்றும் அவற்றை வசூலிக்க மேற்கொள்ளப்படும் கடுமையான வழிமுறைகளும் அரசுக்கும் மக்களுக்கும் இடையே உள்ள நல்லுறவைப் பாதிக்கும் என்று புலவர்கள் மன்னனுக்கு அறிவுறுத்தினர். இது சங்க காலத்திற்கு மட்டுமல்ல இக்காலத்திய குடியாட்சி முறைக்கும் பொருந்தும்.

சங்க காலத் தமிழ்ச் சமுதாயத்தில் மன்னரும் மக்களும், புலவர்களும் கொண்டிருந்த அன்பும் மனிதநேயமும், போர் முறைகள் யாவும், இருபதாம் நூற்றாண்டு மற்றும் 21 ஆம் நூற்றாண்டில் நிகழ்கின்ற போரின் போது கடைபிடிக்கப்பட்ட போர் முறைகள், நெறிமுறைகளோடு ஒப்பிட்டு பார்க்கின், நம் முன்னோர் புதியதோர் உலகினைப் படைக்க எண்ணினர் என்பதை அறிய முடிகிறது. இதை,

**"நாளடைவில் தான் போர் அநாகரிகமானது மக்கள் நாகரீகத்தை சீர்குலைக்கக் கூடியது"**[108]

என்ற எண்ணம் ஏற்பட்டது.

ஒரு நாட்டின் வளர்ச்சி என்பது பொருளாதாரத்தில் அடையும் வளர்ச்சியைப் பொறுத்தே அளவிடப்படுகிறது. வாணிகத்தின் பங்கு அளப்பரியது. பிறர் பொருளையும் தம் பொருளாக எண்ணியே வணிகம் புரிந்தனர். கொள்வதும் மிகைப்படாது கொடுப்பதும் குறைவுபடாது வணிகம் செய்திருந்தனர். செலவிடும் பொருளுக்கேற்பப் பெறப்படும் பொருளும் தரமானதாகவும் இருக்க வேண்டும் என்று எண்ணிய வணிகர்கள் மற்றவர்களை ஏய்த்து வணிகம் செய்வதை வெறுத்தனர் என்பதை,

*"நெடுறுகத்தப் பகல்போல*
*நடுவு நின்ற நல்நெஞ்சினோர்*
*வடு அஞ்சி வாய் மொழிந்த*
*தமவும் பிறவும ஒப்ப நாடி*
*கொள்வதூஉம் மிகை கொளது*
*கொடுப்பதூஉம் குறை கொடாது*
*பல்பண்டம் பகிர்ந்து வீசும்"* [109]

என வரும் பாடலடிகள். வணிகர்களின் சிறப்பையும், வணிகத்தின் நேர்மையினையும் சுட்டிக் காட்டுகின்றன.

தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழ்பவர்களாலேயே இவ்வுலகம் நிலைபெற்று இயங்குகின்றது. அதுவே வாழ்வின் உறுதிப் பொருளாக எண்ணினர் நம் முன்னோர். இந்திரனுக்குரிய உணவாகிய அமிழ்தமே உணவாகக் கிடைப்பினும் இனியது என்றெண்ணி தான் மட்டுமே தனித்து உண்ணாதவராய்த் தமக்கென்று இல்லாமல் பிறர்க்கென உழைக்கும் மனத்தினராய் இருந்தனர் சான்றோர். இதனை,

*"உண்டால் அம்மஇவ் வுலகம்; இந்திரர்*
*அமிழ்தம் இயைவ தாயினும், இனிதுஎனத்*
*தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்*
*துஞ்சலும் இலர், பிறர் அஞ்சுவது அஞ்சிப்*
*புகழெனின் உயிரும் கொடுக்குவர்; பழியெனின்*

*உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்*
*அன்ன மாட்சி அனையர் ஆகித்*
*தமக்குஎன முயலா நோன்தாள்*
*பிறர்க்குஎன முயலுநர் உண்மை யானே"* [110]

என்ற கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதியின் பாடல் நன்குணர்த்தும்.

செல்வம் நிலையில்லாதது. சகடக்கால் போன்றது. அளப்பாறிய செல்வம் உடையவராய் இருந்தாலும் தான் மட்டும் உண்டு களிக்காமல் பலரோடு சேர்ந்துண்ணும் பண்பினைக் கொண்டிருந்தனர்,

*"படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்*
*உடைப்பெருஞ் செல்வர் ஆயினும் இடைப்பட"* [111]

எனும் மேற்கண்ட பாண்டியன் அறிவுடை நம்பியின் புறநானூற்றுப் பாடலடிகள் சான்றாக அமைகின்றது. இதையே வள்ளுவரும்,

*"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்*
*தொகுத்தவற்றுள் எல்லாம் தலை"* [112]

என்கின்றார்.

அரசன் ஆண்டி எவராகினும் தேவைப்படுவது உணவும் உடையுமாம் அவற்றுள் உண்பது நாழி உடுப்பவை இரண்டு தவிர வேறொரு வேற்றுமை இல்லை. செல்வத்தின் பயன் வறிவர்க்கு ஈதலாம் அதுவன்றித் தான் மட்டுமே துய்க்க எண்ணினால் அறம், பொருள், இன்பம் கிட்டாது என்ற கருத்தின் வழி செல்வத்தை அனைவர்க்கும் பகிர்ந்ததளித்து வாழ்தாலே இன்பம் என்பதனை சங்ககால மக்கள் அறமாகக் கொண்டனர்.

*"தெண்கடல் வளாகம் பொதுமை இன்றி*
*வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்,*
*நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்*
*கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்*
*உண்பது நாழி உடுப்பவை இரண்டே;*

*பிறவும் எல்லாம் ஓரொக் கும்மே*
*செல்வத்துப் பயனே ஈதல்,*
*துய்பேம் எனினே, தப்புந பலவே"* [113]

என்ற பாடல் சங்க காலத் தமிழர் தம் மனித உரிமைகளைப் பறை சாற்றும் பொதுவுடமைக் கொள்கையைக் காட்டுகின்றது. எல்லார்க்கும் எல்லாம் என்று இருப்பதற்கான இடம் நோக்கி நகர்கிறது. இவ்வையகம். செல்வந்தன் வறியவன் என்ற நிலை மனித உரிமை மீறலுக்கு வழி வகுத்து விடும்.

**"செல்வர்க்கும் எளியோர்க்கும் இடையே ஒற்றுமை நிலை பெறாவாறு, தீயக் கருத்தும் செயலும் பிறப்பிக்கிறது. இந்த அறவுணர்வுக் குறைவே இக்காலத் தொழிலாளர் கிளர்ச்சிக்கும், பொருள் முட்டுப் பாட்டுக்கும் வாழ்வு நிரம்பாமைக்கும் வாயிலாதல் தெற்றெனத் தெளியப்படும்"**[114]

என்று ஔவை சு. துரைசாமிப்பிள்ளை கூறுவது இங்குக் குறிப்பிடத்தக்கது.

## தொகுப்புரை

- ❖ சமூகநலன் கருதி சிலவரைமுறைகளை ஏற்கும் உரிமை நிலையே மனிதஉரிமைகளாகும்.
- ❖ தனி மனித மாண்பு, சமத்துவம், சகோதரத்துவம், சுதந்திரம், அனைவர்க்கும் சமமான வாய்ப்பு, சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்ற கட்டமைப்புக்குள் கருத்துரு பெறுவதே மனித உரிமையாகும்.
- ❖ மனிதன் தோன்றிய போதே அவனுக்குரிய உரிமையும் உயிர் பெற்றது.
- ❖ மனிதனுக்கு வழங்கப்பட்டுள்ள உரிமைகள் யாவும் இயற்கையாக அமைந்தவை.

- உரிமையும் கடமையும் நாணயத்தின் இருபக்கங்களைப் போன்றவை. ஒன்றை விட்டு மற்றொன்று இயங்க முடியாதது.
- மனித இனம் தனிமை சார்ந்தது. எண்ணவும் எண்ணியவற்றைப் பேசவும் பேசிய வண்ணம் செயல்படுத்தவும் கூடிய ஆற்றல் மனித இனத்திற்கு மட்டுமே உண்டு.
- மனிதனது பெருமையும் உரிமையும் மதிக்கும் பண்பே மனிதநேயமாகும்.
- குறிப்பிட்ட பொதுநோக்கு ஒன்றை அடைவதற்காக விளைவிக்கப்பட்ட மனிதனின் கூட்டுத் தொகுதியே சமூகமாகும்.
- அனைத்து மக்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட வழக்கத்தின் அடிப்படையில் தோன்றுவதே சட்டமாகும்.
- குடிமக்கள் அனைவரும் சட்டத்திற்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும்.
- மனித உரிமைகள் நம் தேசத்திற்குப் புதியவையன்று. அறநெறி, தர்மம் என்று சமூகம் தோன்றிய காலம் முதல் அவ்வப்போது உருவாகி வளர்ந்து வருவது.
- இலக்கியங்கள் தனி மனிதனின் பண்பட்ட வாழ்க்கையையும் வாழ்வியல் உரிமைகளையும் வகுத்துரைக்கிறது.
- மக்களின் உரிமைகள் பற்றிப் பேசும் இலக்கியங்கள் அவர்களின் கடமைகளையும் தொகுத்துரைக்கவே செய்கின்றது.
- சங்ககாலச் சமுதாயமும், நீதிநூல் மற்றும் காப்பியங்கள் உணர்த்திய நிலையிலும் மனித உரிமைகளைப் போற்றியும், பாதுகாத்தும் நமக்கு வழங்குகின்றன.

# குறிப்புகள்

1. அகத்தியலிங்கம், சு.பொ., மனித உரிமைகள், ப.13.
2. தொல். மரபியல் 577.
3. மேலது, 577.
4. மேலது, 578.
5. தண்டாயுதம், பால., மனிதம், ப.17.
6. விவிலியம், ஆதியாகமம். 1:26
7. ஔவையார், தனிப்பாடல் திரட்டு–I, ப.60.
8. குறள். 45.
9. அரிகிருட்டிணன், ஆ., பாரதிதாசன் பாடல்களில் மனித உரிமைகள் (அச்சேற்றம் பெறாத) முனைவர்பட்ட ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், ப.76.
10. தமிழண்ணல், பொருநாராற்றுப்படை ப.174.
11. வெள்ளைவாரனன், க., சங்ககாலத் தமிழ் மக்கள், பக்.25–26.
12. நற். 11:6–9
13. சாமி. சிதம்பரனார், புறநானூறு தமிழர் நாகரிகம், ப.107.
13. பாஸ்கல் கிஸ்பர்ட், எஸ்.ஜே., (தமிழாக்கம்) நாராயணன், ஜெ., சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.126.
14. மாதையன், பெ., சங்க இலக்கியத்தில் குடும்பம், ப.51.
15. எங்கல்ஸ், பி., குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப.42.
16. மாதையன், பெ., சங்க இலக்கியத்தில் குடும்பம், ப.51.

17. பாஸ்கல் கிஸ்பர்ட், எஸ்.ஜே., (தமிழாக்கம்) நாராயணன், ஜெ., சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.14.

18. மேலது, ப.73.

19. மேலது, ப.73.

20. மேலது, ப.92.

21. சுப்பிரமணியன், கா., சங்ககாலச் சமுதாயம், ஆய்வுக் கட்டுரைகள், ப.25.

22. மேலது, ப.39.

23. இராசமாணிக்கனார், மா., தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.106.

24. பாஸ்கல் கிஸ்பர்ட், எஸ்.ஜே., (தமிழாக்கம்) நாராயணன், ஜெ., சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.236.

25. மேலது, ப.232.

26. மேலது, ப.254.

27. மேலது, ப.253.

28. மேலது, ப.254.

29. மேலது, ப.254.

30. Hass, F.J., Man and Society, p.245.

31. Barker, Principles of Political Society theory, p.137.

32. சாந்தகுமார், எஸ்., (தமிழில்) இராமகிருஷ்ணன், மனித உரிமைகள், ப.iv.

33. மேலது, ப.X

34. பாக்கியமுத்து, தி., (பதிப்பாசிரியர்), தமிழ் நாவல்களில் மனித உரிமைகளும் மக்கள் போராட்டங்களும், ப.29.

35. சாந்தகுமார், எஸ்., (தமிழில்) இராமகிருஷ்ணன், மனித உரிமைகள், ப.174.

36. பாஸ்கல் கிஸ்பர்ட், எஸ்.ஜெ., (தமிழாக்கம்) நாராயணன், ஜெ., சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.248.

37. மேலது, ப.248.

38. வின்சுலே தமிழ் ஆங்கில அகராதி, ப.140.

39. தமிழ் அகராதி, ப.151.

40. செந்தமிழ்சொற் பிறப்பியல் பேரகர முதலி, முதல் மண்டலம், மூன்றாம் பாகம், Vol.I, Part III, ப.91.

41. கதிரைவேற்பிள்ளை, நா., தமிழ் மொழியகராதி, ப.2.

42. செந்தமிழ் அகராதி, ப.68.

43. தரங்கம்பாடி அகராதி, ப.117.

44. கலைக்களஞ்சியம், தொகுதி 2, ப.303.

45. அரிகிருட்டிணன், ஆ., பாரதிதாசன் பாடல்களில் மனித உரிமைகள், (அச்சேற்றம் பெறாத) முனைவர்பட்ட ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், ப.37.

46. சிவகாமி பரமசிவம், மனித உரிமைகள், ப.1.

47. மேலது, ப.1.

48. அகத்தியலிங்கம், சு.பொ., மனித உரிமைகள், ப.9.

49. இராதாகிருஷ்ணன், கே.எஸ்., மனித உரிமைகள் என்றால் என்ன, ப.17.

50. வேங்கடாச்சாரி, ஏ.ஜி., மனித உரிமைகள், ப.30.

51. அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனம், உறுப்பு (1).

52. தேவ்நாத், சி.எஸ்., அடிப்படை மனித உரிமைகள், ப.5.

53. சண்முகசுப்பிரமணியம், மா., சட்டத்தமிழ், ப.28.

54. தேவ்நாத், சி.எஸ்., அடிப்படை மனித உரிமைகள், ப.5.

55. சாமி. சிதம்பரனார், புறநானூறு தமிழர் நாகரிகம், ப.53.

56. அகத்தியலிங்கம், சு.பொ., மனித உரிமைகள், ப.13.

57. மேலது, ப.13.

58. மேலது, ப.16.

59. தேவ்நாத், சி.எஸ்., அடிப்படை மனித உரிமைகள், ப.6.

60. அகத்தியலிங்கம், சு.பொ., மனித உரிமைகள், ப.14.

61. வேங்கடாச்சாரி, ஏ.ஜி., மனித உரிமைகள், ப.19.

62. தேவ்நாத், சி.எஸ்., அடிப்படை மனித உரிமைகள், ப.5.

63. குறள். 410

64. குறள். 600.

65. வேங்கடாச்சாரி, ஏ.ஜி., மனித உரிமைகள், ப.29.

66. மேலது, ப.32.

67. சாந்தகுமார், எஸ்., மனித உரிமைகள், ப. X

68. அகத்தியலிங்கம், சு.பொ., மனித உரிமைகள், ப.13.

69. ஈஸ்வரன், ச., தமிழ் இலக்கியங்களில் மனித உரிமைச் சிந்தனைகள், பக்.5–6.

70. வேங்கடாச்சாரி, ஏ.ஜி., மனித உரிமைகள், பக்.25–26.

71. அகத்தியலிங்கம், சு.பொ., மனித உரிமைகள், ப.9.

72. தேவ்நாத், சி.எஸ்., அடிப்படை மனித உரிமைகள், ப.5.

73. மேலது, ப.5.

74. பாண்டியன், ஆ., மனித சமுதாயமும் மனித உரிமை மீறல்களும், ப.13.

75. தேவ்நாத், சி.எஸ்., அடிப்படை மனித உரிமைகள், ப.10.

76. அகத்தியலிங்கம், சு.பொ., மனித உரிமைகள், பக்.31–32.

77. வேங்கடாச்சாரி, ஏ.ஜி., மனித உரிமைகள், ப.18.

78. மேலது, ப.32.

79. மேலது, ப.14.

80. இராஜமுத்திருளாண்டி, இலக்கியத்தில் மனித உரிமைகள், ப.11.

81. மேலது, ப.12.

82. தொல். புள்ளி மயங்கியல். நூற்.332, 334.

83. மேலது, 362.

84. தொல். மரபியல் 644.

85. மேலது 656.

86. தொல். புள்ளி மயங்கியல் 370.

87. தொல். அகத். 4.

88. தொல். செய்யுளியல் 310.

89. தொல். களவியல் 139.

90. தொல். கற்பியல் 143.

91. சுப்பையன், அ., மனித குலத்தின் மாற்ற முடியாத உரிமைகள், அணிந்துரை, மோகன், தி.ச.

92. சண்முகசுப்பிரமணியம், மா., சட்டத்தமிழ், ப.35.

93. சாமி சிதம்பரனார், புறநானூறு தமிழர் நாகரிகம், ப.107.

94. வெள்ளை வாரனன், க., சங்ககாலத் தமிழ் மக்கள், ப.11.

95. வேங்கடாச்சாரி, ஏ.ஜி., மனித உரிமைகள், பக்.15–16.

96. புறம். 182

97. முருகு. 1

98. குறள். 1062.

99. சாமி. சிதம்பரனார், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், ப.129.

100. மேலது, ப.138.

101. புறம். 34:1–2.

102. மேலது, 195.

103. மேலது, 192:8–11.

104. சாமி. சிதம்பரனார், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், பக்.1–2.

105. மேலது, ப.2.

106. புறம். 9:1–2.

107. மேலது, 44.

108. சாமி. சிதம்பரனார், புறநானூறு தமிழர் நாகரிகம், ப.52.

109. பட்டினப். 206–212.

110. புறம். 182.

111. மேலது, 188:1–2.

112. குறள். 322.

113. புறம். 189.

114. ஔவை துரைசாமிப்பிள்ளை, சு., புறநானூறு மூலமும் உரையும், ப.411.

இயல் - இரண்டு

# வாழ்வியல் உரிமைகள்

## முன்னுரை

சங்க காலத் தமிழ் மக்களின் காதலும் வீரமும் நிறைந்த வாழ்க்கை முறை, உள்ளம் ஒன்றிய குடும்ப அமைப்பு, நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், வழிபாடு, சடங்குகள், மக்கள் அனைவரையும் தம் உறவினராகக் கருதும் உயரிய எண்ணம், பிற உயிர்கள் மேல் காட்டும் இரக்கவுணர்வு, விருந்தோம்பல் பண்பு, கொடை, விழாக்கள் நடத்தி சுற்றம் சூழ மகிழ்வுடன் பொழுதைக் கழித்தல், விளையாட்டுக்கள், நெறி தவறாமல் வழங்கிய நீதிமுறை போன்ற பண்புகளை உள்ளடக்கியது வாழ்வியல் ஆகும். அத்தகைய உயரிய பண்புகளால் அவர்தம் அகப்புறவாழ்வு தனிமனிதன், குடும்பம், சமுதாயம் என்ற பல்வேறு நிலைகளிலும் மேன்மையுற்றதாகச் சிறந்திலங்கியது என்பதை சங்க இலக்கியங்களின் துணைக்கொண்டு அறிய முடிகின்றது.

'எல்லார்க்கும் எல்லாம் என்றதான இடம் நோக்கி நகர்கின்றது இவ்வையம்' என்ற பொதுவுடைமை எண்ணத்தினை மனதில் வளர்த்தவர்களாக எல்லாவுயிர்களையும் தம்முயிர் எனப் போற்றி, கடமைகளைச் செய்து தம் உரிமைகளைக் காத்துக் கொண்டதோடு மட்டுமின்றி மற்றவர்களின் உரிமைகளை மதித்தும், பேணியும், சுதந்திரக் காற்றைத் தினமும் சுவாசித்து உரிமை வாழ்வின் உன்னதத்தினை உணர்ந்திருந்தனர்.

தன் மனைவி, மக்கள், குடும்பம் என்று தனக்கெனப் பொருளீட்டி வாழாமல் பிறர்க்கென வாழும் உயரிய வாழ்வின் மூலம் மற்ற அனைத்து

உயிரினங்களினின்றும் வேறுபட்டு சிறப்புற்று நிலையில்லாத உலகில் நிலைத்த பேறுடன் வாழ்வாங்கு வாழ்கின்றான்.

மனித வாழ்க்கைச் செம்மையும் சிறப்பும் நிறைந்தது. விரும்பிய வண்ணம் எப்படியும் வாழலாம் என்றில்லாமல் இப்படித்தான் வாழ வேண்டும் என்ற நெறிமுறைகளோடு கூடிய வாழ்க்கையே செம்மாந்த வாழ்க்கை முறையாகும். அறத்தொடு கூடிய வாழ்க்கை முறையை வகுத்தும் தொகுத்தும் நடத்திய நம்மனோர் பல்வேறு நலன்களையும் வளங்களையும் பெற்று இயற்கையோடு இயைந்து வாழ்ந்த காலம் சங்க காலமாகும். அதிகாரங்கள் அனைத்தும் தன்னகத்தே கொண்டிருந்த முடியாட்சி காலமாயினும், மன்னனும் மக்களும் ஏறத்தாழ அனைத்து உரிமைகளையும் சமமாகவே பெற்று உலக நாகரிகத்திற்கு வழிகோலினர். இல்லறத்தைக் காத்துப் புறவாழ்க்கையிலும் சிறப்புற்றனர் என்பதற்கு சங்கப்புலவர்கள் பாடிய அகம்புறம் சார்ந்த பாடல்கள் ஆவணச் சான்றுகளாகவும் வரலாற்றுக் கருவூலமாகவும் காணப்படுகின்றன.

பொருளமைப்பாலும், அடி அளவினாலும் தரத்தாலும் நிகரற்று விளங்கி, ஐவகை நிலத்து மக்களின் வாழ்வியல் கூறுகளை வெளிப்படுத்துவதாக அமைந்த சங்க இலக்கியங்கள் தனி மனிதன், குடும்பம், சமுதாயம், நாடு என்ற நோக்கில் ஒவ்வொருவருக்கும் உரிய கடமைகளை வலியுறுத்துவதோடு நில்லாமல் தனி மனித உரிமைகளைச் சில பாடல்களில் வெளிப்படையாகவும் பல பாடல்களில் உட்கிடையாகவும் இழையோடவிட்டிருப்பதை நுண்ணிதின் ஆராய்ந்து படிப்பின் உணர்ந்து கொள்ள முடிகிறது.

ஒரு நாட்டின் வளத்திற்கும், சிறப்பிற்கும் குடிமக்கள் பெற்றிருக்கின்ற வாழ்வியல் உரிமைகளே உரைகல்லாய் அமைகின்றது. தமிழ் மக்கள் நாடும் வீடும் சிறக்க அத்தகைய வாழ்வியல் உரிமைகளைப் பெற்று சிறந்து

விளங்கிய தன்மையினை சங்க இலக்கியங்கள் துணைக் கொண்டு இவ்வியல் ஆராய்கின்றது.

**வாழும் உரிமை**

உலகில் காணப்படும் அனைத்து உயிரினங்களிலேயும் சிறப்புடையதும் பெருமை மிக்கதுமான இனம் மனித இனம். தன்னிச்சையாகச் சிந்திக்கவும் செயலாற்றவும் கூடிய தன்மை மனித இனத்திற்கு மட்டுமே உரித்தாயின. நடைமுறை வாழ்க்கை ஏற்றத்தாழ்வுகள் நிறைந்ததாகக் காணப்பட்டாலும் ஒவ்வொருவரின் தனிப்பட்ட வாழ்வும் வளமையும் செம்மையுமாக அமைத்துக் கொள்ள அனைவருக்கும் உரிமை உண்டு. கூடி வாழும் சமூகத்தில் மாண்புடன் வாழ்வதற்கும் மரியாதையுடன் பிறரால் நடத்தப்படுவதற்கும் மதிக்கப்படுவதற்கும் உரிமை பெற்றவனாவான். உண்பதும், உடுப்பதும் உறைவிடமும் வாழ்வின் அடிப்படை தேவையானது போலவே சமுதாயத்தில், நாட்டில் உரிமைகளைப் பெற்று சுதந்திரமாக வாழவும் இயற்கையின் அனைத்து வளங்களின் பயனை நுகரவும், சக மனிதனுக்கும், சமுதாயத்திற்கும் தான் சார்ந்திருக்கக்கூடிய நாட்டிற்கும், ஒட்டுமொத்த மனித குலத்திற்கும் தன்னுடைய கடமையைச் செவ்வனே நிறைவேற்றி உரிமையின் பயனைத் துய்ப்பது இன்றியமையாததாகும். அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனம் – சரத்து (3) “ஒவ்வொருவரும் வாழ்வதற்கும், சுதந்திரமாக இருப்பதற்கும், பாதுகாப்பாக இருப்பதற்கும் உரிமை உண்டு. எனக் குறிப்பிடுகின்றதை இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

தாயின் வயிற்றில் கருக்கொண்ட நாள் முதல் பூமித்தாயின் மடியில் மீளாத் துயில் கொள்ளும் காலம் வரையில், பொருள் நிறைந்த, முழுமையான செம்மாந்த வாழ்வு வாழ்வதற்கு அடிப்படை ஆதாரமாகவும், காரணிகளாகவும் காணப்படக் கூடியவைகளே வாழ்வியல் உரிமைகளாகும். சங்ககாலத்து மக்கள் உரிமை வாழ்வினைக் கைவரப் பெற்றவர்களாயிருந்தனர். மக்களும்

மன்னரை இறைவனாகப் போற்றி வணங்கினர். மன்னனும் மக்களைக் கண்ணெனக் காத்ததோடு மட்டுமல்லாது வளமான உரிமை வாழ்வினை வாழ வழி செய்தனர்.

> **“சங்க காலத் தமிழகத்தின் அரசியல் உரிமை வாழ்வினை வளர்த்தற்குரிய வேலியாய் விளங்கியது. அதனால் அக்காலத் தமிழ்மக்கள் பசியும் பிணியுமற்று நல்வாழ்வு வாழ்ந்தனர்”**[1]

என்கின்றார் க. வெள்ளைவாரணர்.

**அமைதியான வாழ்வு**

உணவு, உடை, இருப்பிடம் போன்றவைகள் மட்டும் மக்களுக்கு அமைதியான வாழ்வினைத் தந்துவிட முடியாது. வாழ்வில் இன்பம் பெருகவும் வளம் சிறக்கவும் அமைதியான வாழ்வு முறை இன்றியமையாதது. சங்க காலத்தில் மக்கள் போர் நிறைந்த வாழ்க்கை முறையினை மேற்கொண்டிருந்தாலும் மன்னன் தன் நாட்டில் குழப்பமும் பூசலுமின்றி மக்களின் அமைதியான வாழ்க்கைக்கு வித்திட்டான் என்பதை அறியமுடிகிறது. இதை,

> **“உள்நாட்டு அமைதி முக்கியமாகக் கருதப்பட்டது. தொண்டைமான் இளந்திரையன் காலத்தில் நாட்டில் கொள்ளைக்காரர்கள் இல்லாமல் இருந்ததால் அவனுடைய ஆட்சி வெகுவாகப் போற்றப்பட்டது. இதைப் பற்றி புலவர்கள் பாடியிருப்பதில் கற்பனை அதிகம் என்ற போதிலும் இதில் உண்மை இருக்கிறது என்றே கொள்ளலாம்”**[2]

என்ற நீலகண்டன் அவர்களின் கூற்றும் இதை மெய்ப்பிக்கின்றது.

உலக மக்கள் ஒற்றுமையுடனும் அமைதியான முறையிலும் வாழ வேண்டும் என்ற பரந்த நோக்கு அக்காலத் தமிழ்ப் புலவர்களிடம் பரந்து காணப்பட்டதால் தான் சோழனும் பாண்டியனும் ஒருங்கிருந்த போது போர்த் தொழிலை மேற்கொள்ளாது ஒற்றுமையுடன் இருக்க வலியுறுத்தியதை,

*“பால்நிற உருவின் பனைக்கொடி யோனும்*
*நீல்நிற உருவின் நேமி யேஎன்று*
*இருபெருந் தெய்வமும் உடன்நின் றாஅங்கு*
*உருக்கெழு தோற்றமொடு உட்குவர விளங்கி*
*இன்னீர் ஆகலின் இனியவும் உளவோ*
*இன்னும் கேள்மின்நும் இசைவா*
*ஒருவீர் ஒருவீர்க்கு ஆற்றுதிர்; இருவிரும்*
*உடன்நிலை திரியீர் ஆயின் இமிழ்திரைப்*
*பௌவம் உடுத்தஇப் பயங்கெழு மாநிலம்*
*கையகப் படுவது பொய்யா காதே;*
*அதனால் நல்ல போலவும் நயவ போலவும்*
*தொல்லோர் சென்ற நெறிய போலவும்*
*காதல் நெஞ்சின்நும் இடைபுகற்கு அலமரும்*
*ஏதில் மாக்கள் பொதுமொழி கொள்ளாது*
*இன்றே போல்கநும் புணர்ச்சி; வென்று வென்று”*[3]

என்ற புறப்பாடலடிகளும், ஒரு குலத்தைச் சார்ந்த இருவரும் போர் செய்வதால் ஏற்படும் தீமைகளைச் சிந்தித்தவராய் இருவரில் ஒருவர் தோற்றாலும், அதனால் குடிக்கே இழுக்கு என்று போரினைக் கைவிட வலியுறுத்தினர் கோவூர்கிழார் என்பதை,

*“ஒருவீர் தோற்பினும் தோற்பதும் குடியே*
*இருவீர் வேறல் இயற்கையும் அன்றே; அதனால்*
*குடிப்பொருள் அன்றுநும் செய்தி; கொடித்தேர்*
*நும்மோர் அன்ன வேந்தர்க்கு*
*மெய்ம்மலி உவகை செய்யும்இவ் இகலே”*[4]

என்ற பாடலும், மக்களின் அமைதி வாழ்வினைப் புலவர்கள் போற்றி சிறந்தனர் என்பதைச் சுட்டிக் காட்டுவதோடு இன்றைய உலக நாடுகள் அனைத்திற்கும் விடுக்கும் அறைகூவலாக இருக்கிறது. இதனை,

> **“சமாதானமாக வாழ, உரிமை என்பது உண்மையில் வாழ்க்கைக்கு உரிமை என்பதன் யதார்த்தமேயாகும். மற்ற பிற உரிமைகளுக்கெல்லாம் இது முற்படு தேவை என்பதால் மதிப்பீட்டளவில் உயர்ந்து நிற்கிறது.**
>
> **சமாதானமாக வாழ உரிமை என்பது தனிநபர் உரிமை என்ற வகையில் மனிதனுக்குரிய உரிமையாகும் இது. நாடுகளுக்கும் பொருந்தும். இந்த உரிமையை வாழ்க்கையில் மனிதனின் உயர்ந்த மதிப்பை, சமாதானமாகவும் பாதுகாப்பாகவும் வாழ உள்ள மிக உயர்ந்த மனித உரிமையை மறுப்பது போரேயாகும்.”[5]**

என்ற மா. சண்முகசுப்பிரமணியம் கூற்றினோடு ஒப்புநோக்கத்தக்கது.

பகைவருடன் போரிட்டோ (அல்லது) சரணடைந்தே மக்களைக் காப்பது மன்னனின் கடமை. அவ்வாறில்லாமல் கோட்டைக் கதவினை மூடிக் கொண்டு உள்ளிருத்தல் என்பது மக்களின் வாழ்வுரிமை பறிப்பது ஆகும். என்ற கருத்தினை வலியுறுத்தி,

> *“அலமரல் யானை உருமென முழங்கவும்*
> *பாலில் குழவி அலறவும்; மகளிர்*
> *பூவில் வறுந்தலை முடிப்பவும் நீரில்*
> *வினைபுனை நல்லில் இணைகூஉக் கேட்பவும்*
> *இன்னா தம்ம ஈங்கினி திருத்தல்*
> *துன்அரும் துப்பின் வயமான் தோன்றல்*
> *அறவை ஆயின் நினதெனத் திறத்தல்*
> *மறவை ஆயின் போரொடு திறத்தல்*

*அறவையும் மறவையும் அல்லை ஆகத்*
*திறவாது அடைத்த திண்ணிலைக் கதவின்*
*நீள்மதில் ஒருசிறை ஒடுங்குதல்*
*நாணுத்தக உடைத்துஇது, காணும் காலே"* [6]

என்ற பாடலடிகள் மூலம் பாலில்லாத குழந்தைகள் பசியால் அலறவும், மகளிர் பூவில்லாத வெறுந்தலையை முடிக்கவும் நீரும் இல்லாமல் பெரிய இல்லங்களில் வருந்துதல் ஒலி உண்டாகவும் நீ இங்கு அமைந்து இருப்பது கொடிய செயலாகும் என்று கூறி அமைதியான வாழ்வினை மக்கள் வாழ உறுதி செய்கின்றார்.

போரினை எதிர்கொள்ளும் நாடு அமைதி பெறாது மக்களும் அமைதியான வாழ்வினை மேற்கொள்ள இயலாது உறக்கமற்று இருப்பர் என்பதை அதியமான் அஞ்சி படையெடுத்துச் சென்ற அச்சம் தரும் போர்முனையிலுள்ள, இரவு நேர ஊர் எவ்வாறு உறக்கமின்றித் தவிக்குமோ அதுபோல நீ அயர்ந்து உறங்கும் நாட்கள் சில ஆகும் என்று தலைவி புலம்பும் நிலையினை,

*"கடும்பகட்டு யானை நெடுந்தேர் அஞ்சி*
*கொன்முனை இரவுஊர் போலச்*
*சிலவா குகநீ துஞ்சும் நாளே"* [7]

மேற்கண்ட ஔவையார் பாடலடிகளும் பகைவரது போர் முனைக்கண் இருக்கும் ஊரினர் எந்த நேரம் என்ன நேருமோ என உறங்காதிருப்பதைப் போல தானும் உறங்காது இருக்கிறாள் என்று தோழி புலம்புவதாக அமைந்த

*வரையா நிரையத்துச் செலீஇயரோ,*
*அன்னை ஒரு நாள்*
*நகைமுக விருந்தினன் வந்தெனப்*
*பகைமுக ஊரின் துஞ்சலோ இலளே!"* [8]

என்ற பரணரின் பாடலடிகளுக்கு ஒப்பு நோக்கத்தக்கது.

மக்கள் ஒவ்வொருவரும் உரிமையுடன் நடந்து கொள்ளவும் தங்கள் முயற்சிக்கேற்றபடி, விருப்பத்திற்கு ஏற்ப இன்பத்தை நுகரவும் துன்பத்தை நுகரவும் உரிமையுண்டு. மக்களின் வளமான வாழ்க்கைக்கு உறுதுணையான ஆறுகளை வெட்டி அவற்றின் வழியே மலைகளில் பெய்யும் மழை நீரை ஏரி, குளம், ஊருணி போன்ற நீர் நிலைகளில் பாய்ச்சி பண்டைத் தமிழ் வேந்தர் நாட்டை வளப்படுத்த நீர் நிலைகளைப் பெருக்குமாறு புலவர்கள் மன்னனுக்கு அறிவுரைத்தனர் என்பதற்கு,

*"உணவெனப் படுவது நிலத்தோடு நீரே;*
*நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு*
*உடம்பும் உயிரும் படைத்திசி னோரே*
*வித்திவான் நோக்கும் புன்புலம் கண்ணகன்*
*வைப்பிற் றாயினும் நண்ணி ஆளும்*
*இறைவன் தாட்கு உதவாதே; அதனால்,*
*அடுபோர்ச் செழிய! இகழாது வல்லே*
*நிலன் நெளி மருங்கில் நீர்நிலை பெருகத்*
*தட்டோர் அம்ம இவண்தட்டோரே*
*தள்ளா தோரிவண் தள்ளா தோரே"* [9]

என்ற குட புலவியனார் எனும் புலவர் பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடியது சான்றாக அமைகிறது.

### மாண்புடன் வாழும் உரிமை

எந்த நிலையிலும் மனிதன் மாண்புடன் வாழ உரிமைப் பெற்றவன் பிற உயிர்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவது இப்பண்பு வாழும் காலத்தில் மற்றவர்களால் மரியாதையுடனும் மதிப்புடனும் நடத்தப்பட விழைகிறான்.

அதியமான் நெடுமான் அஞ்சி பரிசில் தர காலம் தாழ்த்துவதைக் கண்ட ஔவையார் தான் மாண்புடன் நடத்தப்படாமைக்கு வெகுண்டெழுகிற பண்பை,

*"கருமான் தோன்றல் நெடுமான் அஞ்சி*
*தன்னறி யலன்கொல்? என்னறி யலன்கொல்?*
*அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தென*
*வறுந்தலை உலகமும் அன்றே; அதனால்,*
*காவினெம் கலனே; சுருக்கினெம் கலப்பை;*
*மரம்கொல் தச்சன் கைவல் சிறாஅர்,*
*மழுவுடைக் காட்டகத் தற்றே;*
*எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே"* [10]

என்ற மேற்கண்ட புறப்பாடலடிகளும் மேலும்,

**பிரான்சிஸ் எதிர் டெல்லி நிர்வாகம்** என்ற வழக்கில் **வாழ்வுரிமை என்பது மனித மாண்புடன் வாழும் உரிமையினையும் உள்ளடக்கியிருக்கிறது என்பதுடன் அதோடு சேர்ந்த இதரவற்றையும் கொண்டுள்ளது**

எனவும்,

**பந்து முக்தி மோர்சா எதிர் இந்திய அரசு** என்ற வழக்கில் இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு 21 ல் பொதிந்துள்ள வாழ்விற்கான உரிமை என்பது மனித மாண்புடன் வாழும் உரிமையையும் உள்ளடக்கியுள்ளது.

என்று உச்சநிதிமன்றம் மாண்புடன் வாழும் உரிமையை நிலை நிறுத்தியுற்றது.

வளவன் பரிசில் நீட்டித்த போது, போரில் மேம்பட்ட வெற்றியாளர் என்றும் நிலமெல்லாம் பரவிய படையினையுடைய சிறந்த அணிகலம்

அணிந்த அரசர் வெண்கொற்றக்குடை விளங்கும் செல்வத்தை மதித்தல் இல்லேம். மாறாக, எம்மால் மதிக்கப்படுவோர் தனித்த மணமுள்ள கீரையை முல்லை நிலத்தில் விளைந்த வரகுச் சோற்றுடனே பெறுகின்ற சிறிய ஊர்க்குரிய அரசர் எனினும் எம்மிடத்துச் செய்யும் முறைமை அறிந்து நடக்கும் இயல்புடையோரேயாம். மிகப் பெரிய துன்பத்தை யாம் அடைந்தாலும் சிறிதும் நல்லுள்ளம் இல்லாதவர் செல்வத்தை விரும்ப மாட்டோம். நல்லறிவாளர் வறுமை பயன்படுதலால் அதனைப் பெருமானே யாம் விரும்பிப் பெரிதும் நினைப்போம் என்று கோனாட்டு எறிச்சிலூர் மாடான் மதுரைக்குமரனார் சோழன் சூராப் பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவனை,

*"உரும்உரற் றன்ன உட்குவரு முரசமொடு*
*செருமேம் படூஉம் வென்றியர் எனாஅ*
*மண்கெழு தானை ஒண் பூண் வேந்தர்*
*வெண்குடைச் செல்வம் வியத்தலோ இலமே;*
*எம்மால் வியக்கப் படூஉ மோரே*
*இடுமுள் படப்பை மறிமேய்ந்து ஒழிந்த*
*குறுநறு முஞ்ஞைக் கொழுங்கண் குற்றடகு*
*புன்புல வரகின் சொன்றியொடு பெறூஉம்*
*சீறூர் மன்னன் ஆயினும் எம்வயின்*
*பாடறிந்து ஒழுகும் பண்பி னாரே;*
*மிகப்பேர் எவ்வம் உறினும் எனைத்தும்*
*உணர்ச்சி இல்லோர் உடைமை உள்ளேம்*
*நல்லறி வுடையோர் நல் குரவு*
*உள்ளுதும் பெருமயாம் உவந்துநனி பெரிதே"* [11]

என்று மாண்புடன் வாழும் உரிமையைப் பேணிக் காத்தனர் என்ற உண்மையை அறிய முடிகிறது.

**நோயற்ற வாழ்வு**

*"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்*
*சேராது இயல்வது நாடு"* [12]

என்பர் திருவள்ளுவர்.

அமைதியான வாழ்வு என்பது உணவு, உடை, இருப்பிடம் என்பது மட்டுமன்றி மக்கள் நோய் நொடியின்றி வாழும் ஆரோக்கியமான வாழ்வையும் உள்ளடக்கியது. நாட்டு மக்கள் நோயற்ற வாழ்வு வாழ்தல் வேண்டும் என்பதைப் புலவர்கள், புரவலர்களை வாழ்த்தும் போதே அறிவுறுத்திப் பாடினர். அனைத்து வளங்களிலும் மேன்மையுடையதும் மேம்பாடு அடைய வேண்டியதும், நோயற்ற வாழ்வுடைய மனித வளமே.

**"ஊண், உடை, தங்குமிடம், நோய் நீக்கும் பரிகாரங்கள், கல்வி பெற வசதி இவைகளில் தனிமனிதன் போதிய உரிமை வளம் பெறாவிடின் மற்றும் கருத்துரிமை, பேச்சுரிமை, எழுத்துரிமை போன்ற மனோ நிலையைச் சார்ந்த சுதந்திரங்களை அவன் அடைந்தும் வீணே"** [13]

என்கின்றார் மா. ஆனந்தநாராயணம்.

வணிகர் குடிகளையும், குடிகளைப் பேணும் காணியாளர் சுற்றத்தையும் நீ பாதுகாத்தலால் நினது நாட்டில் செவ்வாய்க் கோள் சென்ற பக்கத்தே வெள்ளக்கோள் செல்லாமையால் மழை தேவைப்படும் காலங்களில் மேகம் மழை பெய்து விளங்கும் அதனால் நோய் துன்பமும் பசித்துன்பமும் இல்லையாகப் பலவகைகளும் பொலிந்து நாடு சிறக்கும் எனக் குமட்டூர் கண்ணனார் கூறுகிறார். இதனை,

*"கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக்*
*குடிபுறந் தருநர் பாரம் ஓம்பி*
*அழல்சென்ற மருங்கின் வெள்ளி ஓடாது*

*மழைவேண்டு புலத்து மாரி நிற்ப*
*நோயொடு பசிஇகந்து ஒரீஇப்*
*பூத்தன்று பெரும! நீ காத்த நாடே"* [14]

என்றும்,

பலரும் புகழும் பண்பு மிக்க நீ காத்தலினால் பசிப் பிணி முதலியன நீங்கப் பெற்றுப் புது வருவாய் கொண்டு விளங்கும் உனது நாட்டையும் கண்டு வியப்புற்று அறிவு மயங்கினேன் எனவும்,

*"பதிபிழைப்பு அறியாது துய்த்தல் எய்தி*
*நிரையம் ஒரீஇய வேட்கைப் புரையோர்*
*மேயினர் உறையும் பலர்புகழ் பண்பின்*
*நீ புறந் தருதலின் நோய்இகந்து ஒரீஇய*
*யாணர்நல் நாடும் கண்டுமதி மருண்டனென்"* [15]

என்றும்,

ஆண்டு தோறும் மேகம் தவறாமல் பயன் மிக்க மழை பெய்ய மக்களுக்கு நோயற்ற வாழ்வு மிக நெடுங்காலம் உண்டாக நீ வாழ்வாயாக எனப் பாலை கௌதமனார்,

*"யாண்டுபிழைப்பு அறியாது பயம்மழை சுரந்து*
*நோற்இல் மாந்தர்க்கு ஊழி ஆக"* [16]

எனவும்,

நோயில்லாமல் முதுமையடைந்த உடலோடு நீங்கும் படி, நெடுங்காலம் ஆட்சி புரிந்த வலியவர்களின் மரபில் வந்தவன் பல்யானை செல்கெழுகுட்டுவன் என்பதை,

*"மூத்த யாக்கையொடு பிணி இன்று கழிய*
*ஊழி உய்த்த உரவோர் உம்பல்!"* [17]

என்றும்,

வீரர்களின் மார்பில் பட்ட புண்களைத் தைக்கும் போது அந்தப் புண்ணின் இரத்தத்தில் மூழ்க மறைந்து எழும் இயல்பினது தையல் ஊசி. அந்த நீண்ட வெளிய ஊசியால் உண்டான நெடிய தழும்பு எனப் போரில் புண்பட்ட வீரர்களுக்கு மருத்துவச் சிகிச்சையினை அளித்துச் சுகாதாரமான வாழ்வினை வலியுறுத்தியுள்ளதை,

*"இரும்பனம் புடையல் ஈகை வான்கழல்*
*மீன்கேர் கொட்பின் பனிக்கயம் மூழ்கிச்*
*சிரல்பெயர்ந் தன்ன நெடுவெள் ஊசி*
*நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்"* [18]

எனும் அடிகள் மூலம் அறிய முடிகிறது.

இன்றைய ஆங்கில மருத்துவ முறையில் பயன்படுத்தப்படும் தையல் போடும் முறை சங்ககாலத் தமிழ் மக்களிடையே போரில் விழுப்புண்பட்டு கிழந்த தசைகளை ஒன்று சேர்க்கும் மருத்துவ சிகிச்சையினைக் கையாண்டுள்ளனர் என்பதை உணர்த்துகின்றது.

### பிற உயிர்களையும் தன்னுயிர் எனப் போற்றிய பண்பு

பழங்காலத் தமிழ்ச் சமுதாய மக்கள் பிற உயிர்களிடத்தும் மிகுந்த அன்பு கொண்டவர்களாக மட்டுமன்றி அவைகளின் வாழ்வுரிமையையும் மேலாக எண்ணி வாழ்ந்த வந்தனர். இதை,

*"புணரி பொருத பூமணல் அடைகரை*
*ஆழி மருங்கின் அலவன் ஓம்பி*
*வலவன் வள்புஆய்ந்து ஊர*
*நிலவுவிரிந் தன்றாற் கான லானே"* [19]

என்ற பாடலால் அறிய முடிகிறது.

போரில் ஈடுபடாத, பசுவும், பசு ஒத்த பார்ப்பனரும், பெண்களும், நோயுற்றோரும், இறந்தோர்க்கு இறுதிக் கடன் செய்யும் நல்ல புதல்வரைப்

பெறாதவரும் எம் அம்பை ஏவப்போகிறோம் உங்களுக்குப் பாதுகாப்பான இடத்தைச் சேருங்கள் என்று வாழ்வுரிமையை எண்ணியவர்களாய் இருந்தனர்.

தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவும் செல்வம் சேர்த்து வளமுடன் வாழ்ந்து இன்புற்றிருக்கவும் அதிகாரத்தைப் பயன்படுத்தி அடாத செயல்களில் ஈடுபடுவதற்கும் என்றில்லாமல் ஆட்சி அதிகாரத்தைக் கொண்டு நாட்டு மக்களின் நலனில் அக்கறை கொண்டு வழி நடத்திச் செல்வதற்கும் பயன்பட வேண்டும் என்பது மக்களாட்சியின் நோக்கம். இதை,

*“ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ*
*மாசு விசும்பின் நடுவுநின் றாங்குக்*
*கண்பொர விளங்கும்நின் விண்பொரு வியன்குடை”* [20]

என எழுந்த வெள்ளைக் குடி நாகனாரின் வரிகளும்

கொடையாளரைத் தேடிப் பறவைகள் போல் சென்று நெடுவழி என்று எண்ணாமல் பாலை வழி பல கடந்து தெளிவில்லா நாவால் இயன்ற அவையில் பாடிப் பெற்ற பொருளுக்கு மகிழ்ந்து தம் சுற்றத்தினருக்கு வழங்கி நாளைக்கு வேண்டும் எனப் பாதுகாத்து வைக்காமல் உண்டு பிறர்க்கும் பகிர்ந்தளித்து தம் பெருமிதம் குறைவு படாதிருப்பதற்காக வருந்தும், மற்றவர்க்குத் தீமை செய்வதை அறிந்தறியாத புலவர்கள் பரிசில் வாழ்க்கையினைப் படம் பிடித்துக் காட்டும்.

*“வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி*
*நெடிய என்னாது சுரம்பல கடந்து*
*வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்*
*பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருந்தி*
*ஓம்பா துண்டு கூம்பாது வீசி*

*வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கை;*
*பிறர்க்குத் தீதறிந் தன்றோ இன்றே, திறப்பட,"* [21]

என்ற பாடலும் வாழும் உரிமையினை வலியுறுத்திக் காட்டுகின்றது.

அகன்ற இடத்தையுடைய இவ்வுலகத்தில் வாழ்கின்ற எல்லா உயிர்களுக்கும் உரிமையோடு வாழ்தல் மிக இனிது என்கின்றனர் பூதஞ்சேந்தனார்,

*"மலர்தலை ஞாலத்து மன்னுயிர்க் கெல்லாம்*
*தகுதியால் வாழ்தல் இனிது"* [22]

நாடு, மொழி, பால், இனம், சமயம் என்ற பாகுபாடில்லாமல் வாழும் உயிரினம் அனைத்திற்கும் இயற்கை வகுத்தளித்த வாழும் உரிமை கடந்த நூற்றாண்டில் மனித உரிமைகளாக மாற்றம் பெற்று வலியுறுத்தப்பட்டு வந்திருந்தாலும், ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தமிழினம் அவ்வுரிமையை வாழும் உரிமைகளாக்கி வந்திருப்பதை மறுக்கவும் மறக்கவும் முடியாது.

**"காவிரிப் பூம்பட்டினத்திலே வந்து சேர்ந்தவர்கள் தமிழகத்தின் வெவ்வேறு பகுதியினைச் சேர்ந்தவர்கள் அல்லர். வேறு வேறு மொழிகளைப் பேசும் வேறு வேறு நாடுகளிலிருந்து வந்து சேர்ந்தவர்கள் அவர்கள். எனவே அவர்களின் பழக்க வழக்கங்களிலும் பண்பாடுகளிலும் பெரிய முரண்பாடுகள் இருந்திருக்க வேண்டும். ஆனாலும் 'ஆயிரம் பூக்கள் மலரட்டும்' என்கிற தெளிவார்ந்த சிந்தனையோடு அந்தச் சிறுபான்மையினர்களை எல்லாம் அரவணைத்துக் கொண்டு வாழ்ந்திருக்கிறார்கள் சங்க காலத்தமிழர்"** [23]

என்ற சாலினி இளந்திரையன் அவர்களின் கருத்தும்

**"மனித நலன் முழுமை அடையத் தொடர்ந்து வாழும் உரிமை இன்றியமையாதது. எனவே வாழ்க்கையின் புனிதத்தன்மை மதிக்கப்பட வேண்டும். பழைய காலத்தில் சில சமுதாய வடிவங்களில் இவ்வடிப்படை உரிமை கூட அங்கீகரிக்கப்பட்டதன்று. குழந்தைகளும் போர்க் கைதிகளும் முறையின்றிக் கொல்லப்பட்டனர். ஓரளவு வளர்ந்து சமுதாயங்களில் கூட இவ்வுரிமை மிக எளிதாகக் கருதப்பட்டதை அங்கு நிலவிய அச்சரவுகளிலிருந்து அறியலாம். வாழ்க்கையின் மதிப்பை முழுமையாக உணர்ந்தால் இன்றைய நாகரீக உலகில் போர்கள் கூடத் தவிர்க்கப்படலாம். ஆனால் இன்றைய நிலையிலும் கூட வாழ்வுரிமை முழு அளவற்கு உள்ளதாகக் கொள்ள முடியாது"**[24]

என்ற வாழ்வியற் களஞ்சியம் தரும் விளக்கமும் சங்கப் பாக்களோடு ஒப்பு நோக்கதக்கன.

**வீரம்**

பண்டைக் காலத்தில் ஆண்கள் காதலிலும் வீரத்திலும் சிறந்தொழுகினர். காதல் என்றால் மென்மையையும் வீரம் எனில் ஆண்மையையும் நிலைநாட்டி விழுப்புண்படாத நாட்களையெல்லாம் வீண் நாளாக எண்ணினர். பொருள் தேடுவதும் போர் செய்வதும் ஆண்மைக்கு அழகெனக் கருதினர். கொடையும் வீரமும் புகழின் மூலதனமாயிருந்தன. போரில் புறம் கொடாததும், மார்பில் வேல் ஏற்று வீரமரணம் அடைவதும் ஆடவனின் தலைமைப்பண்பாக விளங்கியது. மார்பில் ஏவப்பட்டு முதுகில் புண்வெளிப்பட்டதையும் வீரத்திற்கு இழுக்கு என்று எண்ணி வாளோடு வடக்கிருந்து உயிர் விடத் துணிந்தனர். இதை,

*"தன்போல் வேந்தன் முன்பு குறித்து எறிந்த*
*புறப்புண் நாணி மறுத்தகை மன்னன்*
*வாள்வடக்கு இருந்தனன் ஈங்கு"* [25]

கழாத்தலையாரின் பாடலடிகள் உணர்த்துகின்றன.

*சென்றுஅமர்க் கடந்த நின் ஆற்றல் தோன்ற*
*வென்றோய் நின்னினும் நல்லன் அன்றே*
*கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை*
*மிகப்புகழ் உலகம் எய்திப்*
*புறப்புண் நாணி வடக்கு இருந்தோனே"* [26]

என்ற பாடலில் போரில் வெற்றி பெற்ற காரிகால் வளவனை விட முதுகுப் புண்ணுக்கு நாணி வடக்கிருந்து உயிர் துறந்த சேரலாதன் உலகப் புகழை அடைந்தான் என்று பாடுகிறார்.

போரில் விழுப்புண்படாமல் நோயினால் இறந்தவர் சுவர்க்கம் சென்றடைய மாட்டார் என்பது சங்க கால மக்களின் நம்பிக்கை. அவ்வாறு நோய்பட்டு இறந்தவரை, வீரத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டு போர்க் காலத்தில் இறந்த கழல் அணிந்த வீரர் செல்லும் அமர நிலையை அடைய பசும்புல் மீது படுக்க வைத்து வாளால் வெட்டி அடக்கம் செய்தாலும் அது இழிவைத் தரும் என்று எண்ணினர் நம்மனோர். இதை,

*"ஓடல் மரீஇய பீடுஇல் மன்னர்*
*நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்*
*காதல் மறந்தவர் தீதுமருங்கு அறுமார்*
*அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்*
*திறம்புரி பசும்புல் பரப்பினர் கிடப்பி*
*மறம்கந் தாக நல்அமர் வீழ்ந்த*
*நீள்கழல் மறவர் செல்வுழிச் செல்கென*
*வாள்போழ்ந்து அடக்கலும் உய்ந்தனர் மாதோ"* [27]

என்ற பாடல் அடிகள் மூலம் போர் காலத்தில் விழுப்புண் பட்டு வீரமரணம் அடைதலே வீரத்தின் அடையாளமாகக் கருதப்பட்டிருக்கிறது என்று அறிய முடிகிறது. மன்னனாக இல்லாமல் பிறக்கும் போதே குழந்தை இறந்து பிறந்தாலும், குழந்தை முழு வளர்ச்சி அடையாமல் தசைப் பிண்டமாக பிறந்தாலும் ஆள் அல்ல என்று எண்ணாமல் வாளால் பிளந்த பின்னரே அடக்கம் செய்ததை,

*"குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்*
*'ஆள்அன்று' என்று வாளில் தப்பார்*
*தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய"* [28]

என்ற அடிகளால் அறியலாம். மேலும்,

*"படைப்பழி தாரா மைந்தினன் ஆகலும்"* [29]

என்று இருப்பவனே அரசனால் மதிக்கப்பட்டனர். எனவேதான்,

*"ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்*
*களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"* [30]

என்று போரில் ஒளி பொருந்திய வாளினைக் கொண்டு களிற்றினை வீழ்த்தி வெற்றியுடன் திரும்புதல் காளையின் கடமையாகக் கருதினார். மன்னன் எப்பொழுதும் போரினையே எதிர் நோக்கிக் கொண்டிருக்கின்றான். தண்ணுமைப் பறையில் காற்று மோதுவதால் எழுகின்ற ஒலியினைக் கூட அது போர்ப்பறை என்று எண்ணி மகிழ்ச்சியடைபவன் மன்னன் என்பதை

*"பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை*
*வளிபொருதெண்கண் கேட்பின்*
*அது போர் என்னும், என்ஐயும் உளனே"* [31]

என்று அதியமான் நெடுமான் அஞ்சியின் வீரச்சிறப்பினை ஔவையார் பாடுகிறார்.

**பெண்களின் வீரம்**

உடலளவில் இல்லையென்றாலும் மனத்தளவில் சங்க கால ஆண்களைப் போலவே பெண்களும், வீரம் செறிந்தவர்களாகக் காணப்பட்டனர். போர்க்களத்தில் நின்று களமாடி வெற்றி பெறுவதற்கான உரிமை பெண்களுக்கு வழங்கப்படவில்லையெனினும் போர் காலத்தில் இறந்து பட்ட கணவனைத் தேடிச் சென்று வீரமரணத்தைக் கொழுநன் அடைந்ததை எண்ணி ஆனந்த கண்ணோரோடு அழுது புலம்பினால் புலி வந்து விடுமே என்றஞ்சி கணவன் இறந்ததையும் மறந்தவளாய் நிழலமைந்த இடத்தைச் சேர்வோம் சிறிது நடப்பாயாக என்று கூறும் மனவலிமை கொண்டனர் மகளிர். இதை,

*"'ஐயோ' எனின் யான் புலிஅஞ் சுவலே;*
*அணைத்தனன் கொளினே, அகன்மார்பு எடுக்க வல்லேன்*
*என்போல் பெருவிதிர்ப் புறுக நின்னை*
*இன்னாது உற்ற அறனில் கூற்றே;*
*நிரைவளை முன்கை பற்றி,*
*வரைநிழல் சேர்கம் நடத்திசிற் சிறிதே"* [32]

என்ற வன்பரணர் பாடலில் நன்கு உணர முடிகிறது.

போர் கண்டு மகன் அஞ்சி இறந்தான் என்பது உண்மையானால் அவனுக்குப் பால் கொடுத்த முலையினை அறுத்தெறிவேன் என்று சூளுரைத்துக் கையில் வாளுடன் போர்க்களம் புகுந்து கிடக்கும் பிணங்களைப் புரட்டிப் பார்த்து தன் மகன் மார்பில் புண்பட்டு இறந்ததைக் கண்டவுடன் ஈன்ற பொழுதினும் பெரிதுவக்கும் தாயின் வீரஉணர்வினை,

*"நரம்பெழுந்து உலறிய நிரம்பா மென்தோள்*
*முளரி மருங்கின் முதியோள் சிறுவன்*
*படை அழிந்து மாறினன் என்றுபலர் கூற*

*மண்டமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்ட என்*
*முலை அறுத் திடுவென் யான் எனச் சினைஇக்*
*கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்*
*செங்களம் துழவுவோள் சிதைந்து வேறாகிய*
*படுமகன் கிடக்கை காணூஉ*
*ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே"* [33]

என்ற பாடலும்,

உன் மகன் எவ்விடத்துள்ளான் என்று வினவியவரிடம் என் மகன் எவ்விடத்துள்ளான் என்று அறியேன். ஆனால் புலி தங்கிச் சென்ற குகையைப் போல அவனைப் பெற்ற வயிறு இதுவாகும். அவன் போர்க் களத்தில் இருப்பான் அங்குச் சென்று பார் என்ற கூறியதை,

*"சிற்றில் நல்தூண் பற்றி நின்மகன்*
*யாண்டுஉள னோஎன வினவுதி; என்மகன்*
*யாண்டுஉளன் ஆயினும் அறியேன் ஓரும்*
*புலி சேர்ந்து போகிய கல்அளை போல*
*ஈன்ற வயிறோ இதுவே;*
*தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே"* [34]

என்ற பாடலில் தன் மகனைப் புலி எனவும் சுமந்த தன் வயிற்றைப் புலியின் குகை என்றுரைத்த நெஞ்சுரம் கொண்ட பெண்கள் சங்க காலத்தில் இருந்தனர். மேலும், முதுமையடைந்த தாய் தன் மகன் போரில் களிறு எறிந்து இறந்துபட்டான் என்ற செய்தியைக் கேட்டு அவனை ஈன்ற பொழுதினும் இன்பம் மிகுதியால் கண்ணீர் விட்டதை,

*"மீன் உண் கொக்கின் தூவி அன்ன*
*வால் நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்,*
*களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை*
*ஈன்ற ஞான்றினும் பெரிதே; கண்ணீர்,*

*நோன்கழை துயல்வரும் வெதிரத்து*
*வான் பெயத் தூங்கிய சிதரினும் பலவே"* [35]

என்ற பாடலில் அறிய முடிகின்றது.

போர்க்களத்தில் இறந்துபட்ட தன் மகனைப் பார்த்த வயது முதிர்ந்த தாய் தன் மார்பில் பால் சுரந்ததாகக் கூறும் தாயின் மனப்போக்கினை,

*"வருபடை போழ்ந்து வாய்ப்பட விலங்கி*
*இடைப்படை அழுவத்துச் சிதைந்துவே றாகிய*
*சிறப்புடை யாளன் மாண்புகண்டு அருளி*
*வாடுமுலை ஊறிச் சுரந்தன*
*ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே"* [36]

என்ற பாடலில் வற்றிப் போன தன் முலையில் மகிழ்ச்சிப் பெருக்கால் பால் சுரந்ததாகக் கூறுவது பெண்கள் வீரத்தின் விளை நிலங்களாக விளங்கியிருந்தமை நன்கு புலனாகின்றது.

முதல் நாள் போரில் தன் தந்தையை இழந்தனள். இரண்டாம் நாள் போரில் தன் கணவனை இழந்தனள். மூன்றாம் நாளும் போர் பறை ஒலிக்கக் கேட்டுத் தனக்கிருக்கும் ஒரே மகனை அலங்கரித்துப் போர் முனைக்குச் செல்க எனும் நிலையினை,

*"இன்றும், செருப்பறை கேட்டு விருப்பு உற்று மயங்கி*
*வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித்து உடீஇப்*
*பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி*
*ஒருமகன் அல்லது இல்லோள்,*
*செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே"* [37]

எனும் மேற்கண்ட பாடலடிகளைக் கொண்டு தமிழ்ப் பெண்களின் வீரத்தையும் நாட்டுப் பற்றையும் ஒப்பு நோக்கலாம்.

**காதலிக்கும் உரிமை**

உயிர் நிலையது. அன்பு வழிப்பட்டதும் உயிர்கள் அனைத்திற்கும் பொதுவானதும், மனுக்குலம் பெருகிட முதற்கருவியானதும், சாதி, மத பேதக் கட்டுகளைத் தகர்த்தெறியும் ஆற்றல் மிக்கதுமான காதல் தனி மனித இன்பத்தின் ஊற்றுக்கண். ஏற்றத்தாழ்வுகளைப் புறந்தள்ளி பொதுவுடமை சமுதாயத்தைக் கொண்டு புதியதோர் உலகம் படைக்கும் அற்புதக் காரணி. கண்களில் பிறந்து கருத்தில் வளர்ந்து உயிரில் கலக்கும் உன்னத உணர்வு. முரட்டு குணமுடையவர்களையும் முதிர்ந்த அன்புடையவர்களாக மாற்றும் மந்திர சக்தி காதலுக்கு மட்டுமே உண்டு. துன்பத்தின் எச்சமும், இன்பத்தின் உச்சமுமானது. இரு மணங்களின் கலப்பினச் சேர்க்கை.

காதல் காதல் என்ற சொல்லுக்கு,

**"அன்பு, அவா, ஆவல், கொலை, காமநோய்"**[38]

போன்ற விளக்கங்களைக் கழகத் தமிழகராதி தருகின்றது.

> **"மக்கள் வாழ்க்கை மெய் வாய் கண் மூக்கு செவி என்பவற்றின் வாழ்வு மட்டுமன்று இவையுமாய் இவற்றிற்கு அப்பாலுமாய் உணர்ந்து அறிந்த மனத்தால் கூடி வாழும் அக வாழ்க்கையுமாகும். இந்த மனம் பண்படும் இடமே கூடி வாழும் வாழ்க்கை முறையுமாகும். இந்த மனம் வாழும் இடமே தனிமனித வாழ்க்கை"**[39]

என்று காதல் வாழ்க்கைக்கு விளக்கம் தருகின்றார் டாக்டர் மு. வரதராசனார்.

சங்க காலத் தமிழ் மக்கள் நெஞ்சம் நிறை காதல் வாழ்வினை மேற்கொண்டிருந்தனர். இன்பம் செறிந்த வாழ்வின் அடிப்படை அலகான காதல் சங்க கால மக்களிடையே போற்றப்பட்ட ஒழுக்கமாக இருந்தது.

இயற்கையாக எழும் உணர்வுகளின் வெளிப்பாட்டினைத் தடுத்து நிறுத்தும் பல்வேறு தடைகளினிடையேயும் காதலிக்கும் உரிமையைப் பெற்று மகிழ்ந்தனர். அக்காதல் தனி மனிதனின் வாழ்வுரிமையாக எண்ணப்பட்டது. சான்றோர்களும், புலவர்களும் புரவலர்களும் அவ்வுரிமைக்கு ஆதரவு கரம் நீட்டினர் என்பதைத் தமிழிலுள்ள இலக்கியங்கள் பலவும் குறிப்பாகச் சங்க இலக்கியங்களில் அகத்திணை நூல்கள் பறைசாற்றுகின்றன.

> **"தொடக்கத்தில் தனக்குரிய ஆணையோ பெண்ணையோ தெரிவு செய்து சேர்ந்து வாழும் அமைப்பு தோன்றியது. அப்போது குடி, சாதி, மதக் குறுக்கீடுகள் தோன்றாத காலம் எனவே துணையைத் தெரிவு செய்துக் கொள்ளும் உரிமை இயல்பாகவே இருந்தது. இந்த இயல்பு வாழ்க்கை பரிணாமத்தையே தமிழ்ச் சங்க அகப்பாக்களில் பார்க்கிறோம்".**[40]

என்பர் தாயம்மாள் அறவாணன்.

மக்கள் காதலையும் வீரத்தையும் கண்ணெனப் போற்றிச் சிறந்தனர். காதல் வாழ்வை அகவாழ்வென்றும் வீரம் நிறைந்த வாழ்வைப் புறவாழ்வென்றும் வகுத்தனர். இக்காதல் வாழ்வு, வெளிப்படையாகவும், மறைவாகவும் காணப்பட்டன. இவை முறையே கற்பு களவு என்றழைக்கப்பட்டன. ஐவகை நிலங்களான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை இவற்றோடு கைக்கிளை பெருந்திணை என ஒரு வகையான வாழ்க்கை நெறிகளை வகுத்துக் கொண்டனர் என்பதை,

> *"கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்*
> *முற்படக் கிளந்த எழுதிணை என்ப"* [41]

என்கின்றது தொல்காப்பியம்.

சங்க காலத்தில் தலைவன் தலைவி இருபாலருக்கும் காதலிக்கும் உரிமை பொதுவாக இருந்திருக்கின்றது. தலைவன் மீது தான் கொண்டிருக்கக் கூடிய காதல் நிலத்தை விடப் பெரிது, வானை விட உயர்ந்தது கடலை விட ஆழமானது என்று தன் காதலின் தன்மையினைத் தோழியிடம் தலைவி கூறுவதை,

*"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரளவு இன்றே சாரல்*
*கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு*
*பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பு"* [42]

எனும் பாடலடிகள் சுட்டிக் காட்டுகின்றன.

தலைவன் மீது தீராக் காதல் கொண்டவளாயும், அன்பு நிறைந்த நெஞ்சத்தவளாயும், இப்பிறவியில் மட்டுமல்லாமல் இனிவரும் பிறவிகளிலெல்லாம் தலைவனை மறந்து விடாது இருக்க வேண்டி இப்பிறவியில் சாவதற்கு அஞ்சுபவளாகவும் இருக்கும் தலைவி கொண்ட காதலின் ஆழத்தை,

*"தோளும் அழியும் நாளும் சென்றென*
*நீ ரீடடை அத்தம் நோக்கி, வாள் அற்றுக்*
*கண்ணும் காட்சி தெளிவின என்நீத்து*
*அறிவும் மயங்கி பிறதுஆ கின்றே*
*நோயும் பெருகும் மாலையும் வந்தன்று*
*யாங்குஆ குவென்கொல் யானே ஈங்கோ*
*சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாவின்*
*பிறப்பிபிறிது ஆகுவது ஆயின்*
*மறக்குவென் கொல்என் காதலன் எனவே"* [43]

என்ற பாடலில் உணர்ந்து கொள்ள முடிகிறது. தலைவன் பொருளீட்டி மீண்டும் திரும்பி வரும் வரையில் தலைவி வீட்டில் காத்திருப்பது நற்குடியில் பிறந்த பெண்களுக்குரிய இயல்பு. மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிராக

எண்ணப்பட்டனர். தலைவனின் பிரிவு தலைவிக்குத் துயரத்தை மிகுவிப்பதாக இருந்தாலும் தன் துயரை மறைத்துத் தலைவனுக்கு ஆறுதல் மொழிகளைக் கூறி வழியனுப்பி வைத்தனர். இதை,

*"ஆருடை இடைமகன் சூடப் பூக்கும்*
*அகலுள் ஆங்கண் சீறூ ரேமே*
*அதுவே சாலும் காமம், அன்றியும்*
*எம்விட்டு அகறீர் ஆயின் கொன்ஒன்று*
*கூறுவல் வாழியர் ஐய, வேறுபட்டு*
*இரீஇய காலை இரியின்*
*பெரிய அல்லவோ பெரியவர் நிலையே"* [44]

என்ற பாடலும், நீரின்றி உலகம் இயங்காது என்றவாறு தலைவன் இன்று தன்னால் இயங்க முடியாது என்றும் தலைவனின் பிரிவுத் துயர் தன்னை வாட்டும் என்பதறிந்து பிரிந்து செல்லும் எண்ணத்தைத் தலைவன் கைவிட வேண்டும் என்று தோழி கூறுவதை,

*"நீரின்றி அமையா உலகம் போலத்*
*தம்மின்று அமையா நம்நயந்து அருளி*
*நறுநுதல் பசத்தல் அஞ்சிச்*
*சிறுமை உறுபவோ செய்பு அறியலரே"* [45]

எனப் பாடலடிகள் சுட்டிக்காட்டுகின்றன. மற்றொரு தலைவி தன்னை விட்டுப் பிரிய கருதிய தலைவனின் செயலை நயம்பட எடுத்துக்கூறி தலைவியின் துயரைத் தணிக்க முற்படுவதுமட்டுமல்லாமல் வினை முடித்து மீளும் வரையில் வீட்டின்கண் ஆற்றி இருப்பதே தலைவியின் வாழ்வியல் ஒழுக்கம் என்பதைத் தோழி வாயிலாகத் தலைவிக்கு அறிவுறுத்தும் பாங்கினை,

*"பெருநகை கேளாய் தோழி காதலர்*
*ஒருநாள் கழியினும் உயிர்வேறு படூஉம்*
*பொம்மல் ஓதி நம்மிவண் ஒழியச்*
*செல்ப என்ப தாமே சென்று*

*தம்வினை முற்றி வரூஉம் வரை நம்மனை*
*வாழ்தும் என்ப நாமே"* [46]

என்ற பாடலால் அறிய முடிகிறது.

மூன்று வெவ்வேறு தலைவியின் மனநிலைகள் காதலின் ஆழத்தையும் அன்பின் பெருமையினையும் படம் பிடித்துக் காட்டுவன. அத்துடன் காதலிக்கும் உரிமையினையும் அவர்கள் பெற்றிருந்தனர். ஆணுக்கும் பெண்ணுக்கும் காதலில் சமஉரிமை உண்டு. அத்தகைய சமஉரிமையே அன்புறு காமமாகும்.

**தனிக்குடும்பம் (குடித்தனம்)**

சங்க காலம் தனிக்குடும்ப வாழ்க்கை முறையினை வெளிப்படுத்துவதன்றிக் கூட்டுக் குடும்ப வாழ்வினை அன்று. தலைவன் தலைவி குழந்தைகள் என்ற அளவிலேயே குடும்பம் இருந்திருக்கின்றது. பாட்டன், பாட்டி, அத்தை, மாமா, அண்ணன், அண்ணி, தங்கை, மைத்துனன், பிள்ளைகள் என்ற கூட்டுக் குடும்ப அமைப்பினைச் சங்க காலத் தமிழ் சமுதாயத்தில் காண முடியவில்லை. திருமணமானதும் காதலர் இல்லறம் தொடங்கி தனிக்குடித்தனம் நடத்தும் இல்லம் கடிநகர் எனப்பட்டது.

தலைவனும் தலைவியும் உடன் போக்கு மேற்கொண்டு தனிக்குடித்தனம் நடத்துகின்ற பாங்கினைச் செவிலித்தாய்,

*முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்*
*கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்*
*குவளை உண்கண் குய்ப்புகை கமழத்*
*தான் துழந்து அட்ட தீம்புளிப் பாகர்*
*இனிது எனக் கணவன் உண்டலின்*
*நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒன்னுதல் முகனே"* [47]

எனும் குறுந்தொகைப் பாடலடிகள் மூலம் தலைவி இல்லறம் இனிதாக நடத்துகின்ற பாங்கையும் தலைவனின் மேலான பண்பினையும் காட்டுவதோடு, இனிய இல்லறம் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு இலக்கணமாகத் திகழ்ந்தனர் நம்மனோர் என்பதையும் அறியமுடிகிறது.

தனிக்குடித்தனம் நடத்தும் இல்லம் சென்ற தோழி தலைமகன் புணர்ச்சி விதும்பல் கண்டு களவு காலத்தில் நடந்த ஒழுகலாற்றை நினைந்து வருந்தி,

*“அயிரை பரந்த அம்தண் பழனத்து*
*எந்துஎழில் மலர தூம்புடைத் திரள்கால்*
*ஆம்பல் குறுநர் நீர்வேட் டாங்கு, இவள்*
*இடைமுலைக் கிடந்தும் நடுங்க லானீர்!*
*தொழுதுகாண் பிறையின் தோன்றி யாம்நுமக்கு*
*அரியம் ஆகிய காலைப்*
*பெரிய நோன்றனிர் நோகோ யானே”* [48]

என்று தலைவனின் அன்பை வியந்து கூறும் தோழியின் கூற்றும்,

மலர் மணம் கமழும் முல்லை நிலத்தில் உள்ள சிற்றூரில் அவள் கணவன் வேந்தனது பணியை விரைவில் முடித்துக் கொண்டு திரும்பி விடுகிறான். நம் மகளும் அவள் கணவனும் இன்புற்று வாழ்கிறார்கள் என்று தலைவியின் தனிக்குடித்தனச் சிறப்பைக் குறுந்தொகையில்,

*“புதல் நீர் வாரும் பூநாறு புறவில்*
*சீறூ ரோளே மடந்தை; வேறூர்*
*வேந்துவிடு தொழிலொடு செலினும்*
*சேந்துவரல் அறியாது செம்மல் தேரே”* [49]

எனச் செவிலித்தாய் கூறி மகிழ்வதையும் போலவே,

ஐங்குறுநூற்றில் முல்லைத் திணையில் அமைந்த செவிலிக் கூற்றுப் பத்தில் காணப்படுகின்ற பத்துப் பாடல்களும், தலைவனோடு உடன் போக்கு மேற்கொண்ட தலைவி கணவனது இல்லத்தில் வறுமை வந்தமையால் தன் தந்தையின் செல்வத்தை நினைத்து ஏங்காமல் ஒரு பொழுது உண்டு மறுபொழுது உண்ணாதிருக்கும் மனத்திட்பத்தை உடையவளான தலைவி தன் குடும்பப் பெருமையினைக் காத்து பண்பில் சிறந்து விளங்கினர். இதை,

*"அறிவும் ஒழுக்கமும் யாண்டுஉணர்ந் தனள்கொல்*
*கொண்ட கொழுநன் குடிவறன் உற்றென்க்*
*கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்*
*ஒழுகுநீர் நுணங்குஅறல் போலப்*
*பொழுதுமறந்து உண்ணும் சிறுமது கையளே"* [50]

என்று நற்றிணை குறிப்பிடுகின்றது.

### குடிமக்களைக் காக்கும் முறை

குடிகளைக் காக்க வேண்டியது அரசாள்வோரது கடமை என்பதைச் சங்க கால மன்னர்கள் நன்கு அறிந்திருந்தனர். புலவர்களும் மன்னனுக்கு அறிவுறுத்தியுள்ளனர். பிழைப்புக்காகக் குடிமக்கள் வேறு நாட்டை நோக்கிச் செல்வதை மன்னர்கள் இழுக்காக எண்ணினர். செங்கோல் ஆட்சி முறை குடிகளின் வாழ்க்கையை நிலைகளைக் கொண்டு அளவிடப்பட்டது. மன்னனின் ஆட்சி முறை இல்லாத போது செம்மை உயிராகக் கருதுகின்ற நெல்லும், நீரும் பயனற்றத்தாகி விடும் இதை,

*"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே*
*மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்*
*அதனால் யானுயிர் என்பது அறிகை*
*வேல்மிகு தானை வேந்தற்கு கடனே"* [51]

என்று நாடாள்வோரின் கடமையை உணர்த்துகிறதை மோசிகீரனார் பாடலில் காண முடிகிறது. சோழ நாட்டைக் குற்றமில்லாமல் ஒரு குடைக்கீழ் தன் ஒப்பற்ற ஆணையால் சிறப்பாக ஆண்டு அறமுறைகளோடு செங்கோல் செலுத்தியதை,

***"தண்வைப்பின்நால் நாடுகுழீஇ,***
***மண்மருங்கினான் மறுஇன்றி,***
***ஒருகுடையான் ஒன்றுகூற,***
***பெரிதுஆண்ட பெருங்கேண்மை***
***அறனொடு புணர்ந்த திறன்அறி செங்கோல்"*** [52]

என்று கூறுகின்றது.

தீமையை நீக்கி அறம் செலுத்துகின்ற செங்கோலையுடையவன் இளந்திரையன்,

***"அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்"*** [53]

என்று பெரும்பாணாற்றுப்படையும்,

***"வியன்கண் முதுபொழில் மண்டிலம் முற்றி***
***அரசியல் பிழையாது அறநெறி காட்டி***
***பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது"*** [54]

அறநெறி தவறாமல் செங்கோல் செலுத்தியவன் பாண்டிய நெடுஞ்செழியன் என்பதை மதுரைக் காஞ்சியும் போற்றுகின்றதை அறிய முடிகிறது.

ஆட்சி செய்வோர் அறநிலை பிறழாமல் முறையோடு செங்கோலாட்சி செய்து வருவாராயின் குடிகள் மனம் கலங்காமல் மகிழ்ச்சியோடு இருப்பர். தலைமயிர் நரைக்காமல் இருப்பதற்கு மன்னனின் செங்கோலாட்சி முறையே காரணம் என்று புலவர் கூறுவதை,

***"யாண்டுபல வாக நரையில ஆகுதல்***
***யாங்குஆ கியரென வினவுதி ராயின்***

*மாண்டஎன் மனைவியோடு மக்களும் நிரம்பினர்*
*யான்கண் டனையரென் இளையரும் வேந்தனும்*
*அல்லவை செய்யான் காக்கும்; அதன்தலை"* [55]

என்ற பிசிராந்தையார் பாடலால் உணரமுடிகிறது.

குடிகளை அறநெறியில் காத்து வந்ததால் அதன் நற்பயனை முதுமையில் அடையலாம் என்று புலவர்களால் மன்னனுக்கு அறிவுறுத்தப் பட்டதை,

*"வெல்புகழ் மன்னவன் விளங்கிய ஒழுக்கத்தால்*
*நல்லாற்றின் உயிர்காத்து நடுக்கறத் தான்செய்த*
*தொல்வினைப் பயன்துய்ப்பத் துறக்கம்வேட்டு*
*எழுந்தாற்போல்"* [56]

என்றும்,

உயர்வு வரும் வழிகளை ஆராய்நது பார்த்து அவ்வழிகளில் குடிகளை வழி நடத்தி பொய்மையை நீக்கி நல்லாட்சி செய்த அரசனுடன் அவனது சிறப்பு ஆட்சிகாலமாகிய செல்வமும் ஒருங்கே நீங்குவதாக கூறும்,

*"நயனும் வாய்மையும் நன்னர் நடுவும்*
*இவனின் தோன்றிய இவைஎன இரங்கப்*
*புரைதவ நாடிப் பொய்தபுத்து இனிதாண்ட*
*அரைசனோடு உடன்மாய்ந்த நல்லூழிச் செல்வம்போல்"* [57]

எனவும்,

*"குடிபுறங் காத்தோம்பும் செங்கோலான் வியன்தானை*
*விடுவழி விடுவழிச் சென்றாங்கு, அவர்*
*தொடுவழித் தொடுவழி நீங்கின்றால் பசப்பே"* [58]

என்று குடிமக்களைக் காக்கும் முறையும் நன்கு உணர்த்தப்படுகிறது.

ஒரு நாட்டின் வளர்ச்சியும் வீழ்ச்சியும் அளந்தறிய அந்நாட்டு குடிகளின் வாழ்வியல் வளம் அளவு கோலாகிறது. முடியாட்சிக் காலத்தில் மன்னனும் தன் மக்களுக்குக் குளிர்ச்சிப் பொருந்தியவனாகவும் எதிரிகளுக்குச் சூரியனைப் போல் வெம்மையானவனாகவும் இருந்து தன் மக்களைக் காத்தனர்.

*“ஈண்டுநீர் மிசைத்தோன்றி இருள்சீக்கும் சுடரே போல்*
*வேண்டாதார் நெஞ்சுஉட்க வெருவந்த கொடுமையும்*
*நீண்டுதோன்று உயர்குடை நிழலெனச் சேர்ந்தார்க்கும்*
*காண்தகு மதியென்னக் கதிர்விடு தண்மையும்*
*மாண்டநின் ஒழுக்கத்தால் மறுவின்றி வியன்ஞாலத்து”* [59]

எனக் கலித்தொகைச் சுட்டிக் காட்டுகின்றது.

தீயவர்களைத் தண்டித்து நல்லவர்களைக் காத்தலும் அரசர்குரிய கடமையாகவும் நீதியாகவும் கருதப்பட்டது. மக்கள் எவ்வித அச்சமின்றிப் பாதுகாப்பான வாழ்வினைப் பெறுதல் வேண்டும் என்பதை மன்னர்கள் உணர்ந்திருந்தனர். இதை,

*“நல்லதன் நலனும் தீயதன் தீமையும்*
*இல்லை என்போர்க்கு இனன்ஆ கிலியர்”* [60]

என்கின்றது புறம்.

மக்களை எப்படி நடத்த வேண்டும் என்று புலவர் மன்னனுக்கு அறிவுறுத்தினாலும் எவ்வாறெல்லாம் நடத்தப்படக்கூடாது என்று கொடுங்கோல் ஆட்சியின் தன்மையை எடுத்துக் கூறாமல் விடவில்லை.

*“ஒல்குபு நிழல்சேர்ந்தார்க்கு உலையாது காத்துஓம்பி”* [61]

என்றும்

*“நசைகொண்டு தம்நிழல் சேர்ந்தாரைத் தாங்கித்தம்*
*இசைபரந்து உலகுஏத்த ஏதில்நாட்டு உறைபவர்;”* [62]

என்றும்

*“ஊறுஅஞ்சி நிழல்சேர்ந்தார்க்கு உலையாது காத்துஓம்பி*
*ஆறுஇன்றிப் பொருள்வெஃகி அகன்றநாட்டு உறைபவர்”* [63]

என வரும் பாடலடிகள் மன்னன் அறம் தவறி பொருளை விரும்பி ஆட்சி செய்தால் அந்நாட்டுக் குடிகள் துன்பம் உற்று வேறு நாட்டினை சென்றடைவர் என்பதை அறிய முடிகிறது.

**கொடை**

மன்னனின் மாண்புகளில், தலையாயதும் தனிப்பட்ட சிறப்புடையதுமான பண்பு கொடைத்தன்மை, வீரத்தையும், வெற்றிச்சிறப்பையும் புகழ்ந்து பாடிய புலவர்கள் கொடைச் சிறப்பையும் போற்றியே பாடியுள்ளனர்.

தம் வறுமை நீங்கி வாழ்வு வளம் பெற அரசனை நாடிப் பெருமைகளைப் புகழ்ந்து கொடை பெற்றிருக்கின்றனர். சங்க பாடல்களில் புரவலர் புலவர்களுக்குக் கொடுத்த கொடையினைப் பற்றிய செய்திகளைக் காண முடிகின்றது. மக்களுக்கு அளித்த கொடைகளைப் பற்றிய குறிப்புகள் அரிதாகவே உள்ளன.

*“துன்அரும் சிறப்பின் உயர்ந்த செல்வர்*
*இன்மையின் இரப்போர்க்கு ஈஇ யாமையில்*
*தொன்மை மாக்களின் தொடர்பு அறியலரே”* [64]

என்ற பாடலில் எல்லாச் சிறப்பும் பெற்றிருந்தும் கொடைப் பண்பு இல்லாவிட்டால் புகழ் பெற்று வரலாற்றில் நிலைத்த பெயரினை அடைய முடியாது என்பதை அறிய முடிகிறது. இதனையே,

*“ஒல்லா தொல்லும் என்றலும் ஒல்லுவது*
*இல்லென மறுத்தலும் இரண்டும் வல்லே*
*இரப்போர் வாட்டல் அன்றியும் புரப்போர்*
*புகழ்குறை படூஉம் வாயில் அத்தை;”* [65]

என்ற பாடல் வரிகளும் உணர்த்துகின்றன. பரிசில் நீட்டித்த வழி பெருந்தலைச்சாத்தனார் மூவனைக் குறித்துப் பாடிய,

*“ஈயாய் ஆயினும் இரங்குவேன் அல்லேன்*
*நோயிலை ஆகுமதி; பெரும, நம்முள்*
*குறுநணி காண்குவ தாக; நாளும்”* [66]

என்ற பாடலடிகளில் மன்னன் கொடை நீட்டித்த போது நமக்குள் நடந்தவை நம்மளவில் நடந்ததாகவே இருக்கட்டும் என்ற கூற்றின் வழியே கொடைப் பண்பில் சிறக்காதவர் என்று மற்றவர்களுக்குத் தெரிந்தால் மன்னன் புகழ் சிறக்காது என்ற எண்ணிய புலவர்களின் பெருந்தன்மையினைப் பறைசாற்றுகின்றது. இதனை,

*மன்பதை காக்கும்நின் புரைமை நோக்காது*
*அன்புகண் மாறிய அறனில் காட்சியொடு*
*நும்ம னோருமற்று இணையர் ஆயின்*
*எம்ம னோரிவண் பிறவலர்”* [67]

எனவும்,

*“கொள்ளா மாந்தர் கொடுமை கூறநின்*
*உள்ளியது முடித்தோய் மன்ற முன்னாள்*
*கையுள் ளதுபோல் காட்டி வழிநாள்*
*பொய்யொடு நின்று புறநிலை வருத்தம்*
*நாணாய் ஆயினும் நாணக் கூறிஎன்”* [68]

எனவும் வரும் பெருங்குன்றூர் கிழாரின் பாடல் வரிகளால் சுட்டிக் காட்டுகின்றன.

தன்னை நாடிப் புகழ்ந்து பாடி பரிசு பெற வந்த புலவர் பரிசு பெறாமல் வறிதே திருப்பி செல்வது, தன் நாட்டை இழந்ததனைக் காட்டிலும் கொடுமையானது என்றெண்ணி நாடிழந்து காட்டில் வாழும் சூழ்நிலையில் தன்னுடைய கொடைப் பண்பினை நிலை நிறுத்தும் பாங்கினை,

*"பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்*
*நாடிழந் ததனினும் நனிஇன் னாதுஎன"* [69]

என்ற பாடல் வரிகளில் காணமுடிகிறது.

கொடைப் பண்பில் சேர சோழப் பாண்டியர் ஆகிய மூவேந்தரைப் போன்று குறுநில மன்னர்களும் சிற்றரசர்களும் கடையெழு வள்ளல்களும் சிறந்து விளங்கினர் இதை,

*"வாலுளைப் புரவியொடு வையகம் மருள*
*ஈர நன்மொழி இரவலர்க்கு ஈந்த"* [70]

என்னும் அடிகள் விளக்கும்.

மேலும்,

*"மால்வரைக்*
*கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி*
*அமிழ்துவிளை தீங்கனி ஔவைக்கு ஈந்த"* [71]

எனும் அடிகள் நீண்ட நாள் வாழ வைக்கும் தகைமை வாய்ந்த நெல்லிக்கனியை அதியமான் ஔவைக்கு ஈந்த பண்புகளை விவரிக்கிறது.

*"நளிசினை*
*நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக்*
*குறும்பொறை நன்னாடு கோடியர்க்கு ஈந்த"* [72]

எனும் அடிகள் தன் நாட்டையே கூத்தாடுபவர்களுக்குப் பரிசளித்த ஓரியின் ஈகையைச் சுட்டுகின்றது.

தன்னைப் பற்றி கவலைபடாது தன்னை விரும்பினோர்க்கு தேவையானவற்றையெல்லாம் குறைவறாது கொடுத்த நன்னி பற்றி,

*“ கரவாது*
*நட்டோர் உவப்ப, நடைப்பரி காரம்*
*முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்”* [73]

என வரும் பாடலடிகளும் உணர்த்துகின்றன.

மனிதர்களுக்கு உதவி செய்து புகழ் ஈட்டுவது மட்டுமல்லாமல் தாவரங்கள், பறவைகள் என அனைத்திற்கு ஈகையளிக்கும் கொடை வள்ளல்களான பாரியின்

*“..............................................சுரும்பு உண*
*நறுவீ உறைக்கும் நாக நெடுவழிச்*
*சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய”* [74]

எனும் அடிகளில் முல்லைக்குத் தேர் கொடுத்த சிறப்பினையும் பரிசு வேண்டுவோர்க்குக் கொடையளித்துத் தன்னையே பரிசாகத் தந்து அவர்கள் ஆணை வழி நிற்பதை,

*“பறம்பு பாடின ரதுவே; அறம் பூண்டு*
*பாரியும் பரிசிலர் இரப்பின்*
*வாரேன் என்னான் அவர்வரை யன்னே”* [75]

என வரும் பாடலடிகள் குறிப்பிடும்.

வளமுடைய வேந்தர்களைக் காட்டிலும் இரவலர்க்கு வழங்கும் நாட்டினை உடையவன் பாரி. இதை,

*“பணைகொழு வேந்தரை இறந்தும்*
*இரவலர்க்கு ஈயும் வள்ளியோன் நாடே”* [76]

என்று பாரியின் நாட்டைப் புகழ்ந்து பாடியதையும், மேலும்,

*"கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய*
*அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்"* [77]

என்றும் மயிலுக்குப் போர்வை தந்த பேகன் மறுமையை எண்ணிப் பார்க்காமல் பிறர் வறமையை மட்டுமே எண்ணிக் கொடையளிப்பவன்,

*"எத்துணை ஆயினும் ஈத்தல் நன்றுஎன*
*மறுமை நோக்கின்றோ அன்றே*
*பிறர், வறுமை நோக்கின்றுஅவன் கைவண் மையே"* [78]

என வரும் பாடலடிகள் உணர்த்தும் மனிதர்களுக்கு வாரி வாரி வழங்குபவன் வள்ளல் என்றாகலாம். தெய்வத்திற்கு கொடையளிக்கும் ஒப்பற்ற பண்பினைப் பெற்றவன் ஆய் அண்டிரன். நாகம் ஈன்ற நீலமணியையும் ஆடையினையும் தந்து மகிழ்ந்ததை

*"நிழல் திகழ் நீல நாகம் நல்கிய கலிங்கம்*
*ஆலமர் செல்வற்கு அமர்ந்தனன் கொடுத்த"* [79]

என வரும் பாடல் வரிகள் சிறப்பிக்கின்றன.

மழையானது இன்னார் இனியர் என்றென்னாமல் அனைவர்க்கும் அருள்வதுப் போல பாரியின் கொடைத் தன்மையினை,

*"பாரி ஒருவனும் அல்லன்*
*மாரியும் உண்டுஈண்டு உலகுப்புரப் பதுவே"* [80]

என்று புகழ்ந்துரைப்பதையும், மேலும்,

*"பிடிக்கணம் சிதறும் பெயன்மழைத் திருக்கை"* [81]

என்றும்,

*"மாரி யன்ன வண்மைத்"* [82]

என வரும் பாடலடிகள் மழை போன்று ஈகை குணமுடையவர்கள் நம்மனோர் என்பதை எடுத்துக் காட்டுகின்றன.

புரவலர்கள் புலவர்க்குப் பரிசளித்ததைச் சங்க இலக்கியங்கள் விரிவாக எடுத்துக் காட்டினாலும் புலவர்கள் புரவலர்க்குப் பரிசளித்ததையும் சங்க இலக்கியத்தில் காணமுடிகின்றது. இதை,

*"இரவலர் புரவலை நீயும் அல்லை;*
*புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்;*
*இரவலர் உண்மையும் காண்இனி, இரவலர்க்கு*
*ஈவோர் உண்மையும் காண்இனி; நின்னூர்க்*
*கடிமரம் வருந்தத் தந்துயாம் பிணித்த*
*நெடுநல் யானைஎம் பரிசில்*
*கடுமான் தோன்றல் செல்வல் யானே"* [83]

என்று பெருஞ்சித்திரனார் இளவெளி மானுக்கு யானையைப் பரிசிலாகக் கொடுத்தது எண்ணிப் பார்க்கத்தக்கது.

கொடையளிப்பதில் ஆண்கள் மட்டும் அல்லாமல் பெண்களும் சிறந்து விளங்கினர் தனக்கென என்றில்லாமல் மற்றவர்க்கும் ஈயும் மனப்பான்மை கொண்டவர்களாக அக்காலப் பெண்டிர் இருந்ததை,

*"பண்டும் பண்டும் பாடுநர் உவப்ப*
*விண்தோய் சிமைய விறல்வரைக் கவாஅன்,*
*கிழவன் சேண்புலம் படரின் இழையணிந்து*
*புன்தலை மடப்பிடி பரிசில் ஆகப்*
*பெண்டிரும் தம்பதம் கொடுக்கும் வண்புகழ்க்"* [84]

எனும் பாடலால் அறிய முடிகிறது.

இரந்தவர்களுக்கு ஈயாமல் இருத்தல் இழிவு என்று எண்ணினர் பண்டைத் தமிழர் இன்ப வாழ்க்கைக்குப் பொருள் தேடச் சென்றாலும் மற்றவர்க்கு ஈதல் அறம் என்று எண்ணிய தலைவனின் குணத்தை,

*"தொலைவு ஆகி, இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இளிவு*
*என"* [85]

*"இல் என இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இளிவுஎன"* [86]

*"இடன்இன்றி இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இளிவு என"* [87]

என வரும் பாடல் வரிகளில் தலைவனின் உயர்ந்த பண்பு நலத்தைப் பறைசாற்றுகிறது.

மன விருப்பமில்லாம் கடமையை எண்ணி ஈகை அளித்தலைப் புலவர் வெறுத்தனர். மனம் உவந்து தருகின்ற ஈகையைப் போற்றிச் சிறந்தனர் என்பதை,

*"உயர்ந்து ஏந்து மருப்பிற் கொல்களிறு பெறினும்*
*தவிர்ந்துவிடு பரிசில் கொள்லென்; உவந்து நீ*
*இன்புற விடுதி யாயின் சிறிது*
*குன்றியும் கொள்வல் கூர்வேல் குமண"* [88]

எனவும்,

*"சீறூர் மன்னர் ஆயினும் எம் வயின்*
*பாடறிந்து ஒழுகும் பண்பி னாரே;*
*மிகப்பேர் எவ்வம் உறினும் எனைத்தும்*
*உணர்ச்சி இல்லோர் உடைமை உள்ளேம்*
*நல்லறி வுடையோர் நல்குரவு*
*உள்ளுதும் பெருமயாம் உவந்துநனி பெரிதே"* [89]

எனவும் வரும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. கொடைக்குணம் உணர்வுப் பூர்வமானது, அறிவுப் பூர்வமானதன்று. ஆராய்ந்து பார்த்து ஒன்று தருவது கொடையாகாது. எதனையும் ஆராயாமல் எல்லோரையும் தம்மைப் போல் நேசிக்கும் தன்மையின் செயலாக்கம் கொடை மன இரக்கத்தின் ஊற்றுக்கண் இது. மன்னர்கள் தகுதிக்கேற்பவும் முயற்சியின் தன்மையறிந்தும் கொடையளிக்கவில்லை.

அறிவில்லாதவரும், வலிமை இல்லாதவரும் என்றாலும் காணச் சென்றால் தன் கொடைத் தன்மையில் தவறாதவன் பாரி என்பதை,

*“மடவர் மெல்லியர் செல்லினும்*
*கடவன் பாரி கைவண் மையே”* [90]

எனவும்,

*“வரிசை அறிதலில் தன்னும் தூக்கி*
*இருங்கடறு வலைஇய குன்றத்து அன்னதோர்*
*பெருங்களிறு நல்கி யோனே; அன்னதோர்*
*தேற்றா ஈகையும் உளதுகொல்*
*போற்றார் அம்ம பெரியோதம் கடனே”* [91]

எனவும்

*“என்னளந்து அறிந்தனை நோக்காது சிறந்த*
*நின்ளைந்து அறிமதி பெரும என்றும்”* [92]

வரும் மேற்கண்ட பாடல் வரிகள் மழையையொத்த கொடையினை எடுத்துக் காட்டுகின்றன.

*“ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது*
*ஊதியம் இல்லை உயிர்க்கு”* [93]

என்கின்றார் வள்ளுவர்.

**“நன்மை செய்யும்படி உனக்குத் திராணி இருக்கும் போது**
**அதை செய்யத்தக்கவர்களுக்குச் செய்யாமல் இராதே”**[94]

என்கின்றது விவிலியம். மேலும்,

*“உன்ன மரத்த துன்னருங் கவலை*
*நின்னசை வேட்கையின் இரவலர் வருவரது*
*முன்னம் முகத்தின் உணர்ந்தவர்*
*இன்மை தீர்த்தல் வன்மை யானே”* [95]

என்ற புறப்பாடலடிகள் ஈகைப் பண்பை வலியுறுத்துவதைக் காட்டுகிறது. செல்வம் ஓரிடத்து நிலையாக நிற்காது அது சகடக்கால் போல் வரும்.

கருணையுடையவன் துன்புற்றோர்க்குத் தன் செல்வத்தை ஈவதால் அச்செல்வம் அழகும் சிறப்பும் பெறும் இதை,

*“பொருளில்லான் இளமைபோல் புல்லென்றாள் வைகறை*
*அருள்வல்லான் ஆக்கம் போல் அணிபெறும்”* [96]

எனும் பாடல் வரிகள் சுட்டி நிற்கின்றன.

*“இன்மை உரைத்தார்க்கு அதுநிறைக்கல் ஆற்றாக்கால்*
*தம்மை துறப்பான் மலை;”* [97]

இரப்பார்க்குப் பொருள் கொடுக்க முடியவில்லை என்ற நிலை வருமாயின் தன் உயிரையும் விடுதற்கு அஞ்சாத பண்பினைக் கொண்டவர்கள் நம் முன்னோர்கள். இதனையே,

*“வாள்தந் தனனே தலைஎனக்கு ஈயத்*
*தன்னிற் சிறந்தது பிறிதொன்று இன்மையின்*
*ஆடுமலி உவகையொடு வருவல்”* [98]

என்ற பாடலில் தன் தலையைப் பரிசாகத் தந்து கொடையை நிலைநாட்ட எண்ணிய குமணன் வள்ளலின் பண்பு போற்ற தகுந்தது.

பண்டைத் தமிழர் காதலையும் வீரத்தையும் இரு கண்ணாகக் கருதியதைப் போலவே கொடையினையும் மூன்றாவது கண்ணாகக் கருதியதை எண்ணி வியக்கத்தக்கது.

## உணவு பெறும் உரிமை

உயிர் வாழ்வதற்கு உணவு தேவை. உணவே உயிரின் அடிப்படை ஆதாரம். தொல்காப்பியர் சுட்டும் ஓர் அறிவு முதல் ஆறறிவு பெற்ற உயிரினங்கள் அனைத்தையும் உயிர்ப்புடன் இயக்கவல்லது. நிலம், காலம், இடம், பருவமாற்றம், பண்பாட்டு சூழல் போன்றவைகளுக்கு ஏற்றவாறு மக்களின் உணவுப் பழக்கங்கள் மாறுபடுகின்றன. சமுதாயத்தின், நாட்டின்

இனத்தின் பண்பாட்டு அடையாளமாகவும் விளங்குகின்றது. உணவினை மக்கள் அனைவருக்கும் கிடைக்கும் படி செய்வது நாடாள்வோரின் கடமை என்பதைச் சங்க காலச் சான்றோர் உணர்ந்து மன்னனுக்கு உணர்த்தியும் வந்திருக்கின்றனர். உழைத்து உண்ணும் திறனற்றவர்களையும் உணவளித்துப் பாதுகாத்துப் பராமரிக்கப்பட உரிமையுடையவரே. அவ்வுரிமையை நிலை நாட்டி நாடெங்கும் சத்திரங்கள் அமைக்கப்பட்டு உண்ண உணவினையும் தங்குவதற்கு இடத்தினையும் தந்து உயிர் வாழ உறுதுணை புரிந்திருந்தனர்.

எல்லா அறங்களிலும் தலையாய அறமாவது உணவு அறம் ஆகும். பசிப்பிணியின் கொடுமையைப் பண்டைத் தமிழ் மக்கள் நன்கு அறிந்திருந்தனர். மக்கள் பசியால் வருந்தும் நாடு நாடாகாது. அன்பு பெருகாது. அறம் தழைக்காது; அமைதி நிலவாது என்பதை உணர்ந்தனர் நம்முன்னோர்.

அதன் விளைவாக எழுந்ததே அட்டில் சாலைகளும் சத்திரங்களும் ஏழை பணக்காரர், ஆண்டான் அடிமை, உயர்ந்தவன் தாழ்ந்தவன், அதிகார வர்க்கம் அடிமைவர்க்கம் என்ற பாகுபாடு சங்க காலத்தில் இருந்த போதிலும் பசித்தோர்க்கு உணவிடுதல் என்ற பண்பினை அனைவரும் பெற்றிருந்தார்,

> **“மக்கள் அனைவரும் உணவு பெற்று வாழ வழி காண வேண்டும் என்று அவர்கள் உறுதியாக நம்பினார்கள். இத்தகைய நம்பிக்கையுள்ள குறுநில மன்னர்கள் முடியுடை வேந்தர்கள் நிலக் கிழார்கள். நாட்டு மக்களின் பசித்துயரை ஒழிப்பதிலேயே முனைந்து நின்றார். மக்களைப் பசி நோய்க்கு ஆளாக்காமல் பாதுகாத்தவர்கள்தான் மக்கள் தலைவர்களாகக் கருதப்பட்டனர். நாட்டின் பாதுகாப்பாளர்களாக**

**எண்ணப்பட்டனர். இத்தலைவர்களின் ஆதரவிலே தான் புலவர்களும் பெரியோர்களும் வாழ்ந்து வந்தனர்"** [99]

வருகின்றவர்களுக்கெல்லாம் உணவு கொடுத்ததால் அறம் நிலைப் பெற்றது. சமையல் கூடங்களில் சோறு வடித்து ஒழுகிய கொதிப்புடைய கஞ்சியானது ஆறு போன்று ஒடியது என்பதை,

***"அறம்நிலைஇய அகன் அட்டில்***
***சோறுவாக்கிய கொழுங்கஞ்சி***
***யாறுபோலப் பரந்துஒழுகி***
***ஏறுபொரச் சேறகித்"*** [99 (அ)]

எனப் பட்டினப்பாலையும்

பலரும் புகழும் பண்பு மிக்க நீ குடிகளைப் பசி, பிணி முதலியன நீங்கப் பெற்றுப் புதுவருவாய் கொண்டு விளங்கும் உனது நாட்டையும் கண்டு வியப்புற்று அறிவு மயங்கினேன் என்று, இமயவரம்பன் நெருஞ்சேரலாதன் தன் குடிகளைப் பசியின்றி உணவுத் தந்து காத்து வந்ததைப் புலவர்,

***"மேயினர் உறையும் பலர்புகழ் பண்பின்***
***நீபுறந் தருதலின் நோய்இகந்து ஒரீஇய***
***யாணர்தல் நாடும் கண்டுமதி மருண்டனென்!"*** [100]

என வாழ்த்திப் பாடுகிறார்.

**"பரிசிலர் தமக்குரிய கலைத்திறத்தில் திறமை பெற்று வந்தாலும் திறமையின்றி வந்தாலும் வறுமையின் கண் வந்த அவர்தம் பசித்துன்பத்தை உணர்ந்து அவருடன் பரிசில் தந்து பாராட்டுதல் தமிழ்வேந்தர்களின் கடமையாக கருதப்பட்டது"** [101]

என்பர் கா. வெள்ளைவாரனார்.

பரிசில் பெற்ற புலவர்களும் தம்முடைய வறுமை தீர்ந்தது. என்றெண்ணாது உயிர்க்கு உணவு இடுதல் தலையாய அறம் என்றதால் வரும் விருந்தினர்களுக்கு இல்லையென்னாது உணவு அளிப்பதற்காக மிகுதியாக உணவுப் பொருட்களைச் சமைத்து அவர்களுக்கு உணவு அளித்தோடு மட்டுமல்லால் அரசனிடம் தாம் பெற்ற பொருட்களையும் அவர்களுக்குக் கொடுத்து இன்புற்றுனர். இதனை,

*"ஏந்துகோட்டு அல்குல் முகிழ்நகை மடவரல்*
*கூந்தல் விறலியர் வழங்குக அடுப்பே!*
*பெற்றது உதவுமின் தப்பின்று"* [102]

என்றும், மேலும்,

*"உண்மரும் தின்மரும் வரைகோள் அறியாது*
*குரைத்தொடி மழுகிய உலக்கை வயின்தோறு*
*அடைச் சேம்பு எழுந்த ஆடூஉறு மடாவின்*
*எஃகுஉறச் சிவந்த ஊனத்து யாவரும்*
*கண்டுமதி மருளும் வாடாச் சென்றி"* [103]

என்று பாலை கௌதமனர் பாடலில் சங்க கால மன்னர்கள் உணவின் இன்றியமையாமையை நன்கு உணர்ந்தவர்களாக குடிகளை உணவுக் குறைவின்றி பாதுகாத்தனர் என்பதும் விளங்கும்.

சோழன் நலங்கிள்ளி தன் பகைவரை அழித்ததோடு தன்னைச் சேர்ந்தோரின் பசிப் பகையையும் அழிக்க வல்லவன்,

*"தன்பகை கடிதல் அன்றியும் சேர்ந்தோர்*
*பசிப்பகை கடிதலும் வல்லன் மாதோ"* [104]

என் குடிகளின் பசியினைப் போக்கி உணவு தந்து பாதுகாத்தலில் மன்னர்கள் மிகுந்த நாட்டமுடையவர்களாக இருந்தனர் என்பதைக் கோவூர்கிழார் பாடங்களில் அறிய முடிகிறது.

மேலும்,

*"சாறுஅயர்ந் தன்ன மடாஅச் சொன்றி*
*வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப*
*மலரத் திறந்த வாயில் பலர்உண*
*பைந்நிணம் ஒழுகிய நெய்ம்மலி அடிசில்*
*வசையில் வான்திணைப் புரையோர் கடும்பொடு*
*விருந்துஉண்டு எஞ்சிய மிச்சில் பெருந்தகை*
*நின்னோடு உண்டலும் புரைவது என்றுஆங்கு*
*அறம்புணை ஆகத் தேற்றி"* [105]

என்ற குறிஞ்சிப் பாட்டில் திருவிழாக் காலங்களில் வருபவர்க்கெல்லாம் வரையறை இல்லாது கொடுத்த உணவினைச் சான்றோர் சுற்றத்தாருடன் விருந்தாக உண்ட பின்பு எஞ்சிய உணவினைத் தலைவி கொடுக்க தலைவன் உண்டு இன்புறுவது, குடிமக்களும் உணவுரிமையைப் போற்றிப் பாதுகாத்து ஒழுகினர் என்பதைக் காட்டுகிறது. சங்க இலக்கியமல்லாது சிலம்பும் மேகலையும் நீதி நூல்களும், உணவுரிமையை வலியுறுத்திப் பாடியன.

*"அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்*
*துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்*
*விருந்தெதிர் கோடலும் இழந்த என்னைநும்"* [106]

என்று சிலம்பும் பகர்கின்றது. பசி என்றோர்க்குப் புசி என்று உணவளித்து அவர் தம் அரும்பசியினைக் களைதலே எல்லா அறங்களிலும் தலையாயமானது. அவ்வறம் மக்கள் தேவர் என இருவருக்கும் பொதுவானதுமாகும். இதை,

*"மக்கள் தேவர் என இருசார்க்கும்*
*ஒத்த முடிவின் ஓரறம் உரைக்கேன்*
*பசிப்பிணி தீர்த்தல் என்றே அவரும்*
*தவப்பெரு நல்லறம் சாற்றினர் ஆதலின்"* [107]

என்றும்

பசி தீர்ந்த பின் ஒருவன் அடைகின்ற மகிழ்ச்சியைக் காணின் பசி தீர்த்தவருக்குப் பேரின்பத்தை அளிக்கவல்லது. இதனைக் காட்டிலும் பேரின்பம் இல்லை. இதை,

*"வருந்தி வந்தோர் ஆரும்பசி களைந்து அவர்*
*திருந்துமுகம் காட்டும் என் தெய்வக் கடிஞை"* [108]

என்று பசி தீர்ந்தபின் அவர் முகத்தில் காணப்படும் ஒளி தேவருலகத்திலும் காண முடியாது என்று ஆபுத்திரன் என்ற பாத்திரத்தின் வாயிலாக உலகிற்கு அறைகூவல் விடுக்கும் சாத்தனாரைப் போன்று பாரதிதாசனும்,

*"பசியென்று வந்தால் ஒரு பிடிச்சோறு*
*புசியென்று தந்து பாரப்பா*
*பசையற்ற உன் நெஞ்சில் இன்பம் உண்டாகும்"*

என்கின்றார்.

மக்களின் பசியைப் போக்கும் உணவினைக் கொடுப்போர் உயிர் கொடுத்தவராவார் என்பதை,

*"மண்டினி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்*
*உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே"* [109]

எனப் போற்றுகின்றார் சாத்தனார். இதனையே,

*"நீர்இன்று அமையா யாக்கைக் கெல்லாம்;*
*உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே*
*உண்டி முதற்றே உணவின் பிண்டம்"* [110]

என்று புறம் பேசுகின்றது.

குற்றமற்ற நாட்டினை ஆளுகின்ற அரசனாக விரும்பினால் பிறர்க்கு உணவளித்துப் பேணினால் போதும் என்பதை,

*"எள்ளான்ஈத் துண்பானேல் ஏதமில் மண்ணாண்டு"* [111]

எனவும்,

*"தெளிந்தடிசில் ஈத்துண்பான்"* [112]

என்றும்,

*"வேற்றரவம் சேரான் விருந்தொளியான் தன்னில்லுள்*
*சோற்றரவம் சொல்லியண் பானாயின்"* [113]

என்று ஏலாதியும் உணர்த்துகின்றது.

சிறுகுடிகிழவன் பண்ணனைப் 'பசிப்பிணி மருத்துவன்' என்கின்றார் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்.

"உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே" என்று திருமூலரும், "வாடிய பயிரை கண்டபோதெல்லாம் வாடினேன்" என இராமலிங்க அடிகளாரும்,

*"தனிஒரு மணிதனுக்கு உணவில்லை எனின்*
*சகத்தினை அழித்திடுவோம்"*

என்றும்,

*"வயிற்றுக்கு சோறிடவேண்டும்*
*இங்கு வாழும் மனிதர்க்கெல்லாம்"*

எனப் பாரதியும், உணவின் இன்றியமையாமையை உணர்த்துகின்றனர்.

தெய்வப் புலவன் திருவள்ளுவரும் மற்றவரிடமிருந்து உணவினை இரந்து உயிர் வாழ்தல் எனும் நிலையினை உலகினைப் படைத்தவன் விதித்திருப்பானேயானால் அவனும் எங்கும் அலைந்து, கெடுவானாக என்று இறைவனைச் சாடுகின்றார்.

உணவு உரிமையைச் சங்கப் புலவர்களும், மன்னனும் மக்களும் உணர்த்தியதோடு மட்டும் நின்று விடாமல் காத்தும் வந்திருக்கின்றனர் என்பதும், விருந்தோம்பல் என்கின்ற தமிழருடைய வாழ்வியல் பண்பும் இவ்வுரிமையினையே பறைசாற்றுகின்றன.

உணவெனப்படுவது நிலமும் நீருமேயாகும். நீரையும் நிலத்தையும் இணைத்தவர் உயிரையும் உடலையும் காத்தவர் ஆவார் என்று அறிவுறுத்தி நீர் நிலைகள் பெருகுமாறு அணைகளைக் கட்ட புலவர்கள் தூண்டுகோலாயினர். இதை,

*"உணவெனப் படுவது நிலத்தொடு நீரே*
*நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு*
*உடம்பும் உயிரும் படைத்திசி னோரே*
*வித்திவான் நோக்கும் புன்புலம் கண்ணகன்*
*வைப்பிற் றாயினும் நுண்ணி ஆளும்*
*இறைவன் தாட்கு உதவாதே; அதனால்*
*அடுபோர்ச் செழிய! இகழாது வல்லே*
*நிலன் நெளி மருங்கில் நீர்நிலை பெருகத்"* [114]

என உணவுப் பெருக்கத்தின் தேவையைக் குடபுலனார் விதந்தோதுகிறார்.

உணவு வழங்கக் கூடிய பெரிய கூடங்களும், சமையல் செய்யும் தீயானது அணையாமல் எரிந்து கொண்டிருக்கும் வளமிக்க நாடாக பண்டைத் தமிழகம் இருந்து வந்தது என்பதை,

*"தைஇத்திங்கள் தண்கயம் போலக்,*
*கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியன்நகள்*
*அடுதீ அல்லது சுடுதீ அறியாது,*
*இருமருந்து விளைக்கும்*
*நல் நாட்டுப் பொருநன்"* [115]

என்ற பாடல் உரைக்கின்றது.

**"உத்திரவாதமளிக்கப்பட்ட வாழ்க்கைக்கான உரிமையென்பது அதனுடைய வீச்சில் உணவுக்கான உரிமை, உடைகளுக்கான உரிமை சுத்தமான சுற்றுச்சூழல் மற்றும் வாழ்வதற்கும் பொருத்தமான வசிக்கும் இட உரிமை ஆகியவற்றையும் கொண்டுள்ளது"**

என்று இந்திய உச்சநீதிமன்றம் **ஷான்டிஸ்டர் கட்டுமான நிறுவனம் எதிர் நாராயண கிமாலா** என்ற வழக்கில் உணவு பெறும் உரிமையை வலியுறுத்துகின்றது. (AIR1990SC630)

**உறைவிட உரிமை**

வாழ்வின் அடிப்படைத் தேவைகளுள் மூன்றாவதாக இருப்பது உறைவிடம் ஆகும். உயிர் வாழ உணவும், மானத்துடன் வாழ உடையும் போல் மாண்புடன் வாழ்வதற்கு இருப்பிடம் தேவையாகின்றது. குகைகளில் இருந்து, நாடோடிகளாய் திரிந்து, சமவெளிகளில் தங்கி வாழத் தலைப்பட்ட மனித இனம் திணை சார்ந்த குழுக்களாகப் பிரிந்து தங்களுக்கான இருப்பிடத்தை அமைத்துக் கொண்டு வாழ்ந்தனர். உணவும் உடையும் போல இருப்பிடமும் அடிப்படை தேவையாக எண்ணப்பட்டது. இம்மூன்றினையும் அளிக்க வேண்டியது அரசனின் கடமை என்ற நிலையில் திருமாவளவன் பெரிய நிலையுடைய மாடங்களை எடுத்து, உறையூரை விரிவடையச் செய்து கோயில்கள் பல கட்டி அங்குக் குடிகளை வாழச் செய்தான் என்பதை,

***“பிறங்குநிலை மாடத்து உறந்தை போக்கிக்***
***கோயிலொடு குடிநிரீஇ”*** [116]

என்ற பாடல் வரிகளால் அறிய முடிகிறது.

**நம்பிக்கை**

சமூகப் பண்பாட்டின் ஒரு கூறு. மக்களால் வழிவழியாகப் பின்பற்றி வருபவை. மனிதன் தான் கொண்ட அச்ச உணர்வின் வெளிப்பாடு. சில அழிவுகளுக்கும் துன்பங்களுக்கும் தன் ஆற்றலுக்கும் அப்பாற்பட்ட சக்தி உண்டென எண்ணியதன் விளைவு. மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரை நம்பிக்கைகள் வாழ்வின் அங்கமாகவே காணப்படுகின்றன. இவை சாதி, மொழி இனம் போன்றவைகளுக்கேற்ப வேறுபடுகின்றன. தனக்கு நடந்த

அல்லது நடக்கவிருக்கும் துன்பத்திலிருந்து விடுதலை பெறுவதற்கும் நம்பிக்கைகள் காரணமாக அமைகின்றன. இவை அறிவியல் சார்ந்த நம்பிக்கைகளினின்று வேறுபட்ட சமயம் சார்ந்தவை. பல வகை நம்பிக்கைகள் பண்டைத் தமிழரிடையே காணப்பட்டு வந்ததைச் சங்க இலக்கியங்கள் சுட்டிக் காட்டுகின்றன.

**தெய்வம் சார்ந்த நம்பிக்கைகள்**

நடக்கும் நல்ல செயல்கள் தீய செயல்கள் அனைத்தும் தெய்வத்தின் செயலாகக் கருதினர் நன்மை ஏற்பட்டால் பலிகளைச் செலுத்தி தெய்வத்திற்கு நன்றி செலுத்துவதிலும் தீயவை நேடுகின்ற போது தெய்வக் குற்றம் அல்லது தெய்வத்திற்குண்டான கோபம் என எண்ணி அக்கோபம் தணியவும், குளிர்விக்கவும் விழாக்கள் நடத்தப் பெற்றன. கோவில்களில் மட்டுமில்லாமல் காடு, மலை, மரம் போன்றவைகளிலும் தெய்வம் உறைவதாக நம்பினர். இதை,

***"அருவி தந்த அணங்குடை நெடுங்கோட்டு"*** [117]

என்றும்

***"அருந்தெறல் மரபின் கடவுள் காப்ப,***
***பெருந்தேன் தூங்கும் நாடுகாண் நனந்தலை,***
***அணங்குடை வரைப்பின், பாழி ஆங்கண்"*** [118]

எனவும் வரும் பாடலடிகளில் மலைகளை தெய்வம் பாதுகாப்பதாகவும், வேப்ப மரத்தில் தெய்வம் உறைவதை,

***"தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்"*** [119]

என்னும் அடியும், ஓமை மரங்களில் தெய்வம் உறைவதை,

***"சூர்முதல் இருந்த ஓமைஅம் புறவின்"*** [120]

என்னும் அடியும்,

***கடவுள் மரத்த முள்மிடை குடம்பைச்***
***சேவலொடு புணராச் சிறுகரும் பேடை"*** [121]

எனவரும் பாடலில் மரத்தில் இரவில் தெய்வம் உறைவதால் பெண் அன்றில் பறவை தன் துணையுடன் சேர முடியாமல் வருந்திக் கொண்டிருப்பதாகத் தோழி கூறுவதும்,

***"கள்ளி நீழல் கடவுள் வாழ்த்திப்"*** [122]

எனக் கள்ளி மரத்தில் கடவுள் உறைவிடம் உள்ளதையும்,

***"கடவுள் ஆலத்துத் தடவுச் சினைப் பல்பழம்"*** [123]

என்ற பாடலில் ஆலமரத்தில் தெய்வம் உறைவதாகவும் நம்பப்பட்டன.

தமிழ்நாட்டில் பண்டைக்காலம் முதல் இன்றளவும் வேம்பு, ஆலமரம் முதலியவைகளில் தெய்வம் இருப்பதாக நம்பப்பட்டு பெண்களால் சிறப்பாக வழிப்பட்டு வருவதைக் காண முடிகிறது.

**பேய்**

துன்பம் தந்து வருத்தும் தீய சக்தியாக உருவகப்படுத்திய பேய் பற்றிய உறுதியான முடிவு இல்லாவிட்டாலும் இது குறித்த பயமும் நம்பிக்கையும் மக்களிடையே நூற்றாண்டு நெடுகிலும் தொடர்ந்து இருந்து கொண்டு வருகிறது. அது பற்றிய கற்பனைக் கதைகளும், கருத்துக்களும் அறிவுக்கும் அறிவியலுக்கும் ஒவ்வாதெனினும் உணர்வின் அடிப்படையில் நம்பப்படுகிறது. நடு யாமத்தில் பேய்கள் திரிவதை,

***"முதுமரத்து உறையும் முரவுவாய் முதுபுள்***
***கதுமெனக் குழறும், கழிதுவழங்கு, அரைநாள்"*** [124]

என்னும் அடிகள் சுட்டும்.,

***"கழுதுவழங்கு அரைநாள், காவலர் மடிந்தென"*** [125]

என்றும், நடு யாமத்தையும் நள்ளிரவையும் பேய்கள், நடமாடும் நேரமாக மக்கள் நம்பினர் என்பதைக் காட்டுகிறது. இலவ மரத்தின் தழையோடு வேம்பின் இலையனையும் சேர்த்து வீட்டு வாசலில் கட்டினால், பேய்கள் போரில் புண்பட்ட வீரர்களை வருத்தாது என்பதை,

*"தீங்கனி இரவமொடு வேம்புமனைச் செரீஇ*
*வாங்கு மருப்பு யாழொடு பல்இயம் கறங்கக்"*

என்றும்,

*"மெய்பனி கூரா அணங்கெனப் பராவலின்*
*பலிகொண்டு பெயரும் பாசம் போலத்"* [126]

என வரும் பாடலடிகள், பேய் தான் பற்றியவர்களின் உயிரைக் கவராது அவர் கொடுக்கும் பலி பொருட்களைப் பெற்றுக் கொண்டு விட்டு விடுவதாக நம்பப்பட்டை அறியமுடிகிறது.

> **"மோகினி, பேய், பூதம் என்றெல்லாம் பல பெயரிட்டு அழைக்கப்பட்ட போதிலும் தான் மற்றவர்களுக்குத் தீங்கு செய்யாமல், தீங்கு செய்தவர்களைத் தண்டிக்கக் கூடியதாக பூதத்தினை நம்பினர்** [127]

என்பதைச் சாத்தனார் உணர்த்துகிறார்.

### பாம்பு குறித்த நம்பிக்கை

தமிழர்களின் வழிபடும் தெய்வங்களில் பாம்பு தவிர்க்க முடியாத ஒன்று. பாம்பினைக் கண்டால் படையும் நடுங்கும்' என்பர். அச்சத்தின் காரணமான தெய்வமாக நினைத்து வழிப்பட்டால் தங்களுக்குத் தீங்கு செய்யாது எனக் கருதினர். இரவில் இரைதேடுவதற்காக முதிர்ந்த வயதுடைய நாகம் ஒளிவீசக் கூடிய நாகமணியைக் கக்குவதாக நம்பினர் நம் முன்னோர் இதை

*“மேய்மணி இழந்த பாம்பின், நீநனி”* [128]

என அகநானூறும்,

*“அரவுஉமழ் மணியிற் குறுகார்”* [129]

எனப் புறமும் கூறுகின்றன.

**மனிதர் குறித்த நம்பிக்கைகள்**

ஒருவர் மேல் ஒருவர் அன்பு காட்டுதலே மனிதத் தத்துவம் இதைப் புலவர்களும் சான்றோர்களும் அறிவுறுத்தியும், அறக் கருத்துக்களாக எடுத்துக் கூறியும் வந்திருக்கின்றனர். சட்டங்கள் வடிவம் பெறாத காலத்தில் அறக் கருத்துகளாகக் கூறுவதோடு அக்கருத்துக்களை ஆன்மிகத்தோடு கலந்து சொல்கின்ற போது மிகுந்த வலிமை பெற்றதாகி விடுகிறது. பிறர் உயிர்கள் மீது அன்பும் அருளும் கொண்டு நடக்காதவர்கள் நரகத்தை சென்றடைவர் என்று

*“அருளும் அன்பும் நீக்கி நீங்கா*
*நிரயம் கொள்பவரோடு ஒன்றாது காவல்”* [130]

எனும் புறப்பாடல் வரிகளிலும் இம்மையில் தாம் செய்கின்ற வினைகளுக்கு ஏற்ப மறுமையில் பலன் கிட்டும் என்றும் நன்மை செய்தால் சொர்க்கத்தையும் தீமை செய்தால் நரகத்தையும் சென்றடைவர் என்பதை,

*“நிரையம் ஒரீஇய வேட்கைப் புரையோர்*
*மேயினர் உறையும் பலர் புகழ் பண்பின்”* [131]

எனவும்,

*“சுரும்பு ஆர் கண்ணிப் பெரும் பெயர் நும்முன்*
*ஈண்டுச்செய் நல்வினை யாண்டுச்சென்று உணீஇயர்*
*உயர்ந்தோர் உலகத்துப் பெயர்ந்தனன் ஆகலின்”* [132]

மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணனின் முன்னோர்கள் நல்வினைச் செய்ததால் அதன் பயனை நுகர்வதற்காக வானவர் உலகம் அடைந்தனன்

என்று மாறோக்கத்து நப்பசைலையார் வாழ்த்துவதும், போர்க்களத்தில் விழுப்புண் பட்டு இறந்தால் வீடு பெற்று விண்ணுலகில் தேவ மகளிரை மணந்து பேரின்பம் அடைவர் என்பதை,

*"தண்ணடை பெறுதல் யாவது; படினே,*
*மாசில் மகளிர் மன்றல் நன்றும்*
*உயர்நிலை உலகத்து நுகர்ப"* [133]

என்ற புறப்பாடலடிகள் கூறும். வானவர் உறையும் விண்ணுலகில் பேரின்பத்துடன் வாழ்ந்து மீண்டும் பிறவா நிலையடை வேண்டுமானால் பிறர்க்கு நன்மை செய்து வாழ வேண்டும் என்ற நம்மனோரின் விழைவு அவர் தம் உள்ளக்கிடக்கை வெளிப்படுத்தி நிற்கிறது.

வானத்தில் இருந்து நட்சத்திரம் ஒன்று கீழே விழுந்தால் துன்பம் உண்டாகும் என்றும், பல்லியின் ஓசை நல் நிமித்தம் எனவும், ஆந்தையின் ஒலி ஆபத்தை வருவிக்கும் என்றும் புதுப்பறவைகள் வந்து சென்றால் தீய விளைவுகள் நேரப் போவதாகவும். காட்டு வழியே நடந்து போகும் போது இறைவன் மீது பாடல் பாடிக் கொண்டு சென்றால் வழியில் விலங்குகளால் எந்தத் துன்பமும் ஏற்படாது என்ற எண்ணமும், இதனையே இக்காலத்தில் பக்தர்கள் யாத்திரை மேற்கொள்ளும் போது பக்திப் பாடல் பாடிக் கொண்டு செல்வதைக் காண முடிகிறது. பெண்கள் விரித்த கூந்தலுடன் எதிரில் வந்தால் தீயன நிகழும் என்றும் பல விதமான நம்பிக்கைகள் பழந்தமிழகத்தில் நிலவி வந்ததையும் தற்காலத்தில் அறிவுக்கு ஒவ்வாத நம்பிக்கைகள் பெரும்பாலும் புறம் தள்ளப்பட்டிருப்பயையும் நடைமுறை வாழ்வில் காண முடிகிறது.

### வழிபாடு

பழங்காலந்தொட்டே மக்களிடையே இறை நம்பிக்கை வேரூன்றி இருந்திருக்கின்றது. தன்னுடைய சக்திக்கு மேற்பட்ட சக்தி ஒன்று உண்டு

என்ற உணர்வே இறை நம்பிக்கைக்கு உந்துதலாயிருந்தது. இந்த அச்ச உணர்வே நாளடைவில் வழிபாடாக உருவெடுத்தது. வாழ்விற்கு ஆதாரமானதும் அச்சத்தை ஏற்படுத்தக் கூடியதுமானவைகளே பழங்காலத்தில் வழிபாட்டு பொருட்களாயின, நிலம், நீர், காற்று, ஆகாயம், தீ போன்ற பஞ்ச பூதங்களுக்கும் இறைவன் என்ற பெயர் கற்பிக்கப்பட்டு தெய்வங்களாக வழிபாடு செய்யப் பெற்றன.

*"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற*
*வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்*
*கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"* [134]

என்ற நூற்பா மூலம் தொல்காப்பியர் காலத்தே சூரியனையும் சந்திரனையும் நெருப்பையும் மக்கள் வழிப்பட்டனர் என்று அறியலாகிறது. இதை,

*"செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்*
*உச்சிநின்ற உவவுமதி கண்டு*
*கட்சி மஞ்ஞையில் சுரமுதல் சேர்ந்த*
*சில்வலை விறலியும் யானும் வல்வரைந்து*
*தொழுதமை அல்லமோ பலவே"* [135]

என்கின்றது புறம்.

தொடக்கத்தில் இயற்கையில் ஆரம்பிக்கப்பட்ட வழிபாட்டு முறை கால வெள்ளத்தில் பல தெய்வ வணக்கத்திற்கு வழிகோலியது. அது வளர்ந்து பெரு தெய்வ வழிபாடு சிறுதெய்வ வழிபாடு எனப் பிரிந்து நிற்பதையும், ஐவகை நிலங்களுக்களை தெய்வங்கள் பெரு தெய்வமாகவும், கொற்றவை உள்ளிட்ட எல்லைக் கடவுள்களான மாரியம்மன், கெங்கையம்மன், பேச்சியம்மன், இசக்கியம்மன், மாசாணியம்மன், கருப்பசாமி, முத்து வீரன் போன்றவைகள் சிறு தெய்வங்களாகக் கருதப்பட்டு வழிப்பாட்டாற்குரியவாயின.

**"மக்கள் வாழ்ந்த புராதனக் கூட்டு முறை வாழ்க்கையிலே கொற்றவை வேலன் வருணன் முதலிய தெய்வமாகவும் சிறப்புடையனவாயிருந்தன. பூசாரிகள், குருமார் எவருமின்றி மக்கள் பலியிடுதல் வெறியாடல் முதலிய முறைகளினால் தாமே கூட்டாக வழிப்பட்ட நிலையிலே சமுதாயக் கடவுள் தேவையாயிருந்தன. சமூகத்திலே தனி உடைமையும் ஆட்சி நிலைமையும் தோன்றிய போது இட்ட தெய்வங்களும் உருப்பெற்றன. அந்தி நிலையிலேயே சிவன் விட்டுணு முதலிய தெய்வங்கள் சிறப்புறத் தொடங்கின"**[136]

என்பர் க. கைலாசபதி.

## நடுகல் வழிபாடு

போர் புரிந்து வீர மரணம் அடையும்போர் வீரர்கள் பற்றிய குறிப்புகள் நடுகல்லில் பொறித்து தெய்வமாக வழிபட்டனர் என்பதும் காலையில் படையல் இட்டு தெய்வத்தை வழிபட்டனர். இதை,

***"மரைஏறு சொறிந்த, மாத்தாட் கந்தின்***
***சுரைஇவர் பொதியில் அம்குடிச் சீறூர்***
***நாட்பலி மறந்த நரைக்கண் இட்டிகைப்"*** [137]

என்றும், வழிப்பாட்டிற்குரிய படையல் பொருட்களாகப் பூ நெல் திணை போன்றவை பயன்படுத்தப்பட்டன என்பதை,

***"நெல்லும் மலரும் தூஉய்க் கைதொழுது***
***மல்லல ஆவணம் மாலை அயர"*** [138]

என்று நெடுநல்வாடையும்,

***"கடவுள் ஒண்பூ அடைதல் ஓம்பி"*** [139]

தாமரை மலர் கடவுளர்க்குரியது. அதைப் பெண்கள் சூட்ட வேண்டாம் என்று கூறுவதை பெரும்பாணாற்றுப் படையிலும் காண முடிகிறது.

*"நடுகல் பீலி சூட்டி நாரரி*
*சிறுகலத் துஉகுப்பவும் கொள்வன் கொல்லோ"* [140]

என்ற பாடல் அடிகள் சுட்டிக்காட்டுகின்றன.

நடுகல் வழிப்பாட்டின் போது மயில் தோகையால் அலங்கரிக்கப்பட்டு கள் வைத்துப் படைக்கப்பட்டதைச் சுட்டிக் காட்டுகிறது.

பிறருக்காக உழைத்து மரித்தவன் தெய்வ நிலைக்கு உயர்த்தப்படுகிறான். வீரத்தால் மரித்தவன் பற்றிய குறிப்புகள் நடுகல்லில் எழுதப்பட்டிருந்தன என்பதை,

*"செல்லும் தேஎத்துப் பெயர்மருங்கு அறிமார்*
*கல்லெறிந்து எழுதிய நல்லரை மராஅத்த"* [141]

என்கின்றது மலைபடுகடாம். வீட்டு முற்றத்தில் சுறாக் கொம்பினை நட்டு வீட்டு தெய்வத்தை (குலதெய்வம் எனவும் கொள்ளலாம்) வணங்கினர் என்பதை

*"சினைச்சுறவின் கோடுநட்டு*
*மனைச்சேர்த்திய வல் அணங்கினால்"* [142]

பட்டினப்பாலை உணர்த்துகின்றது.

## இல்லற உரிமை

இல்லறமல்லது நல்லறமன்று என்பது சான்றோர் வாக்கு. ஒத்த அன்பு கொண்ட தலைவன் தலைவி இருவரும் மணம் புரிந்து கொண்டு இன்பத்தினை நுகர்வதும், சமுதாயக் கடமைகளை நிறைவேற்றுவதும், நாட்டினைக் காப்பதும், இல்லறத்தின் நோக்கமாகும். மனம் போன போக்கில் சுற்றத்திரிந்து கட்டுப்பாடற்ற வாழ்வினை மேற்கொள்ளும் ஆடவனைப்

பண்படுத்தி, வாழ்வினைச் செம்மையாக்கக் கூடிய வல்லமை இல்லறத்திற்கே உண்டு என்பதை நன்கு உணர்ந்திருந்தனர் தமிழ் மக்கள்.

> **“தன்னலமிக்க சோற்றுப் பண்டமாக விளங்கும் தனி மனிதனைப் பண்படுத்த செம்மைப்படுத்த இன்றியமையாதது குடும்ப வாழ்க்கை என்பது அன்றைய தமிழ் மக்களின் துணிவாகும்”[143]**

என்று திருநாவுக்கரசர் குறிப்பிடுகிறார்.

தனிமரம் தோப்பாகாது என்றவாறு தனிமனிதன் சமுதாயமாக முடியாது. இல்லறத்தினை மேற்கொண்ட பல குடும்பங்களின் தொகுதியே சமுதாயம். சமுதாயம் என்ற கட்டமைப்பு இல்லறம் என்ற அடித்தளத்தின் மீது கட்டப்பட்டிருக்கிறது. சமுதாயத்தின் வீச்சும் வீழ்ச்சியும் இல்லறத்தின் தன்மையைச் சார்ந்தே அளவிடப்படுகின்றன. இதனை,

> **“சங்க காலத் தமிழர்கள் வாழ்வின் இன்பத்தையும் துன்பத்தையும் அதன் ஏற்றத்தையும் இறக்கத்தையும் நன்றாக உணர்ந்தவர்கள். பலவிதமான மன ஓட்டங்கள் கொண்ட மனிதர்களை ஒரு சமுதாயமாக இணைத்து வைக்க வேண்டும் என்றால் இல்லறமாகிய மெல்லிய கயிற்றினால் அத்தனை பேரையும் ஒருங்கிணைக்க முடியும் என்று அவர்கள் கண்டறிந்தவர்கள் இல்லறம் சரியாக நடைப்பெற்றால் சமுதாய வாழ்வுக்கு எந்தத் தீங்கும் ஏற்படாது என்பது அவர்களுடைய வயிரம் பாய்ந்த எண்ணம்”[144]**

என்கின்றார் சாலினி இளந்திரையன்.

சங்க காலத் தமிழர் ஐந்திணை வாழ்வாகிய இல்லறத்தினைத் தலைசிறந்த அறவாழ்வாகக் கருதினர்.

*“இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு*
*அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்*
*காமக் கூட்டங் காணுங் காலை*
*மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்*
*துறையமை நல்யாழத் துணைமையோர் இயல்பே”* [145]

என்ற நூற்பாவில் இல்லறத்தை அறம் எனச் சுட்டுகின்றார் தொல்காப்பியர்.

*“அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்*
*பிறன்பழிப்பது இல்லாயின் நன்று”* [146]

என்கின்றார் தெய்வப்புலவர் திருவள்ளுவர்.

இல்லறம் துறவறம் என இருவேறுபட்ட அறங்கள் உடைத்தாயினும் இல்லற மேன்மையே முன்னோரால் பெரிதும் போற்றப்பட்ட அறமாகும் என்பதை,

*“ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை*
*நோற்பாரின் நோன்மை உடைத்து”* [147]

மேற்கண்ட குறளின் வழி அறியமுடிகிறது.

முறையான இல்லறத்தை நடத்துதல் சிறந்த துறவறத்தைப் போன்றதாகும். என்பதை,

*“திருவொக்கும் தீதில் ஒழுக்கம்; பெரிய*
*அறனொக்கும் ஆற்றின் ஒழுகல்”* [148]

நான்மணிக்கடிகையும், மனைவியோடு கூடிய மாட்சிமையில்லாத இல்லறம் நல்ல இல்வாழ்க்கை ஆகாது என்பதை,

*“தார(ம்)மா னாதது வாழ்க்கை யன்று”* [149]

என்றும் முதுமொழிக்காஞ்சியும்

இறப்பவர்க்கு வேண்டுவனவற்றைக் கொடுத்தும், கல்வி முதலியவற்றால் மேம்பட்டவர்க்கு நன்மொழிகளைக் கூறுதல், துணையற்று இறந்தவர்களையும், தனக்குத் துன்பம் செய்பவர்களையும், உறவினர்களையும் பாதுகாத்தல் ஆகிய நன்மை பயக்கின்ற இல்லற வாழ்க்கையானது துறவறத்தை விட மேலானது என்பதை,

*"துறந்தார்கண் துன்னித் துறவார்க்(கு) இடுதல்*
*இறந்தார்க்(கு) இனிய இசைத்தல் - இறந்தார்*
*மறுதலை சுற்றம் மதித்தோம்பு வானேல்*
*இறுதலில் வாழ்வே இனிது"* [150]

என ஏலாதி மொழிகிறது. இதனையே,

*"அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்*
*போஒய்ப் பெறுவது எவன்"* [151]

என்கின்றார் வள்ளுவர்.

காலுக்கு இடுந்தளைப் போன்ற இல்வாழ்க்கையை விரும்பாத ஒருவன் குணமுடையான் என்று பாரான். இதை,

*"கால் காப்பு வேண்டான் பெரியார்நூல் காலற்கு*
*வாய்காப்புக் கோடல் வனப்பு"* [152]

என்கின்றார் கணிமேதாவியார்.

இல்லறம் என்பது இல்லத்தின் கண் அறநெறி பிழையாது பொருளைத் தேடி, அறநெறிப்படி இன்பம் துய்ப்பது. இதை சங்ககாலத் தமிழ் மக்கள் போற்றிச் சிறந்தனர்.

தலைவன் இல்லறத்தின் இன்பத்தை நுகராமல் தலைவியை விட்டு நீங்கி இருத்தலைச் சங்ககாலச் சமுதாயம் ஏற்றுக் கொள்ளவில்லை. தலைவியுடன் இணைந்து அறத்தைச் செய்யவும், கடமையாற்றவும் புலவர்கள் அறிவுறுத்தினர்.

மனைவியை விட்டுப் பிரிந்திருந்த பேகனை அவளோடு சேர்ந்து வாழ்ந்திருத்தலே மேலான அறம். அவ்வறத்தை விரைந்து செய்ய வேண்டும். இதுவே யாம் வேண்டும் பரிசில் என்பதை,

*"மடத்தகை மாமயில் பனிக்குமென்று அருளிப்*
*படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்*
*கடாஅ யானைக் கலிமான் பேக*
*பசித்தும் வாரேம், பாரமும் இலமே;*
*களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்*
*நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி*
*அறஞ்செய்து ஈமோ அருள்வெய் யோய்என*
*இஃதியாம் இரந்த பரிசில் அஃது இருளின்*
*இண்மணி நெடுந்தேர் ஏறி*
*இன்னாது உறைவி அரும்படர் களைமே"* [153]

என்றும், மேலும்,

*"நீல்நறு நெய்தலில் பொலிந்த உண்கண்*
*கலுழ்ந்துவார் அரிப்பணி பூணகம் றனைப்ப*
*இனைதல் ஆனாள் ஆக, 'இளையோய்*
*கிளையை மன்எம் கேள்வெய் யோற்குஎன'*
*யாம்தற் றொழுதனம் வினவக் காந்தள்*
*முகைபுரை விரலில் கண்ணீர் துடையா*
*யாம் அவன் கிளைஞரேம் அல்லேம்; கேள்இனி;*
*எம்போல் ஒருத்தி நலன்நயந்து என்றும்*
*வரூஉம் என்ப வயங்குபுகழ்ப் பேகன்*
*ஒல்லென ஒலிக்கும் தேரொடு*
*முல்லை வேலி நல்லூ ரானே"* [154]

என்று பேகனைப் பாடும் பரணரின் பாடலடிகளும்

*"கார்வான் இன்உறை தமியள் கேளா*
*நெருநல் ஒருசிறைப் புலம்பு கொண்டு உறையும்*

*அரிமதர் மழைக்கண் அம்மா அரிவை*
*நெய்யொடு துறந்த மை இருங் கூந்தல்*
*மண்உறு மணியில் மாசற மண்ணிப்*
*புதுமலர் கஞல இன்று பெயரின்*
*அதுமன்எம் பரிசில் ஆவியர் கோவே" [155]*

என்ற பெருங்குன்றூர் கிழார் அவர்களின் பாடலடிகளும், இல்லறத்தைப் போற்றிய பாங்கினை விளக்குகின்றது.

மேலும்,

*"நின்னும்நின் மலையும் பாட இன்னாது*
*இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்*
*முலையகம் நனைப்ப விம்மிக்*
*குழல் இனை வதுபோல் அழுதனள் பெரிதே" [156]*

என்று கபிலரும்,

**"உன் மலை நாட்டைப் பாடிய என்னை விரும்பிப் பரிசில் தருவாய் எனின் நீ அருள் செய்யாமையால் வருந்தித் தளர்ந்தது துயரில் கிடக்கும் உன் துணைவி நீண்ட தோகை காலொடு கவிந்தால் போன்று தழைத்த மெல்லிய கூந்தல் நறுமணப்புகை கொள்ளுமாறு செய்து குளிர்ந்த மணமுடைய மாலை சூடுமாறு விரைந்து செல்லும் குதிரைகள் நெடிய தேரில் பூட்டப்படுவனவாக"[157]**

என அரிசில் கிழாரும் இல்லறச் சிறப்பை வலியுறுத்தி பாடியிருப்பது போற்றத்தக்கது.

ஆணாதிக்கம் நிறைந்த சமுதாயத்தில் பெண்கள் போகப் பொருளாகக் கருதப்பட்டு, கணவனால் கைவிடப்பட்ட நிலையில் குடும்ப வாழ்வினை இழந்து தனியாக வாழ்ந்து வரும் அவல நிலை இக்காலத்தில்

வெகுவாகக் காணப்படுகின்றன. சங்க காலத்திலும் இத்தகைய நிலையிருந்ததையும், உயர்ந்த நிலையில் இருக்கும் பெண்களும் இக்கொடுமைக்கு ஆளான நிலையில் அவர்களைச் சேர்த்து வைக்க புலவர்கள் முயன்றனர்.

தலைவியை விட்டுப் பிரிந்து பொருள் தேட எண்ணும் தலைவன், தலைவியிடம் நுகர்ந்த இன்பத்தைப் பெரிதென எண்ணி பொருள் தேடும் அவ்வெண்ணத்தை விட்டு கொடைப்பண்பு நிறைந்த ஓரியின் செல்வமே கிடைப்பதாக இருந்தாலும் இல்லற இன்பமே பெரிதென எண்ணுகின்ற பண்பு கொண்டோராய் விளங்கியதை,

*"சுணங்குஅணி ஆகம் அடைய முயங்கி*
*வீங்குஉவர்க் கவவின் நீங்கல் செல்லேம்*
*நீயே, ஆள்வினை சிறப்ப எண்ணி நாளும்*
*பிரிந்துறை வாழ்க்கை புரிந்து அமை யலையே*
*அன்பிலை வாழியெம் நெஞ்சே வெம்போர்*
*மழவர் பெருமகன் மாவள் ஓரி*
*கைவளம் இயைவ தாயினும்*
*ஐதுஏகு அம்ம இயைந்துசெய் பொருளே"* [158]

எனும் நற்றிணைப் பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

இளமையில் இன்பம் துய்ப்பது மட்டும் இல்லறமன்று முதுமையடைந்த பிறகும் தலைவியை விட்டு நீங்காது தலைவியைப் பாதுகாப்பதே இனிய இல்லறம் என்பதைத் தோழியின் கூற்றாக நற்றிணையின் பின்வரும் பாடலடிகள்

*"அண்ணாந்து ஏந்திய வனமுலை தளரினும்*
*பொன்னேர் மேனி மணியின் தாழ்ந்த*
*நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்*
*நீத்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர!"* [149]

இல்லறத்தின் சிறப்பினைப் பண்டைத் தமிழர் வலியுறுத்தினர் என்பதைப் புலப்படுத்துகிறது. இல்லறத்தின் சிறப்பை உணராது இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் தலைவன் இல்லறத்தை விரும்பாது தலைவியைக் கைவிட்டுச் செல்லுதல், அன்றையச் சமுதாயத்தில் நடைமுறையில் இருந்து வந்துள்ளமை தெரிகின்றது. அதனைக் கண்டித்தும், தலைவனுக்குக் குறிப்பால் உணர்த்தியும் விரைந்து வரைவு கடாதலை நிகழ்த்த அறிவுறுத்தப்பட்டமையும் சங்க இலக்கியங்கள் வாயிலாக உணர முடிகிறது.

இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் தன்னை விட்டுப் பிரிந்து விடுவானோ என்று கருதி அஞ்சிய தலைவியின் குறிப்பு வேறுபாட்டினை அறிந்து தலைவன் கூற்றாக அமைந்த பின்வரும் பாடல்,

***“யாயும் ஞாயும் யாரா கியரோ?***
***எந்தையும் நந்தையும் எம்முறைக் கேளிர்?***
***யானும் நீயும் எவ்வழி அறிதும்?***
***செம்புலப் பெயல்நீர் போல***
***அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே”*** [160]

என்ற செம்புலப் பெயல் நீரார் பாடல் தலைவியின் மன பயத்தை வெளிப்படுத்துகிறது.

ஒரு நாள் அன்று, இரு நாட்கள் அல்ல பல நாட்கள் நம்மைத் தேடி வந்து நம்மிடம் பணிவான சொற்களைப் பல முறை கூறி எனது நல்ல மனத்தை நெகிழச் செய்த பின்பு மலை மேல் முதிர்ந்த தேனடை விழுந்து கீழே பயனின்றிப் போவதைப் போல திரும்ப வாராமல் போய் விட்டான். இப்போது நமக்குப் பற்றுக் கோடாகிய அத்தலைவன் எங்கே இருக்கின்றானோ என் நெஞ்சம் கலங்குகின்றது என்று தன்னிலையை எண்ணிப் பரிதவிக்கும் தலைவியின் நிலையை,

*"ஒருநாள் வாரலன், இருநாள் வாரலன்*
*பல்நாள் வந்து பணிமொழி பயிற்று, என்*
*நன்னர் நெஞ்சம் நெகிழ்த்த பின்றை*
*வரைமுதிர் தேனின் போகி யோனே*
*ஆசாகு எந்தை யாண்டுளன் கொல்லோ ?*
*வேறுபுலன் நல்நாட்டுப் பெய்த*
*ஏறுடை மழையின் கலிழும் என் நெஞ்சே!"* [161]

என்று தோழி குறை நயப்பக் கூறியது எண்ணத்தக்கது.

இல்லறம் தொடங்குவதாக வாக்களித்த தலைவன் அதனின்றும் மாறுபட்டு விட்டானோ என்று அஞ்சியிருக்கும் தலைவிக்கு ஆறுதல் கூறி விரைவில் இல்லறம் நடக்க தலைவன் வருவான் என்று தோழி கூற்றாகக் காணப்படுவதை

*"எழில்மிக உடையது, ஈங்குஅணிப் படூஉம்;*
*திறவோர் செய்வினை அறவது ஆகும்;*
*கிளையுடை மாந்தர்க்குப் புணையுமார் இவ்வென*
*ஆங்குஅறிந் திசினே தோழி! வேங்கை*
*வீயா மென்சினை வீஉக யானை*
*ஆர்துயில் இயம்பும் நாடன்*
*மார்புஉரித் தாகிய மறுஇல் நட்பே"* [162]

எனக் குறுந்தொகைப் பாடல் உணர்த்துகின்றது. தோழியும் தலைவியைத் தலைவனுடன் உடன் போக்கு மேற்கொள்ள விழைந்தது இல்லற உரிமையை நிலைநாட்டுவதற்கு;

*"புணர்ந்து உடன்போதல் பொருள்என*
*உணர்ந்தேன் மன்ற, அவர் உணரா வூங்கே"* [163]

என்று தலைவி இவ்வாறு கூறினாள் என்று கருத முடிகிறது.

*"அறநெறி பிழையாது ஆற்றின் ஒழுகிக்"* [164]

என்று மதுரைக்காஞ்சியும்,

*"ஈதலில் குறைகாட்டாது அறனறிந்து ஒழுகிய*
*தீதிலான் செல்வம் போல்"* [165]

என்று கலித்தொகையும் இல்லறத்தைச் சிறப்பிக்கின்றது.

இல்லறம் இனிதாக அமைய வேண்டுமாயின் தலைவன் தலைவி இருவரின் மனமும் கருத்தும் ஒத்துப் போக வேண்டும். தன் விருப்பத்திற்கு மாறாக இல்லறத்தில் பிணைக்கப்படுவோரின் வாழ்வு வளமிழந்தும் பொலிவிழந்தும் போவது கண்கூடு. எவருடன் இல்லறத்தில் இணைய வேண்டும் என்று தேர்ந்தெடுக்கும் உரிமையை இருபாலரும் சங்க காலத்தில் பெற்றிருந்தனர்.

**"தன் விழைவுப்படி ஒருவனைக் கணவனாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் வாழ்க்கையுரிமை பெண்ணினத்துக்கு உண்டு என்பது தமிழியம்"** [166]

என்பர் வ.சுப. மாணிக்கம்.

தான் விரும்பும் பெண்ணை மணம் முடிப்பதற்காக ஆடவர் மேற்கொள்ளும் மடலேறுதல் என்பது பெண்ணிற்குத் தன் தலைவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

தான் காதலித்த தலைவனையே கரம் பிடித்து இல்லறம் நடத்த விரும்பிய சங்க காலத் தமிழ்ப் பெண்டிற் தம் காதல் கைக்கூடவும், காதலனுடன் இணைந்து இல்லறம் நடத்தவும் இறைவனை வேண்டி வழிப்பட்டனர் என்பதை,

*"குன்றக் குறவன் காதல் மடமகள்*
*மன்ற வேங்கை மலர்சில கொண்டு*
*மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தித்*
*தேம்பலிச் செய்த ஈர்நறும் கையள்"* [167]

என்று ஐங்குறுநூறும் பேசுகின்றது.

**"மகளிரை மணந்து கொள்பவர் அம்மகளிர் அணிதற்குரிய அணிகலன்களுக்கெனப் பெரும் பொருளைப் பரிசமாகக் கொடுப்பது அக்கால வழக்கமாகும். பரிசுப் பொருளை விரும்பித் தகுதியில்லாதானை மணந்து கொள்ளும் வழக்கத்தினைத் தமிழ் மகளிர் வெறுத்து ஒதுக்கினர்"** [168]

என்பர் க. வெள்ளைவாரணர்.

கற்பு மணம் அன்றியும் களவு மணத்தின் வாயிலாகவும் இல்லறம் சிறப்புற அமைய முயற்சி மேற்கொண்டதைச் சிறப்பித்தது பண்டைய தமிழினம்.

உடன்போக்கில் சென்ற தலைவியைத் தேடி செவிலி வழியிற் கண்டோரிடம் இவ்வகைப் பட்டாரைக் காணீரோ என்று வினவுகிறார் அதற்குக் கண்டோர் அவரைக் கண்டோம் அஃது அறமேயாகும் நீர் அவர் பொருட்டு வருந்த வேண்டா என்கின்றனர். இதனை,

*"என்மகள் ஒருத்தியும் பிறள்மகன் ஒருவனும்*
*தம்முளே புணர்ந்த தாம்அறி புணர்ச்சியர்,*
*அன்னார் இருவரைக் காணீரோ பெரும!*
*காணேம் அல்லேம், கண்டனம், கடத்திடை*
*ஆண்எழில் அண்ணலோடு அருஞ்சுரம் முன்னிய*
*மாண்இழை மடவரல் தாயிர்நீர் போறிர்;"* [169]

என்று கலித்தொகை விளக்குகின்றது. தலைவன் தலைவியின் பொறுப்புகளையும் சிறப்புகளையும் விரித்துரைக்கின்ற வகையில் தோழியின் கூற்றாக அமைந்த பாடலில்,

*"வினையே ஆடவர்க்கு உயிரே; வாள்நுதல்*
*மனைஉறை மகளிர்க்கு ஆடவர் உயிர் என*
*நமக்குஉரைத் தோரும் தாமே*
*அழாஅல் தோழி அழுங்குவார் செலவே"* [170]

என்று தோழி! புறத்தே சென்று பொருள் தேடுதல், அரசர்க்கு உதவுதல் போன்ற வினைகள் ஆடவர்க்கு உரியன. வீட்டிலிருந்து ஒளி பொருந்திய நெற்றியையுடைய மகளிர்க்குத் தங்கள் கணவராகிய ஆடவரே உயிராவர் என்று நமக்குக் கூறிய வரும் அவர் தாமே! எனவே அவர் பிரிவு நம் உயிர்ப் பிரிவுக்கு நிகர் என்பது அவருக்குத் தெரியும். அவர் பிரிவினைத் தவிர்ப்பார் நீ அழாதே என்று இல்லற நெறியைக் கடைப்பிடித்துக் கொண்டவனுக்குப் புகழுக்கும் பெருமை சேர்ப்பாய் என்றும் தோழி எடுத்துரைக்கின்றாள்.

தலைவன் தலைவி மீது மிகுதியான அன்பு கொண்டு இல்லற நெறியில் ஒழுகிய நிலையில் காதல் பரத்தையிடம் அன்பு கொள்கிறான். தலைவன் தன் மீது அன்பு கொண்ட நிலையில் தன்னிடம் வீரத்தைக் காட்டுவதும் இல்லத்தில் தலைவிக்குக் கட்டுப்பட்டு நிற்பதை ஆலங்குடி வங்கனார்,

***"கழனி மாத்து விளைந்துஉகு தீம்பழம்***
***பழன வாளை கதூஉம் ஊரன்***
***எம்இல் பெருமொழி கூறித் தம்இல்***
***கையும் காலும் தூக்கத் தூக்கும்***
***ஆடிப் பாவை போல***
***மேவன செய்யும்தன் புதல்வன் தாய்க்கே"*** [171]

என்றும் சுட்டுகின்றது.

தலைவன் தன் இல்லத்திற்கு வந்தால் மிகப் பெரிதாக ஓங்கிப் பேசுவான். ஆனால் தன் வீட்டிற்குப் போனால் அங்குள்ள தன் புதல்வனின் தாயாகிய தன் மனைவியிடத்தில் எவ்வாறு நடந்து கொள்வான் தெரியுமா? நாம் நம் கையையும் காலையும் தூக்கத் தானும் அது போலவே தூக்கும் கண்ணாடியில் தெரியும் நிழற் பாவை போல, அவள் விரும்பிய படியெல்லாம் ஆடுவான் என்ற காதற் பரத்தையின் கூற்று தலைவன் தம் இல்லறச் சிறப்பை எடுத்துரைக்கின்றது.

**திருமண உரிமை**

ஆணும் பெண்ணும் ஒன்றாக இணைந்து பாலியல் இன்ப நுகர்வினைப் பெறவும், பிள்ளைப் பேறு அடைந்து சமூகக் கடமைகளை ஆற்றவும், அறச் செயல்களை மேற்கொள்ளவும், சமூகத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட, சட்டத்தால் அங்கீகரிக்கப்பட்ட பிணைப்பே திருமணம். 'மனிதன் தனிமையாய் இருப்பது நல்லதல்ல அவனுக்கு ஏற்றத்துணையை உண்டாக்குவோம்'' என்கின்றது விவிலியம். தொல்காப்பியம்.

***"கற்பெனப் படுவது கரணமொடு புணர"*** [172]

எனும் அடிகளில் திருமணத்தைக் கற்பு என்றழைக்கிறது. மேலும்,

***"மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்"*** [173]

என்று தொல்காப்பியர் கூறும் நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர். பிரம்மம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாடம் என்று எட்டு வகையான திருமணங்களைக் குறிப்பிடுவார்.

சாதி, மத, பண்பாடு, மொழி, கலாச்சாரங்களைக் கருத்தில் கொண்டு ஆண் பெண் இருவரின் பெற்றோர்கள் பேசி ஒப்புக் கொண்டு மணமுடித்தல் என்பது ஒரு வகை. அவற்றைப் புறந்தள்ளி விட்டுப் பெற்றோர் சம்மதமின்றி ஆணும் பெண்ணும் கருத்தொருமித்து காதல் கொண்டு உடன்போக்குச் சென்று மணமுடித்தல் மற்றொரு வகை இதை முறையே கற்பு களவு என்று தொல்காப்பியர் சுட்டுகின்றார்.

ஒத்த பிறப்பு, ஒத்த ஒழுக்கம், ஒத்த ஆண்மை, ஒத்த ஆண்டு, ஒத்த அழகு, ஒத்த அன்பு, ஒத்த நிறை, ஒத்த அருள், ஒத்த அறிவு, ஒத்த செல்வம் என்னும் பத்து வகையான ஒப்புமையும் தலைமக்கள் இருவருக்கும் இருக்க வேண்டும் என்றும் அன்றித் தலைவன் மேற்கொண்ட குணங்களில் மிகுந்திருந்தாலும் அதனால் குற்றமில்லை என்பதை,

*"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு*
*உருவு நிறுத்த காம வாயில்*
*நிறையே அருளே உணர்வொடு திருவென*
*முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே"* [174]

எனவும்,

*"மிக்கோனாயினும் கடிவரை இன்றே"* [175]

என்னும் தொல்காப்பிய நூற்பாவடிகளால் அறிந்து கொள்ள முடிகிறது.

மனம் ஒத்த காதலர்கருக்கு மேற்சொன்ன இலக்கணங்களைத் தவிர்த்துத் திருமணத்திற்கு இரு மனங்களும் ஒன்றுபட்டிருந்தால் போதும் என்பதையே காதல் திருமணங்கள் சங்க கால முதல் இன்றளவும் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன.

திருமணத்தின் நோக்கம் இன்பம். அது தாமாக மனம் பொருந்துவதால் மட்டுமே கிடைக்கக் கூடியது. மனம் பொருந்தாமல் செய்விக்கப்படும் மணங்கள் தோல்வியையே சந்திக்கின்றன என்பதற்கு நீதிமன்றங்களில் தேங்கிக் கிடக்கும் மண முறை தொடர்பான வழக்குகளே சாட்சிகளாகக் காணப்படுகின்றன. மேலும்,

*"எல்லா வுயிர்க்கும் இன்பம் என்பது*
*தானமர்ந்து வரூஉம் மேவற்று ஆகும்"* [176]

என்று தொல்காப்பியரும் குறிப்பிடுகின்றார்.

**"முழு வயதையடைந்த ஆண்களும் பெண்களும் இனம், நாடு, மதம் ஆகிய கட்டுப்பாடுகளின்றி திருமணம் செய்துக் கொண்டு குடும்பம் நடத்த உரிமையுள்ளவர்கள். திருமணம் செய்து கொள்வது மணவாழ்க்கை முறிவு ஆகியவற்றில் அவர்களுக்கு சம உரிமை உண்டு."**

**“திருமணம் முறித்துக் கொள்பவர்களின் சுதந்திரமாக மற்றும் முழு இசைவுடன் நடத்தப்பட வேண்டும்”**

என்று அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனம் உறுப்பு (16) திருமண உரிமையை வலியுறுத்துகின்றது.

மணத்தை ஒரு தார மணம் இரு தார மணம் என்றும் வகைப்படுத்துவர். ஆண்கள் இரு தார மணம் கொண்டவர்களாகவும் பலதார மணம் கொண்டவர்களாகவும் சங்க காலத்தில் இருந்தது மட்டுமல்லாமல் பரத்தையர்களுடன் தொடர்பும் கொண்டிருந்தனர்.

சிறு பருவமும் பேதமையும் உடைய சிறூரோடு விளையாடும் அடக்கமில்லாத வயதில் இவனுடைய தந்தையோடு பழகியப் பிறகு அவனால் விரும்பப்பட்ட பெண் அழைக்க இவன் சென்றான். அவள் காளை உருவம் பொறிதல் சிறுமாலையை அன்பளிப்பாக இவனுக்கு அணிவித்துப் பெருமானே சற்றே சிரி என்றாள். அவள் இந்திய கண்ணீன் முத்து வடத்திலிருந்து முத்துக்கள் உதிர்வது போல இருந்தது. அவளை விட்டுப் பின் முறைத் தாயினிடம் (தலைவனின் இரண்டாம் தாரம்) சென்றான். அவள் தன்னுடைய துன்பத்தை அடக்கிக் கொண்டு மகன் முறையாகிய அவனை வரவேற்று அனைத்து முத்தமட்டாள் என்பதை,

*“மடக்குறு மாக்களோடு ஓரை அயரும்*
*அடக்கமில் போழ்தின்கண் தந்தைகா முற்ற*
*தொடக்கத்துத் தாயுழைப் புக்காற்கு - அவளும்*
*மருப்புப்பூண் கையுறை யாக அணிந்து*
*பெருமான்! நகைமுகம் காட்டு என்பாள் கண்ணீர்*
*சொரிமுத்தம் காழ்சோர்வ போன்றன; மற்றும்*
*வழிமுறைத் தாயுழைப் புக்காற்கு - அவளும்*

*மயங்குநோய் தாங்கி மகன்எதிர் வந்து*
*முயங்கினள், முத்தினள் நோக்கி, நினைந்தே,"* [177]

என்ற பாடலுக்கு,

**"தொடக்கத்து தாய் என்றதால் அவள் வயதானவள் என்பதும் வழி முறைத்தாய் என்றதால் அவள் ஒரு வயது உடையவள் என்பதும் புத்தேள் என்பதால் பரத்தை இளவயதினள் என்பதும் குறிக்கப்படுவதாக நச்சினார்க்கினியர் உரைத்தார்"** [178]

என்று சுப. அண்ணாமலை விளக்கம் தருகின்றார்.

இன்ப நுகர்வுக்காக மட்டும் இரு தார மணம் நிகழப் பெற்றதுமன்றிப் பிள்ளைப்பேறு காரணமாகவும் இவ்வகை மணங்கள் சங்க காலத்தில் நிகழ்த்தப் பெற்றிருக்கின்றன. முறைப்படி இரண்டாவதாகச் செய்யப்படும் திருமணம் "பின் முறையாக்கிய பெரும் பொருள் வதுவை" என்றழைக்கப்பட்டது. பிள்ளைப்பேறினை மட்டும் கருத்தில் கொண்டு மேற்கொள்ளப்பட்ட திருமணம் முதல் மனைவியின் இசைவுடன் நடந்தேறியது என்பதும் அவள் பால் முதல் மனைவி அன்பு செலுத்தினாள் என்பதை,

*"மயில்கள் ஆலப் பெருந்தேன் இமிரத்*
*தண்மழை தலைஇய மாமலை நாட*
*நின்னினும் சிறந்தனள் எமக்கே நீநயந்து*
*நன்மனை அருங்கடி அயர*
*எம்நலம் சிறப்பாயாம் இனிப்பெற் றோளே"* [179]

என ஐங்குறுநூறு உணர்த்துகிறது.

இக்காலத்தும் பிள்ளைப் பேறு கருதி ஆண்கள் இரண்டாம் திருமணம் செய்துக் கொள்வது நடைமுறையில் இருந்து வந்தாலும் முதல்

மனைவியின் சம்மதமின்றிச் செய்யும் திருமணம் சட்டப்படி இல்லா நிலையை (Void) அடையும். சங்க காலத்தில் பெண்கள் மனம்மொத்து இரண்டாம் திருமணத்திற்குச் சம்மதித்தனர் என்பது புலனாகின்றது,

இல்லறத்தில் கணவன் மனைவி இருவரும் சம உரிமை உடையவர்கள் என்றாலும் பண்பாட்டளவில் இல்லத்திலும் சமூகத்திலும் ஆணைவிடப் பெண் உரிமைக்குன்றியே காணப்படுகிறாள். இரு தார மணம், உரிமை என்று ஆண் சமூகம் கருதியிருந்தாலும் பெண்கள் தம் கற்பொழுக்கத்தின் பால் வேறொரு ஆடவனை மனதளவிலும் எண்ணாதவள். எக்காரணத்தை முன்னிட்டும் இரு மணம் என்பது கனவிலும் நினையாதவளாக இருந்திருக்கிறார். அதுவே உயர் குடிப்பினரின் பண்பாகவும் அமைந்திருந்தது.

கடல் சூழ்ந்த உலகத்தைப் பரிசாகப் பெறினும் அரிய பண்புகளையுடைய ஆயரின மகளிர் இருமணம் புரிதல் உயர் குடிப்பிறப்புக்குரிய பண்பு அன்று இதை,

*“விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்*
*அருநெறி ஆயர் மகளிர்க்கு*
*இருமணம் கூடுதல் இல்லியல்பு அன்றே”* [180]

என்று தலைவி பேசுகிறாள்.

இரு தார மணத்தைச் சங்க காலத் தமிழ் மக்கள் ஏதாவதொரு காரணத்தைக் முன்னிட்டு ஏற்றுக் கொண்டாலும் வறுமையின் துன்பத்தைப் பலதார மணமுடையவள் நன்கு அறிவாள் என்பதை,

*“புள்ளினுள் ஓங்கல் அறியும்; நிரப்பிடும்பை*
*பல்பெண்டிர் ஆளன் அறியும்”* [181]

என்று நான்மணிக்கடிகை உணர்த்துவதும் எண்ணத்தகுந்தது.

இந்திய தண்டனைச் சட்டம் பிரிவு 494 “முதல் கணவன் (அ) மனைவி உயிருடன் இருக்கும் போது செய்துக் கொள்ளப்படும் இரண்டாம் திருமணம் சட்டப்படி செல்லாதது அது குற்றம் என்றும் அதற்கான தண்டனை 7 ஆண்டுகள் வரையிலான சிறை தண்டனையும் அபராதமும் விதிக்கப்படும் என்றும் பிரிவு சுட்டிக்காட்டுவதையும் கண்ணுறுகிறபோது அறக்கருத்துக்களை விடச் சட்டத்தின் வழி குற்றங்களைத் தடுக்க அரசு விழைகிறதை அறிய முடிகிறது.

சங்க காலத்தில் பரத்தையர்களைப் பொதுவாக இன்பம் தரும் பொருளாகவும், பாலியல் கருவியாகவும் கருதியிருக்கின்றார்கள். அவர்கள் திருமண உரிமைப் பெற்று இல்லறத்தில் சிறந்த மகிழ்ந்திருந்தனர் என்பதை அறிந்து கொள்வதற்கில்லை எனினும் பெதும்பை பருவமுடைய ஒரு பரத்தையைத் தெரியாமல் மணந்து அவளொடு வாழ்ந்ததைத் தலைவி அறிந்து,

***“கண்டனெம் அல்லமோ மகிழ்நநின் பெண்டே***
***பலராடு பெருந்துறை மலரொடு வந்த***
***தண்புனல் வண்டல் உய்த்தென***
***உண்கண் சிவப்ப அழுதுநின் றோளே”*** [182]

என்ற தலைவியின் கூற்றின் மூலம் அறிந்து கொண்டாலும், பரத்தையர் மணத்தைத் தலைவன் மறைத்த வழி சமுதாயம் அவ்வகை மணத்தை ஏற்றுக் கொள்ளவில்லை என்பது வெள்ளிட மலை. பரத்தையர் மணத்தை ஏற்றுக் கொள்ளாத அன்றைய தமிழ்ச் சமூகம் பரத்தையர் உறவினை ஆதரிக்கவில்லை என்றாலும் கண்டித்ததாகத் தெரியவில்லை. பரத்தையுடன் தலைமகன் கலந்து இன்பம் துய்த்து அவளை விட்டுப் பிறிதொரு பரத்தையை நாடி சிறிது காலம் சென்று மீண்டும் முதற்கண்ட பரத்தையை அடைய பாணனைத் தூதாக அனுப்பியவிடத்து அவளின் தாய் தலைவனின்

நம்பிக்கை துரோகத்தைக் கண்டித்து அடிப்பதற்காக நெருங்கிய கணுக்களையுடைய மூங்கில் கம்பை வைத்துக் கொண்டிருந்தாள் என்பதை,

*"தாருங் கண்ணியுங் காட்டி ஒருமைய*
*நெஞ்சம் கொண்டமை விடுமோ வஞ்சக்*
*கண்ணுடைச் சிறுகோல் பற்றிக்*
*கதம் பெரிது உடையள்யாய் அழுங்கலோ இலளே"* [183]

என்று நற்றிணைப் பாடல் உணர்த்துகின்றது.

காதலின் துவக்கம் திருமணத்தில் முடிய வேண்டும் என்று விழைந்தனர் நம் முன்னோர்கள். காதலித்தவரையே இல்வாழ்க்கைத் துணையாக்க பல்வேறு வழிமுறைகளை ஒழுகி வந்திருப்பதை சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.

## பொருள் கொடுத்துப் பெண்ணை மணத்தல்

வாழ்வின் படிநிலைகளில் திருமணமும் ஒன்று. வாழ்வின் அடுத்தொரு படி நிலைக்கு (தந்தை தாய் என்ற நிலை) உயர்த்தும் ஏணியாக அமைவது. தனிமனிதனைக் குடும்பமாக மாறச் செய்வதும், குடும்பம் சமுதாயத்தின் அங்கமாக நின்று செயல் புரியவும் உறுதுணையாய் அமைவது, களவு நெறிப்பட்ட காதலர்கள் இல்லறத்தில் இணைவதற்கு எப்பொருளை இழக்கவும் உறுதியாயிருந்தனர். தலைவியுடைய தந்தையின் விருப்பத்திற்கேற்றவாறு பொருள் கொடுத்துத் திருமணம் செய்துக் கொள்ள முயன்றனர் என்பதை,

*"கள்வர்போல் நோக்கினும் நோக்கம்; குறித்தது*
*கொள்ளாது போகாக் குணன்உடையன்*
*எந்தைதன் உள்ளம் குறைபடா வாறு"* [184]

என்று தோழி கலித்தொகையில் கூறுவதும்,

பாய்ந்து வரும் காளைகளை அடக்குபவனிடம் பொருள் ஏதும் பெற்றுக் கொள்ளாது வீரத்தைக் கருதி பெண்ணைத் திருமணம் செய்து கொடுத்தனர். இதை,

*"விலை வேண்டார் எம்இனத்து ஆயர் மகளிர்*
*கொலையேற்றுக் கோட்டிடைத் தாம் வீழ்வார் மார்பின்*
*முலையிடைப் போலப் புகின்"* [185]

என்ற பாடல் விளக்குகின்றது. ஒருவன் தலைவியை மணம் பேசி வந்து அவளது வளையலுக்கு விலையாகக் (பரிசாக) குதிரைகள் பூட்டிய தேரைத் தலைவியின் வீட்டின் வாயில் முன் நிறுத்தியுள்ளான் என்பதை,

*"தாமரைக்கு இறைஞ்சும் தண்துறை ஊரன்*
*சிறுவளை விலைஎனப் பெருந்தேர் பண்ணிஎம்*
*முன்கடை நிறீஇச் சென்றிசி னோனே"* [186]

என்ற பாடலால் பெண்ணை மணப்பதற்கு அடையாளமாகப் பொருட்களைத் தந்து இருக்கின்றனர் என்பதை எடுத்துக் காட்டுகின்றது.

**"மகளிரை மணந்து கொள்பவர் அம்மகளிர் அணிதற்குரிய அணிகலன்களுக்கெனப் பெரும் பொருளைப் பரிசமாகக் கொடுப்பது அக்கால வழக்கமாகும். பரிசுப் பொருளை விரும்பி தகுதியில்லாத எனை மணந்து கொள்ளும் வழக்கத்தினைத் தமிழ் மகளிர் வெறுத்து விறக்கின் விலக்கினர்"** [187]

என்கின்றார் கா. வெள்ளைவாரனன்.

**பெற்றோர் சம்மதத்துடன் மணமுடித்தல்**

தலைவனோடு களவின் கண் துய்த்த இன்பம் கடைசி வரை நிலைக்க வேண்டுமானால் களவு மணம் கற்பு மணமாகி இல்லறத்தில் சிறந்து நிற்க வேண்டும். கற்பு மணம் கை கூடாத போது களவின் கண்

ஈடுபட்ட தலைவன் தலைவி உடன்போக்கு மேற்கொண்டு மணம் புரிந்து இல்லறத்தினை நடத்துதல் என்பது சங்க காலம் தொடங்கி இன்று வரை நிலை நாட்டி வரும் வாழ்வில் உரிமையினைப் பெற்றோர் சம்மதத்துடன் திருமணம் நிகழ்த்தப் பெற வேண்டும் என்ற அவாவினை இன்று போல் சங்க காலக் காதலர்களிடையேயும் காண முடிகிறது.

காதல் ஒழுக்கத்தைப் பெற்றோர் ஏற்காவிடின், தன் துணையுடன் வாழ்க்கையை நடத்தத் துணியும் காதலர்களைப் போன்றில்லாமல் இம்மை மாறி மறுமை உலகத்தில் இணைந்து வாழ்வோம் என்று திண்ணிய மனதுடையோர் சங்க காலத் தமிழர் இதை,

*"மாதரும் மடனும் ஓராங்குத் தணப்ப*
*நெடுந்தேர் எந்தை அருங்கடி நீவி*
*இருவேம் ஆய்ந்த மன்றல் இதுஎன*
*நாம்அறி வுறாலின் பழியும் உண்டோ?*
*ஆற்றின் வாரார் ஆயினும் ஆற்ற*
*ஏனைஉல கத்தும் இயைவதால் நமக்கென*
*மான்அமர் நோக்கம் கலங்கிக் கையற்று*
*ஆனாச் சிறுமையள் இவளும் தேம்பும்"* [188]

எனும் குறிஞ்சிப் பாட்டும்,

தலைவன் தலைவியைப் பாலை நிலத்தின் வழி உடன் போக்கினை மேற்கொள்ளலாம் என்றதற்குத் தலைவி உடன்போக்கிற்கு உடன்படாமல் அறத்தொடு நின்று மணம் முடிக்கலாம் என்று எண்ணிய தலைவியின் கண்கள் கட்டுப்பாட்டிற்கு அடங்காமல் அழுதன என்பதை,

*"அறியரோ அளியரென் ஆயத் தோரென*
*நும்மொடு வரவுதான் அயரவும்*
*தன்வரைத்து அன்றியும் கலுழ்ந்தன கண்ணே"* [189]

என்ற அடிகளில், தலைவனின் பண்பு நலனை ஒப்புநோக்கும் போது சங்க காலத் தலைவிக்கு நிகராகத் தலைவனும் சிறந்து விளங்கினன். களவில் சிறந்த தலைவன் தலைவியை நோக்கி நும்முடைய அழகிய முன் கையைப் பற்றி நும்மவர் எமக்குத்தர நாட்டிலுள்ளோர் அறியும் படி நல்ல மணத்தைச் செய்யும் வரை சில நாட்கள் பாதுகாத்துக் கொள்ளுங்கள் என்று கூறி பண்பில் சிறந்தான் என்பதை,

*"நேர்இறை முன்கை பற்றி நுமர்தர*
*நாடுஅறி நன்மணம் அயர்கம், சில்நாள்*
*கலங்கல் ஓம்புமின் இலங்கு இழையீர்! என*
*ஈர நல்மொழி தீரக் கூறி"* [190]

மேற்கண்ட பாடலடிகளைக் கொண்டு அறிந்து கொள்ளலாகிறது.

**சுதந்திர உரிமை**

இயற்கை உரிமைகளில் முதன்மையானது பேச்சுரிமையும், கருத்துரிமையும் ஆகும். மனிதன் சுயமாகச் சிந்திக்கவும் சிந்தித்ததைப் பேசவும், கருத்துக்களாக எடுத்துரைக்கவும், வெளியிடவும் உரிமை படைத்தவன். பேசுவதினாலும் கருத்துக்களாலும் பிற உயிரினங்களிடமிருந்து மட்டுமல்ல சம மனிதர்களுக்குள்ளும் சிறப்பிடம் பெறுகிறான். சங்க கால மக்கள் பேச்சுக் கலையில் சிறந்து விளங்கினர். மன்னனுக்கு அறிவுரை கூறுவதிலும் தவறு செய்யும் போது இடித்துரைத்துத் திருத்துவதிலும், அரசுக்கு ஆலோசனை வழங்குவதிலும் புலவர்கள் வரம்பு கடந்த உரிமையைப் பெற்றிருக்கின்றனர்.

**"அரசர் முதல் வறியவர் வரை எல்லா மக்களையும் ஒப்ப மதித்து அவர்தம் நல்லியல்புகளை எடுத்துரைத்துப் பாராட்டுதலும், தீமை கண்டால் இடித்துரைத்துத் திருத்துதலும், மக்கள் நலம் பேணும் தறுகண் வீரர்களையும்,**

**தமிழ் வள்ளல்களையும் உளமுவந்து பாராட்டி ஊக்குதலும், மனித வாழ்க்கையிலும் உலகியலிலும் மக்கள்பாற் காணப் பெறும் தவறுகளை அவ்வப்போது எடுத்துக்காட்டி அவர்களைத் திருந்திய வாழ்க்கையில் வாழச் செய்தலும் பண்டைத் தமிழ்ப் புலவர்களின் செயல்களாய் அமைந்தன"[191]**

என்கின்றார் கா. வெள்ளைவாரனர்.

சட்டங்கள் இல்லாத முடியாட்சிக் காலத்தில் புலவர்களின் அறக்கருத்துக்களாலும், அறிவுறுத்தல்களினாலும் மக்கள் வழி நடத்தப்பட்டனர். மன்னர்களை நம்பியே புலவர்களும் மக்களும் வாழ்ந்திருந்தாலும் மன்னன் தவறு செய்யும் நேரத்தில் தன்னலமிக்கவர்களாக அமைதி காத்திடாமல் தவறுகளைச் சுட்டிக் காட்டும் குணம் நிறைந்திருந்தார்கள். இதை,

**"பண்டைப் புலவர்கள் அரசர்கள் ஆரவிலே வாழ்ந்தார்கள். வள்ளல்கள் உதவியால் வாழ்ந்தார்கள். ஆயினும் அவ்வரசர்கள் அவ்வள்ளல்கள் தவறு செய்யும் போது பொறுத்திருக்க மாட்டார்கள். தம்மை ஆதரிப்பவர்களுக்கு வெறுப்பு வரும்படி நடந்து கொண்டால் அவர்களால் கிடைக்கும் நன்மை கிடைக்காமல் போய் விடுமே என்று கவலைப்பட மாட்டார்கள். உண்மையென்று எண்ணியதை உரைக்காமலிருக்க மாட்டார்கள்"[192]**

என்ற சாமி சிதம்பரனாரின் கருத்தும் இங்கு உணரத்தக்கது.

சோழர்கள் இருவரும் தங்களுக்குள் மாறுபட்டு போரிடத் துணிந்ததைக் கண்டு இருவரையும் சமாதானப்படுத்தி போரினைக் கைவிடச் சொல்லி அறிவுறுத்துவதை,

*"குடிப்பொருள் அன்றுநும் செய்தி; கொடித்தேர்*
*நும்மோர் அன்ன வேந்தர்க்கு*
*மெய்ம்மலி உவகை செய்யும்இவ் இகலே"* [193]

என்ற புறப்பாடலாலும் அறியமுடிகிறது.

**"தன்னுடைய நம்பிக்கையையும் அபிப்ராயத்தையும் தங்கு தடையின்றி வெளிப்படுத்தலும் உரிமை ஒவ்வொரு குடிமகனுக்கும் உண்டு. தன்னுடைய சிந்தனையை வாய்மொழியாகவோ எழுத்தாலோ அச்சாலோ படமாகவோ (அ) வேறெந்த முறையிலோ வெளிப்படுத்தலாம்"**[194]

என்று கருத்துரிமையும் பேச்சுரிமையும் நாட்டின் ஒவ்வொரு குடிமகனுக்கும் உண்டு என்கின்றார் சி.எஸ். தேவ்நாத்.

நாட்டு மக்களைக் காப்பது அரசின் கடமை. தாய் தன் குழந்தைகளைக் காப்பது போன்று குடிகளைக் காக்க வேண்டும் என்பதை,

*"நிரயம் கொள்பவரோடு ஒன்றாது காவல்*
*குழவி கொள்பவரின் ஓம்புமதி"* [195]

என்ற நரிவெரூஉத் தலையாரின் பாடல் சங்கக்காலத்திற்கு மட்டும் அன்று இக்காலத்தில் அரசாள்வோருக்கும் அறிவுறுத்துவதாகவே காணப் படுகின்றது. மேலும் இதை,

**"பெரும்பாலான பொதுமக்கள் இன்புற்று வாழ வேண்டுமென்பதே அவர்களுடைய குறிக்கோள் பொது மக்கள் துன்புறும் படியான செயல்களிலே யார் தலையிட்டிருந்தாலும் சரி அவர்களுக்கு அறிவுரை கூறி நல்வழியிலே நடத்துவதே அக்காலப் புலவர்களின் நோக்கம். இதைச் செய்ய அவர்கள் பின் வாங்குவதே இல்லை.**

**இத்தகைய நிகழ்ச்சிகள் பலவற்றைப் பண்டைத் தமிழ்பாடல்கள் விளக்கி கூறுகின்றன"[196]**

என்ற சாமி சிதம்பரனார் கருத்தும் கவனிக்கத்தக்கது.

மன்னனுக்கு ஆலோசனை வழங்கவும் குடிகளைக் காக்க தம்முடைய கருத்துக்களைத் தெரிவிக்கவும் நாட்டினை நல்வழிப்படுத்த மன்னனுக்கு உறுதுணையாக ஐம்பெருங்குழுவினரும் எண்பேராயத்தாரும் செயல்பட்டு வந்திருக்கின்றனர்.

**"அரசன்பால் தவறு கண்டவிடத்து அவனை இடித்துரைத்துத் திருத்தும் உரிமை அந்நாட்டில் வாழும் சான்றோர்களுக்கு உரியதாயிருந்தது. அக்கருத்தினால் அரசியல் வினைக் குழுவில் நாட்டிலுள்ள பெருமக்களுட் சிலரும் இடம் பெற்றிருந்து குடிமக்களுடைய குறைகளை அவ்வப்போது அறிவித்து வருவாராயினர். ஐம்பெருங்குழுவில் மாசானம் எனக் குறிக்கப்பட்டோர் இத்தகைய சான்றோரேயாவர்"[197]**

என்கின்றார் க. வெள்ளைவாரனார்.

மேலும்,

***"அரியதந்து குடிஅகற்றி***
***பெரியகற்று இசைவளக்கி***
***முந்நீர் நூரப்பன் ஞாயிறு போலவும்***
***பன்மீன் நடுவன் திங்கள் போலவும்***
***பூத்த சுற்றமொடு பொலதுகினது விளங்கி" [198]***

என்ற காஞ்சி பாடலில் மக்கள் பால் கொண்ட கடமையை மன்னனுக்கு உரைத்த பாங்கு நினைக்கத்தக்கது. மேலும்

**"பண்டைத் தமிழ்ப் புலவர்கள் உண்மையை உரைக்க ஒரு பொழுதும் பின் வாங்க மாட்டார்கள். அவர்கள் அரசர்களின்**

**நன் மதிப்பைப் பெற்றவர்கள். அரசர்களும் புலவர்களும் அன்புள்ள நண்பர்களாய் அக்காலத்தில் வாழ்ந்து வந்தனர் அரசர்கள் தவறு செய்யத் துணிந்தால் புலவர்கள் சும்மா விட மாட்டார்கள். அவர்கள் செய்யும் தவறுகளை அறிவில் பதியும்படி, எடுத்துரைத்து அவர்களை நல்வழிப் படுத்துவார்கள்"**[199]

என்ற சங்கப் புலவர்களின் உள்ளத்தை உரைக்கல்லாக்கி காட்டுகிறார் சாமி சிதம்பரனார்.

புலவர்களும் தகுதியில்லாத மன்னனைப் பரிசுப் பொருட்களாகப் புகழ்ந்து பாடி மன்னனின் தவறுகளைச் சுட்டிக்காட்டித் திருத்தாமல் அண்டிப் பிழைப்பவர்களாக இருக்கவில்லை. இதை,

*"பீடுஇல் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்*
*செய்யா கூறுக் கிளத்தல்*
*எய்யாது ஆகின்றுஎம் சிறுசெந் நாவே"* [200]

என்று வன்பரணர் எனும் புலவர் தம் பண்பினைத் தம் பாடலில் வெளிப்படுத்துகிறார். பெண்பால் புலவர்களும் கருத்து மற்றும் பேச்சுரிமைகளில் சிறந்து விளங்கியுள்ளனர் என்பதை ஔவையார், ஒக்கூர் மாசாத்தியார், பொன் முடியார், காக்கை பாடினியார், நச்சொள்ளையார், காவர்பெண்டு, பாரி மகளிர் போன்றோர் பாடிய பாடல்களை உற்று நோக்க இனிது விளங்கும்.

சிலம்பில் கண்ணகியின் வழக்காடு திறனும் சமயக்கணக்கர் தந்திறங்கேட்ட காதையில் மணிமேகலையின் சமய வாதமும் நாட்டின் சாதாரண குடிமக்களும் பேச்சு மற்றும் கருத்து சுதந்திரத்தைப் பெற்றுச் சிறந்தனர் என்பதை எடுத்துக்காட்டுகிறது.

**நட்பு**

இன்பமான வாழ்விற்கு இன்றியமையாத அன்பு. இது உறவுகளுக்கு அப்பாலும் பரந்து விரிந்தது. உறவினரல்லாதவருடன் நெருங்கிப் பழகி அன்பு செலுத்துவது நட்பு ஆகும். சில தருணங்களில் உறவுகளைக் காட்டிலும் மேலானதாகக் காணப்படுவது, மக்களால் பின்பற்றக்கூடியது.

***"உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கு***
***இடுக்கண் களைவதாம் நட்பு"*** [201]

என்று நட்பின் தன்மையினைத் திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். ஆனால்,

**"ஒருவன் தன் சிநேகிதருக்காகத் தன் ஜீவனைக் கொடுக்கிற அன்பிலும் அதிகமான அன்பு ஒருவரிடத்திலுமில்லை"** [202]

என்று நட்பின் உயர்ந்த பண்பினைப் பறைசாற்றுகிறது புனித விவிலியம்.

நட்பில் பேதமில்லை. அரசனும் ஆண்டியும் சமமானவர்களாகவே எண்ணப்படுகின்றார்கள். உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற பிரிவினைகளைக் கடந்து, காணாத நிலையிலும் தன்னுயிரை நட்புக்காகக் கொடுக்கத் துணிந்த பிசிராந்தையார் கோப்பெருஞ்சோழனின் நட்பினைக் கண்டு வியப்புறுவதாகப் பொத்தியார் கூறுவதை,

***"இசைமரபு ஆக நட்புக் கந்தாக***
***இனையதோர் காலை ஈங்கு வருதல்***
***'வருவன்' என்ற கோனது பெருமையும்***
***அதுபழு தின்றி வந்தவன் அறிவும்***
***வியத்தொறும் வியத்தொறும் வியப்புஇறந்தன்றே;"*** [203]

என்ற பாடலில், மன்னனுக்கும் புலவர்க்கும் இடையே உள்ள நட்பின் ஆழத்தை விதந்தோதுவதை அறிய முடிகிறது.

உயிரோடு இருக்கும்போது நண்பனின் துயர் களைவது ஒருவகை. இறந்தபின்பும் நண்பனின் இடுக்கண்ணைத் தீர்ப்பது மற்றொரு வகை. இதை,

*"நிலைபெறு நடுகல் ஆகியக் கண்ணும்*
*இடம் கொடுத்து அளிப்ப மன்ற உடம்போடு*
*இன்னுயிர் விரும்பும் கிழமைத்*
*தொன்னட்பு உடையார் தம்முழைச் செலினே"* [204]

என்று பொத்தியார் பாடுகின்றார்.

நண்பன் பாரி இறந்தபிறகு ஆதரவற்ற நிலையில் இருக்கும் பாரியின் பிள்ளைகளுக்குத் திருமணம் செய்விக்க கபிலர் நண்பரின் பிள்ளைகளைத் தம்பிள்ளைகள் என்று அறிமுகப்படுத்தியதை,

*"முல்லைக்கு ஈத்த செல்லா நல்லிசைப்*
*படுமணி யானைப் பறம்பிற் கோமான்*
*நெடுமாப் பாரி மகளிர்; யானே*
*தந்தை தோழன்; இவரென் மகளிர்;"* [205]

என்ற பாடல் வழி அறியமுடிகிறது. மேலும்,

*"வினைபதச் சீறிடம் நோக்கி வளைகதிர்*
*வல்சி கொண்டளை மல்க வைக்கும்*
*எலிமுயன்று அனைய ராகி உள்ளதம்*
*வளன்வலி யுறுக்கும் உளமி லாளரொடு*
*இயைந்த கேண்மை இல்லா கியரோ;*
*கடுங்கண் கேழல் இடம்பட வீழ்ந்தென*
*அன்றவண் உண்ணாது ஆகி வழிநாள்*
*பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்து*
*இருங்களிற்று ஒருத்தல் நல்வலம் படுக்கும்*
*புலிபசித் தன்ன மெலிவில் உள்ளத்து*

*உரனுடை யாளர் கேண்மையோடு*
*இயைந்த வைகல் உளவா கியரோ"* [206]

என்ற பாடலில் இருவகை நட்பினை எடுத்துக் காட்டி எத்தகைய நட்பு சிறந்தது என்பதைச் சோழன் நல்லுருத்திரன் பாடியதையும் அறியமுடிகிறது.

சங்க இலக்கிய அகத்திணைப் பாடல்கள் தலைவன் தலைவி இருவருக்கும் இடையே இருக்கும் அன்பின் ஆழத்தை நட்பு என்ற சொல் கொண்டே விளக்குவதும் எண்ணத் தகுந்தது. இதை,

*"குறுங்கால் அன்னம் குவவுமணற் சேக்கும்*
*கடல்சூழ் மண்டிலம் பெறினும்*
*விடல் சூழலனால் நின்னுடை நட்பே!"* [207]

என்ற பாடலில், கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தையே பெறுவதாயினும் தலைவி மீது கொண்டுள்ள நட்பை (காதலை)க் கைவிட மாட்டேன் என்று தலைவன் கூறுவது நட்பின் ஆழத்தைப் புலப்படுத்துகின்றது.

மேலும்,

*"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரளவின்றே, சாரல்*
*கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு*
*பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"* [208]

என்ற பாடலில் தலைவி தலைவன் மீது கொண்டிருக்கக் கூடிய நட்பின் அகலத்தையும், ஆழத்தையும், உயரத்தையும் அறிந்து கொள்ள முடிகிறது.

சங்க காலத்தில் தலைவன் தலைவி இருவரும் ஒருமித்த அன்புடையவர்களாக இருந்த காரணத்தால் குடும்பம் சிதையாமல் காக்கப்பட்டது. இல்லறம் இனித்தது. இக்காலக் காதலர்களிடையே ஒத்த அன்பு நிலை பெற்றிருப்பது கேள்விக் குறியாகவே காணப்படுகிறது. காதல்

தோல்வியில் முடிவதற்கும் குடும்பங்கள் சிதைந்து, கணவன் மனைவி பிரிந்து போவதற்கும் ஒத்த அன்பு குறைபாடே முதன்மைக் காரணமாகும்.

நாகரிகமுடையவர்கள் முன்பு கொண்டிருந்த நட்பின் காரணமாக நஞ்சினைப் பரிசாக அளித்தாலும் அதை மனமுவந்து ஏற்றுக்கொள்வார்கள் என்பதை,

*"முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்*
*நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்"* [209]

என்ற நற்றிணைப் பாடலும் இதற்கு வலு சேர்க்கும் விதமாக,

*"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க*
*நாகரிகம் வேண்டுபவர்"* [210]

என்று திருவள்ளுவர் குறிப்பிடுகிறார்.

ஒருவனோடு நட்புக் கொண்ட காலத்தில் அவனைப் பற்றிய இரகசியத்தை அறிந்து கொண்டு அந்த நட்பு முறிந்த பொழுது அதை மற்றவர்க்குக் கூறுவோர் பெருமையுடையவர் அல்லர் என்பதை,

*"பொருந்திய கேண்மையின் மறைஉணர்ந்து, அம்மறை*
*பிரிந்தக்கால் பிறர்க்குஉரைக்கும் பீடிலார் தொடர்புபோல்,"* [211]

என்ற கலித்தொகைப் பாடலடிகள் வழி நட்பினைக் கற்பினைப் போல எண்ணினர் என்பதை உணர முடிகிறது.

**ஒன்றாகக் கூடும் உரிமை**

தீங்கு செய்யும் நோக்கத்தோடு அல்லாமல் மக்கள் அனைவரும் ஓரிடத்தில் ஒன்றாகக் கூடுவதற்கு உரிமை பெற்றவர்களாவர். தத்தம் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளவும் எண்ணங்களைப் பகிர்ந்து கொள்ளவும், புரிந்து கொள்ளவும் இது வழி வகுத்தது. முடியாட்சி காலத்தில்

அரசுக்கு விரோதமாகச் செயல்படும் நோக்கில் மக்கள் கூடினர் அல்லர். இதை,

*"புலவுமணல் பூங்கானல்*
*மாமலை அணைந்த கொண்மூப் போலவும்*
*தாய்முலை தழுவிய குழவி போலவும்"* [212]

எனும் அடிகள் காவிரிப்பூம்பட்டினத்தில் மேகம் போன்று மக்கள் கூடினர் என்பதை எடுத்துக் காட்டுகின்றது. மக்களாட்சியில் இவ்வுரிமை அடிப்படை உரிமைகளாக மலர்ந்தது. இந்திய அரசியலைமைப்புச் சட்டம் பிரிவு (19) (1)(ஆ) ஆனது குடிமக்கள் ஆயுதங்களின்றி அமைதியாகக் கூடுவதற்கு உரிமை அளித்திருக்கின்றது.

**விரும்பிய இடங்களுக்குச் செல்லும் உரிமை**

தன் விருப்பப்படி நாட்டில் எங்கு வேண்டுமானாலும் விரும்பிய இடங்களுக்குச் சென்று வரும் உரிமை அனைவரும் பெற்று மகிழ்ந்தனர். எவ்விதக் கட்டுபாடுகளின்றி மக்கள் இயங்கினர். அவ்வாறு கட்டுப்படுத்த முயற்சிப்பது முறையற்ற சிறை வைப்பினை (wrongfull detention) ஒக்கும். திணைச் சார்ந்த மக்களின் வாழ்க்கை முறையில் ஒரு நிலப்பகுதியில் இருந்து மக்கள் வேறொரு நிலப்பகுதிக்குக் குடிபெயர்ந்திருப்பதையும் அறிய முடிகிறது. இதை,

**"ஒரு நிலத்தில் வாழ்வோர் இன்னொரு நிலத்திற் சென்று குடியேறி வாழ்ந்தால் அவர்கள் தாம் வாழும் இடத்திற்குரிய திணைப்பெயரைப் பெற்றார்கள்"**[213]

என்கின்றார் ந.சி. கந்தையா அவர்கள். காவிரிப்பூம்பட்டினத்தில் பல நாட்டினரும் கலந்து உள்ளம் மகிழ்ச்சிப் பொங்க வாழும் குறைவுபடாத சிறப்பினைப் பெற்று விளங்கினர். இதனை,

*“பல்ஆயமொடு பதிபழகி*
*வேறுவேறு உயர்ந்த முதுவாய் ஒக்கல்*
*சாறுஅயர் மூதூர் சென்றுதொக்கு ஆங்கு*
*மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்*
*புலம்பெயர் மாக்கள் கலந்துஇனிது உறையும்*
*முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்”* [214]

என்ற பட்டினப்பாலைப் பாடல் வரிகள் வழியாக அறிய முடிகின்றது.

*“நிதியம் துஞ்சும் நிவந்துஓங்கு வரைப்பின்*
*பதிஎழல் அறியாப் பழங்குடி கெழீஇ*
*வியல்இடம் பெறாஅ விழிப்பெரு நியமத்து”* [215]

என்ற பாடலில் நன்னனின் ஓங்கிய மதில்களையுடைய செல்வம் நிறைந்த ஊரிலிருந்து இடம் பெயர்தலை அறியாத பழங்குடிகள் வாழ்ந்து வந்ததை மலைபடுகடாம் எடுத்துக் காட்டுகின்றது. மேலும்,

> **“போர்களில் வெற்றி கிடைத்ததன் விளைவாக நாட்டின் ஒரு பகுதியிலிருந்து மற்றொரு பகுதிக்கு இடம் பெயரும் வாய்ப்பு ஏற்பட்டது. இதையொட்டி பொருளாதார சமுதாய உறவுகளில் புதிய தோற்றங்கள் ஏற்பட்டன”**[216]

என்ற நீலகண்ட சாஸ்திரி அவர்களின் கூற்றும் எண்ணத்தக்கது.

“இந்திய நிலவரை முழுவதும் சுதந்திரமாக உலவிடும் உரிமை”யை இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு **19 (1)** (ஈ)

“ஒவ்வொரு நாட்டின் எல்லைக்குள் சுதந்திரமாக எங்கும் சென்று வர ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு” தன் நாடு உட்பட வேறு எந்த நாட்டை விட்டு வெளியே செல்லவும், தன் நாட்டிற்குத் திரும்பவும் ஒவ்வொருவரும் உரிமை பெற்றெவர்கள்” என்று அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனம் உறுப்பு **(13)** எடுத்துக் கூறுகின்றது.

தற்காலத்தில் இயற்றப்பட்ட சட்டங்கள் மேற்கண்ட உரிமைகளை வலியுறுத்தினாலும் சட்டங்களற்ற சங்க காலத்தில் மக்கள் அத்தகைய உரிமைகளைப் பெற்றிருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

## தொழில்கள்

மனிதன் தோன்றிய காலத்தில் இயற்கையாகக் கிடைத்த காய்கறிகளையும் கிழங்கு வகைகளையும் கனிகளையும் உணவாக்கக் கொண்டிருந்தான். உணவின் பொருட்டு வேட்டையாடுதலைத் தொழிலாக மேற்கொண்டான். உலகின் முதன் முதலில் தோன்றிய தொழிலாகவும் வேட்டையாடுதலைக் கொள்ளலாம். பின்பு நிலப்பகுதிகளுக்கு ஏற்ப தொழில்கள் அமைந்திருந்தன. முதல்லை நிலப்பகுதியில் உழவுத் தொழிலும், குறிஞ்சி நிலப் பகுதியில் வேட்டையாடுதலும், நெய்தல் நிலத்தில் மீன் பிடித் தொழிலையும் செய்தனர். வாழ்க்கையின் பரப்பு பரந்து விரிந்த போது பல்வேறு தொழில்கள் மேற்கொள்ளப்பட்டன. இத்தொழில்களைக் கொண்டு சாதி முறைமைகள் உருவாகின. உயிர் வாழ்வதற்கு அடிப்படை தேவையான உணவு உற்பத்தி செய்பவர்கள் உழவர்கள் எனப்பட்டனர். உடை தயாரிப்போர் நெசவாளிகளாகவும், பிற தொழில்களை மேற்கொள்வோர் செய்யும் தொழிலுக்கேற்ப தச்சர், கருமார், வண்ணான், பொற்கொல்லர் எனப் பெயரிட்டும் அழைக்கப் பெற்றனர்.

> **“அக்காலத் தமிழ் மக்கள் தங்கள் பிழைப்புக்கான ஏதாவதொரு தொழிலினைத் தங்களுக்குரியதாக மேற்கொண்டு உழைத்து வந்தார்கள்”**[217]

என்பர் கா. வெள்ளைவாரனர்.

பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் விரும்பிய தொழிலைச் செய்வதற்கு அனைவரும் உரிமை பெற்றிருந்தனர். அரசர், வணிகர், அந்தணர், வேளாளர்

என்ற நான்கு வகைப் பிரிவினர்க்குத் தொழில்கள் வகுக்கப்பட்டிருந்தன. ஏனையோர் எந்தத் தொழிலையும் செய்து வந்தனர். காலப்போக்கில் அவர்கள் செய்து வந்த தொழிலே குலத் தொழிலாக அமைந்து சாதி உருவாக்கத்திற்கு வழியமைத்தன.

> **"மக்களுடைய எண்ணம் சிந்தனை செயல் ஆகியவைகள் பலவாராயினும் வாழ்க்கையைப் பொருத்த வரையில் அவர்களுடைய குறிக்கோள் ஒன்று தான். நாம் இவ்வுலகில் நமக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் தேடிக் கொள்ள வேண்டும் எந்நாளும் இன்பத்தில் மூழ்கித் திளைக்க வேண்டும். இவ்வெண்ணம் எல்லோர் உள்ளத்திலும் இயற்கையாகவே குடிக் கொண்டிருக்கின்றது. இதுவே எல்லார் உடைய குறிக்கோளும், இந்த எண்ணம், குறிகோள்தான் அவர்களை உழைக்க செய்கின்றது. ஏதேனும் ஒரு தொழிலிலே ஈடுபடச் செய்கின்றது. உயிர் வாழ வேண்டும் என்னும் ஆசைக்கே இவ்வெண்ணம் தான் அடிப்படை"** [218]

என்பர் சாமி சிதம்பரனார்.

நாகரிகமும், வளர்ச்சியும் மனிதனை மனிதன் ஆளக்கற்றுக் கொடுத்தது தொழில் பாகுபாடுகள் கற்பிக்கப்பட்டது. மனிதர்களிடையே ஏற்றத்தாழ்வுகளும் உருவாகின. உழுவார் உலகத்தார்க்கு ஆணி என்பர் திருவள்ளுவர். மருத நிலப்பரப்பில் வாழ்வோருக்கு உழவே முதன்மையான தொழிலாக அமைந்தது.

### பெண்கள் தொழில் செய்யும் உரிமை

உழவருக்குத் துணையாக உழத்தியர் எனப்படும் உழவனின் மனைவி வேளாண்மையில் பல்வேறு வகையில் உதவியாக இருந்தனர்.

*"கொண்டைக் கூழைத் தண்தழைக் கடைசியர்*
*சிறுமாண் நெய்தல் ஆம்பலொடு கட்கும்*
*மலங்குமிளிர் செறு"* [219]

என்ற புறப்பாடல் உழத்தியர் களைகளைக் களைந்தனர் என்று கூறுகின்றது. மேலும்,

*"ஆள்இல் பெண்டிர் தாளின் செய்த*
*நுணங்குநுண் பனுவல்"* [220]

என்ற பாடலில் பெண்கள் நூல் நூற்கும் தொழிலினைச் செய்தனர் என்பதை அறிய முடிகிறது. இதையே,

**"கணவனையிழந்த நிலையில் ஆதரவற்ற இம்மகளிர் பிறருடைய உதவியினை எதிர்பாராது பருத்தி பஞ்சினை நூலாக நூற்றுத் தம் குடும்பத்தைப் பாதுகாத்தனர். இவர்கள் தம் குடும்ப வருவாய் குரிய தொழிலாக நூல் நூற்றலை மேற்கொண்டமையால் பருத்திப் பெண்டிர் என்ற பெயரால் தமிழிலக்கியங்களிற் குறிக்கப் பெற்றனர்"** [221]

என்பர் க. வெள்ளைவாரனார்.

*"முள்எயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த*
*அகன்பெரு வட்டி நிறைய மனையோள்*
*அரிகால் பெரும்பயிறு நிறைக்கும்"* [222]

என்ற ஐங்குறுநூறு பாடலில் ஆறு குளம் ஏரிகளில் இருந்து மீன் பிடித்து வந்து பெண்கள் விற்றனர் என்பதைக் காட்டுகின்றது.

**மண்பாண்டத் தொழில்**

உணவினைச் சமைப்பதற்கும் சேமிப்பதற்கும் மண்பாண்டங்களைப் பயன்படுத்தினர். அகழ்வாராய்ச்சியின் மூலம் புதைபொருள் ஆராய்ச்சியாளர்களின் ஆராய்ச்சி முடிவுகளில் தண்ணீர் ஊற்றி வைப்பதற்குக் குடுவைகளும், உண்கலன்களும், பானைகளும் பயன்படுத்தப்பட்டதையும், அவைகளின் மேற்புறத்தில் வண்ணப் பூச்சினைப் பூசி உருவங்களை வரைந்திருந்தனர் என்பதையும் அறிய முடிகிறது. மண்கலம் செய்வோனான குயவனைக் கலஞ்செய்கோ என்றழைத்தனர். இதை,

*"கலம்செய் கோவே, கலம்செய் கோவே,*
*இருள்திணிந் தன்ன குரூஉத்திரள் பரூஉப்புகை*
*அகல்இரு விசும்பின் ஊன்றும் சூளை*
*நனந்தலை மூதூர்க் கலம்செய் கோவே,"* [223]

என்று புறநானூறு கூறுகின்றது. இவர்கள் 'வோர்கோ' எனவும் சிறுவர்களை வேள்கோச் சிறாஅர் என்றும் அழைக்கப்பட்டனர். இதை

*"வேள்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த"* [224]

என்ற பாடல் வரிகள் மூலம் அறிய முடிகிறது.

மண் பாண்டங்கள் வனைவதற்குப் பெரிய சக்கரங்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. குயவன் வீட்டுச் சிறுவர்கள் அத்தொழிலில் ஈடுபடுத்தப்பட்டனர் என்பதும் நாளடைவில் அவர்கள் அதனைக் கற்றுத் தேர்ந்து குலத்தொழிலாக மேற்கொண்டனர் என்பதும் உணர முடிகிறது. உயிர் வாழ்வதற்கு மட்டும் இல்லாமல் உயிர் நீங்கிய பிறகும் புதைப்பதற்கான தாழியினையும் அவர்கள் செய்தனர். இதை,

*“கொடிநுடங்கு யானை நெடுமா வளவன்,*
*தேவர் உலகம் எய்தினன்; ஆதலின்,*
*அன்னோற் கவிக்கும் கண்ணகன் தழி,”* [225]

என்ற புறப்பாடல் வழியாக இறந்தவர்களைத் தாழியில் இட்டுப் புதைக்கும் பழக்கம் இருந்ததையும் அறியமுடிகிறது. மண்பாண்டங்களை நெருப்பினால் சுட்டு உறுதிப்படுத்தியுள்ள செய்தியினை,

*“சுடுமண் தசும்பின் மத்தம் தின்ற”* [226]

என நற்றிணைக் கூறுகிறது.

**கொல்லர்**

இரும்பினைக் காய்ச்சி அடித்து உருக்கிப் படைகலன்கள் அணிகலன்கள் முதலியவற்றைச் செய்பவர் கொல்லர் என்று அழைக்கப்பட்டனர். இதை

*“வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே,”* [227]

என்றும்,

*“இரும்புசெய் கொல்லன் வெவ்வுலைத் தெளித்த”* [228]

எனவும்

*“நல்ல பெருஞ்தோ ளோயே கொல்லன்*
*எறிபொற் பிதிரின் சிறுபல் காய”* [229]

எனவும்

*“பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து*
*கொல்துறைக் குற்றில மாதோ; என்றும்”* [230]

*“நல்இணர் வேங்கை நறுவீ கொல்லன்”* [231]

என அகநானூறும்

*"வன்புலம் இறந்த பின்றை மென்தோல்*
*மிதிஉலைக் கொல்லன் முறிகொடிற்று அன்ன"* [232]

எனவும்

*"இரும்பு வடித் தன்ன மடியா மென்தோல்*
*கருங்கை வினைஞர் காதல்அம் சிறாஅர்"* [233]

என்றும்,

*"பெருங்கை யானைக்கொடுந்தொடி படுக்கும்*
*கடுங்கைக் கொல்லன் இரும்பு விசைத்துஎறிந்த"* [234]

என வரும் பாடலடிகளில் இரும்பினை உருக்கி கருவிகள் செய்யும் கொல்லர் தொழில் சிறப்புற்ற விளங்கியதை உணர்த்துகிறது.

**தச்சுத்தொழில்**

மாத்தைத் தேர்ந்தெடுத்து அறுத்து, இழைத்து ஏர், சக்கரம், தேர் போன்ற மரத்தால் ஆன பொருட்களைச் செய்யும் தொழிலுடையோர் தச்சர் எனப்பட்டனர். கோங்கு, வேங்கை, ஈட்டி, கருங்காலி போன்ற மரங்கள் உறுதித்தன்மை பொருட்டு தச்சுத் தொழிலுக்குப் பயன்படுத்தப்பட்டது. தச்சுத் தொழிலைச் செய்பவன் கம்மியன் என்றழைக்கப்பட்டான். வேலைப்பாடுகள் நிறைந்த இரட்டைக் கதவுகளும் உத்தரக்கட்டையும் குவளை போன்ற மலர் வடிவங்கள் செதுக்கப்பட்டும் புதிய பிடிகளோடு தாழ்பாள்களையும் செய்து இருந்தனர். இதை,

*"பரு இரும்பு பிணித்துச் செல்வரக்கு உரீஇ*
*துணைமாண் கதவம் பொருத்தி இணைமாண்டு*
*நாளொடு பெயரிய கோளமை விழுமரத்துப்*
*போது அவிழ் குவளைப் புதுப்பிடி காலமைத்துத்*
*தாழொடு குயின்ற போரமை புணர்ப்பின்*
*கைவல் கம்மியன் முடுக்கலின் புரைதீர்ந்து*
*ஐயவி அப்பிய நெய்யணி நெடுநிலை"* [235]

என்ற பாடலடிகள் கொண்டு தச்சனின் வேலைப்பாடும் தமிழர் தம் கலையுணர்வும் வெளிப்படுத்தப்படுகின்றது. மேலும்,

*"உருவ வான்மதி ஊர்கொண் டாங்குக்*
*கூர்உளி பொருத வடுஆழ் நோன்குறட்டு*
*ஆரம் சூழ்ந்த அயில்வாய் நேமியொடு"* [236]

என்று சிறுபாணாற்றுப்படையும்

*"தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த"* [237]

எனப் பெரும்பாணாற்றுப்படையும்

*"எண்தேர் செய்யும் தச்சன்"* [238]

என்ற பாடல் வரியில் மாதம் ஒன்றுக்கு எட்டுத் தேர் செய்யும் ஆற்றல் பெற்ற தச்சனையும்,

*"மரம்கொல் தச்சர் கைவல் சிறாஅர்"* [239]

எனப் புறநானூறும் எடுத்துக்காட்டுகிறது.

**பிற தொழில்கள்**

மதுரையில், சங்கை அறுத்து வளையல் செய்வோர், மணிகளைத் துளையிடுவோர், பொன்னை உருக்கி ஒளி பொருந்திய அணிகலன்களைச் செய்வோர் பொன்னை உரைத்து அதன் தகுதியைக் காண்போர், ஓவியத் தொழில் செய்வோர், நெய்தல் தொழில் செய்வோர் என பல்வகைப்பட்ட தொழில்களைச் செய்யும் தொழிலாளர்கள் அங்கு கூடியிருந்தனர் என்பதை மதுரைக்காஞ்சியும், பாய் முடைதல், தையல், தோல் பதனிடும், செருப்பு தைத்தல், தோலுரை செய்தல், கூடை முடைதல், பின்னுதல், விளையாட்டு கருவிகள் செய்தல், அணிகலன் செய்தல், வண்ணம் பூசுதல், வண்ண ஓவியம் வரைதல், மண்பானை செய்தல், நறுமனப்பொருள் கூட்டுதல் சுண்ணம் இடித்தல், செக்காட்டுதல், ஆடைவெருத்தல், மலைகட்டுதல்,

முத்துக் குளித்தல், உப்பு விளைவித்தல், கள்ளிறக்குதல் ஆடுமாடு மேய்த்தல், சாணைக்கல் செய்தல், இசைக்கருவிகள் செய்தல் போன்ற தொழில்கள் நடைபெற்ற வந்திருக்கின்றன என்பதை சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகின்றது எனவே,

> **"பிறவையினால் மட்டும் ஒருவன் ஒரு தொழிலைத் தொடர்ந்து நடத்த வேண்டும் என்ற அவசியம் ஏற்படவில்லை. தங்களுடைய இயல்புக்கு ஏற்றவாற ஒவ்வொருவனும் தன்னுடைய தொழிலை ஏற்றுக்கொள்ள வாய்ப்பு இருந்தது"[240]**

என்ற நீலகண்டன் அவர்களின் கூற்றினை ஒப்பு நோக்க இனிது விளங்கும்.

> **"குடிமகன் ஒவ்வொருவரும் எந்தத் தொழிலைச் செய்வதற்கும் வர்த்தகம் அல்லது வணிகம் எதையும் செய்வதற்கும் உரிமை உண்டு"**

என இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு 19 (1) (எ) ஆனது தொழில் செய்யும் உரிமைக்கு பாதுகாப்பு அளிக்கின்றது.

சங்க காலத் தமிழ் மக்களிடையே பல்வேறு தொழில் செய்வோர் எவ்வித இடையூறும் இன்றி தொழிலுரிமையைப் பெற்று வியங்கியதையும் பொருளாதாரத்தைப் பெருக்கிக் கொண்டதையும் காட்டுகிறது.

அமைதியான வாழ்வு, வாழ்வியல் மாண்பு, நோய்யற்ற வாழ்வு, பாதுகாப்பு, உயிர்களைப் போற்றும் பண்பு, காதல், இல்லறம், உடன் போக்கு, திருமணம், ஏறுதழுவுதல், தனிக்குடும்பம், உணவு, உறைவிடம், கருத்துரைத்தல், பொழுதுபோக்கு, வீரம், போர், அரசாட்சி, நம்பிக்கை, சடங்கு, தொழில் இவை போன்ற வாழ்வியல் கூறுகள் யாவும் சங்க கால மக்களின் உரிமைகளாக அமைந்து சிறந்தன.

## பொழுது போக்கு

காதலையும் வீரத்தையுமே உயிர் பண்பாகக் கொண்டு இயங்கிய பண்டைத் தமிழ்ச்சமூகம் இன்பம் தரும் நிகழ்ச்சிகளைக் கண்டும், பங்கு பெற்றும், மகிழ்ந்திருக்கின்றனர். நாள் முழுவதும் உழைத்துக் களைத்த உடலுக்கும் உள்ளத்திற்கும் உற்சாகமூட்டக் கூடிய செயல்களில் ஈடுபட்டு பொழுதினை இன்பமாகக் கழித்தத்தையும் பொழுது போக்கிற்காக வீரர்கள் தம்முள் சண்டையிட்டுக் கொண்டு வீரத்தைப் பரிசோதித்த மறவர்களின் செயலை சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. மற்போர் வீரர்கள் தங்களுக்குள் கையாலும் படைக்கருவிகளாலும் போர் செய்து தங்களது பலங்களைச் சோதித்தறிந்து கொண்டதோடு ஒருவர் மற்றொருவரிடம் தோல்வியடையாததால் தம் வலிமையைக் காட்டும் பொருட்டு அருகிருந்த பனை மரங்களின் உச்சியை நோக்கி கவன் கெண்டு கல்லெறிந்து பொழுது போக்கினார்கள். இதை,

*"கையினும் கலத்தினும் மெய்யுறத் தீண்டிப்*
*பெருஞ்சினத்தால் புறக்கொடாஅது*
*இரும்செருவின் இகல்மொய்ம்பினோர்*
*கல்லெறியும் கவண்வெரீஇப்*
*புள் இரியும் புகர்ப்போந்தை"* [241]

என்றும்,

கடலில் நீராடி பின் கடலின் உப்பு மாசு போவதற்காகக் காவிரியில் நீராடியும் கடற்கரையில் நண்டுகளைப் பிடித்தும், மணலில் பாவை செய்தும் ஐம்பொறிகளும் மகிழ்ச்சியடையும் வண்ணம் பகற்பொழுதெல்லாம் விளையாடி மகிழ்ந்தனர். இதை,

*"தீது நீங்கக் கடல்ஆடியும்*
*மாசுபோகப் புனல்படிந்தும்*
*அலவன் ஆட்டியும் உரவுத்திரை உழக்கியும்*

*பாவை சூழ்ந்தும் பல்பொறி மருண்டும்*
*அகலாக் காதலொடு பகல்விளையாடிப்*
*பெறற்குஅரும் தொல்சீர்த் துறக்கம் ஏய்க்கும்"* [242]

என்று, இவர்கள் பெற்ற இன்பம் சுவர்கத்தில் பெறும் மகிழ்ச்சியை ஒத்திருந்தது. பகற்பொழுதை இன்பமாகக் கழித்தது போக இரவு நேரத்திலும் பாடல்களைக் கேட்டும் நாடகங்களைப் பார்த்தும் இரவின் நிலவுக் காட்சியினைக் கண்டும் இன்புற்று சோர்வுற்ற நிலையில் கடையாமத்தில் கண்ணுறங்கியமையை,

*"கொடுந்திமில் பரதவர் குரூஉச்சுடர் எண்ணவும்*
*பாடல் ஓர்த்தும் நாடகம் நயந்தும்*
*வெண்ணிலவின் பயன்துய்த்தும்*
*கண் அடைஇய கடைக்கங்குலான்"* [243]

என்ற பாடல் உணர்த்துகின்றது.

மக்கள் வாடா வள்ளி என்ற கூத்தை ஆடி, பொழுது போக்கினர். இதை,

*"வாடா வள்ளியின் வளம்பல தரூஉம்*
*நாடு பல கழிந்த பின்றை"* [244]

என்று பெரும்பாணாற்றுப்படையும், மருத நிலத்து மகளிர் நெய்தல் நிலத்து கடற்கரை மலையில் சிறுவீடுகட்டி விளையாடி மகிழ்ந்தனர் என்பதை,

*"இளையோர் வண்டல் அயரவும் முதியோர்"* [245]

எனப் பொருநர் ஆற்றுபடையும், திருவோணாகிய நன்னாளில் மறவர்கள் யானைப் போர் காண விரும்பு களிறுகளை மோதவிட்டு கண்டுகளித்தினர். பெண்கள் பரந்த சுனையில் அருவியில் நீண்ட நேரம் விளையாடி மனம் போல் பாடி மகிழ்ந்திருந்தனர் என்பதை,

*"அவிர்துகில் புரையும் அவ்வெள் அருவி*
*தவிர்வுஇல் வேட்கையேம் தண்டாது ஆடிப்*
*பளிங்குசொரிவு அன்ன பாய்சுனை குடைவுழி*
*நளிபடு சிலம்பில் பாயம் பாடி"* [246]

என்று குறிஞ்சிப்பாட்டும்,

ஆண்களும் பெண்களும் தங்களை ஒப்பனை செய்து கொண்டு தெருவில் அமைந்த பொது மன்றத்தில் குரவை கூத்தாடி மகிழ்ந்தனர். இதை,

*"மயில்எருத்து உறழ்அணி மணிநிலத்துப் பிறழப்*
*பயிலிதழ் மலருகண்*
*மாதர் மகளிரும் மைந்தரும் மைந்துற்றுத்*
*தாதெரு மன்றத்து அயர்வர் தழூஉ"* [247]

என்று கலித்தொகையும்

*"மனைஉறை கோழி மறனுடைச் சேவல்*
*போர்புரி எருத்தம் போலக் கஞலிய"* [248]

என்ற அகநானூறு பாடலடிகளில் மக்கள் இரு சேவல்களைச் சண்டையிட வைத்து வேடிக்கைப் பார்த்துப் பொழுது போக்கியதையும் அறியலாகிறது.

**"சங்க காலத்தில் சிறுவர் முதல் பெரியோர் வரை ஆடவரும் பெண்களும் ஏதேனும் ஒரு பொழுது போக்கில் இன்பம் கண்டுள்ளனர். விளையாட்டும் ஆடலும் பாடலும் இன்ப உரையாட்டும் எல்லாருடைய உள்ளங்களையும் கவர்ந்துள்ளன"** [249]

எனும் சி. இலக்குவனார்.

உழைப்போர்க்கு ஓய்வு இன்றியமையாதது. ஓய்வு நேரத்தை இன்பமாகக் கழித்துப் பல்வேறு பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டு புத்துணர்ச்சிப் பெற்று அடுத்த வேலை செய்ய

தங்களைத் தயார்படுத்திக் கொண்டதோடு வாழ்வினைப் பொருள் நிறைந்ததாக மாற்றிக் கொண்ட தமிழ் மக்களின் வாழ்வியல் நெறிகளை எண்ணிப் பார்க்கத்தக்கது.

## தொகுப்புரை

- ❖ பிறந்த ஒவ்வொருவரும் வாழும் உரிமை படைத்தவர்கள்.
- ❖ முடியாட்சி காலத்தில் மக்கள் அமைதியான வாழ்வுரிமையினைப் பெற்று இருந்தனர்.
- ❖ மரியாதையுடனும் கண்ணியத்துடன் வாழும் வாழ்வுரிமையினைப் புலவர்கள் அறிவுறுத்தினர்.
- ❖ மக்கள் நோயின்றி வாழும் உரிமையினைப் புலவர்கள் அறிவுறுத்தினர்.
- ❖ சங்க கால மக்கள் அனைத்து உயிர்களையும் தன்னுயிர் எனக் கருதினர்.
- ❖ ஆண்களோடு பெண்களும் வீரம் நிறைந்த நெஞ்சத்தவராகக் காணப்பட்டனர்.
- ❖ சமூகத்தில் அனைவரும் காதலிக்கும் உரிமையைப் பெற்று இருந்தனர்.
- ❖ சங்க காலத்தில் தனிக்குடித்தனம் மிகுதியாக இருந்தாலும் அனைவரும் ஒற்றுமையுடன் இருக்கும் நிலை காணப்பட்டது.
- ❖ குடிமக்களைக் காக்கும் முறை குறித்துப் புலவர்கள் மன்னனுக்கு எடுத்துரைத்து நல்வழிப்படுத்தினர்
- ❖ மன்னனும் கடையெழுவள்ளல்களும் மக்களும் கொடைப்பண்பில் சிறந்து விளங்கினர்.
- ❖ உணவு பெறும் உரிமை புலவர்களால் வயியுறுத்தப்பட்டு நிலை நாட்டப் பெற்றது.

- பலதரப்பட்ட நம்பிக்கைகள் சங்ககாலத்தில் இருந்தது என்பது அறியப்பட்டது.
- **பலதரப்பட்ட வழிபாட்டுரிமையை** மக்கள் பெற்றிருந்தனர்.
- நாடாள்வோருக்கு இல்லறத்தின் சிறப்பு குறித்துப் புலவர்களால் இடித்துரைக்கப் பெற்றது. தலைவனும் தலைவியும் இல்லறத்தில் சிறந்து விளங்கினர்.
- திருமண உரிமையைப் பல வழிகளில் பெற்றுச் சிறந்தனர்.
- ஒரிடத்தில் அமைதியாக ஒன்றாகக் கூடி இன்பம் துய்த்தனர்.
- விரும்பிய இடங்களுக்கு செல்லும் உரிமையை மக்கள் பெற்றிருந்தனர்.
- ஆண்களும் பெண்களும் தொழில் செய்யும் உரிமை சிறந்து விளங்கினர்.
- சங்க காலத்தில் பலவிதமான தொழில்கள் நடைப்பெற்று வந்தன.
- மக்கள் களைப்புத் தீர பொழுதுபோக்கி விளையாடி மகிழ்ந்தனர்.

அமைதி, மாண்பு, நோயற்றவாழ்வு, பாதுகாப்பு, உயிர்களைப் போற்றும்பன்பு, காதல், இல்லறம், திருமணம், இடப்பெயர்ச்சி, தனிக்குடும்பம் உணவு, உறைவிடம், கருத்துரைத்தல், பொழுது போக்கு, வீரம், போர், அரசாட்சி, நம்பிக்கை, தொழில், இவை போன்ற வாழ்வியல் கூறுகள்யாவும் சங்க கால மக்களின் வாழ்வியல் உரிமைகளாக அமைந்து சிறந்தன.

# குறிப்புகள்

1. வெள்ளைவாரனன், க., சங்க காலத் தமிழ் மக்கள், ப.22.
2. நீலகண்டன், தமிழர் வரலாறும் பண்பாடும், ப.61.
3. புறம். 58:14–28.
4. மேலது, 45:5–9.
5. சண்முகசுப்பிரமணியம், மா., சட்டத்தமிழ், ப.257.
6. புறம். 44:5–9.
7. குறுந். 91:6–8.
8. மேலது, 292:6–9.
9. புறம். 18:22–30.
10. மேலது, 206:6–13.
11. மேலது, 197:5–18.
12. குறள். 734.
13. வேங்கடாச்சாரி, ஏ.ஜி., மனித உரிமைகள், மா.அனந்தநாராயணம் அணிந்துரை, பக்.6–7.
14. பதிற்றுப். 13:23–28.
15. மேலது, 15:30–34.
16. மேலது, 21:30–31.
17. மேலது, 22:10–11.
18. மேலது, 42:1–4.
19. நற். 11:6–9.
20. புறம். 35:17–19.

21. மேலது, 47:1–7.

22. இனியவை நாற்பது 20:3–4.

23. சாலினி இளந்திரையன், சங்ககாலத் தமிழரின் மனிதநேய மணி, நெறிகள், ப.66.

24. (தஞ்சை மெக்கன்சி), வாழ்வியல் களஞ்சியம், ப.5.

25. புறம். 65:9–11.

26. மேலது, 66:4–8.

27. மேலது, 93:3–11.

28. மேலது, 74:1–3.

29. மேலது, 157:3.

30. மேலது, 312:5–6.

31. மேலது, 89:7–9.

32. புறம். 255.

33. மேலது, 278.

34. மேலது, 86.

35. மேலது, 277.

36. மேலது, 295:4–8.

37. மேலது, 279:7–11.

38. கழகத் தமிழகராதி, ப.352.

39. மு.வ., திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், ப.15.

40. தாயம்மாள் அறவாணன், தமிழ் மகளிர் பண்டும் நேற்றும், ப.22.

41. தொல்.அகத்.1.

42. குறுந். 3:1–4.

43. நற். 397.

44. மேலது, 366:3–9.

45. மேலது, 1:6–9.

46. மேலது, 129:1–9.

47. குறுந். 167.

48. மேலது, 178.

49. மேலது, 242.

50. நற். 110:9–13.

51. புறம். 186.

52. பொருநர். 226–230.

53. பெரும்பாண். 36.

54. மதுரைக். 190–192.

55. புறம். 191:1–5.

56. கலித். 118:1–3.

57. மேலது, 130:1–4.

58. மேலது, 130:19–21.

59. மேலது, 100:1–5.

60. புறம். 29:11–12.

61. கலித். 26:11.

62. மேலது, 26:15–16.

63. மேலது, 26:19–20.

64. புறம். 165:3–5.

65. மேலது, 196:4–7.

66. மேலது, 209:13–15.

67. மேலது, 210:1–4.

68. மேலது, 211:9–14.

69. மேலது, 165:10–11.

70. சிறுபாண். 92–93.

71. மேலது, 100–101.

72. மேலது, 108–109.

73. மேலது, 104–105.

74. மேலது, 97–98.

75. புறம். 108:4–6.

76. மேலது, 119:6–7.

77. சிறுபாண். 85–86.

78. புறம். 141:12–14.

79. சிறுபாண். 96–97.

80. புறம். 107:3–4.

81. சிறுபாண். 123–124.

82. புறம். 133:6

83. மேலது, 162

84. மேலது, 151:1–5

85. கலித். 2:11.

86. மேலது, 2:15.

87. மேலது, 2:19.

88. புறம். 159:22–25.

89. மேலது, 197:13–18.

90. மேலது, 106:4–5.

91. மேலது, 140:6–10.

92. மேலது, 161:24–25.

93. குறள். 231.

94. விவிலியம், நீதிமொழிகள். 3:27.

95. புறம். 3:23–26.

96. கலித். 38:15–16.

97. கலித். 43:26–27.

98. புறம். 165:10–14.

99. சாமி சிதம்பரனார், பழந்தமிழர் வாழவும், வளர்ச்சியும், ப.122.

99அ. பட்டினப். 43–46.

100. பதிற்றுப். 15:32–34.

101. வெள்ளைவாரனன், க., சங்க காலத்தமிழ் மக்கள், ப.25.

102. பதிற்றுப். 18:5–7.

103. மேலது, 24:18–22.

104. புறம். 400:16–17.

105. குறிஞ்சிப். 201–208.

106. சிலம்பு. 16:71–73.

107. மணி. 12:116–119.

108. மேலது, 14:44–45.

109. மேலது, 11:95–96.

110. புறம். 18:18–20.

111. ஏலாதி. 46:3.

112. மேலது, 47:3.

113. மேலது, 48:1–2.

114. புறம். 18:21–28.

115. மேலது, 69:6–9.

116. பட்டினப். 285–287.

117. அகம். 272:3.

118. மேலது, 372:1–3.

119. மேலது, 309:4.

120. மேலது, 297:11.

121. மேலது, 270:12–13.

122. புறம். 260:5.

123. மேலது, 199:1.

124. அகம். 266:12–13.

125. மேலது, 311:4.

126. புறம். 281:1–2.

127. பதிற்றுப். 71:22–23.

128. அகம். 372:13.

129. புறம். 294:8.

130. புறம். 5:5–6.

131. பதிற்றுப். 15:31–32.

132. புறம். 174:18–20.

133. மேலது, 287:10–12.

134. தொல். புறத். 85.

135. புறம். 60:2–6.

136. கைலாசபதி, க., பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.17.

137. அகம். 287:4–6.

138. நெடுநல். 43–44.

139. பெரும்பாண். 290.

140. புறம். 232:3–4.

141. மலைபடு. 394–395.

142. பட்டினப். 86–87.

143. திருநாவுக்கரசு, தமிழர் பண்பாடு, ப.15.

144. சாலினி இளந்திரையன், சங்ககாலத் தமிழரின் மனிதநேய, மணிநெறிகள், பக்.63–64.

145. தொல். கள. 89.

146. குறள். 49.

147. மேலது, 48.

148. நான்மணி. 8:1–2.

149. முதுமொழிக். 5:2.

150. ஏலாதி. 16.

151. குறள். 46.

152. ஏலாதி. 23:3–4.

153. புறம். 145.

154.. மேலது, 144:4–14.

155. மேலது, 147:3–9.

156. மேலது, 143:12–15.

157. மேலது, 146.

158. நற். 52:4–11.

159. மேலது, 10:1–4.

160. குறுந். 40.

161. மேலது, 176.

162. குறுந். 247.

163. மேலது. 297:6–7.

164. மதுரைக். 500.

165. கலித். 27:1–2.

166. மாணிக்கம், வ.சுப., தமிழ்க் காதல், ப.184.

167. ஐங்குறு. 259.

168. வெள்ளைவாரனன், க., சங்க காலத்தமிழ் மக்கள், பக்.68–69.

169. கலித். 9:6–11.

170. குறுந். 135.

171. மேலது 8.

172. தொல். கற்பியல் 140:1.

173. தொல். களவியல் 89:4.

174. தொல். மெய். 269.

175. தொல். களவியல் 2:4.

176. தொல். பொரு. 219.

177. கலித். 82:9–17.

178. அண்ணாமலை, சுப., கலித்தொகை (உரை), ப.305.

179. ஐங்குறு. 292.

180. கலித். 114:19–21.

181. நான்மணி. 97:2–3.

182. ஐங்குறு. 69.

183. நற். 150:8–11.

184. கலித். 61:26–28.

185. மேலது, 103:71–73.

186. நற். 300.

187. வெள்ளைவாரனன், க., சங்க காலத்தமிழ் மக்கள், ப.69.

188. குறிஞ்சிப். 19:26.

189. நற். 12:8–10.

190. குறிஞ்சிப். 231–235.

191. வெள்ளைவாரனன், க., சங்க காலத்தமிழ் மக்கள், ப.105.

192. சாமி சிதம்பரனார், புறநானூறு தமிழர் நாகரிகம், ப.13.

193. மேலது, 45:7–9.

194 தேவ்நாத், அடிப்படை மனித உரிமைகள், ப.30.

195. புறம். 5:8–9

196. சாமி சிதம்பரனார், புறநானூறு தமிழர் நாகரிகம், ப.14.

197. வெள்ளைவாரனன், க., சங்ககாலத்தமிழ் மக்கள், ப.27.

198. மதுரைக். 66–70.

199. சாமி சிதம்பரனார், புறநானூறு தமிழர் நாகரிகம், ப.23.

200. புறம். 148:5–7.

201. குறள் 788.

202. யோவான் 15:13.

203. புறம். 217:5–9.

204. மேலது 223:3–6.

205. மேலது 201:3–6.

206. மேலது 190:1–12.

207. குறுந். 300:8–10.

208. மேலது 3

209. நற். 355:6–7.

210. குறள் 580.

211. கலித். 25:23–24.

212. பட்டினப். 94–96.

213. கந்தையா, ந.சி., தமிழர் பண்பாடு, ப.71.

214. பட்டினப். 213–218.

215. மலை. 478–480.

216. நீலகண்ட சாஸ்திரி, தமிழர் வரலாறும் பண்பாடும், தமிழில் சிட்டி, ப.110.

217. வெள்ளைவாரனன், கா., சங்ககாலத் தமிழ் மக்கள், ப.99.

218. சாமி. சிதம்பரனார், புறநானூறு தமிழர் நாகரிகம், ப.1.

219. புறம். 61:1–3.

220. நற். 353:1–2.

221. வெள்ளைவாரனன், கா., சங்ககாலத் தமிழ் மக்கள், பக்.74–75.

222. ஐங்குறு. 47:1–3.

223. புறம். 228:1–4.

224. மேலது, 32:8.

225. மேலது, 228:10–12.

226. நற். 84–6.

227. புறம். 312:3.

228. நற். 133:9.

229. மேலது, 13:5–6.

230. புறம். 95:4–5.

231. அகம். 202:5.

232. பெரும்பாண். 206–207.

233. மேலது, 222–224.

234. மேலது, 436–437.

235. நெடுநல். 80–86.

236. சிறுபாண். 252–254.

237. பெரும்பாண். 248.

238. புறம். 87:3.

239. மேலது, 206:11.

240. நீலகண்டன், தமிழர் வரலாறும் பண்பாடும், பக்.102–103.

241. பட்டினப். 70–74.

242. மேலது, 99–104.

243. மேலது, 112–115.

244. பெரும்பாண். 370–371.

245. பொருநர். 187.

246. குறிஞ்சிப். 55–58.

247. கலித். 103:59–62.

248. அகம். 277:15–16.

249. சி. இலக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், ப.97.

இயல் - மூன்று

# அரசியல் உரிமைகள்

## முன்னுரை

அக வாழ்வில் சிறக்க வாழ்வியல் உரிமைகள் இன்றியமையாதன போன்று புறவாழ்வில் சிறந்து விளங்க அரசியல் உரிமைகள் தேவையானதும் அவசியமானதுமாகும். அனைத்து உரிமைகளையும் பெற்று, அரசியல் உரிமைகள் இல்லாமற்போனால் மனித வாழ்வு சிறப்படைய முடியாது. நாட்டின் குடிமகன் என்கின்ற உரிமையை நிலைநாட்டவும், கடமைகளை நிறைவேற்றவும் இவ்வுரிமைகளை அனைவருக்கும் அளிக்க வேண்டிய கடமை நாடாள்வோருக்கு உண்டு.

> **“குடியரசின் கொள்கைப்படி ஒவ்வொரு குடிமகனும் அரசு நிர்வாகத்தில் பங்கு பெறுகிற உரிமை உள்ளவனாகிறான். மத இன சாதி பாகுபாடுகளின்றி எந்தத் துறையிலும் பதவிக்கு வருகிற உரிமை வாக்களிப்பு மூலம் தேர்ந்தெடுக்கிற, தேர்ந்தெடுக்கப்படுகிற உரிமை என அரசியல் உரிமைகள் பிரதானமாக வகைப்படுத்தி அறியப்படும்”**[1]

என்கின்றார் சி.எஸ். தேவநாத்.

ஒரு நாட்டின் குடிகள் அனைவரும் அரசியல் உரிமைகளைப் பெற்று செம்மாந்த வாழ்வினை வாழ உரிமை பெற்றவர்கள். அரசியல் சுய சார்பு கொண்டதாக இல்லாமல் பொது மக்களின் நலன் காக்கும் வகையில் அமைய வேண்டும். குடிமக்களும், அரசாள்வோரும் தத்தம் உரிமைகளைப்

பெறுவதிலும் கடமைகளைச் செய்வதிலும் சிறந்து விளங்கியமையைச் சங்க இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன.

வள்ளுவரும் படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்னும் ஆறு அமைப்புகளும் செயல்படும் நிலைமையுடைய அரசே நல்ல அரசு என்கின்றார். அரசு நெறிபட இயங்க தம் குடிகளைத் தம்முயிர் எனப் போற்றிக் காப்பதே வல்லாண்மை மிக்க அரசாகும். நாடொன்றும் வாழக் கேடொன்றும் இல்லாத நிலையில் தன் எல்லையைக் காத்து, தேர்தல்கள் மூலம் மக்கள் பிரதிநிதிகளைத் தேர்வு செய்து ஐம்பெருங் குழு, எண்பேராயம் என்ற குழுக்களின் வழிகாட்டுதலின்படி அரசு புரிந்தனர் பண்டைத் தமிழ் மன்னர்கள்.

பழிபாவங்களை நீக்கி, அறநெறி வழியில் மக்களைப் பாதுகாத்து நீதி என்ற அளவில் குடிமக்களாயினும் மன்னனாயினும் தன் மீது சுமத்தப்படும் குற்றங்களுக்குத் தீர்வு கண்டு தெளிந்து, வினை வலியும் மாற்றான் வலியும் அறிந்து மன்னன் ஆட்சி புரிந்ததையும் புலவர்கள் அதை வலியுறுத்திப் பாடியமையும், மக்களும், புலவர்களும் அரசு தவறு செய்கின்ற பொழுது தவறினைச் சுட்டிக் காட்டித் திருத்த முயற்சித்ததையும் அரசுப் பணி செய் உரிமை, முறையிட்டு உரிமை, மன்னிப்புப் பெறும் உரிமை, வாக்களிக்கும் உரிமை, வரி, சொத்து போன்ற உரிமைகளைப் பெற்று கடமைகளில் சிறந்து விளங்கியமையை ஆராய்வது இவ்வியலின் நோக்கம்.

## பகையின்றி மக்கள் மனவளம் காத்தல்

பண்டைக் காலத்தே மன்னன் மக்களின் தலைவனாகவே மக்களால் கருதப்பட்டனர். குடிமக்கள் யாவருக்கும் பொதுவானவனாகவும் தனித்த உரிமையுடனும், ஆற்றலுடனும் அரசாண்டான். உழவினை உயிர் நிலையாகக் கருதிய தமிழ் மக்கள் மன்னனை உலகிற்கு உயிராகக் கருதி வாழ்ந்து

வந்தனர். போர் முதலிய குழப்பங்கள் இன்றி அமைதி நிலவினால் மட்டுமே உழவர்கள் தங்கள் உழவுத் தொழிலைச் செவ்வனே நடத்த முடியும் எனக் கருதிய மக்கள் மன்னனை உயிரெனக் கருதியதில் வியப்பொன்றும் இல்லை. எல்லாப் பண்புகளும் ஒருங்கே பெற்ற மன்னரும் மக்களின் இன்ப வாழ்வினையே பெரிதெனக் கருதி வாழ்ந்து வந்தனர். இதனை,

***"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்டு***
***இறைஎன்று வைக்கப் படும்"*** [2]

என்கின்றார் வள்ளுவர்.

நாட்டில் வாழும் குடிகளுக்கு அமைதியான சூழலையும், வளமான வாழ்வினையும் அளிக்க வேண்டியது அரசின் கடமை. மக்களையும் அரசினையும் காத்து வழி நடத்துவதில் அரசு விழிப்புடன் இருந்து செயல்படுத்த வேண்டும். குடிகளின் மனவளம் குன்றிப் போகும்படி நடத்தப்படும் அரசு நிலை பெறாது. உள்நாட்டுப் பூசல் மிகுந்து பகைவர்களின் கையில் சிக்கி அழிவுக்கு வழி வகுத்து விடும். இதை,

***"கால்பார் கோத்து ஞாலத்து இயக்கும்***
***காவற் சாகாடு உகைப்போன் மாணின்***
***ஊறுஇன் றாக ஆறுஇனிது படுமே***
***உய்த்தல் தேற்றான் ஆயின் வைகலும்***
***பகைக் கூழ் அள்ளல் பட்டு***
***மிகப்பல் தீநோய் தலைத்தலைத் தருமே"*** [3]

என்ற பாடல் குடிகளையும் அரசையும் நடத்த வேண்டிய முறைப் பற்றி உணர்த்துகின்றது. இதனை,

**"அரசு என்பது சமுதாயத்தில் மக்கள் அடிப்படைத் தேவைகளுடன் அமைதியுடனும் அச்சமின்றியும் வாழ்வதற்கு உருவாக்கப்பட்ட ஓர் அமைப்பாகும்"**[4]

என்கின்றனர் கு. முத்துலக்குமி.

நன்னெறியில், ஆட்சி நடக்கும் நாட்டில் மக்கள் மன மகிழ்ச்சியும் நிறைவும் பெற்று இன்ப வாழ்வினை நுகர்வர். நன்னெறி தவறி ஆட்சி நடக்குமானால் குடிமக்கள் வருத்தமுற்று துன்பமடைய நேரும் என்பதை,

*"நல்லற நெறிநிரீஇ உலகாண்ட அரசன்பின்*
*அல்லது மலைந்திருந்து, அறநெறி நிறுக்கல்லா*
*மெல்லியான் பருவம்போல் மயங்குஇருள் தலைவர"* [5]

என்ற கலித்தொகைப் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

கொடுங்கோல் ஆட்சி நடக்கும் நாட்டினை விட்டு நீங்கி மக்கள் வாழ்வாதாரத்தைத் தேடி வேறு நாட்டிற்குச் செல்ல வேண்டிய நிலை ஏற்படுமானால் தன் நாட்டைத் தஞ்சம் என வந்தடைந்த மக்கள் மேலும் துன்புறாமல் காப்பது அரசின் கடமையும் மக்களின் உரிமையும் ஆகும். இதை,

**"சித்ரவதை போன்ற கொடுமைகளிலிருந்து தப்பி பிற நாடுகளில் அடைக்கலம் கோரவும், அதைப் பெறவும் ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு"**

என அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனம் உறுப்பு (14) கூறுகின்றது. மேலும் கலித்தொகையில்,

'ஒல்குடி நிழல் சேர்ந்தார்க்கு உலையாது காத்து ஓம்பி' (கலி. 26:11) 'நசைகொண்டு தம் நிழல் சேர்ந்தாரைத் தாங்கிதம்' (கலி. 26:15), 'ஊறு அஞ்சி நிழல் சேர்ந்தார்க்கு உலையாது காத்து ஓம்பி' (கலி. 26:19) என்ற பாடல் வரிகள் மக்களின் மனவள உரிமையைக் காக்கும் கடமையைப் புலவர்கள் புரவலர்க்கு அறிவுறுத்திய பாங்கினையும் மன்னர் தம் கடமையை உணர்ந்து செயலாற்றியதையும் அறிய முடிகிறது.

**அரசுரிமை**

சங்க காலத்தில் இனக்குழு வாழ்வின் இறுதிக் கட்டத்தில் நிலவுடமை சமுதாயம் தோன்றி அதுவே அரசு உருவாக்கத்திற்கும் வழியமைத்தது. குறிப்பிட்ட நிலப்பகுதியை ஆண்டவர்கள் இறந்து விட்ட பின்பு அவ்வுரிமை அவர்களின் வாரிசுகளைச் சென்றடைந்தது. வாரிசுரிமையின் வாயிலாகவே அரசுரிமையைப் பெற்று மன்னர்களும் ஆண்டனர். என்பதை,

> **“பண்டைக் காலத் தமிழ் வேந்தர் நாட்டு மக்களால் தேர்ந்தெடுக்கப் பெற்று அம்முறையில் நாடாளும் உரிமை பெற்றவரல்லர். தொன்று தொட்டு நாட்டினை ஆளும் வேந்தரது பழங்குடியில் பிறந்ததனால் உளதாகிய உரிமையினாலே இந்நாட்டுக்கு அரசராய் விளங்கினர்.”[6]**

என்பர் க. வெள்ளைவாரனன்.

கோவலூரை வென்ற அதியமான் நெடுமான் அஞ்சி முன்னோர்களின் அரசுரிமையைப் பெற்றதை,

> ***“தொன்நிலை மரபின்நன் முன்னோர் போல***
> ***ஈகைஅம் கழல்கால் இரும்பனம் புடையல்***
> ***பூஆர் காவில் புனிற்றுப் புலால் நெடுவேல்***
> ***எழுபொறி நாட்டத்து எழாஅத்தாயம்***
> ***வழுஇன்று எய்தியும் அமையாய் செருவேட்டு”*** [7]

என்ற பாடலடிகள் எடுத்துக் காட்டுகின்றது. மேலும்,

> ***“நுந்தை தாயம் நிறைவுற எய்திய***
> ***ஒலியல் கண்ணிப் புலிகடி மாஅல்”*** [8]

என வரும் பாடலடிகளில் புலிகடிமால் அரசுரிமையைப் பெற்றதை உணர்த்துகின்றது.

பல தலைமுறைகள் வழிவழியாக ஆட்சியுரிமையைப் பெற்று வருவதை,

*“உவரா ஈகைத் துவரை யாண்டு*
*நாற்பத் தொன்பது வழிமுறை வந்த*
*வேளிருள் வேளே; விறற்போர் அண்ணல்”* [9]

என்று கபிலர் இருங்கோவேளை பாடியதில் நாற்பத்தொன்பது தலைமுறையாக வழிவழியாக வந்த வாரிசுகள் அரசுரிமையைப் பெற்று ஆட்சி புரிந்த செய்தியை அறிந்து கொள்ள முடிகிறது. மேலும்,

**“பைதிறம் என்னும் சொல் பொதுவாக நாடு என்னும் பொருளில் வழங்கப்பட்டுள்ளதாயினும் தந்தை வழியாகப் பெற்ற உரிமைப் பொருள் (நாடு) எனப் பொருள்படும். சேர மரபினரும் சோழ பாண்டியர்களைப் போலத் தந்தை வழி சொத்துடையவர் என்பதனை உணரலாம்”** [10]

என்ற அ.மா. பரிமணம் அவர்களின் கூற்றும் இங்கு ஒப்பு நோக்க இனிது விளங்கும்.

முன்னோர்கள் இறந்துபட, முறைப்பட வந்த பழைய அரசுரிமையை அடைந்து ஆட்சி செய்வது பெருமையன்று எனப் பண்டைய மன்னர்கள் கருதினர். சோழன் நலங்கிள்ளி வழிவழியாக வந்த அரசுரிமையைப் பெற்றான் என்பதை,

*“மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்*
*பால்தர வந்த பழவிறல் தாயம்*
*எய்தினம் ஆயின் எய்தினம் சிறப்புஎனக்”* [11]

என்ற புறப்பாடலடிகளாலும்,

தாயின் வயிற்றில் கருவாக இருக்கும் போது தந்தை இறந்து விட்டதால் வாரிசுரிமையினால் அரசுரிமையைப் பெற்றவன் கரிகால் வளவன் என்பதை,

*"தாய்வயிற் றிருந்து தாயம் எய்தி"* [12]

எனப் பொருநராற்றுப்படையும்,

மூதாதையர் சென்ற வழியில் தவறாது செங்கோன்மை பிறழாது அறவழியைக் காட்டி மேற்குத் திசையில் தோன்றிய சந்திரப் பிறை போன்று வளர் பிறையாக வளர்ந்து வழிவழியாகச் சிறக்கட்டும் உன் வெற்றி பெறும் அரசு என்று தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் வாழ்த்துவதை,

*"வியன்கண் முதுபொழில் மண்டிலம் முற்றி*
*அரசியல் பிழையாது அறநெறி காட்டி*
*பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது*
*குடமுதல் தோன்றிய தொன்றுதொழு பிறையின்*
*வழிவழிச் சிறக்க நின் வலம்படு கொற்றம்"* [13]

எனவரும் பாடலடிகளும்,

தந்தை இறந்த பிறகு அரசுரிமை தனையனைச் சாரும் என்று புல்லாற்றுள் எயிற்றியனார் கோப்பெருஞ்சோழனிடம் கூறியதை,

*"பரந்துபடு நல்லிசை எய்தி மற்றுநீ*
*உயர்ந்தோர் உலகம் எய்திப் பின்னும்*
*ஒழித்த தாயம் அவர்க்குரித் துஅன்றே"* [14]

என்று புறப்பாடலடிகளும் உணர்த்துகின்றன.

அரசுரிமையை வாரிசுரிமையின்றிப் போர் செய்தும் கைப்பற்றியுள்ளனர் என்பதை,

*"செறிவுடைத் திண்காப்பு ஏறி வாள்கழித்து*
*உருக்கெழு தாயம் ஊழின் எய்திப்"* [15]

என்று திருமாவளவன் போரினால் அரசுரிமை பெற்றதை உணர்த்துகின்றது.

வாரிசுரிமையினால் வந்த அரசுரிமையை ஆண் மக்களில் மூத்த மகன் பெற்றனரேயன்றிப் பெண் பிள்ளைகள் அரசுரிமையைப் பெற்றிருக்கவில்லை. சங்க கால முடியாட்சிக் காலத்தில் இவ்வுரிமை பெண்களுக்கு மறுக்கப்பட்டு வந்ததாகவே கருத முடிகிறது. இதைப் பாரி மகளிர் பாடிய,

*"அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்*
*எந்தையும் உடையேம்; எம் குன்றும் பிறர்கொளார்*
*இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்*
*வென்றுஎறி முரசின் வேந்தரெம்*
*குன்றும் கொண்டார்; யாம் எந்தையும் இலமே"* [16]

என்ற புறப்பாடலாலும்,

*"நிரைகதிர்க் கனலி பாடொடு பகல்செலக்*
*கல்லாது முதிர்ந்தவன் கண்ணிலா நெஞ்சம்போல்"* [17]

என வரும் பாடலாலும் பெண்கள் அரசுரிமையைப் பெறவில்லை மாறாக, மூத்த மகன் வாரிசுரிமையினால் அவ்வுரிமையைப் பெற்றதை உணர்த்தி நிற்கின்றது.

எம்முறையில் மன்னர்கள் ஆட்சியுரிமையைப் பெற்றிருந்த போதிலும் மக்களின் நலனை கருத்தில் கொண்டு ஆட்சி புரிந்தனர் என்பதை சங்கப் பாடல்கள் சுட்டிக் காட்டுகின்றன. இதனை,

**"பண்டைத் தமிழகத்தில் முடியாட்சி நிலவியது எனினும் மக்கள் நலம் பேணும் குடியாட்சி பண்பே அம்முடியாட்சியில் இடம் பெற்றிருந்தது என்பதைச் சங்க இலக்கியங்கள்**

**காட்டுகின்றன. மன்னர் தாய முறையில் அரசுரிமையைப் பெற்ற போதும் மக்களைத் துன்பமின்றிக் காப்பதையும், செங்கோண்மையுடன் அரசாட்சி செய்வதையும், தம் கடமையாகக் கொண்டிருந்தனர். புலவர் பெருமக்கள் மன்னர்க்கு அன்பின் ஆழத்தையும் அருளின் ஆற்றலையும் அறத்தின் சிறப்பையும் உணர்த்தி அறநெறியில் பற்றுக் கொள்ளச் செய்து நன்னெறிப்படுத்தினர்''**[18]

என்கின்ற முனைவர் வே. முத்துலக்குமி அவர்களின் கருத்தும் எண்ணத்தக்கது.

**வாக்களிக்கும் உரிமை**

மன்னராட்சி மடிந்து மக்களாட்சி மலர்ந்த போது மக்கள் அளப்பறிய உரிமையையும் சுதந்திரத்தினையும் பெற்று மகிழ்ந்தனர். ஒவ்வொரு நாடும் தங்களுக்காகத் தாங்களே இயற்றிக் கொண்ட அரசமைப்புச் சட்டத்தின் மூலம் அத்தகு உரிமைகளையும், சுதந்திரத்தினையும் சட்டமாக்கி நிலை நிறுத்திக் கொண்டனர். இயற்றப்பட்டச் சட்டங்களும் மக்களுக்குப் பல்வகையான உரிமைகளை வகைப்படுத்தித் தந்ததோடு மட்டுமல்லாமல் அவ்வுரிமைகளைச் செயல்முறைப்படுத்தவும், மீறப்படும் பொழுது தீர் வழிகளைப் பெறவும் வழி வகுத்துத் தந்தன. அவ்வகையில் தங்களை யார் ஆள வேண்டும், யாரின் கீழ் அடங்கி நடக்க வேண்டும் என்று தீர்மானிக்க வேண்டிய உரிமையும், அவரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்து ஆட்சிக் கட்டிலில் அமர வைக்க கூடிய ஆற்றலையும் சட்டத்தின் வாயிலாக மக்கள் பெற்றனர். அதுவே குடியாட்சி முறையின் நோக்கம். இதனை,

**“மக்களின் விருப்பமே அரசாங்க அதிகாரத்தின் அடிப்படையாக இருக்க வேண்டும். குறிப்பிட்ட கால இடைவெளிகளுடன் உண்மையான தேர்தல் மூலம் மக்களின்**

**விருப்பம் வெளிப்பட வேண்டும். எல்லோருக்கும் சம ஓட்டுரிமையுடன் இரகசியமான வாக்கெடுப்பு அல்லது அதற்கு சமமான வாக்குப்பதிவு முறைகளில் தேர்தல் நடைபெற வேண்டும்"**

என்று அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனம் உறுப்பு(21) வாக்களிக்கும் உரிமையை நிலை நாட்டியுள்ளது. ஆண், பெண் இரு பாலரும் இவ்வுரிமையைப் பெற்றிருந்தனர். இதை,

**"பழைய அரசியல் அறிஞர் எல்லா மக்களும் ஆடவரும் பெண்கள் அனைவரும் தேர்தலுரிமை பெற்று அமைந்த குடியாட்சியையே முழுக் குடியாட்சி என ஏற்றமைவுற்றனர்"**[19]

என்பர் க. அப்பாதுரை.

மக்களாட்சியில் மக்கள் பெற்ற மகத்தான உரிமை இது. நாட்டின் குடிமக்கள் அனைவருக்கும் ஏழை, பணக்காரன், உயர்ந்தவன், தாழ்ந்தவன், சாதி, மதம், இனம், மொழி, பால், நிறம் என்ற எல்லைகளைக் கடந்து குடிமகன் என்ற தகுதியினை மட்டுமே கருத்தில் கொண்டு பெற்ற இவ்வுரிமை சங்க கால முடியாட்சிக் காலத்திலும் நடைமுறைப்படுத்தப்பட்டு இருக்கின்றது.

ஊர் சபைக்குத் தலைவரைத் தேர்வு செய்ய பெயர் எழுதிய நறுக்கோலைகளைப் போட்ட குடத்தைக் கயிற்றால் கட்டி அதை முத்திரையிட்டு பின் அம்முத்திரையை நீக்கி ஓலைகளை எண்ணிப் பார்த்துப் பண்டைத் தமிழர் தேர்வு செய்தனர். என்பதை,

***"குடிபதிப் பெயர்ந்த சுட்டுடை முதுபாழ்க்***
***கயிறுபிணிக் குழிசி ஓலை கொண்மார்"*** [20]

எனும் அகப்பாடல் எடுத்துக் காட்டுகின்றது.

சுதந்திர இந்தியாவில் நாடாள்வோரையும் அவருக்குத் துணையாக அமைச்சர்களையும் தேர்ந்தெடுக்கும் முறை சங்க கால நடைமுறையைப் பின்பற்றி நடைபெற்றதையும் அறிவு வளர்ச்சியின் துணைக் கொண்டு இன்று குடம் என்பது மின்னனு இயந்திரமாகவும், நறுக்கோலைகள் மின் பொத்தானாகவும் வளர்ச்சியடைந்திருக்கின்றது. இன்று போல் கள்ளத்தனமாக வாக்களிக்கும் முறையானது பழந்தமிழர்கள் கனவிலும் நினையாத ஒன்று.

தேர்தலில் போட்டியிடுவோர், வாக்களிப்போர் போன்றவர்களின் தகுதி பற்றியும் தேர்தல் நடைமுறைகள் பற்றியும், சங்க இலக்கியங்களில் குறிப்புகள் காணப்படவில்லை என்றாலும் மக்களாட்சி முறையின் தத்துவத்தைப் பண்டைத்தமிழ் மக்கள் நன்கு உணர்ந்திருந்ததையே இக்குடவோலை முறை காட்டுகின்றது.

இக்காலத்தும் இவ்வுரிமை சட்டப்படி அரசியல் உரிமைகளாக்கப்பட்டு மக்கள் வாக்களித்து வருகின்றனர். இந்திய அரசியலமைப்புச் சட்டம் நடைமுறைக்கு வந்த பின்பு தேர்தலில் வாக்களிப்போருக்கான உரிமை வயது **21** எனவும் இந்திய அரசியலமைப்புச் சட்ட உறுப்பு **326** என்று குறிப்பிடப்பட்டிருந்தது. பின் **1988**–ம் ஆண்டு **61**வது சட்டத்திருத்தத்தின் படி **21** வயது என்பது **18** வயதாகக் குறைக்கப்பட்டு **28.3.1989** முதல் நடைமுறைப் படுத்தப்பட்டு வருவதைக் காண முடிகிறது.

### வரி வசூலிக்கும் உரிமை

அரசு செவ்வனே நடைப்பெறுவதற்கும் குடிமக்களின் தேவைகளை நிறைவு செய்வதற்கும் நாட்டின் பாதுகாப்பிற்கும் அரசுக்குத் தேவைப்படும் வருவாயினை மக்களிடமிருந்து பெறப்படும் வரியாகப் பெற்ற பொருளே அடிப்படை வருவாயாகக் கருதப்பட்டது. இம்முறை மக்களாட்சிக் காலத்தில்

முற்றிலுமாகக் கடைப்பிடிக்கப்பட்டு பல்வேறு வரிகளை அரசு விதித்திருந்தாலும் முடியாட்சிக் காலத்திலும் இத்தகைய வரிகள் வசூலிக்கப்பட்டு வந்ததையும் அவை முறையாகப் பயன்படுத்தப்பட்டு வந்திருப்பதையும் சங்க இலக்கியங்களில் காண முடிகிறது.

மக்களைக் காப்பாற்றுவதற்குத் தேவையான பொருளை மக்களிடமிருந்து நியாயமான முறையில் அளவோடு வரியாகப் பெற்று மன்னர்கள் நடுநிலையோடு ஆட்சி செய்தனர் என்பதை,

***"கொடிதுகடிந்து கோல் திருத்திப்***
***படுவதுஉண்டு பகலாற்றி"*** [21]

என்று புறநானூறும்,

பெறப்படும் வரியானது குடிமக்களின் வருவாய்க்கேற்றபடி, விதிக்கப்பட வேண்டுமன்றி இரக்கமில்லாமல் குடிகளை வருத்தி வரி பெற நினைப்பது நாட்டின் அழிவிற்கு வழி வகுக்கும் என்பதனை,

***"அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே***
***கோடி யாத்து நாடுபெரிது நந்தும்***
***மெல்லியன் கிழவன் ஆகி வைகலும்***
***வரிசை அறியாக் கல் என் சுற்றமொடு***
***பரிபுதப எடுக்கும் பிண்டம் நச்சின்***
***யானை புக்க புலம்போலத்***
***தானும் உண்ணான் உலகமும் கெடுமே"*** [22]

என்று புறப்பாடலடிகளும்,

***"உரம்சாச் செய்யார், உயர்தவம், வளம்கெடப்***
***பொன்னும் கொள்ளார், மன்னர் நன்னுதல்!"*** [23]

என நற்றிணையும்,

*"அலவுற்றுக் குடிகூவ, ஆறுஇன்றிப் பொருள் வெஃகிக்*
*கொலைஅஞ்சா வினைவரால் கோல்கோடி யவன்நிழல்*
*உலகுபோல் உலறிய உயர்மர வெஞ்சுரம்;"* [24]

என்று கலித்தொகையும் உணர்த்தி நிற்கின்றது.

குடிமக்கள் கலங்கி தவித்தால் நாடாளும் மன்னனின் ஆட்சியும் கலங்கும் என்பதை,

*"மண்ணதிர்ப்பின் மன்னவன் கோலதிர்க்கும் பண்ண*
*தீர்ப்பின்"* [25]

என வரும் பாடலடி சுட்டிக் காட்டுகின்றது.

அறிவுடைய மன்னர்கள் முறையோடு ஆட்சி செய்தால் சிறப்படைவர் என்பதை,

*"மறையறிப அந்தண் புலவர் முறையொடு*
*வென்றிஅறிப அரசர்கள்"* [26]

என்ற நாண்மணிக்கடிகை பாடலும் உணர்த்துகின்றது.

மக்களை வருத்தி வரி வாங்கும் மன்னனுடைய நாட்டில் மழை பொய்யாது பொய்த்துப் போகும் என்பதை,

*"கொள்பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தனும்*
*உள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரும்*
*இல்லிருந்(து) எல்லை கடப்பாளும் இம்மூவர்*
*வல்லே மழையருக்குங் கோள்"* [27]

என்கின்றது திரிகடுகம். இப்பாடல் இன்றைய ஆட்சியாளர்களுக்கும் விடுக்கும் எச்சரிக்கையாக இருப்பதையும் உணர்ந்து கொள்ள முடிகிறது.

குடிமக்களைத் துன்பப்படுத்தாது செங்கோலாட்சி நடத்துகின்ற அரசையே உலகத்தார் புகழ்ந்துப் பேசுவர் என்பதை,

*"கேட்டார்நன் றென்றல் கிளர்வேந்தன் தன்னாடு*
*வாட்டான்நன் றென்றல் வனப்பு"* [28]

என்கின்றது சிறுபஞ்சமூலம்.

குடிமக்களின் இன்பத்தை விரும்பும் மன்னன் முறையோடு அரசாட்சி செய்தலைத் தவிர்க்க மாட்டான்.

*"ஏமம் வேண்டுவோன் முறைசெயல் தண்டான்"* [29]

என முதுமொழிக்காஞ்சி எடுத்துரைக்கின்றது.

குடிகளிடமிருந்து பெற்ற வரியோடு நிலவரியும் சுங்க வரியும் அரசின் பெரிய வருவாய்க்கான வாசல்களாக விளங்கின. துறைமுகங்களில் ஏற்றுமதி இறக்குமதியாகும் பொருட்கள் மீதும் அரசின் முத்திரை பொறிக்கப்பட்டு சுங்கச் சாலைகளில் அடுக்கப்பட்டிருந்ததை,

*"நீரினின்றும் நிலத்து ஏற்றவும்*
*நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்*
*அளந்தறியாப் பல பண்டம்*
*வரம்பு அறியாமை வந்து ஈண்டி*
*அருங்கடிப் பெருங்காப்பின்*
*வலியுடை வல் அணங்கினோன்*
*புலி பொறித்துப் புறம்போக்கி*
*மதி நிறைந்த மலிபண்டம்*
*பொதிமூடைப் போர் ஏறி"* [30]

என்று பட்டினப்பாலை விவரிக்கின்றது.

## ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும்

அரசு நடத்துவதிலும், குடிகளைக் காப்பதிலும், நீதி வழங்குவதிலும், மன்னர்க்கு ஆலோசனைகளையும், அறிவுரைகளையும் கூறி செங்கோலாட்சி செம்மையுற ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் துணை புரிந்து வந்தன.

அரசனும் அவர்களின் ஆலோசனைப்படி ஆட்சி புரிந்து குடிகளைக் காத்தனர்.

*"சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்*
*சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்"* [31]

என்கின்றார் வள்ளுவர். அரசன் அளவு கடந்த அதிகாரத்தைப் பெற்றவனாயிருந்தான். வரம்பு மீறி அதிகாரம் செலுத்த எண்ணியபோதெல்லாம் ஐம்பெருங்குழுவினர் ஆலோசனைகளைக் கொடுத்துக் கட்டுப்படுத்தினர். இதை,

**"அரசனது அதிகாரம் ஐம்பெருஞ் சபைகளால் கட்டுப்படுத்தப்பட்டது. மக்களின் சார்பாளராகிய நகரமாந்தர், புரோகிதர், மருத்துவர், நிமித்தர், அமைச்சர் என்னும் ஐந்து கூட்டத்தினரும் ஐம்பெருஞ் சபையில் அடங்குவர்"**[32]

எனக் குறிப்பிடுகின்றார் ந.சி.கந்தையா. ஆனால்,

**"அரசனுடைய ஆட்சிக்கு அடிப்படைத் துணையாயிருந்த அதிகாரச் சுற்றம் ஐம்பெருங்குழு என்பது அமைச்சர், புரோகிதர், படைத்தலைவர், தூதர், ஒற்றர் என்னும் ஐந்து குழுவினரின் பெருந்தொகுதியே ஐம்பெருங்குழுவாகும்"**[33]

எனவும்,

**"அரசனுடைய நன்மையையும் உடல் நலத்தையும் உண்மையாகக் கவனித்துப் பேணுதற்கு உறுதிச் சுற்றம் என்றொரு குழு இருந்தது. குறிக்கப்பட்ட படைத்தலைவர், நிமித்திகர், மருத்துவர், நட்பாளர், அந்தணர் ஆகிய ஐந்திறத்தார் சேர்ந்த குழு உறுதிச் சுற்றமாகும்"**[34]

என்று இரு வேறுபட்ட ஐம்பெருங்குழுக்களை வகைப்படுத்தி ஞா. தேவநேயப் பாவாணர் விளக்கம் தருவது எண்ணிப் பார்க்கத்தக்கது.

ந.சி. கந்தையா மற்றும் ஞா.தேவநேயப் பாவாணர் கூறும் கருத்துக்களுக்கு முரண்பாடான கருத்தினைப் பதிவு செய்கிறார் நீலகண்ட சாஸ்திரி அவர்கள். இதை,

> **“மன்னன் அதிகாரம் செலுத்துவதற்கு இந்தக் குழுக்கள் தணிக்கை அம்சங்களாக விளங்கி வந்தன என்று கருதுவதற்குப் போதிய சான்றுகள் இல்லை. மன்னனுடைய பதவிக்கு, வனப்பளிக்கும் ஆடம்பர அம்சங்களாகவே இவை விளங்கி வந்தன”**[35]

மேலும்,

> **“மன்னன் பெரும்பாலும் எதேச்சதிகாரம் தான் செலுத்தி வந்தான். ஆயினும் விவேகம் நிறைந்த அமைச்சர்களும் நன்மதி கூறும் பெரியோர்களும் அவனைச் சூழ்ந்திருந்தனர். மன்னன் மனம் வைத்தால் அவர்களுடைய யோசனையை ஏற்றுக் கொள்ளலாம். மன்னன் கட்டளைக்கு மாறாக நடந்து கொள்வது எந்த சந்தர்ப்பத்திலும் அனுமதிக்கப் படவில்லை”**[36]

என வரும் கருத்துகள் ஆலோசனை கூறும் ஐம்பெருங்குழுவும், கணக்கர், அரசாணையை நிறைவேற்றும் அதிகாரிகள், கனகச் சுற்றம், கடைக்காப்பாளர், நகர மாந்தர், படைத்தலைவர், யானை மறவர், இவுளி மறவர் என்ற எண்பேராயமும் மன்னனுக்கு ஆலோசனை கூறுவதற்கு மட்டுமே உரிமை படைத்தவர்களாவர் என்பதும், இறுதி முடிவு மன்னனின் விருப்பத்திற்கு ஏற்றவாறு இருந்தது என்பதும் தெரிய வருகிறது.

**நீதி பெறும் உரிமை**

இனக்குழு வாழ்க்கை முறையில் உரிமைகள் குறித்த அறிவும், சிந்தனையும் மக்கள் பெற்றிருக்கவில்லை. நிலவுடமை சமுதாயத்தில் அது குறித்து சிந்தித்தவர்களாகவும் வலியுறுத்துபவர்களாகவும் இருந்தனர் என்பதைத் தமிழ் இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது. அவ்வுரிமைகள் அறங்களாகப் புலவர்களால் உணர்த்தப்பட்டன.

சுதந்திரமான உரிமை வாழ்வின் பயனைத் துய்ப்பதற்கு இடையூறு ஏற்படும் பொழுது அதற்கான தீர் வழிகளைப் பெறுவதற்கு மக்கள் உரிமை பெற்றிருந்தனர். புலவர்களும் நீதிமுறை தவறாது ஆட்சி செய்யும் மன்னனைப் புகழ்ந்தும், முறை பிறழும் நேரத்தில் இடித்துரைத்தும் வந்தனர். நீதி வழங்குதல் முறையெனப்பட்டது.

சட்டங்கள் இயற்றப்படாத காலத்தில் அறநூல்கள், வழக்கம் மற்றும் வழக்காறுகள் (Custom and Usage) துணைக் கொண்டும் நீதி பரிபாலனம் செய்திருக்கின்றனர்.

> **“தொன்றுதொட்டு வந்த வழக்கங்களும் மரபுகளும் வாழ்க்கையை நெறிப்படுத்துகின்றன. ஏற்ற வகையில் இயற்றப்பட்ட சட்டங்கள் இல்லாத போது மரபுகளையும் வழக்காறுகளையும் ஏற்று அவற்றிற்கு எற்ப நீதி வழங்கப்பட்டது”**[37]

என்பர் மா. சண்முகசுப்பிரமணியன்.

தலைமை நீதிபதியாக மன்னன் காணப்பட்டான். சிறு வழக்குகளை விசாரித்து சிறிய அளவில் தண்டனைகள் தருவதற்கு அறிவில் சிறந்தவர்களை நீதிபதியாக நியமனம் செய்தான். இதை,

*“அறநிலை திரியா அன்பின் அவையத்துத்*
*திறன்இல் ஒருவனை நாட்டி முறைதிரிந்து*
*மெலிகோல் செய்தேன் ஆகுக”* [38]

என்று புறநானூறு குறிப்பிடுகின்றது.

சாதாரணக் குடிமகன் வஞ்சிக்கப்படும் போது முறையீடு செய்து நீதி பெறும் நீதிமன்றங்களைக் கோவிலாகவும் குறை தீர்க்கும் நீதிபதிகளை தெய்வங்களாகவும் மக்கள் காண்கின்றனர். வழக்கறிஞர்கள் நீதிபதிகளை என்னுடைய கடவுளே (My Lord) என்று விளிப்பதைக் காண முடிகிறது. அத்தெய்வங்களான நீதி முறை செய்யும் நீதிபதிகள் எதற்கும் அஞ்சாதவர்களாகவும், பிறருக்கு அச்சத்தைத் தராமல் காண்போருக்கு எளியவராகவும், பொருளாசை அற்றவராய், காய்த்தல் உவத்தல் இல்லாமல் துலாக்கோல் போன்று நடுநிலை வகிப்பவர்களாகவும் அறத்தைக் கடைப்பிடித்து சிறந்த கொள்கைகளோடு நீதியை நிலை நாட்டுபவர்களாகவும் காணப்பட வேண்டும். இதனை,

*“அச்சமும் அவலமும் ஆர்வமும் நீங்கிச்*
*செற்றமும் உவகையும் செய்யாது காத்து*
*ஞெமன்கோல் அன்ன செம்மைத்து ஆகிச்*
*சிறந்த கொள்கை அறங்கூறு அவையமும்”* [39]

என்று மதுரைக்காஞ்சியும்,

*“அறம் அறக்கண்ட நெறிமாண் அவையத்து*
*முறைநற் கறியுநர் முன்னுறப் புகழ்ந்த”* [40]

என புறநானூறும் குறிப்பிடுகின்றது.

சோழர்களின் தலைநகரான உறையூரின்கண் உள்ள அறங்கூற வையத்தில் நடுநிலை தவறாததால் அறம் நிலை பெற்ற விளங்கியது என்பதை,

*"மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து*
*அறம்நின்று நிலையற் றாகலின் அதனால்"* [41]

எனவரும் புறப்பாடலடிகளால் புலப்படுகின்றது. மக்கள் முறையான நீதியினைப் பெற்றனர் என்பதும், தவறு செய்யும் போது தண்டனைகள் வழங்கப்பட்டிருப்பதால் குற்றங்கள் குறைந்து இருந்தும் அறிய முடிகிறது.

நீதிபதிகளைப் போன்றே சாதாரண குடிமக்களும் முறை தவறாமல் நீதி நிலை நாட்டப்பட வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தனர் என்பதை,

*"பால்கொளல் இன்றிப் பகல்போல் முறைக்குஒல்கா*
*கோல்செம்மை ஒத்தி பெரும! மற்று ஒவ்வாதி"* [42]

என்ற கலித்தொகைப் பாடலடிகளைக் கொண்டு தாய்தன் மகனுக்குப் பகலாணிபோல் இருந்து நடுநிலை தவறாது நீதி வழங்க வேண்டும் என்று அறிவுறுத்துவதையும் மக்கள் நீதியின் மேல் பற்று கொண்டவர்களாகவும் விளங்கினர் என்பதைக் காண

வழக்குகளை விசாரித்துத் தீர்த்து வைக்கும் நீதிமன்றங்கள் அவை, அறங்கூறவையம், மன்றம், பொதியில் என்ற பெயர்களால் அழைக்கப்பட்டது. மரத்தின் அடியில் விசாரணை நடைப்பெற்றது என்பதை,

*"தொன்மூ தாலத்துப் பொதியில் தோன்றிய"* [43]

என வரும் குறுந்தொகைப் பாடலால் ஆலமரத்தின் அடியில் விசாரணை நடைப்பெற்றதை சுட்டிக் காட்டுகின்றது.

குற்றங்களை ஆராய்ந்து விசாரித்து தீர்ப்பு கூறினர். குற்றம் செய்தவர்களுக்குத் தண்டம் விதிக்கப்பட்டது அது 'மன்றுபாடு' என்றும் அழைக்கப்பட்டது. இக்காலத்தும் கிராமம் புறங்களில் மரத்தினடியிலும் கோயில்களிலும் சிறிய அளவிலான பிரச்சனைகளைத் தீர்த்து தண்டம் விதிக்கும் பஞ்சாயத்து முறைகள் நடைபெறுவதைக் காணமுடிந்தாலும்

முன்னது அரசால் ஏற்றுக் கொள்ளப்பட்டு அங்கீகரிக்கப்பட்டதும் பின்னது சட்டத்தால் அங்கீகரிக்கப்படாததுமாகும்.

புலவர்களும், நெறி தவறாமல் ஆட்சி செய்து நீதி வழங்க வேண்டும் என்று மன்னனுக்கு அறிவுறுத்தினர். இதை,

*"உருவும் புகழும் ஆகி விரிசீர்த்*
*தெரிகோன் ஞமன்ன போல ஒருதிறம்*
*பற்றல் இலியரோ நிற்றிவும் சிறக்க"* [44]

என்று புறநானூறு கூறுவதைக் காணமுடிகிறது.

*"கொடியோர்த் தெறுதலும் செவ்வியோர்க்கு அளித்தலும்*
*ஒடியா முறையின் மடிவிலையாகி*
*நல்லதன் நலனும் தீயதன் தீமையும்*
*இல்லை என்போர்க்கு இனன்ஆ கிலியர்"* [45]

என்ற பாடலடிகள் தீயோரைத் தண்டித்தலும் நல்லோரைக் காத்தலும் செங்கோலாட்சியின் சிறப்பு என்று கூறுவதை,

*"முறை வேண்டு நர்க்கும் குறைவேண்டு நர்க்கும்*
*வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கு அருளி"* [46]

என்ற பெரும்பாணாற்றுப்படை பாடலடிகளும் உணர்த்துகின்றன.

நீதியை வேண்டும் போது பெறுபவர் தேவைப்படும் நேரத்தில் மழை பெறுவதைப் போன்று மகிழ்ச்சியடைவர் என்பதை,

*"அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து*
*முறைவேண்டு பொழுதில் பதன்எளி யோர்ஈண்டு*
*உறை வேண்டு பொழுதில் பெயல்பெற் றோரே"* [47]

எனும் பாடலடிகளும் உணர்த்துகின்றன.

தேவைப்படும் போது பெறப்படும் நீதியே உண்மையான நீதியாகும். காலம் கடந்து கிடைக்கும் நீதியானது மறுக்கப்பட்ட நீதிக்கு சமம் என்ற

நடைமுறை உண்மையினை அறிந்து புலவர்கள் வலியுறுத்தியுள்ள பாங்கு வியப்பிற்குரியது.

குற்றத்தை ஆராய்ந்து பார்த்து யாரிடத்தும் இரக்கம் காட்டாமல் அதற்கேற்றவாறு மன்னர் தண்டனை வழங்கினர் என்பதை,

*"பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே*
*நீ மெய்கண்ட தீமை காணின்*
*ஒப்ப நாடி அத்தக வொறுத்தி"* [48]

என்ற ஊன் பொதிபசுங்குடையார் பாடல் வரிகளால் அறிந்து கொள்ள முடிகிறது. இதனையே வள்ளுவரும்,

*"ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந்து யார்மாட்டும்*
*தேர்ந்துசெய் வஃதே முறை"* [49]

என்ற குறளில் வலியுறுத்துகிறது.

சாட்சியங்களை ஆராய்ந்துப் பார்த்து வழங்கப்படாத நீதி அநீதியாக எண்ணப்பட்டதும் அதற்காக வருந்தி பழியேற்று தன் உயிரினை நீத்ததையும் சிலம்பு உணர்த்துகின்றது. மேலும்

*"நயன்இல் மாக்களொடு குழீஇப்*
*பயனின்று அம்மஇவ் வேந்துடை அவையே"* [50]

என்ற நற்றிணைப் பாடலில் தவறு செய்பவர்களைத் தக்கவாறு தண்டிக்காத அரசனின் அவையோர் பயனற்றவர் என்ற கருத்து நீதியின் மேல் மக்கள் கொண்டிருக்கும் நம் பார்வையைப் பறைசாற்றுகிறது

**தூது**

படையெடுத்துச் சென்று போர் புரிந்து நாட்டைக் கைப்பற்றிச் செல்வங்களைச் திறையாகப் பெற்றுக் குடிகளைக் காப்பாற்றுவது, போரின்கண் பெறும் வெற்றியின் மூலம் தன் வீரத்தை நிலை நாட்டுவது

மன்னனுக்குப் பெருமை தரும் செயலாக இருந்தாலும் போரினைத் தவிர்த்துத் தன் குடிகளையும், பகைநாட்டு குடிகளையும் காப்பாற்றுவதை சங்ககால மன்னர்கள் விரும்பினர். புலவர்களும் அதற்குத் துணை நின்றனர். இதை,

*"இவ்வே, பீலி அணிந்து மாலை சூட்டிக்*
*கண்திரள் நோன்காழ் திருத்தி நெய்அணிந்து*
*கடியுடை வியன்நக ரவ்வே அவ்வே*
*பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து*
*கொல்துறைக் குற்றில மாதோ என்றும்*
*உண்டாயின் பதம்கொடுத்து*
*இல்லாயின் உடன் உண்ணும்*
*இல்லோர் ஒக்கல் தலைவன்*
*அண்ணல்எம் கோமான் வைந்நுதி வேலே"* [51]

என்று அவ்வையார் போரினைத் தடுத்து நிறுத்த அதியமானுக்காகத் தொண்டைமானிடம் தூது சென்றதை அறியலாகிறது. மேலும்,

*"வயலைக் கொடியின் வாடிய மருங்குல்*
*உயவல் ஊர்திப் பயலைப் பார்ப்பான்*
*எல்லி வந்து நில்லாது புக்குச்*
*சொல்லிய சொல்லோ சிலவே அதற்கு*
*ஏணியும் சீப்பும் மாற்றி*
*மாண்வினை யானையும் மணிகளைந் தனவே"* [52]

என்ற புறப்பாடலடிகளில் பார்ப்பான் தூதினால் போர் ஒழிந்தது என்பதும் அறியப்படுகின்றது.

கிள்ளிவளவன் கருவூரை முற்றுகையிட்டு இருந்தபோது இனிதாக இருக்கும் அரசனொடு முரசம் முழங்க போரிட்டது நாணும் தன்மையது ஆதலின் போரினைக் கைவிடுவாயாக என்று அறிவுறுத்தி போரினைத் தடுத்து நிறுத்தியதை,

*“நெடுமதில் வரைப்பில் கடிமனை இயம்ப*
*ஆங்கினிது இருந்த வேந்தனோடு ஈங்குநின்*
*சிலைத்தார் முரசம் கறங்க*
*மலைத்தனை என்பது நாணுத்தக வுடைத்தே”* [53]

என்றும்

*“ஒருவீர் தோற்பினும் தோற்பதும் குடியே*
*இருவீர் வேறல் இயற்கையும்அன்றே அதனால்*
*குடிபொருள் அன்றுநும் செய்தி கொடித்தேர்*
*நும்மோர் அன்ன வேந்தர்க்கு*
*மெய்ம்மல உவகை செய்யும்இவ் இகலே”* [54]

என வரும் பாடலடிகளில் கோவூர்கிழார் நலங்கிள்ளி நெடுங்கிள்ளி இருவருக்கும் இடையில் தூதாகச் சென்றுப் போரினைக் கைவிட எடுத்துக் கூறியதையும் காண முடிகிறது. இதையே,

> **“போர் நிகழுமிடத்துப் பகைவர் நாட்டு விளைவயல்களைக் கெடுப்பதும், நீர்நிலைகளை சிதைத்து அழிப்பதும், நெல் கரும்பு முதலியன விளையும் மருத நிலங்களை பாழ் செய்வதும் மக்கள் குடியிருக்கும் ஊர்களை தீயிட்டு அழிப்பதும் அவர்தம் பொருளை சூறையாடுவதும் நிகழ்வது குறித்தே இப்போர் நிகழ்ச்சி சான்றோர்களால் வெறுக்கப்படுகின்றது. இதனை சான்றோர் விரித்தோதுவது வேந்தன் உள்ளத்தில் அருள் பிறப்பித்துப் போரை கைவிடுதல் கருதியே என்றறிதல் வேண்டும்”** [55]

என்ற ஔவை சு. துரைசாமிப்பிள்ளையின் கூற்றும் உணரற்பாலது.

இருவர் உள்ளம் மாறுபட்டு பிணக்குற்ற நிலையில், அவர்களை சமாதானம் செய்து பகை நீங்கி இன்புற்றிருக்க முயல்வது மனித தன்மையின் வெளிப்பாடு. “எல்லாரும் இன்புற்று இருப்பதுவேயல்லாமல் வேறொன்றும்

அறியேன் பராபரமே" என்ற தாயுமானவரின் பாடலடிகளைப் போன்று உலகமும், உலக மக்களும் இன்புற்றிருக்க வேண்டும் என்பதையே அனைத்து சமயங்களும், மார்க்கங்களும் சமயப் பெரியவர்களும் வலியுறுத்தியுள்ளனர். இதை,

**"சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கியவான்கள் அவர்கள் தேவனுடைய புத்திரர் எண்ணப்படுவார்கள்"** [56]

என்று சமாதானம் செய்து வைக்க முற்படுகிறவர்களை இறைவனின் பிள்ளைகள் என்று புனித விவிலியம் போற்றுகிறது.

பிரிவொழுக்க முறைகளைத் தொல்காப்பியர், சொல்லுமிடத்து,

***"ஓதல் பகையே தூது இவை பிரிவே"*** [57]

என்று கூறி அவற்றுள்,

***"ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன"*** [58]

என்ற நூற்பாவிற்குக் கல்வி பயல்வதற்காகப் பிரிதலும் தூது போவதற்காகப் பிரிதலும் மக்கள் தொகுதியில் உயர்ந்தோராகிய பருதியினர்க்கே உரியவாம் என்கிறார். ஒழுக்கம், குணம், செல்வம் முதலியவற்றான் உயர்வுடைமைப் பற்றி இவரை உயர்ந்தோர் என்றனர். இதிலிருந்து ஒழுக்கம், குணம், செல்வம், உடையவர்கள் உயர்ந்தோர் என்று அறியப்பட முடிகிறது. இதை,

***"வேந்துவினை இயற்கை வேந்தன் ஒரீஇய***
***ஏனோர் மருங்கினும் எய்திடன் உடைத்தே"*** [59]

வேந்தனுக்காகத் தூதுக்கு உரியோராக வேந்தன் ஒழிந்த வணிகர் வேளாளர், மன்னனால் நியமிக்கப்பட்ட அமைச்சர் என்று தொல்காப்பியர் சுட்டிக் காட்டுகிறார்.

முன் கையில் திரண்ட வளையல்களை அணிந்த தலைவி தான் அவளைப் பிரிந்து யானை நீர் வேட்கையால் வருந்திக் காலை நீரைப் பருக

ஓடுகின்ற மலைப்பாதையின் வழியாகச் சென்று அரசர்களுக்கு இடையே போர் அமைதியை உண்டாக்குகின்ற செயலை முடித்துத் திரும்பும் வரை வீட்டிலிருந்து துன்பமின்றிக் கடமைகளைச் செய்து வருவாளோ என்று தலைவன் உறக்கத்தில் குழறிப் பேசியதை,

*"தொடிநிரை முன்கையால் கையாறு கொள்ளாள்*
*கடிமனை கலத்து ஓம்ப வல்லுவள் கொல்லோ*
*விடுமருப்பு யானை இலங்குதேர்க்கு ஓடும்*
*நெடுமலை வெஞ்சுரம்போகி, நடுநின்று எம்*
*செய்பொருள் முற்றும் அளவு என்றார் ஆயிழாய்"* [60]

என்று தலைவி பாடுவதும், கோபம் கொண்ட இரண்டு மன்னர்கள் வாள் எடுத்துப்போர் செய்யும்பொழுது அவர்களை நண்பராக்கும் வழியை ஆராய்ந்து அவர்களிடையே மாறி மாறித் தூது செல்வது நன்மக்களின் செயல் இதை,

*"வலிமிகு வெகுளியால் வாளுற்ற மன்னரை*
*நயன்நாடி நட்பாக்கும் வினைவர்போல் மாறிதரும்"* [61]

என்ற பாடலடிகளும் தூது செல்லும் உரிமையைப் புலவர்கள் மட்டுமின்றி அரசனால் நியமிக்கப்பட்ட அமைச்சர் குடிமக்களும் பெற்றுச் சிறந்தனர் என்று துணியலாகிறது.

## ஆட்சியின் மாட்சி

நாட்டு மக்கள் பெற்றிருக்கக்கூடிய வளங்கள், உரிமைகள் முதலிய பண்புகளைக் கொண்டே ஆட்சியின் சிறப்பினைக் கணக்கிட இயலும். மன்னராட்சியில் மக்களின் நலனைக் கருதியே எல்லை விரிவாக்கமும் போர்முறைகளும் கையாளப்பட்டன. மக்களை அறநெறிப்படி வழிநடத்துவதும், ஆள்வதும் மன்னனின் கடமையென வலியுறுத்தப் பெற்றன. உள்நாட்டில் அமைதி குலையாதபடி மன்னர்களும் அரசினை

நடத்தினரன்றி மக்களைத் துன்பப்படுத்தி எல்லையை விரிவுபடுத்த நினைத்தனர் அல்லர். அனைத்து இயற்கை வளங்களையும் தன்னகத்தே கொண்டிருந்தாலும் குடிகளின் குறையினை அறிந்து ஆட்சி புரியாத அரசு வளர்ச்சி அடையாது நின்றபடி வீழும். இதை,

**"குடிமக்களின் குறையுணர்ந்து ஆளாத எந்த அரசும் மக்களைக் கொடுமைப்படுத்தும் அரசேயாகும். நல்ல திறமையுள்ள அரசால்தான் நாடுவளம் பெற முடியும். குடிகள் குறைகளின்றி குதூகலமாக வாழ முடியும் எவ்வளவுதான் இயற்கைச் செல்வம் நிறைந்த நாடாயிருந்தாலும் நல்லலரசின்றேல் அந்நாடு நாசப்படுகுழியில் வீழ்ந்து நலிவடையும்"** [62]

என்கின்றார் சாமி. சிதம்பரனார்.

அளவு கடந்த சினம், காமம், மிகுந்த கண்ணோட்டம், அச்சம், பொய்யுரை, மிக்க அன்புடைமை, கொடுமையான தண்டனை ஆகிய தீங்குகள் நீங்க நற்செயல்களைச் செய்து, மக்கள் பிறரை வருத்தாமல் பிறர் பொருளை விரும்பாமல் குற்றமற்ற அறிவினராய் பலர்க்கும் பகுத்துக் கொடுத்து நெடுங்காலம் மன்னர்கள் ஆட்சி புரிந்து வந்தனர் என்பதை,

***"சினனே காமம் கழிகண்ணோட்டம்***
***அச்சம் பொய்ச்சொல் அன்புமிக உடைமை"*** [63]

என்ற பதிற்றுப்பத்துப் பாடலின் வழி மன்னர் தம் ஆட்சித் திறத்தை அறிந்து கொள்ளலாகிறது.

போரில் எதிரி நாட்டு படைவீரர்கள் இறந்தால் மகளிர் மார்பில் அடித்துக் கொண்டு தங்கள் கூந்தலைக் கொய்வதைக் கண்டு மனமிரங்கி, தாமாகவே போரினைக் கைவிட்டான் பாண்டிய நெடுஞ்செழியன் என்பதை,

*"முலைபொலி ஆகம் உருப்ப நூறி*
*மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்*
*ஒண்ணுதல் மகளிர் கைம்மை கூர*
*அவிர் அறல் கடுக்கும் அம்மென்*
*குவை இரும் கூந்தல் கொய்தல் கண்டே"* [64]

என்ற புறப்பாடல் அடிகளால் அறிய முடிகிறது. சங்க கால மன்னர்கள் வீரத்தில் மட்டுமின்றி மனித நேயத்திலும் சிறந்திலங்கினர் என்பது வெள்ளிடமலை.

> **"மக்களை ஒரு நெறிமுறையில் வாழச் செய்யும் அரசியலமைதியே ஒரு நாட்டிற்கு முதற்கண் வேண்டப்படுவதாகும். இவ்வமைதி பெறாத நாடு வாழ்க்கை வளங்கள் எல்லாம் குறைவறப் பெற்றிருப்பினும் நாடாக நிலை பெறுதல் இயலாது. இந்நுட்பத்தினைப் பண்டைத் தமிழர்கள் நன்குணர்ந்திருந்தனர்"** [65]

என்ற க. வெள்ளைவாரணர் அவர்களின் கூற்றினையும் இங்கு உற்றுநோக்கத்தக்கது. மேலும்,

> **"எந்த நாடாயிருந்தாலும் சரி உள்நாட்டு மக்களின் வாழ்வைப் பாதுகாக்காவிட்டால் உள்நாட்டு மக்களின் உள்ளம் மகிழும்படி அறநெறியிலே நடந்து கொள்ளாவிட்டால் அந்நாடு எவ்வளவு படைபலத்தைப் பெற்றிருந்தாலும் பயனில்லை. உள்நாட்டு மக்களை வறுமையிலே வாடி வதங்க விட்டு உள்நாட்டு மக்களின் உரிமையை அடியோடு அடக்கி நசுக்கிவிட்டுப் போரிலே ஈடுபட்ட அரசாங்கங்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்துபோன கதைகளை நாம் கேட்டிருக்கின்றோம்"** [66]

என்கின்றார் சாமி சிதம்பரனார்.

உள்நாட்டு மக்களின் வாழ்வுரிமைகளைப் பேணிப் பாதுகாத்து வறுமை நீக்கி குடிகள் மனபயமின்றி மகிழ்ந்திருக்கும்படிச் செய்து நாட்டைக் காப்பாற்றாத அரசுகள் நெடுநாட்கள் நிலைத்திராது இக்கருத்து சங்க காலத்து மட்டுமின்றி இக்காலத்திற்கும் பொருந்துவதைக் காண முடிகிறது.

மனவளம், அரசுரிமை, வாக்களித்தல், ஐம்பெருங்குழு, எண்பேராயம், நீதி பெறுதல், குற்றமும் தண்டனையும், வழக்குரைத்தல், தூது விடுத்தல், வேலை வாய்ப்பு இவை போன்ற உரிமைகள் யாவற்றையும் அக்கால அரசு மக்களுக்கு வழங்கியுள்ளமை தெளிவாகின்றது.

## போர் முறைகள்

முடியாட்சி காலத்தில் போர் வாழ்வின் ஒரு அங்கமாகத் திகழ்ந்ததுமன்றித் தவிர்க்க முடியாததுமாகும்.

*"ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்*
*புதுவது தன்று இவ் வுலகத்து இயற்கை"* [67]

என்ற புறப்பாடல் போரிட்டு ஒருவரை ஒருவர் வெற்றி பெறுவதும் தோற்பதும் இவ்வுலகத்தின் இயற்கை என்கின்றது.

எல்லையை விரிவு படுத்த வேண்டும் என்ற மண்ணாசையும், வெற்றி பெற்று வீரத்தை நிலைநாட்டி புகழ்பெற வேண்டும் அல்லது வீரமரணம் எய்தி சுவர்க்கம் புக வேண்டும் என்ற எண்ணமும், ஆநிரைகளைக் கவர்வதும், பெண்ணாசையும் போருக்கான அடிப்படைக் காரணங்களாயின.

சீறூர் மன்னர், குறுநில மன்னர், முதுகுடி மன்னர், வேந்தர் என்ற நான்கு விதமான மன்னர்கள் மக்களை அரசாண்டார்கள் என்கின்றனர் பெ. மாதையன் இவர்களின் போர் முறையும், நோக்கமும் ஒன்றானவைகளாகக் காணப்படவில்லை என்பதை,

> **"சீறூர் மன்னர், முதுகுடிமன்னர், குறுநில மன்னர், வேந்தர் எனும் நால்வகைத் தலைவர்களும் உடைமை நிலையிலும் ஊர் குடிகளோடும், புலவர்களோடும் கொண்டிருந்த உறவு நிலையிலும் வேறுபட்டிருந்ததைப் போல் போர் முறைகளிலேயும் வேறுபட்டிருந்தனர்"** [68]

என்பர். போருக்கான காரணங்களும் நோக்கமும் அரசாட்சி செய்பவர்களுக்கிடையே வேறுபட்ட மனநிலை இருந்ததை,

> **"சமுதாய வளர்ச்சி நிலை, தலைமகனின் இயல்பு வேறுபாடு உற்பத்தி உறவு முறைகள் ஆகியவற்றுக்கு தகுந்தவாறு போர்முறைகளும் வேறுபட்டிருப்பதை சங்கப்பாடல்களும் தெளிவாய் சுட்டுகின்றன. எல்லா வகையான போர்முறைகளும் எல்லாவகையான சமுதாயங்களிலும் இருந்ததென கொள்ளவியலாது. எந்த வகையான பொருளாதாரம் மையப்படுத்தப்பட்டதோ அந்த பொருளாதார ஆதாரத்திற்கு ஏற்ப போர் முறைகளும் போர் நோக்கங்களும் வேறுபட்டிருந்தன"** [69]

என்றும்,

> **"வேந்தர்களின் போர் நோக்கங்கள் எல்லாம் பொருளாதார அடிப்படையான வினை வயல்களை அழிப்பனவாகவும், பொருளாதார பாதுகாப்பிற்கான மதில்களை அழிப்பனவாகவும் நாட்டிற்கு தீயிடுதலாகவும் நீர் நிலைகளை பாழ்படுத்துவனவாகவும் இருந்துள்ளன"** [70]

என்றும்,

**“வேந்தர்களின் நோக்கம் மதிற்போரும் வாயிற் போருமாக இருந்திருக்கின்றனவே அன்றிக் கால்நடைகளை கவரும் போர்களாய் இருக்கவில்லை”** [71]

எனவும்,

**“மன்னர்களால் ஏவப்பட்டவர்கள் மாடு பிடித்து வருவார்கள் என்றால் பிரித்து வரப்பட்ட மாடுகள் மன்னரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்க வேண்டும். பிடித்து வந்தோர் பங்கிட்டுக் கொண்டனர் என்பதே வேந்தர் போன்றோர் வீரர்களை அவ்வாறு போருக்கு விடவில்லை என்பதற்கு சான்று”** [72]

என்று வரும் கூற்றுக்கள் இங்கு ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கன.

மகட் கொடை மறுப்பிற்காகத் தொடுக்கப்பட்ட போர்களில் அரசர்கள் மட்டுமே ஈடுபட்டனர் இதை,

**“முதுகுடி மன்னரின் மகளிரை மணக்கும் போரில் வேந்தர்கள் மட்டுமே ஈடுபட்டுள்ளனர் மகட்கொடை வேண்டிய செயலைக் குறுநில மன்னர்களிடம் காண இயலவில்லை”** [73]

என்பர் பெ. மாதையன். மேலும்,

***“கடுமான் வேந்தர் காலை வந்துஎம்***
***நெடுநிலை வாயில் கொட்குவர் மாதோ***
***பொருதாது அமைகுவர் அல்லர்; போருழந்து”*** [74]

என வரும் பாடலடிகள் மகட்கொடை மறுப்பிற்காக நிகழ்த்தப் பெற்ற போர் என்பதையும் உணர்த்துகின்றன.

***“வையம் காவலர் வழிமொழிந் தொழுகப்***
***போகம் வேண்டிப் பொதுச்சொல் பொறாஅது***

*இடஞ்சிறிது என்னும் ஊக்கம் நுரப்ப*
*ஒருங்கா உள்ளத்து ஓம்பா ஈகை"* [75]

என்ற பாடல் நிலப் பரப்பைப் பெருக்கிக் கொள்ள நடைபெற்றதையும்

*"உதுப்பு அஞ்சாது உடல் சினம் செருக்கிச்*
*சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை*
*அரும்சமம் சிதையத் தாக்கி முரசமொடு*
*ஒருங்குஅகப் படேஎன் ஆயின் பொருந்திய"* [76]

என வரும் பாடலடிகளால் எதிரியை வீழ்த்தி வெற்றி பெறுவதற்காகப் போர் தொடுக்கப்படுவதை உணர்த்துகின்றது.

போரில் வீரமரணம் அடைந்ததைப் புகழாக மக்கள் கருதினர் என்பதை,

*"விலங்குபகை கடிந்த கலங்காச் செங்கோல்*
*வையகம் புகழ்ந்த வயங்குவனை ஒள்வாள்*
*பொய்ய எழினி பொருதுகளம் சேர"* [77]

என்று பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

போர் எனின் உறவு நிலைகளைப் பற்றி கவலைப் படாது வீரத்தினை நிலை நாட்டவும் ஆட்சியைப் பிடிக்கவும் பண்டைத் தமிழ் மன்னர்கள் உள்ளம் கொண்டோராய் இருந்திருக்கின்றனர். இதை,

*"பொங்குநீர் உடுத்தஇம் மலர்தலை உலகத்து*
*நின்தலை வந்த இருவரை நினைப்பின்*
*தொன்றுஉரை துப்பின்நின் பகைஞரும் அல்லர்*
*அமர்வெம் காட்சியொடு மாறுஎதிர் எழுந்தவர்*
*நினையும் காலை நீயும் மற்றவர்க்கு*
*அனையை அலலை அடுமான் தோன்றல்"* [78]

என்ற பாடல், தந்தை, மக்கள் இருவருக்கும் இடையே நடந்த போரினை உணர்த்தி நிற்கின்றது.

போரின் போது உயிர்கள் மடிவது இயற்கை. போரில் ஈடுபடாதவர்களைக் கொல்வது போர் அறம் அன்று என்ற கருதினர் பண்டைத் தமிழ் வீர மரபினர். போர் நடைபெறுவதற்கு முன்னர் முரசம் அறைவித்துப் போரில் பங்கு பெறாத பார்பனர் பிணியுடையோர், பெண்டிர், ஆநிரைகள், ஈமச்சடங்கினைச் செய்யும் உரிமை பெற்ற புதல்வனைப் பெறாதோர் நாட்டை விட்டு வெளியேறச் செய்து போர் அறத்தினை நிலை நாட்டினர் என்பதை,

*"ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்*
*பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்*
*தென்புல வாழ்நர்க் கருங்கடன் இறுக்கும்*
*பொன்போல் புதல்வர்ப் பெறாஅ தீரும்*
*எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மினென*
*அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தில்"* [79]

என்ற பாடலடிகள் குறிப்பிடும். இரு நூற்றாண்டுகளில் உலகில் நடைப்பெற்ற போர்களில் அப்பாவி மக்கள் கொடுமையான முறையில் சித்திரவதைச் செய்யப்பட்டு கொல்லப்பட்டதை ஒப்பு நோக்க பண்டைத் தமிழர் போரின் போது அறத்தைக் கையாண்டு சிறந்து விளங்கினர் என்று அறியமுடிகிறது.

தன்னை எதிர்த்த எழுவரையும் ஒருவனே போர் செய்து வீழ்த்தியது, வீரத்தின் சிறப்பினை எடுத்துக் கூறும். இதை,

**"போர் தொடுத்து வெற்றி பெறும் மன்னன் போற்றுதற்குரியவன் என்ற தத்துவத்தின் விளைவாக நாட்டின் அமைதி வெகுவாகக் குலைக்கப்பட்டது. ஆயினும் சமுதாய வாழ்வு அரசியல் அமைப்பை அதிகமாக சாராமல் இருந்ததால் போரும் பல குழப்பங்கள் தோன்றுவதும்**

**சமுதாய அமைப்பையோ நாகரிக வாழ்வையோ பாதிக்கவில்லை"** [80]

என்கின்றார் நீலகண்டசாஸ்திரி.

**மன்னிப்பு**

மறப்பது மனித குணம். மன்னிப்பது தெய்வ குணம். தவறு செய்பவனைத் தண்டிப்பதைக் காட்டிலும் மன்னித்து விடுவது மிகுந்த பலனைத் தரும். இக்குணத்தினால் மனிதனும் தெய்வ நிலைக்கு உயர்த்தப்படுகிறான். சங்க காலம் முடியாட்சி காலமாயினும் மன்னிப்பு அளிப்பதும், பெறுவதும் அறம் சார்ந்ததாக இருந்து அரசியல் உரிமையை நிலை நிறுத்துவதாகக் காணப்படுகிறது. நீதி வழங்குதலில் உரிமையியல் மற்றும் குற்றவியல் வழக்குகள் என்ற பிரிவு சங்க காலத்தில் இல்லை என்பதால் குற்றச் செயலில் ஈடுபட்டு மன்னிப்புப் பெற்று விடுதலையடைந்தது குறித்துச் செய்திகள் காணப்படவில்லை. என்றாலும், மன்னர்களும் புலவர்களும் இக்குணத்தைப் பெற்று சிறந்து விளங்கினர்.

தன் வீரத்தைக் கண்டு அஞ்சி வந்தவரின் செயலை மன்னித்து கோபம் கொள்ளாமல் பகைவரைப் பொறுத்துக் கொள்ளும் பண்பினைப் பெற்றவன் ஓய்மா நாட்டு நல்லியக்கோடன் என்பதை,

***"அஞ்சினார்க்கு அளித்தலும் வெஞ்சிமை இன்மையும்***
***ஆண்அணி புகுதலும் அழிபடை தாங்கலும்***
***வாள்மீக் கூற்றத்து வயவர் ஏத்தக்"*** [81]

என்ற பாடலடிகளில் காண முடிகிறது. மேலும்,

***"அறியாது எதிர்த்து துப்பின் குறையுற்றுப்***
***பணிந்துதிறை தருபநின் பகைவாயின்***
***சினம்செலத் தணியுமோ, வாழ்கநின் கண்ணி"*** [82]

என்றும்,

*"வென்றுகலம் தரீஇயர் வேண்டுபுலத்து இறுத்துஅவர்*
*வாடா யாணர் நாடுதிறை கொடுப்ப*
*நல்கினை ஆகுமதி எம்என்று அருளிக்*
*கல்பிறங்கு வைப்பின் கடறுஅரை யாத்தநின்*
*தொல்புகழ் மூதூர்ச் செல்குவை யாயின்"* [83]

என வரும் பாடலடிகளும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் மன்னிக்கும் பண்பினை கொண்டவன் என்று அறியமுடிகிறது.

அரசனின் புகழைப் பறைசாற்றுவதும், அரசாங்கத்தின் மதிப்பும், சிறப்பு மிக்க மிக உயர்ந்த பொருள்களாக மதிக்கப் பெறுபவை, முரசு, வெண்கொற்றக் குடை, செங்கோல் ஆகியன. முரசு கட்டிலின் மேல் அமர்வது அரசு குற்றமாகக் கருதப்பட்டது. ஆனால் அயர்ந்து தூங்கும் புலவர்க்கு மன்னன் கவரி கொண்டு வீசுவதை,

*"உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை*
*விளங்கக் கேட்ட மாறுகொல்*
*வலம்படு குருசில்நீ ஈங்கிது செயலே"* [84]

என்ற பாடலும்,

*"நீர்த்தோ நினக்குஎன வெறுப்பக் கூறி*
*நின்யாவன் பிழைத்தது நோவாய் என்னினும்*
*நீபிழைத் தாய்போல் நனிநா ணினையே*
*தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்கும் செம்மல்"* [85]

எனவரும் பாடலடிகளும் புலவர்கள் செய்த தவறினை மன்னர்கள் மன்னித்தப் பாங்கினைப் பறைசாற்றுகின்றதை அறியமுடிகிறது.

போரில் தோற்ற பின்பு பணிந்து வந்து நாட்டைக் கேட்பின் மன்னித்துத் தன் உயிரையும் அளிக்கும் சிறப்பினையுடையவர்களாக இருந்தனர் நம்மனோர்.

*"மெல்ல வந்துஎன் நல்அடி பொருந்தி*
*'ஈ' என இரக்குவர் ஆயின் சீருடை*
*முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம்*
*இன்உயிர் ஆயினும் கொடுக்குவென்"* [86]

என வரும் பாடலடிகளில் மன்னிக்கும் கடமையும் மன்னிப்பு பெறும் உரிமையும் பெற்றுப் பண்டைத் தமிழர் பண்பில் சிறந்தனர்.

**வழக்காடும் உரிமை**

தனக்குப் பாதிப்பும் தீமையும் நேருகிற பொழுது நீதிமன்றத்தை நாடுவதும், தன் மீது வழக்குத் தொடுக்கும் போது தன் தரப்பு நியாயங்களை எடுத்துக் கூறி தான் குற்றமற்றவர் என்பதை நிரூபிக்கும் உரிமை அரசியல் உரிமையின் முக்கியமான அங்கம்.

வழக்கு மன்றத்தில் வழக்கின் பொருண்மையினைத் தானே எடுத்துரைத்து வழக்காடும் உரிமையினைத் தமிழ் மக்கள் கைவரப் பெற்றிருந்தனர். அறங்கூற வைத்தாரையும், மன்னனையும் நேராகச் சந்தித்து வழக்குரைத்தனர். இதனை,

**"மன்னனைக் காண எல்லோருக்கும் உரிமை இருந்தது. தன் குறையை எடுத்துக் கூறும் வாய்ப்பு இருந்தது. வழக்கறிஞர் என்னும் இடைத்தரகர் இல்லை. தன் வழக்கைத் தானே வாதாட வழி வகைகள் இருந்தன"** [87]

என்கின்றார் சூ. இன்னாசி.

மக்களாட்சி காலத்தில் தனக்கு இழைக்கப்படும் அநீதிகளுக்கு எதிராகத் தாங்களோ அல்லது தங்களால் நியமிக்கப்படும் வழக்கறிஞரையோ கொண்டு நீதிமன்றத்தில் வழக்காடுவதற்கு மக்கள் உரிமையுடையவர்கள். சங்க காலத்தில் எழுதப்பட்ட சட்டங்கள் இல்லாத நிலையில் தம் தரப்பு

நியாயங்களையும் வாதங்களாகயும் வழக்கறிஞர்களன்றிக் தரப்பினரே அவையின் முன் எடுத்துரைக்க முடிந்தது. இக்காலத்தில் எழுதப்பட்ட சட்டங்கள், முன் தீர்ப்புகள், நீதிமன்ற நடவடிக்கைள் ஆகியவை துணைக் கொண்டு வழக்கு நடத்துகின்ற காரணத்தால் மக்கள் வழக்கறிஞர்களைக் கொண்டு வாதம் புரியும் நிலைமை காணப்படுகிறது. ஆனால் தம் வழக்கினைத் தாமே நடத்துவதற்குச் சட்டம் அனுமதிக்கின்றது.

*"வையத் தெழுவத்துத் தந்து வடித்துஇடித்து*
*மத்திகை மாலையா மோதி, அவையத்துத்*
*தொடர்ந்தேம் எருது"* [88]

என்ற பாடலில் தலைவி அவையில் வழக்குத் தொடர்ந்ததையும், தன் கணவன் கொலையுண்டதை அறிந்த கண்ணகி பாண்டியனின் அவைக்குச் சென்று தன் கணவன் குற்றவாளி அல்லன் என்பதை நிரூபிக்கும் பொருட்டுத் தானே மன்னன் முன் வழக்காடிய பாங்கினை,

*"தேரா மன்னா செப்புவ துடையேன்*
------------------------------------------------------------
------------------------------------------------------------
*தேமொழி உரைத்தது செவ்வை நன்மொழி"* [89]

என்று சிலம்பும்,

கள்ளூர் என்னும் ஊரில் நடைப்பெற்ற வழக்கு ஒன்றில் காதலித்து இன்பம் துய்த்துப் பின் மணமுடிக்காமல் தன்னை ஏமாற்றிய ஆடவனின் செயலைக் குறித்து அறங்கூறவையாத்தார் முன் பெண் வழக்கினை எடுத்துக் கூறியதை,

*"கரும்பு அமல் படப்பை, பெரும்பெயர்க் கள்ளூர்த்*
*திருநுதற் குறுமகள் அணிநலம் வவ்விய*
*அறனி லாளன், அறியேன் என்றி"* [90]

என்ற அகநானூற்றுப் பாடலடிகளும் உணர்த்துகின்றன. மேலும், கரிகால் பெருவளத்தானின் அவையில் வழைக்குரைக்க முதியோர் சென்றது எண்ணிப் பார்க்கத்தக்கது.

## சிறைப் பிடிக்கப்பட்டவர்கள் மாண்புடன் நடத்தப் படுவதற்கான உரிமை

உலகில் அனைத்து மனிதர்களும் மாண்புடன் வாழ்வதற்கும், நடத்தப்படுவதற்கும் உரிமையுடையவர்கள். குற்றங்களைச் செய்து விட்டு தண்டனைப் பெறும் குற்றவாளிகளாகச் சிறையிலிருக்கும் கைதிகளும் அத்தகைய உரிமையைப் பெற்றிருக்கின்றனர். சங்க காலத்தில் நீதி முறையில் விசாரிக்கப்பட்டு குற்றவாளியாகச் சிறையில் அடைத்து தண்டித்ததாக எந்தக் குறிப்பும் காணப்படவில்லை. ஆனால் போரில் வெற்றி பெற்ற மன்னன் தோற்ற மன்னனையும், போர்வீரர்களையும், பெண்களையும் போர் கைதிகளாகப் பிடித்து வந்ததைச் சங்க இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

அவ்வாறு பிடிக்கப்பட்டவர்கள் மிகவும் கீழ்த்தரமாகவும் கொடுமையான முறையிலும் நடத்தப்பட்டனர். இதற்குப் பெண்களும் விதிவிலக்கானவர்கள் அல்லர்.

கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் பழையன் என்னும் மன்னனுடைய காவல் மரமான வேம்பின் அடிமரத்தைத் துண்டுபட வெட்டி அவற்றை அங்குக் கணவனை இழந்து அணிகலன்களை அகற்றிய மகளிரின் கூந்தல் மயிரினால் செய்யப்பட்ட கயிற்றினால் பகைவரின் யானைகளைக் கட்டி இழுத்து வரச் செய்தான். இதை,

*"பழையன் காக்கும் கருஞ்சினை வேம்பின்*
*முழாரை முழுமுதல் துமியப் பண்ணி*

*வால்இழை கழித்த நறும்பல் பெண்டிர்*
*பல்இரும் கூந்தல் முரற்சியால்*
*குஞ்சர ஒழுகை பூட்டி, வெந்திறல்" [91]*

என்று பதிற்றுப்பத்து உணர்த்துகின்றது.

அக்காலத்தில் பெண்களின் கூந்தலினை அறுப்பது பெண்களை இழுவுபடுத்தும் செயலாகக் கருதப்பட்டது. போரில் சிறைப்பிடிக்கப் பெற்ற பெண்கள் கொண்டி மகளிர் என்றழைக்கப்பட்டனர். இவர்கள் கோவில்களில் பணிப்பெண்களாக வேலைக்கு அமர்த்தப் பெற்றனர். என்பதை,

*"கொண்டி மகளிர் உண்துறை மூழ்கி*
*அந்தி மாட்டிய நந்தா விளக்கின்*
*மலரணி மெழுக்கும் ஏறிப் பலர்தொழ*
*வம்பலர் சேர்கும் கந்துடைப் பொதியில்" [92]*

என்ற பாடலால் அறிந்து கொள்ள முடிகிறது. இதையே,

> **"போரில் சிறைப்பிடிக்கப்பட்ட பெண்கள் அடிமைகளாக ஆலயங்களில் பணிபுரிந்து வந்தார்கள். தர்ம யுத்தமாக மேற்கொள்ளப்பட்ட போரில் பெண்கள், பசுக்கள், பிராமணர்கள், நோயாளிகள் முதலியவர்களுக்கு விலக்கு அளிக்கப்பட்டது" [93]**

என்கின்றார் நீலகண்ட சாஸ்திரி.

*"வருவர் வாழி தோழி! மூவன்*
*முழுவலி முள்ளெயிறு அழுத்திய கதவின்*
*கானலந் தொண்டிப் பொருநன் வென்வேல்*
*தெறல்அருந் தானைப் பொறையன் பாசறை" [94]*

என்ற பாடலில் மூவன் என்பவனைப் போரில் வென்ற தொண்டி நகர்த் தலைவனாகிய பொறையன் மூவனின் வலிய பற்களைப் பிடுங்கித் தன் வாயிற் கதவில் பதிய வைத்தான் இது வெற்றியின் அடையாளம் என்ற

பெயரில் மிகவும் கொடூரமான செயல்கள் அரங்கேறியிருக்கின்றன என்பதும் அவைகள் வீரத்தின் அடையாளம் என்று புலவர்கள் புகழ்ந்து பாடியதும் எண்ணி வியக்கத்தக்கது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் நயமில்லாத வன்சொல் பேசும் யவனர்களைப் போரில் கைப்பற்றி அவர்கள் தலையில் நெய்யினை ஊற்றியும் கைகளை முதுகுப்புறத்தே இணைத்துக் கட்டியும், விலைமிக்க அணிகலன்களைத் தண்டமாகப் பெற்று தன் நகருக்குக் கொண்டு வந்தான் என்பதை,

*"பேரிசை மரபின் ஆரியர் வணக்கி*
*நயன்இல் வன்சொல் யவனர்ப் பிணித்து*
*நெய்தலைப் பெய்து கைபின் கொளீஇ*
*அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு"* [95]

என்ற பாடலடிகளும் மேற்கூறியவற்றுக்குச் சான்றாக அமைகின்றது.

*"கேள்அல் கேளிர் வேளாண் சிறுபதம்*
*மதுகை இன்று வயிற்றுத்தீதி தணியத்*
*தாம் இரந்து உண்ணும் அளவை*
*ஈன்ம ரோகிவ் வுலகத் தானே"* [96]

என்ற பாடலடிகளில் சிறைக் கைதியாக வைக்கப்பட்ட சேரமான் கணைக்கால் இரும்பொறைக்குச் சிறைச்சாலையில் தண்ணீர் கூட வைக்காமல் கேட்டுப் பெற்றுக் கொள்ளும் அளவிற்குப் போரில் சிறைப் பிடிக்கப்பட்டவர்கள் கொடுமையாக நடத்தப் பெற்றதை தெளிவுபடுத்துகிறது.

## அரசு வேலை பெறும் உரிமை

உயிர் வாழ உணவு தேவை. உணவினைப் பெறுவதற்கு வேலை அடிப்படை. நாட்டின் குடிமக்களாகக் காணப்படும் ஒவ்வொருவரும் இவ்வுரிமையினைப் பெற தகுதியுடையவர்கள். பால், மொழி, இனம் என்று

வேறுபாடு காட்டாது பணி வழங்குவதும் அதற்கான வசதிகளை ஏற்படுத்தித் தருவதும் அரசாள்வோரின் கடமை. இவ்வுரிமை சாதாரண வாழ்க்கை நிலையிலிருந்து உயர்வினை அடையவும், பாதுகாப்பான வாழ்க்கைக்கு இன்றியமையாததும், மக்களின் எதிர்பார்ப்பாகவும் காணப்படுவது. அரசுவேலை இளைஞர்களின் இலட்சியக் கனவும் ஆகும். மக்கள் தங்களின் மதிப்பைச் சமுதாயத்தில் உயர்த்திக் கொள்வதற்கும், அரசியல் பொருளாதாரத்தில் சிறந்து விளங்கவும் துணைபுரியும் காரணிகளில் இதுவும் ஒன்று. இதை,

> **“வேலை உரிமை என்பது ஒருவர் தனது அன்றாட ரொட்டித் துண்டைப் பெறுகிற வழிக்கும் அதிகமாகக் குறிப்பிட்ட வருமானம் என்ற சாதாரண நிலைக்கும் மேலாக அல்லது வாழ்வதற்கு உரிமை என்பதற்கும் மேலாகப் பார்க்கிறோம். வேலை உரிமை என்பது குடிமக்களின் சமூக அரசியல் அந்தஸ்தை நிர்ணயிக்கும் கட்டிடத்திற்கு அடித்தளமாகும். சமுதாய இலட்சியங்களை அடையும் பங்குப் பணியில் ஒருவர் ஈடுபடுவதை வேலை உணர வைக்கிறது. வேலை செய்ய உத்திரவாதம் என்பது ஒருவரது சமூக அந்தஸ்தை நிச்சயமாக உறுதிப்படுத்துவதாகும்”** [97]

என்கிறார் மா. சண்முகசுப்பிரமணியம்.

> **“அரசின் கீழுள்ள அலுவலகத்தில் வேலை அல்லது பணி நியமிப்புத் தொடர்பான காரியங்களில் அனைத்துக் குடிமக்களுக்கும் சம வாய்ப்பு அளித்தல் வேண்டும்”**

என்றும்,

> **“குடிமகன் எவரையும் சமயம், இனம், சாதி, பாலினம், பாரம்பரியம், பிறப்பிடம், உறைவிடம் அல்லது வேறு ஏதேனும்**

**ஒன்றைக் காரணங்காட்டி அரசுப் பணியில் நியமிக்கப்படுவதற்கும் அல்லது வேறு எந்தப் பணி ஆற்றுவதற்கும் தகுதியற்றவர் என்று கூறவும் பாகுபாடு காட்டவும் கூடாது"**

என்று இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு 16 (1) (2) அரசு வேலைக்கான உரிமை பாதுகாப்பினை அளிக்கிறது.

சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் இவ்வுரிமையினைப் பெற்று மகிழ்ந்திருந்தனர். அரசனின் அவையிலும், அரண்மனையிலும், நாட்டிலும் பணிபுரிந்த ஊழியர்களும் படை வீரர்களும் அரசுப்பணியாளர்களாகக் கருதப்பட்டனர். இவர்கள் அரசிடமிருந்து பொன்னையோ, பொருளையோ, நிலங்களையோ ஊதியமாகப் பெற்றனர் என்பதை,

**"அக்காலத்தில் போர் வீரர்களுக்கு மாத ஊதியம் அளிப்பதில்லை. நிலங்களையோ, நிலங்களின் வருமானத்தில் வரும் ஒரு பகுதியையோ மானியமாகவும் கடமையாகவும் அக்குடும்பங்களுக்கு அளிப்பதுண்டு"** [98]

என்ற கருத்துடன் இங்கு ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கது.

இக்காலத்து ஏரி மற்றும் ஆற்றின் அருகே அரசு ஊழியர் நீர் பெருகி அணை உடையாதவாறு காவல் காத்து நீரினைத் தேக்கித் தேவைப்படும் போது விவசாயத்திற்குத் திறந்து விடுவது போல குளத்தைக் காக்கும் காவலர் குறித்து,

***"மாரிக் குன்றத்துக் காப்பாள் அன்னன்"*** [99]

என்று கலித்தொகைக் குறிப்பிடுகின்றது.

மன்னர்களுக்கு மெய்காப்பாளராக இருந்து பாசறையைச் சுற்றி வீரர்கள் பாதுகாத்து வந்திருந்தனர். இதை,

*"நெடுநா ஒண்மணி நிழத்திய நடுநாள்*
*அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்*
*சிதர்வரல் அசைவளிக்கு அசைவந் தாங்குத்*
*துகின் முடித்துப் போர்த்த தூங்கல் ஓங்குநடைப்*
*பெருமூ தாளர் ஏனம் சூழ"* [100]

என்ற முல்லைப்பாட்டின் வரிகளில் இருந்து சங்ககாலத்தே மெய்காப்பாளர்கள் (Security Guards) மன்னனின் அருகே இருந்து காப்பாற்றியதுடன் தங்கும் இடங்களைச் சுற்றி காவல் காத்ததைப் போல இக்காலத்தும் அரசு ஆள்வோருக்குப் பாதுகாப்பு அளிக்கப் பல்வேறு பெயர்களில் பாதுகாப்பு படைகள் இருப்பதைக் காண முடிகிறது.

***"மென்நூல் ஏணிப் பல்மான் சுற்றினர்***
***நிலன்அகழ் உளியர் கலன்நசைஇக் கொட்கும்***
***கண்மாறு ஆடவர் ஒடுக்கம் ஒற்றி"*** [101]

என்ற பாடலடிகளில் கள்வரை, கண்இமைக்கும் நேரத்தில் அவர்கள் பதுங்கி இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்கும் ஒற்றர்கள் இருந்ததையும்,

இரவு நேரத்தில் கண் துஞ்சாமல் விழித்திருந்து சோர்விலாது விருப்பத்துடன் ஊரினைக் காவல் காத்தனர் காவலர்கள் என்பதை,

***"யாமம் கொள்பவர் சுடர்நிழல் கதூஉம்"*** [102]

என்ற புறநானூறும்,

***"காப்புடை வாயில் போற்றோ என்னும்***
***யாமம் கொள்பவர் நெடுநா ஒண்மணி"*** [103]

என்று நற்றிணையும்,

*"வயக்களிறு பார்க்கும் வயப்புலி போலத்*
*துஞ்சாக் கண்ணர் அஞ்சாக் கொள்கையர்*
*அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர் செறிந்த*
*நூல்வழிப் பிழையா நுணங்குநுண் தேர்ச்சி*

*ஊர்காப் பாளர் ஊக்கருங் கணையினர்*
*தேர்வழங்கு தெருவில் நீந்திரண்டு ஒழுக*
*மழை அமைந்து உற்ற அரைநாள் அமயமும்*
*அசைவிலர் எழுந்து நயம்வந்து வழங்கலின்*
*கடவுள் வழங்கும் கையறு கங்குலும்*
*அச்சம் அறியாது ஏமம் ஆகிய*
*மற்றை யாமம் பகல்உறக் கழிப்பி"* [104]

என்ற மதுரைக்காஞ்சிப் பாடலடிகள் காவலர்களின் நெஞ்சுரத்தையும், கடமையுணர்ச்சியுடன் அவர்கள் பணியாற்றியதையும் படம் பிடித்துக் காட்டுகிறது.

*"நல் இறைவன் பொருள்காக்கும்*
*தொல்இசைத் தொழில்மாக்கள்"* [105]

என வரும் பாடலடிகளில் காவிரிப் பூம்பட்டினத்தில் அரசனுக்காகச் சோர்வில்லாமல் நாள்தோறும் குறையாமல் சுங்கவரி வசூலித்தனர் என்பது புலப்படுகிறது.

மேலும், சுங்கச்சாவடியைக் காவல் புரிந்து ஏற்றுமதி இறக்குமதியாகும் பொருட்கள் மீது புலி இலச்சினையைப் பொறிக்கும் செயலில் பணியாளர்கள் ஈடுபட்டிருந்தனர். இதை,

*"நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்*
*அளந்தறியாப் பலபண்டம்*
*வரம்புஅறியாமை வந்துஈண்டி*
*அருங்கடிப் பெருங்காப்பின்*
*வலியுடை வல்அணங்கினோன்*
*புலி பொறித்துப் புறம்போக்கி"* [106]

என்று பட்டினப்பாலைச் சுட்டிக் காட்டுவதன் மூலம் பண்டைத்தமிழகம் ஏற்றுமதி இறக்குமதியில் சிறந்து விளங்கியமையும் உணரர்பாலது. அரசனால் நியமிக்கப்பட்ட ஒருவன் அரசுப்பணியில் திறமையோடு

செயல்பட்டால் அதனால் விளையும் பல பயன்களையும் அரசன் பெறுவான் என்று தலைவன் கூறுவதை,

***"நல்லாய்! இகுளை! கேள்***
***ஈங்கே தலைப்படுவன் - உண்டான் தலைப்பெயின்***
***வேந்து கொண் டன்ன பல"*** [107]

என்ற கலித்தொகைப் பாடலால் அறியலாம். அரசாங்கத்தில் ஊழியர்கள் திறம்பட பணியாற்றின் அரசு நிலைக்கும், நாடும் செழிக்கும், மக்கள் வளம் பெறுவர் என்ற உயரிய சிந்தனையைப் பழந்தமிழர் பெற்றிருந்தனர் என்பது தெளிவாக விளங்குகின்றது.

அரசு வேலையாக வேந்தன் அனுப்புவதால் ஓர் ஊரில் இருந்து வேற்றூருக்குச் சென்று வந்த தலைவனைக் குறித்து,

***"சீறூரோளே மடந்தை வேறூர்***
***வேந்துவிடு தொழிலொடு செலினும்"*** [108]

என்ற குறுந்தொகைப் பாடலில் அறியமுடிகிறது. இதையே,

***"வேந்துறு தொழிலே யாண்டினது அகமே"*** [109]

என்கின்றது தொல்காப்பியம்.

ஊர்க்காவலர்கள் இரவு நேரத்தில் நகரைச் சுற்றி வந்து காவல் புரிந்து கள்வரைக் குறித்து எச்சரிக்கை அளித்துச் சென்றுள்ளனர். இதை,

***"ஏதப்பாடு எண்ணிப் புரிசை வியல் உள்ளோர்***
***கள்வரைக் காணாது கண்டேம் என் பார்போலச்"*** [110]

என்று கலித்தொகைப் குறிப்பிடுவதைப் போல இக்காலத்திலும் காவலர்கள் நகரினை வலம் வந்து கள்வர்கள் குறித்து ஒலி எழுப்பி எச்சரிக்கைச் செய்து வருவதை உணர்ந்து கொள்ள முடிகிறது.

**பெண்கள்**

ஆண்கள் மட்டுமல்லாமல் பெண்களும் அரசுப் பணியாளர்களாகப் பணிபுரிந்து வந்திருக்கின்றனர் என்பதை சங்க இலக்கியங்கள் சுட்டிக் காட்டுகின்றன. கரிகால் பெருவளத்தானின் அரண்மனையில் வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்கும் பணிப்பெண்கள் பொற்கலங்களில் தேறலை ஊற்றிப் பரிசில் பெற வந்திருந்த பாணர்களுக்குக் கொடுக்கும் செயலில் ஈடுபட்டிருந்தனர். இதை,

*"இழைஅணி வனப்பின் இன்நகை மகளிர்*
*போக்குஇல் பொலங்கலம் நிறைய பல்கால்*
*வாக்குபு தரத்தர வருத்தம் வீட"* [111]

என்கின்றது பொருநர் ஆற்றுப்படை.

பாசறையில் இடையில் செருகப்பட்ட வாளுடன் சுரைக்குழாய்களில் நெய்யினையும் கையில் திரியினைக் கொண்டு பாவை விளக்கில் தீ அணையும் நேரத்தில் அதில் திரியிட்டு நெய்யூற்றி விளக்கினை ஏற்றியிருந்தனர் பெண்கள் என்பதை,

*"இரவு பகல் செய்யும் திண்பிடி ஒள்வாள்*
*வரவுவரிக் கச்சிற் பூண்ட மங்கையர்*
*நெய்யுமிழ் கரையர் நெடுந்திரி கொளீஇக்*
*கையமை விளக்கம் நந்துதொறும் மாட்ட"* [112]

என்ற முல்லைப்பாட்டு எடுத்துக் காட்டினாலும், பெண்கள் போருக்குச் செல்வதற்கு உரிமையற்றவர்களாகக் காணப்பட்டனர் என்றாலும் பாசறையில் பணிபுரியும் அரசு ஊழியர்களாக இருந்தனர் என்பதைச் சுட்டி நிற்கின்றது.

## மாற்றுத்திறனாளிகள்

சங்க காலத்தில், இப்பொழுது மாற்றுத்திறனாளிகள் என்று அழைக்கப்படுகின்ற உடல் ஊனமுற்றோர்களும் அரசுப்பணி செய் உரிமை பெற்றிருந்தனர் என்பதை,

*"எழினி வாங்கிய ஈரறைப் பள்ளியுள்*
*உடம்பின் உரைக்கும் உரையா நாவிற்"* [113]

என்ற பாடல் வரியில் பள்ளியறையில் நடக்கும் நிகழ்ச்சிகள் வெளியில் எவருக்கும் தெரியாமல் இருப்பதற்காக வாய் பேச முடியாதவர்களையும் காவலாக வைத்திருந்தனர் அக்கால மன்னர்கள் என்பதை உணர்த்துகின்றது.

## வெளிநாட்டினர்

ஒரு நாட்டு குடிமகன்கள் அந்த நாட்டில் வேலை பெறுவதற்கு முழு உரிமையும் தகுதியையும் உடையவர்கள் எனினும் வெளிநாட்டினரும் அரசில் பணிபுரிந்து வந்தனர் என்பதை,

*"வலிபுணர் யாக்கை வண்கண் யவனர்"* [114]

என்றும்,

*'படம்புகு மிலேச்சர் உழையர் ஆக"* [115]

என வரும் வரிகளால் வலிமை மிக்க யவனர்களும் மிலேச்சர்களும் படையில் இருந்தனர் என்பதையும் அறிய முடிகிறது. இங்கு,

> **"மிலேச்சர், துருக்கர் இவர் பெலுசித்தானத்தினின்றும் வந்தவர் என்றும் பெலுச்சர் என்பதே மிலேச்சர் என திரிந்து வழங்கிற்றென்றும் கூறுப"** [116]

என்று விளக்கம் தருகிறார் பொ.வெ. சோமசுந்தரனார்.

**நாழிகைக் கணக்கிடுவோர்**

காலம் கண் போன்றது. காலத்தின் அருமை கடந்து சென்றபோது உணர முடிவது. காலத்தைக் கணக்கிட்டு அறிவிப்புக் கொடுப்பதற்கு நாழிகைக் கணக்கர் என்போர் அரசில் பணிபுரிந்தனர். இதை,

*"பொழுதுஅளந் தறியும் பொய்யா மாக்கள்"* [117]

என்று முல்லைப்பாட்டும்,

*"குறுநீர்க் கன்னல் எண்ணுதலல்லது*
*கதிர் மருங்கறிய தஞ்சுவரப் பாஅய்"* [118]

என்று அகநானூறும் குறிப்பிடுகின்றது.

'நாழிகைக் கணக்கர்' என சிலம்பும், 'குறுநீர் கன்னலின் யாமங் கொள்பவர்' என்று மணிமேகலையும் கூறுவதை உற்றுநோக்கினால் அக்காலத்தைப் போலவே இன்றும் கிராமப்புறங்களிலும் புறநகர் பகுதிகளிலும் அரசு ஊழியர்கள் நேரத்தை அறிவிக்கும் பொருட்டு மின்னணு இயந்திரம் மூலம் சங்கு ஊதுவதை அறிந்து கொள்ளலாகிறது.

மற்ற உரிமைகளைப் போலவே, அடிப்படையான வேலையுரிமையைச் சமூகம் புறந்தள்ளுமானால் மனித உரிமைகள் பொருளற்றதாகப் போய் விடும்.

**"வேலை உரிமை என்பது சுதந்திரமின்மை என்று பொருள்படும் என நமக்குச் சொல்லப்படுகிறது. ஏனெனில், அது சமக மையங் கொண்டது. மக்களது வேலை செய்யும் போக்கு சமூகத்திற்குப் பயன்தரும் பணியாதவோடு சமூகப் பொருளாதார சுய நிர்ணய உரிமையை அது அவனிடமிருந்து பறிக்கிறது என்பது தெளிவாகிறது"** [119]

என்று தம்முடைய கருத்தைப் பதிவு செய்கிறார் ஜான்சாமுவேல்.

ஏற்றத்தாழ்வுகளற்ற சமதர்ம சமுதாயத்தின் அளவுகோலாக இவ்வுரிமை காணப்படுவதை மறுக்க இயலாது. எழுதப்பட்ட இந்திய அரசியல் அமைப்புச் சட்டமும் பிற சட்டங்களும் இவ்வுரிமைக்குப் பாதுகாப்பு அளித்திருப்பதோடு வகைப்படுத்தியும் வைத்திருக்கின்றது.

> **“வேலை உரிமை என்பது இயற்கை விதியை அடிப்படையாகக் கொண்டது எனவும் அதை பாராதீனப்படுத்த முடியாது என்பதைக் காட்டவும் இயற்கையினால் மனிதனுக்கு அளிக்கப்பட்டது. அது சொத்துரிமையை விட உயர்ந்தது”** [120]

என்கின்றார் ஜான்சாமுவேல்.

### அரசினை விமர்சிக்கும் உரிமை

குடிமக்களை வருத்தி முறையான ஆட்சி நடைபெறாத நேரங்களில் அரசின் செயல்பாடுகளை விமர்சித்து மக்களைக் காக்க முற்படுவது ஒவ்வொரு குடிமகன் கடமையும், உரிமையுமாகிறது. இவ்வுரிமை கருத்துரிமையுள் அடங்கியுள்ளது.

இக்கால அரசமைப்புப் போன்று சங்ககாலம் இல்லையாதலால் அரசுக்கு எதிரான அமைப்போ கட்சிகளோ காணப்படவில்லை. புலவர்களே அத்தகைய உரிமையில் சிறந்து விளங்கினர். மக்களின் பிரதிநிதியாக இருந்து மன்னன் வழி தவறி செல்லும்போது இடித்துரைத்து மக்களைப் பாதுகாத்து வந்தனர். மக்களுக்கு இன்பம் பயக்கும் போது மன்னனைப் புகழ்ந்துரைப்பதும், துன்பம் ஏற்படுத்தும்போது இடித்துரைத்துத் திருத்துவதும் புலவர்கள் தம் கடமையாகக் கருதினர். ஊடகங்களும் தகவல் தொழில்நுட்ப வசதிகளும் இல்லாத காலத்தில் அரசின் செயல்பாடுகளை விமர்சனம் செய்வதையும் அரசின் சிறப்புகளை பறைசாற்றுவதையும் ஆற்றுப்படை

நூல்களில் பாணர்கள் செய்ததை உணர முடிகிறது. இவ்வுரிமையைப் போர்க்காலங்களிலும் புலவர்கள் பெற்றுச் சிறந்திருந்தனர். இதை,

*"எண்ணில் காட்சி இளையோர் தோற்பின்*
*நின்பெருஞ் செல்வம் யார்க்குஎஞ் சுவையே*
*அமர்வெம் செல்வ நீ அவர்க் குஉலையின்*
*இகழுநர் உவப்பப் பழிஎஞ் சுவையே*
*அதனால் ஒழுகதில் அத்தைநின் மறனே வல்விரைந்து*
*எழுமதி வாழ்க நின் உள்ளம் அழந்தோர்கு"* [121]

என்ற பாடலும்,

ஆவூர் மன்னன் படையெடுத்துப் போருக்கு வந்திருக்கும் நேரத்தில் நெடுங்கிள்ளி கோட்டைக் கதவினை மூடிக் கொண்டு உள்ளிருந்த போது கோவூர்கிழார் இடித்துரைத்துப் பாடியதை,

*"அறவை ஆயின் நினதெனத் திறத்தல்*
*மறவை ஆயின் போரொடு திறத்தல்"* [122]

என வரும் அடிகளும் புலப்படுத்துகின்றது.

வளவன் மலையமான் மக்களை யானையினை மிதிக்க விட்டுக் கொலை செய்யத் துணிந்த சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் செயலைக் கோவூர்கிழார் கண்டித்து உணர்த்தியதை,

*"களிறுகண்டு அழுஉம் அழாஅல் மறந்த*
*புன்தலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி*
*விருந்திற் புன்கணோ உடையர்*
*கேட்டனை ஆயின்நீ வேட்டது செய்ம்மே"* [123]

எனப் புறநானூறு கூறுகின்றது. மேலும்,

*"பிறர்க்குத் தீதறிந் தன்றோ இன்றே திறப்பட*
*நண்ணார் நாண அண்ணாந் தேகி*
*ஆங்கினிது ஒழுகின் அல்லது ஓங்குபுகழ்*

*மண் ஆள் செல்வம் எய்திய*
*நும்மோர் அன்ன செம்மலும் உடைத்தே"* [124]

என்ற பாடலில் பரிசில் பெற வந்த இளந்தத்தன் என்னும் புலவரை ஒற்றன் எனக் கருதி கொல்லத் துணிந்த காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளிக்கு அறிவுறுத்தி கொலை செய்யப்படுவதைத் தடுத்து நிறுத்தியதைத் தெளிவுறக் காட்டுகின்றது.

## வெளிப்படையான விசாரணைக்கான உரிமை

மக்களாட்சி முறை பெற்றெடுத்த மற்றொரு குழந்தை. நீதி பெற வேண்டுவோருக்கு மட்டுமன்றி நாட்டின் குடிமக்கள் எல்லோருக்கும் உரியது. ஒரு பாற் கோடாமல் நடுநிலைமையோடு நடந்து நீதியை நிலைநாட்டுவதை மக்கள் அறிந்து உணர்ந்து, நீதியின் மேல் மதிப்பும் மரியாதையும் கொண்டு விளங்குவதற்கு உதவும் காரணி. குற்றஞ்சாட்டப்பட்டவர் முன்னிலையில் சங்க காலத்தில் விசாரணை மேற்கொண்டனர். ஊரார் கூடி நிற்க, அனைவரும் அவ்விசாரணையின் தன்மையினை அறிந்திருந்தனர். இதை,

*"அவைபுகு பொழுதில் தம்பகை முரண்செலவும்"* [125]

என்ற பாடலால் அறியலாம். மேலும்,

*"இளமை நாணி முதுமை யெய்தி*
*உரைமுறவு காட்டிய உரவோன் மருகற்கு"* [126]

என்று மணிமேகலையும் நீதி விசாரணையின் முறையினை எடுத்துரைக்கின்றது.

நீதிமுறை விசாரணை செய்வோர் தனித்திருந்து விசாரணை மேற்கொள்ளாமல் மக்கள் முன்னிலையில் விசாரணை நடத்தினர் என்பதைச் சிலப்பதிகார வழக்குரை காதையில் கண்ணகி அவையோர் வீற்றிருக்கும் மன்னன் முன் தன் வாதத்தை எடுத்துரைத்ததையும், மன்னன் தனியாக

இருந்து வழக்கை விசாரிக்காமல் தீர்ப்புக் கூறியதால் கோவலன் கொலையுற நேர்ந்ததையும் காண முடிகிறது. இதையே,

> **“அறிவிற் சிறந்த அரசன் வழக்காளிகளின் காரியங்களைத் தான் தனியனாய் தனியிடத்திலிருந்து ஒருபொழுதும் ஆராய்தலும் கேட்டலும் கூடவாம் நீதிமன்றத்துள்ளோரும் அங்ஙனமே தனித்திருந்து வழக்குகளை யாராய்தலுங் கேட்டலும் ஆகாவாம்”** [127]

என்கின்றது சுக்கிரநீதி.

**மேல்முறையீட்டுரிமை**

அறக்கருத்துக்கள், வழக்கம், வழக்காறு, மரபு போன்றவைகளை அடிப்படையாகக் கொண்டு சங்க காலத்தில் கிராம அவைகள், மன்றம், பொதியில் போன்ற இடங்களில் சிறு சிறு வழக்குகள் விசாரிக்கப்பட்டு தீர்ப்புகள் வழங்கப் பெற்றன. அவைகள் இக்காலத்து நீதிமன்ற அமைப்புகள் போலவே கீழ்மை நீதிமன்றங்காகக் காணப்படுகின்றன. அரசனால் நிறுவப் பெற்ற அறங்கூறவையங்கள் உயர்நீதி மன்றங்களாகச் செயல்பட்டு வந்தது, தீர்க்கப்பட முடியாத பெருவழக்குகளை இவ்வகை அறங்கூறவையத்தார் தீர்த்து வைத்தனர். இதை,

> **“தமிழ்நாட்டில் தலைநகரங்கள் தோறும் அறங்கூறவையம் (நீதிமன்றம்) அரசர்களால் நிறுவப் பெற்றன. நாட்டிலுள்ள மக்களால் தீர்க்க முடியாத பெரிய வழக்குகளெல்லாம் இத்தகைய அறங்கூறவையத்தில் முடிவு செய்யப்படுபனவாம். இத்தகைய நீதிமன்றங்கள் சோழர் தலைநகரமாகிய உறையூரிலும் பாண்டியர் தலைநகரமாகிய மதுரையிலும்**

> **அரசர் ஆதரவில் நிகழ்ந்தன. இவையன்றி முறை வழங்கும் அவைகள் சிற்றூர்களிலும் நிறுவப்பட்டிருந்தன"**[128]

என்ற க. வெள்ளைவாரனர் அவர்களின் கருத்தும், இவ்வமைப்பு முறை பிற்காலத்தும் தொடர்ந்து வந்து இன்றளவும் நிலைப் பெற்று இருப்பதை,

> **"நீதி நிர்வாகம், அடிப்படையாகக் கிராம சபைகள் நீதிமன்றங்கள், ஜாதி தொழில் பஞ்சாயத்துக்கள் முதலிய அமைப்புகளின் பொறுப்பாகவே இருந்தது. பரம்பரைப் பழக்க வழக்கங்களின் அடிப்படையில் இந்த அமைப்புகள் நீதி வழங்கி வந்தன. இந்த அமைப்புகள் அளித்த தீர்ப்புக்கு எதிராக அரசனுடைய நிர்வாகத்தைச் சேர்ந்த 'அதிகரணங்கள்', 'தர்மசாஸனங்கள்' என்ற உயர்நீதி மன்றங்களில் மனு செய்துக் கொள்ளலாம். இந்த நீதி மன்றங்களில் அரசாங்க அதிகாரிகள் தலைமை வகித்து தர்ம சாஸன பட்டர்கள் என்ற சட்ட ஆலோசகர்கள் உதவியுடன் தீர்ப்பளித்து வந்தார்கள்"**[129]

என்ற நீலகண்ட சாஸ்திரி அவர்களின் கூற்றுடன் ஒப்பு நோக்க இனிது விளங்கும்.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் இந்தியாவிலும் உயர்நீதிமன்ற நீதிபதிக்கு ஆலோசனை வழங்குபவர்களாக ஜூரிக்கள் இருந்து வந்தனர் வழக்கு விசாரணையை உற்றுநோக்கி கவனித்து வரும் இவர்களுடன் முக்கியமான வழக்குகளில் நீதிபதி தீர்ப்பு வழங்கும் முன் கலந்து ஆலோசித்து தீர்ப்பு வழங்கினர். பண்டைத்தமிழ் மக்களின் நீதி வழங்கும் முறை இக்காலத்திற்கு முன்னோடியாக இருந்திருக்கின்றது என்பதைத் தெளிவுப்பட விளக்குகிறது.

சிற்றூர்களில் காணப்படும் அவைகளில் உள்ள நீதிபதிகள் ஒழுக்கமுள்ளவர்களாகவும் நடு நிலைமை தவறாமல் விருப்பு வெறுப்பின்றி நீதி வழங்குபவர்களாகவும் பணத்தாசை முதலியவைகள் நீங்கப் பெற்றவர்களுமாயிருந்தனர். இவர்களை,

*"எட்டுவகை நுதலிய அவையகத்தானும்"* [130]

என்ற நூற்பாவால் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

**"குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவு நிலைமை, அழுக்காறாமை, அவாவின்மை என்னும் எட்டு வகைப் பண்புகளாலும் நிரம்பிய தகுதியுடையவர்களே இவ்வவையில் நீதி வழங்கும் பெருமக்களாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார்கள்** [131]

என்று குறிப்பிடுகின்றார் க. வெள்ளைவாரனன்.

**பாதுகாப்புரிமை**

மக்கள் அனைவரும் அச்சமில்லாமல், துன்பமின்றி இன்பமுடன் பாதுகாப்போடு வாழும் உரிமை பெற்றவர்கள். அத்தகைய உரிமையினைப் பாதுகாப்பது மன்னனின் கடமையெனப் புலவர்கள் வலியுறுத்தினர். தன் குடிகளைக் குழந்தையைக் காப்பது போலப் பாதுகாக்க வேண்டும் என்பதை,

*"குழவிகொள் வாரின் குடிபுறந் தந்து"* [132]

எனவும்,

*"மீன்வயின் நிற்ப வானம் வாய்ப்ப*
*அச்சற்று ஏமம் ஆகி இருள்தீர்ந்து*
*இன்பம் பெருகத் தோன்றித் தம்துணை"* [133]

என்ற பாடலால் உணரமுடிகிறது.

மக்கள் போரினை மறந்தும், விளைச்சலில் குறைவு உண்டாகாத படியும், குடி மக்கள் வருந்தாமலும், நாட்டினைக் காத்து, குடிகளையும் காத்தனர் நம்மனோர். இதை,

*"கடுமா மறவர் கதழ்தொடை மறப்ப*
*இளை இனிது தந்து விளைவுமுட்டு உறாது*
*புலம்பா உறையுள் நீ தொழில் ஆற்றலின்"* [134]

என்று கூறுகிறது.

செந்நிறப் புது வெள்ளம் பெருகி வருதலால் உண்டாகும் ஆராவரம் இல்லாது பகை வெப்பத்தால் தோன்றும் போர் ஆராவரம் இல்லாமல் செல்வப் பொலிவுமிக்கதாக நாட்டினை வளப்படுத்தினர் என்பதை,

*"நிவந்துகரை இழிதரும் நனம்தலைப் பேரியாற்றுச்*
*சீர்உடை வியன்புலம் வாய்பரந்து மிகீஇயர்*
*உவலை சூடி உருத்துவரும் மலிர்நிறைச்*
*செந்நீர்ப் பூசல் அல்லது*
*வெம்மை அரிதுநின் அகன்தலை நாடே"* [135]

என்ற பல்யானைச் செல்கழு குட்டுவன் நாட்டு வளத்தையும், குடிகளைப் பாதுகாத்தலையும் எண்ணத்தக்கது.

நாட்டில் தேவையான காலங்களில் பொய்க்காமல் மழை பெறுவதும், குடிகள் நோய்த் துன்பமும் பசித் துன்பமும் இன்றி அமைதியான முறையில் வாழ வேண்டுமானால் வணிகர் குடிகளையும், குடிகளைப் பேணும் காணியாளர் சுற்றத்தையும் அரசுப் பேணிப் பாதுகாத்தல் வேண்டும் என்பதை,

*"கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக்*
*குடிபுறந் தருநர் பாரம் ஓம்பி*
*அழல் சென்ற மருங்கின் வெள்ளி ஓடாது*
*மழைவேண்டு புலத்து மாரி நிற்ப*

*நோயொடு பசிஇகந்து ஒரீஇப்*
*பூத்தன்று பெரும! நீ காத்த நாடே."* [136]

என்று பதிற்றுப்பத்தும் கூறுகின்றது.

ஏர்த் தொழில் செய்து உலகங் காப்பவர் குடியைக் பாதுகாத்து அதனால் பிற குடிகளையும் பாதுகாத்தால் பகைவர்களும் அடிபணிந்து நிற்பர் என்பதை,

*"பகடு புறந் தருநர் பாரம் ஓம்பிக்*
*குடிபுறத் தருகுவை யாயின்நின்*
*அடிப்புறந் தருகுவர் அடங்கா தோரே"* [137]

என்ற புறப்பாடலடிகள் உணர்த்தும். இது போன்ற பாதுகாப்பான வாழ்வுரிமையைப் புலவர்கள் வலியுறுத்தியுள்ளதை அறிய முடிகிறது.

அனைவருக்கும் பொதுவான வாழும் உரிமையைத் தன் நாட்டு மக்களுக்கு மட்டும் என்றிராமல் போரின் போது தான் அழித்த நாட்டினைத் திருத்தி வளப்படுத்தி நலிந்த அக்குடிகளையும் வளமோடு வாழ உரிமை படைத்தனர். நம் முன்னோர் இதனை,

*"ஆன்றுஅவிந்து அடங்கிய செயிர்தீர் செம்மால்!*
*வான்தோய் நல்லிசை உலகமொடு உயிர்ப்பத்*
*துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும்"* [138]

எனவும்

*"எறிந்து சிதைந்த வாள்*
*இலைதெரிந்த வேல்*
*பாய்ந்துஆய்ந்த மா*
*ஆயந்துதெரிந்த புகல்மறவரொடு*
*படுபிணம் பிறங்க நூறிப் பகைவர்*
*கெடுகுடி பயிற்றிய கொற்ற வேந்தே"* [139]

என்ற பாடலடிகளும் பழந்தமிழகத்தில் மன்னர்கள் போர் புரிந்து எதிரி நாட்டின் மன்னனை அழித்து நாட்டினை வளப்படுத்தி அந்நாட்டு குடிகளை அவர்கள் நாட்டிலேயே மீண்டும் வாழும்படிச் செய்து, வாழ்வுரிமையைப் பாதுகாத்த பரந்து பட்ட பண்பினைப் பறைசாற்றுகிறது.

தீங்குகள் நீங்க நற்செயல்களைச் செய்து கடலும் காடும் பல பயன்களைக் கொடுக்க, மக்கள் பிறரை வருத்தாமல் பிறர் பொருட்களை விரும்பாமலும் குற்றமற்ற அறிவினராய் பலர்க்கும் பகுத்துக் கொடுத்துத் தாமும் உண்டு வாழ்ந்தனர். இதை,

*"தீதுசேண் இகந்து, நன்றுமிகப் புரிந்து,*
*கடலும் கானமும் பலபயம் உதவப்,*
*பிறர்பிறர் நலியாது வேற்றுப்பொருள் வெஃகாது,*
*மைஇல் அறிவினர் செவ்விதின் நடந்துதம்*
*அமர்துணைப் பிரியாது, பாத்துண்டு மாக்கள்"* [140]

என்ற பதிற்றுப்பத்துப் பாடல் மக்கள் ஒருவருக்கொருவர் துன்பப் படுத்தாமலும், பிறர் பொருளைக் கவர நினைக்காமல், தம்மிடம் உள்ள பொருளை மற்றவர்க்கும் பகிர்ந்துக் கொடுத்து மக்களின் வாழ்வுரிமையைப் பேணினர் என்பதைத் தெளிவுப்படுத்துகின்றது.

மன்னர்கள் காட்டினை அழித்துத் திருத்தி நாடாக்கி மக்கள் வாழ்வு பெற்று நலம் பெறவும் வழியமைத்துக் கொடுத்தனர். இதை,

*"காடே கடவுள் மேன. புறவே*
*ஒள்இழை மகளிரொடு மள்ளர் மேன,*
*ஆறே அவ்வனைத்து, அன்றியும் ஞாலத்து"* [141]

என வரும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

## தொகுப்புரை

- பகையின்றி மக்கள் மனவளம் பெற்று வாழ்ந்தனர்.
- போரின் மூலமும் வாரிசுரிமையின் மூலமும் மன்னர்க்ள் வழிவழியாக அரசுரிமையைப் பெற்றனர். பெண்களுக்கு அவ்வுரிமை மறுக்கப்பட்டிருக்கின்றது.
- மக்கள் அனைவரும் வாக்குரிமை பெற்றுச்சிறந்தனர்.
- வரிவசூலிக்கும் உரிமை மன்னனுக்கும் வரி செலுத்தும் கடமை மக்களுக்கும் இருந்தது.
- ஐம்பெங்குழுவும் எண்பேராயமும் மன்னனுக்கு அறிவுரை கூறி நல்வழிபடுத்தினர்.
- மக்கள் அனைவருக்கும் நீதி பெறும் உரிமை இருந்தது.
- தூது உரிமை சாதாரண குடிமகனுக்கும் இருந்தது
- மன்னர்கள் ஆட்சியில் மாட்சிமை பெற்ற திகழ்ந்தனர்.
- போர் முறைகளில் மனிதநேயம் பின் பற்றப்பட்டது, போரினைப் புலவர்கள் வெறுத்து ஒதுக்கினர் என்று அறியப் பெறுகின்றது.
- மன்னிப்பு பெறும் உரிமை புலவர்கள் வலியுறுத்தப்பட்டுள்ளது.
- வழக்காடும் உரிமை அனைவருக்கும் பொதுவாகக் காணப்பட்டது.
- சிறைப்பிடிக்கப்பட்டவர்கள் மாண்புடன் நடத்தப்படவில்லை.
- அரசுப்பணி பெறும் உரிமை அனைவருக்கும் பொதுவானதாக இருந்தது.
- தவறு செய்யும் மன்னர்களை புலவர்கள் இடித்துரைக்கும் உரிமையினைப் பெற்றனர்.
- விசாரணை மக்கள் முன்னிலையில் வெளிப்படையாக நடத்தப்பட்டது.

- மன்னன் முதன்மை நீதிபதியாகக் கருதப்பட்டான்.
- மக்களின் பாதுகாப்புரிமை வலியுறுத்தப்பட்டது.

பகையின்றி மனவளம் காத்தல், அரசுரிமை வாக்களிக்கும் உரிமை, வரிவசூலித்தல் ஐம்பெருங்குழு எண்பேராயம் நீதி பெறும் உரிமை, தூது, ஆட்சியின் மாட்சி, போர், மன்னிப்பு உரிமை, வழக்காடும் உரிமை, அரசுவேலைபெறும் உரிமை, வெளிப்படையான விசாரணை, முறையீட்டுரிமை, பாதுகாப்புரிமை இவைபோன்ற மக்களுக்கான உரிமைகள் யாவற்றையும் அக்கால அரசுகள் வழங்கியுள்ளமையும், சிறைப்பிடிக்கப் பட்டவர் மாண்புடன் நடத்தப்படாமையும் அரசியல் உரிமைகள் என்னும் இவ்வியலில் தெளிவாகின்றது.

# குறிப்புகள்

1. தேவ்நாத், சி.எஸ். அடிப்படை மனித உரிமைகள், ப.22.
2. குறள் 388.
3. புறம். 185.
4. முத்தலக்குமி, வே., தமிழரின் வாழ்வியல் நெறிகள், பக்.30–31.
5. கலித். 129:4–6.
6. வெள்ளைவாரனன், க., சங்க காலத் தமிழ் மக்கள், ப.14.
7. புறம். 99:4–8.
8. மேலது, 202:9–10.
9. மேலது, 201:10–12.
10. பரிமணம், அ.மா., பதிற்றுப்பத்து மூலமும் உரையும், ப.125.
11. புறம். 75:1–3.
12. பொருநர். 132.
13. மதுரைக். 190–194.
14. புறம். 213:9–11.
15. பட்டினப். 226–227.
16. புறம். 112.
17. கலித். 130:6–7.
18. முத்துலக்குமி, வே., தமிழரின் வாழ்வியல் நெறிகள், ப.29.
19. அப்பாத்துரை, க., குடியாட்சி, ப.34.
20. அகம். 77:6–7.

21. புறம். 17:5–6.
22. மேலது, 184:5–11.
23. நற். 226:2–3.
24. கலித். 10:5–7.
25. நான்மணிக். 21:3.
26. மேலது, 91:1–3.
27. திரிகடு. 50.
28. சிறுபஞ்ச. 9.
29. முதுமொழிக். 99.
30. பட்டினப். 129:137.
31. குறள். 445.
32. கந்தையா, ந.சி., தமிழர் சரித்திரம், ப.46.
33. தேவநேயப் பாவாணர், ஞா., பழந்தமிழராட்சி, ப.33.
34. மேலது, ப.34.
35. நீலகண்ட சாஸ்திரி, தமிழர் பண்பாடும் வரலாறும், தமிழாக்கம் சிட்டி, ப.60.
36. மேலது, ப.60.
37. சண்முகசுப்பிரமணியன், மா., சட்டத்தமிழ், ப.38.
38. புறம். 71:7–9.
39. மதுரைக். 489–402.
40. புறம். 224:4–5.
41. புறம். 39:8–9.
42. கலித். 86:17–18.

43. குறுந். 15:2.

44. புறம். 6:8–10.

45. மேலது, 29:9–12.

46. பெரும்பாண். 443–444.

47. புறம், 35:14–16.

48. மேலது, 10:2–4.

49. குறள். 541.

50. நற். 90:11–12.

51. மேலது, 95.

52. மேலது, 305.

53. மேலது, 36:10–14.

54. மேலது, 45:5–9.

55. ஔவை துரைசாமிப்பிள்ளை, சு., உரை, புறநானூறு, ப.46.

56. புனித விவிலியம், மத்தேயு 5:9.

57. தொல். பொருள். அக. 27.

58. மேலது, 28.

59. மேலது, 34.

60. கலித். 24:8–12.

61. மேலது, 46:7–8.

62. சிதம்பரனார், சாமி., புறநானூற்று தமிழர் நாகரிகம், ப.43.

63. பதிற்றுப். 22:1–2.

64. புறம். 25:10–14.

65. வெள்ளைவாரனன், க., சங்ககாலத் தமிழ் மக்கள், ப.12.

66. சிதம்பரனார், சாமி., புறநானூற்று தமிழர் நாகரிகம், பக்.111–112.

67. புறம். 76:1–2

68. மாதையன், பெ., சங்ககால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப.23.

69. மேலது, ப.24.

70. மேலது, ப.25.

71. மேலது, ப.26.

72. மேலது, ப.28.

73. மேலது, ப.29.

74. மேலது, 350:5–7.

75. மேலது, 8:1–4.

76. மேலது, 72:6–9.

77. மேலது, 230:4–6.

78. மேலது, 213:3–8.

79. மேலது, 9:1–6.

80. நீலகண்ட சாஸ்திரி, தமிழில் சிட்டி, தமிழர் வரலாறும் பண்பாடும், ப.64.

81. சிறுபாண். 210–212.

82. பதிற்றுப். 59:11–13.

83. மேலது, 53:1–5.

84. புறம். 50:15–17.

85. மேலது, 43:15–18.

86. மேலது, 73:1–4.

87. இன்னாசி, சூ., சமயப் பொதுமை, ப.49.

88. பரி. 20:60–62.

89. சிலம்பு. 20:49–67.

90. அகம். 256:15–17.

91. பதிற்றுப். பதிகம் 5:13–17.

92. பட்டினப். 246–249.

93. நீலகண்ட சாஸ்திரி, தமிழில் சிட்டி, தமிழர் வரலாறும் பண்பாடும், ப.62.

94. நற். 18:2–5.

95. பதிற்றுப். பதிகம் 2:7–10.

96. புறம். 74:4–7.

97. ஜான்சாமுவேல், மனித உரிமைகள் விவாதம் தொடர்கிறது, தமிழாக்கம் ந. முகமது செரிபு, ப.61.

98. ஜான்சாமுவேல், தமிழர் வரலாறும் பண்பாடும், ப.20.

99. கலித். 206:2.

100. முல்லை. 50–54.

101. மதுரைப். 640–642.

102. புறம். 37:9.

103. நற். 32:8–9.

104. மதுரைப். 643–653.

105. பட்டினப். 120–121.

106. மேலது, 129–135.

107. கலித். 64:23–25.

108. குறுந். 242:4–5.

109. தொல். கற். 187.

110. கலித். 81:25–26.

111. பொருநர். 85–87.

112. முல்லை. 46–49.

113. மேலது, 64–65.

114. மேலது, 61.

115. மேலது, 66.

116. சோமசுந்தரனார், பொ.வெ., பத்துப்பாட்டு மூலமும் உரையும் முதற்பகுதி, ப. உங.

117. முல்லைப். 55.

118. அகம், (சங:சா–எ).

119. ஜான்சாமுவேல், தமிழாக்கம் நா. முகமது செரிபு, மனித உரிமைகள் விவாதம் தொடர்கிறது, ப.64.

120. மேலது, பக்.58–59.

121. புறம். 213:15–20.

122. மேலது, 44:11–12.

123. மேலது, 46:5–8.

124. மேலது, 47:7–11.

125. பொருநர். 188.

126. மணி. 4:107–108.

127. கதிரேசஞ்செட்டியார், மு., மொழிபெயர்ப்பு, சுக்கிரநீதி, 4:5–6.

128. வெள்ளைவாரனன், க., சங்க காலத் தமிழ் மக்கள், பக்.27–28.

129. நீலகண்ட சாஸ்திரி, க.அ., தமிழில் சிட்டி, தமிழர் பண்பாடும் வரலாறும், பக்.67–68.

130. தொல். பொருள். 74.

131. வெள்ளைவாரனன், க., சங்க காலத் தமிழ் மக்கள், ப.28.

132. மேலது, 6–ம் பதிகம், 9.

133. மேலது, 90:1–3.

134. மேலது, 28:4–6.

135. மேலது, 28:10–14.

136. மேலது, 13:23–28.

137. புறம். 35:33–35.

138. பதிற்றுப். 37:5–7.

139. மேலது, 69:5–10.

140. பதிற்றுப். 22:5–9.

141. மேலது. 13:20–22.

இயல் - நான்கு

# சமூகப் பண்பாட்டுப் பொருளாதார உரிமைகள்

## முன்னுரை

வாழ்வின் அடிப்படை தேவைகளை நிறைவேற்றிக்கொள்வதும் ஏற்றத்தாழ்வுகளைக் களைவதும், வசதி வாய்ப்புகளைப் பெருக்கிக் கொள்வதும் தம்இனம், நாடு, மொழி இவைகளுக்குரிய பண்பாட்டுக் கூறுகளைப் பேணிப் பாதுகாத்துக் கொள்வதும் கடைப்பிடித்து ஒழுகுவதும், தான் சார்ந்த சமூகத்தின் அடையாளங்களோடு கூடிய வாழ்க்கையினை மேற்கொள்ளவதும் போன்ற பண்புகள் சமூகப் பண்பாட்டுப் பொருளாதார உரிமையின் பாற்படுவன.

தனிமனித, வாழ்வியல் மற்றும் அரசியல் உரிமைகளைப் போன்று உரிமைகளின் பயனை நுகர்வதற்கு இன்றியமையாதது. இவ்வுரிமைகளின்றி மக்கள் தம் சமுதாய மதிப்பினைப் பெறுவதும், குடிமகனாகத் தம் கடமையாற்றி உரிமைகளைத் துய்ப்பது என்பது இயலாத ஒன்று, பிற உரிமைகளுக்கெல்லாம் அடிப்படையானது, இதை,

> **“சமூகப் பொருளாதார உரிமைகள் குடிமக்கள் தம் மற்ற எல்லா வகையான உரிமைகளுக்கும் சுதந்திரங்களுக்கும் அடிப்படையாக இருத்தல் வேண்டும்”**

என்றும்.

> **“குடியுரிமை மற்றும் அரசியல் உரிமைகளைத் தீவிரமாகச் செயல்படுத்த முழுமையாகத் தேவைப்படும் நிபந்தனையாக**

**உறுதியான உத்திரவாதம் சமூகப் பொருளாதார உரிமைகள் தாம்"**[1]

எனவும் கூறுவர் ஜான் சாமுவேல்.

இவ்வுரிமைகளையும், வழ்வியல் மற்றும் அரசியல் உரிமைகளையும் வேறுபடுத்தி பார்க்க இயலாது. ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்திருக்கின்றன என்பதை,

**"சமூகப் பொருளாதார மற்றும் கலாச்சார உரிமைகள் குறித்து ஒரு புறத்தலும் குடியுரிமை அரசியல் உரிமை குறித்து மறுபுறத்திலும் வைத்து இவைகருக்கிணடயேயான அமைப்புத் தொடர்பையும் பரஸ்பரம் சார்ந்துநிற்கும் உறவையும் குறைத்துப் பேசுவது நியாயமானதே"**[2]

என்று விளக்கம் தருகின்றார் மா. சுப்ரமணியம்.

தனி மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் நாட்டிற்கும் உள்ள உறவினை உறுதிப்படுவதான இது நாட்டின் குடிமகன் என்று தன்னை நிலைநிறுத்திக் கொள்ள உறுதுணையாவது நிலவுடைமை சமுதாயத்தில் பெற்ற குடியுரிமை நாளடைவில் வளர்ச்சியுற்ற பொருளாதார உரிமைகளாக உருக்கொண்டுள்ளது.

**"மக்களின் குடியுரிமை என்பது மனித உரிமையில் இருந்து அரசியல் பங்கு பெறுவதற்கான அரசியல் உரிமைகளாக விரிந்து தற்போது பொருளாதார தகுதிகளை உள்ளடக்கிய சமுதாய உரிமைகளாக மலர்ந்துள்ளன"**[3]

என்ற ஆ. பாண்டியன் அவர்கள் கூற்றினை இங்கு ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கது.

பண்டைத் தமிழ் சமுதாயத்தில் மக்கள் உரிமைகளையும் சுதந்திரங்களையும் பெற்று வாழ்வில் சிறந்தனர். சமூகம் அதற்கு வழியமைத்துக் கொடுத்து வாழ்வினை வளப்படுத்த முயன்றது என்பதைப் பண்டைத் தமிழ் நூல்களின் வழியாக அறியமுடிகிறது.

> **“உரிமைகளையும் சுதந்திரங்களையும் உறுதியான சமூகக் சூழலில் தான் அனுபவிக்க முடியும் சுதந்திரம் என்பது மனக்கண்ணில் தோன்றுவதன்று. அது சமூக வெற்றிடத்தில் இருப்பதுமன்று”[4]**

என்கின்றார் ஜான் சாமூவேல்.

> **“நவீன உலகில் உரிமைகளை அடைவது செயல்படுத்துவது மற்றும் சமூகப் பொருளாதார எல்லையின் வாய்ப்புகளும் ஒரு குறிப்பிட்ட சமூகத்தில் மக்களால் அனுபவிக்கப்படும். வாழ்க்கைத் தரத்திற்கு அடிப்படையாக அமைகின்றன”[5]**

என்பார் மா. சுப்ரமணியம்.

சமூகப் பண்பாட்டுப் பொருளாதார உரிமையினால் மட்டுமே மனிதன் சமூகத்தில் தான் பெற்றிருக்கக் கூடிய தகுதியையும் மதிப்பையும் அளவிட முடியும். சங்ககாலத் தமிழர்கள் இவ்வகை உரிமைகளில் சிறந்து விளங்கினமையும், பண்பாட்டுக் கூறுகளைப் பதிவு செய்தமையையும் குறித்துப் பல்வேறு உரிமைகளை ஆராய்வதே இவ்வியலின் நோக்கம்.

**சமத்துவ உரிமை**

சட்டத்தின் முன் அனைவரும் சமம் பால், இனம், மொழி, மதம், பிறப்பிடம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு மனிதர் எவரிடத்திலும் ஏற்றத்தாழ்வுகளைக் கருதாமல் அனைவரும் சமமாக நடத்தப்பட வேண்டும். ஒரு இயற்றப்பட்ட சட்டம் செல்லுபடியாகும் நிலவரையறைக்குள் வாழும்

அனைத்து மக்களையும் கட்டுப்படுத்துவதாக இருக்க வேண்டும். உயர்ந்தவன், தாழ்ந்தவன், ஏழை, பணக்காரன், வலிமை மிக்கவன், வலிமையற்றவன் என்ற பாகுபாடு இல்லாது அனைவரும் சம உரிமை உடையவர்கள். ஒரு தனிப்பட்ட நபரோ அல்லது குழுவோ சட்டத்தின் பார்வையில் சிறப்பான மதிப்பினைப் பெற்றவர்கள் அல்லர்.

சமத்துவம், இந்திய மக்களாட்சி தத்துவத்தின் உயிர் நாடியாக விளங்குவது. சமத்துவமின்மை மக்களாட்சியில் குரல் வளையை நசுக்கும் உயிர்க்கொல்லிப் போன்றது.

இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் முகப்புரையில் சமத்துவம் என்பதற்குத் தகுதிப்பாட்டிலும், வாய்ப்பிலும், சமத்துவம் ஆகியவற்றை அளித்து அவர்களை உயர்வுறச் செய்தல் என்ற விளக்கமானது, இந்திய அரசியலமைப்புச் சட்டத்தினை வரைந்தோரின் உள்ளக்கிடக்கையைத் தெளிவுறக் காட்டுகின்றது.

**“எந்த நபருக்கும் சட்டத்தின் முன் சம உரிமையையும் இந்திய நிலவரையில் சட்டத்தின் மூலம் சமமான பாதுகாப்பையும் அரசு மறுக்கக் கூடாது”**

என்று இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு (14) சமத்துவத்தை வரையறுக்கின்றது.

வாழ்வுரிமை சுதந்திரம் போன்ற உரிமைகளைப் போலவே சமத்துவ உரிமையையும் உள்ளடக்கியது மனித உரிமைகள் ஆகும். இதனை.

**“‘மனித உரிமைகள்’ என்றால் அரசியல் சட்டம் உத்தரவாதம் அளித்துள்ள அல்லது இந்தியாவின் நீதிமன்றங்களால் அமுலாக்கத்தக்க, சர்வதேச ஒப்பந்தங்களில் பொதிந்துள்ள**

**தனி நபர் வாழ்வு, சுதந்திரம், சமத்துவம் மற்றும் கண்ணியம் சம்பந்தப்பட்ட உரிமைகள் என்று பொருள்படும்''**

எனச் சமத்துவத்தை வலியுறுத்துகிறது உறுப்பு 2 (1) (d) மனித உரிமைகள் பாதுகாப்புச் சட்டம்.

சங்க காலம் ஏற்றத் தாழ்வுகள் நிரம்பிய காலமாக இருந்திருக்கின்றது, மாட மாளிகைகளிலும், அரண்மனைகளிலும் வசித்த அரசர்கள், செல்வந்தர்கள் ஒரு புறத்திலும், அன்றாட உணவிற்கே அலைந்து திரிந்து அல்லற்படும் வறுமை நிறைந்த கூட்டத்தார் மறுபுறத்திலும் இருந்ததை மன்னர் வாழ்வினையும் பாணர்களின் வாழ்வினையும் ஒப்புநோக்க இனிது விளங்கும். மன்னனை வாழ்த்திப் பாடிய பாடல்கள் அனைத்தும் பரிசில் பெறுவதற்கும் வறுமையைப் போக்க 'எடுத்துக் கொண்ட முயற்சியே என்பதைப் புறநூனூறும், பதிற்றுப்பத்தும், பத்துப்பாட்டும் சுட்டிக் காட்டுகின்றன இதை,

**“பத்துப்பாட்டு எட்டுத்தொகை பாடல்கள் பெரும்பாலும் மன்னர்களையும் குறுநில மன்னர்களையும், நிலக்கிழார்களையும் போற்றிப் புகழ்ந்து, பரிசு வாங்குவதற்காகக் கவிஞர்கள் பாடிய பாடல்கள். தம் வாழ்க்கையை நடத்துவதற்கு வேறு வழியின்றியே மன்னர்களைப் பாட வேண்டிய நிலை இருந்தது”[6]**

என்பர் கே. முத்தையா.

சமூகத்தின் எற்றத்தாழ்வுகளைக் களைய வேண்டும் என்பதை வலியுறுத்துவதற்காகப் புலவர்கள் மன்னனின் புகழைப் பாடும் போது மக்களின் நிலையினையும் சேர்த்துப் பாடினர். இதை,

"பண்டைத் தமிழகத்திலே செல்வம் செழித்திருந்தது. இயற்கை வளங்கள் ஏராளமாக நிரம்பியிருந்தன. கலைகள் வளர்ச்சியடைந்திருந்தன. வள்ளல்கள் பலர் வாழ்ந்திருந்தனர். அவர்கள் கலைகளின் வளர்ச்சிக்கும் கல்விப் பெருக்கத்திற்கும் ஊன்றுகோலாயிருந்தனர். சங்க இலக்கியங்களிலே இந்த உண்மைகளைக் காண்கின்றோம். ஆனால், வறியோர் பலர் வாழ்ந்து வந்தனர். கலைஞர்களும், கவிஞர்களுங்கூட வறுமைக் கனலால் வாடி வதங்கினர் என்றால் மற்றவர்களைப் பற்றிச் சொல்லவா வேண்டும்.

இவர்கள் நிலமும் செல்வமும் படைத்த வள்ளல்களின் ஆதரவு பெற்றுத்தான் வாழ வேண்டிய நிலையில் இருந்தனர். உயர்ந்த ஆடைகள் நெய்த அக்காலத்தில் உடையில்லாமல் வருந்தினோர் பலர். உறைவதற்கு ஏற்ற இடம் இல்லாமல் ஊரூராக இடந்தேடி அலைந்தோர் பலர். உணவுக்காகச் செல்வம் படைத்தவர்களிடம் சென்று கையேந்தி நின்றவர்கள் பலர். இத்தகைய ஏழைத் தமிழ்ப்புலவர்களால் இயற்றப்பட்ட பல பாடல்கள் தாம் இன்று நமக்கு இலக்கியச் செல்வங்களாக இருக்கின்றன"[7]

என்று சங்ககால மக்களின் உண்மையான வாழ்க்கை நிலையினைப் பதிவு செய்கின்ற சாமி. சிதம்பரனார் அவர்களின் கருத்தினையும் ஒப்பு நோக்கிப் பார்க்கத்தக்கது. இதையே,

"நிலவுடைமை சமுதாயத்தில் சமத்துவம் இருக்கவில்லை ஆயினும் புலவர்கள் செவிவழிச் செய்திகள் மூலம் பழங்கால இனக் குழு சமுதாயத்தின் கூட்டு உழைப்பு உற்பத்தி முறை பற்றியும், பொது உற்பத்தியால் கிடைத்த தானியத்தைச்

**சமமாகப் பங்கு வைத்துக் கொண்டது பற்றியும் அறிந்திருந்தார்கள். இதனை ‘முந்தையோர் மரபு’ என்றும் கொடை வள்ளல்கள் வாழ்ந்த காலம் என்றும் கருதினார்கள்”[8]**

என்பர் நா. வானமாமலை.

***“யாதும் ஊரே; யாவரும் கேளிர்;***
***தீதும் நன்றும் பிறர்தர வாரா;***
***நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன;***
***சாதலும் புதுவ தன்றே; வாழ்தல்***
***இனிதென மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்***
***இன்னாது என்றலும் இலமே; மின்னொடு***
***வானம் தண்துளி தலைஇ ஆனாது,***
***கல்பொருது இரங்கும் மல்லல் பேர்யாற்று***
***நீர்வழிப் படூஉம் புணைபோல், ஆருயிர்***
***முறைவழிப் படூஉம் என்பது திறவோர்***
***காட்சியில் தெளிந்தனம்; ஆகலின் மாட்சியிற்***
***பெரியோரை வியத்தலும் இலமே;***
***சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே”[9]***

என்ற பாடலில் உயிர் நிலையாமையை எடுத்துரைத்துப் பெரியோரை வியந்து பாராட்டுதலும் சிறியோரை இகழ்தலும் கூடாது என்ற சமத்துவத்தையும், உலக ஒருமைப்பாட்டினையும் கணியன் பூங்குன்றனார் வலியுறுத்துகின்றார்.

இன்பம் ஒரு சாரார்க்கு, துன்பம் ஒரு சாரார்க்கு என்பதும் செல்வநிலை வாழ்க்கையையும், வறுமையையும் வேறுபடுத்தி சமத்துவமின்மையையும் ஏற்படுத்திய படைப்பாளன் (இறைவன்) பண்பற்றவன் என்பதை,

***“ஓரில் நெய்தல் கறங்க, ஓரில்***
***ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்;***

*புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்*
*பைதல் உண்கண் பனிவார்பு உறைப்பப்*
*படைத்தோன் மன்றஅப் பண்பி லாளன்;*
*இன்னா தம்மவிவ் வுலகம்,*
*இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரை"* [10]

என்று பக்குடுக்கை நன்கணியார் பாடுகின்றார். மேலும்,

*"அதனால், நமர்எனக் கோல்கோ டாது*
*பிறர்எனக் குணம் கொல்லாது*
*ஞாயிற் றன்ன வெந்திறல் ஆண்மையும்*
*திங்கள் அன்ன தண்பெரும் சாயலும்*
*வானத் தன்ன வண்மையும் மூன்றும்*
*உடையை ஆகி இல்லோர் கையற"* [11]

என்ற பாடலடிகளில் இவர் நம்மவர் என்று செம்மையில் சாயாது இவர் பிறர் என்று அவர் நல்லியல்பை மறவாது அனைவரையும் சமமாக மதித்து, இல்லை என்பார் இல்லை என்னும் படி சமத்துவத்தைப் பேணிக்காக்க வேண்டும் என்ற எண்ணத்தினைப் பண்டைய புலவர்கள் விதைத்தனர் என்பது சங்க காலத்தில் மக்களிடையே சமத்துவமின்மையைக் காட்டுகின்றது.

பொருளாலும், வலிமையாலும் இன்ன பிறவற்றாலும் குறைந்தவரை எளியர் என்று இகழ்தல் கூடாது என்பதை,

***"எள்ளற்க என்றும் எளியரென்(று) என்பெறினும்"*** [12]

என்கின்றது நான்மணிக்கடிகை,

செவ்வ நிலையில் இருக்கும் மன்னனுக்கும் வறுமையில் இருக்கும் வேடனுக்கும் உண்பது நாழி உடுப்பவை இரண்டே வேற்றுமை இல்லை என்பதை,

*"உண்பது நாழியுடுப்பவை யிரண்டே*
*பிறவு மெல்லா மோரொ கும்மே"* [13]

என்று சமத்துவத்தை வலியுறுத்துவதைப் புறநானூற்றில் காண முடிகிறது.

பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் நிரம்பிய சமத்துவமற்ற வாழ்வியலே தீவிரவாதத்திற்கும், வர்க்கப் போராட்டங்களுக்கும் கிளர்ச்சிகளுக்கும் வழியமைத்துத் தருகின்றன. இதை,

**"செல்வர் ஈதலைக் கடனாகக் கோடல் அறனாம் என்றும் அஃது அவர்கட்கேயன்றி மக்கருலகுக்கே நலம் பயப்பதாம் என்றும் துணிபாம். இந்த அறவுணர்வுக் குறைவே இக்காலத் தொழிலாளர் கிளர்ச்சிக்கும், பொருள் முட்டுப்பாட்டுக்கும் வாழ்வு நிரம்பாமைக்கும் வாயிலாதல் தெற்றெனத் தெளியப்படும்"** [14]

என்று ஔவை.துரைசாமிப்பிள்ளை அவர்களின் கூற்றும் நோக்கத்தக்கது. ஆனால்,

**"மலைநிலமாகிய குறிஞ்சி நிலம் கடற்கரைப் பகுதியாகிய நெய்தல் நிலம், காடல் பகுதியாகிய முல்லைநிலம் வறண்ட பகுதியாகிய பாலைநிலம் ஆசிய நிலப்பகுதிகளிலே வாழ்ந்த மக்களிடம் ஆண் பெண் வாழ்வு சமத்துவமாகத் தான் இருந்ததன்று தெரிகின்றது"** [15]

என்ற தனது கருத்தினை முன்வைக்கின்றனர் சாமி சிதம்பரனார்.

## ஆண் பெண் சம உரிமை

ஆணும் பெண்ணும் சம உரிமை உடையவர்களாகவே சட்டம் கருதுகின்றது. பெண்ணைக் காட்டிலும் ஆண் எந்த விதத்திலும் உயர்ந்தவனாகக் கருதப்பட முடியாது. சங்க காலத்தில் பெண்கள் அத்தகைய

சம உரிமையைப் பெற்றனர் அல்லார். இந்நிலை மக்களிடையே மட்டுமல்லாது உயர் நிலையில் உள்ள நாடாள்வோரிடையேயும் காணப்படவில்லை. மன்னனைப் புகழ்ந்துப் பாடிப் பரிசில் பெற வரும் புலவர்கள் எவரும் அரச மாதேவியை முழுவதுமாக புகழ்ந்துப் பாடினர் அல்லர். மன்னரைப் புகழ்ந்து பாடும் புலவர்களில் ஒரு சிலர் ஓரிரு வரிகளில் புகழ்ந்திருப்பது அறிய முடிகிறது. இதனை,

*"சேண்நாறு நறுநுதல் சேயிழை கணவ"* [16]

*"வண்டுஆர் கூந்தல் ஒண்தொடி கணவ"* [17]

*"மீனொடு புரையும் கற்பின்*
*வாள்நுதல் அரிவையொடு காண்வரப் பொலிந்தே"* [18]

*"சேண்நாறு நல்இசைச் சேயிழை கணவ"* [19]

*"கற்புஇறை கொண்ட கமழும் சுடர்நுதல்*
*புரையோள் கணவ! பூண்கிளர் மார்ப!"* [20]

*"நன்னுதல் கணவ"* [21]

*"செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ"* [22]

நாணலது என்ற பாடலடிகள் ஆணாதிக்கச் சமுதாயத்தை தோலுரித்துக் காட்டுகின்றது.

**சடங்குகள்**

நம்பிக்கை, வழிபாட்டோடு பிணைந்திருப்பது. நம்பிக்கையின் அடிப்படையிலேயே சடங்குகள் நிகழ்த்தப் பெற்றன. தாயின் வயிற்றில் கரு உருவானது முதல் கல்லறை அடையும் வரை வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும் சடங்குகள் குறிப்பிட்ட இடத்தினைப் பெற்றுச் சிறக்கின்றது. பண்பாட்டின் பிரதிபலிப்பாகவும் நாகரீகத்தின் எச்சமாகவும் இவை திகழ்கின்றன. சங்க காலத்தில் இல்லறம் சார்ந்த சடங்குகளே பெரும் பங்கு வகிக்கின்றன. சமூகத்திற்கு ஏற்ப சடங்குகளும் வெவ்வேறானவைகளாக

அமைந்தன. திருமணத்திற்கு முன்பும் திருமணத்திற்குப் பின்பும் சடங்குகள் செய்யப்பட்டன என்பதை சங்க இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. பெண் குழந்தைப் பிறந்தவுடன் காலிற் சிலம்பினை அணிவித்து மகிழ்வர் அவள் பூப்பெய்தி திருமணம் நடைபெறும் வரையிலும் அச்சிலம்பினை அணிந்து கொண்டிருப்பாள். திருமணத்திற்கு முன்பு அச்சிலம்பினை அகற்றுவதற்குச் சடங்குகள் நடைப்பெற்றன. இது சிலம்பு கழி நோன்பு என்றழைக்கப்பட்டது. தலைவி உடன்போக்கு சென்றபோது, காற்சிலம்பு கழிக்கும் சடங்கினைச் செய்யாதவளாய் நீண்ட தொலைவு தலைவனுடன் சென்றனள் என்று தாய் ஏங்குவதை,

*"பெரும்பெயர் வழுதி கூடல் அன்னதன்*
*அருங்கடி வியல்நகர்ச் சிலம்பும் கழியாள்"* [23]

என்ற பாடலில் இருந்து திருமணத்திற்கு முன்பு கன்னிப் பெண்ணின் காலில் இருந்து சிலம்பு கழற்றப்பட்டது என்பதும் அச்சடங்கு பெரும்பாலும் பெண் வீட்டில் நடந்தது என்பதும் புலனாகின்றது. இதை,

*"அரிபெய்து பொதிந்த தெரிசிலம்பு கழீஇ*
*யாய்அறி வுறுதல் அஞ்சி"* [24]

என்ற செவிலி கூற்றால் உணர முடிகிறது.

உடன் போக்கு மேற்கொண்ட வழி கணவனின் இல்லத்தில் அடைந்து சிலம்பு கழி நோன்பு நடைபெற்றதை,

*"நும்மனைச் சிலம்பு கழீஇ அயரினும்*
*எம்மனை வதுவை நன்மணம் கழிகெனச்*
*சொல்லின் எவனோ மற்றே வென்வேல்*
*மையற விளங்கிய கழலடிப்*
*பொய்வல் காளையை ஈன்ற தாய்க்கே"* [25]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலின் மூலம் அறியலாம். தாய்வீட்டில் சிலம்பு கழிதல் நோன்பு நடைபெறுதல் முறை எனினும் களவு மணத்தில் கணவன்

இல்லத்தில் அந்நோன்பு நடைபெற்றதையும், பொதுவாகத் தாயால் செய்யப்படும் அச்சடங்கினைத் தலைவனுடைய தாய் செய்வதிலிருந்து தன் வீட்டிற்கு வந்த மருமகளை மகளாக எண்ணிப் பாதுகாக்கும் தாயுள்ளம் கொண்டவளாகத் தலைவனின் தாய் இருந்தாள் என்பதும், வதுவை மணம் பெண் வீட்டில் நடைபெற ஏங்கும் தாயின் மனநிலையும் உணரத்தக்கது. மேலும்,

*“வில்லோன் காலன கழலே; தொடியோள்*
*மெல்லடி மேலவும் சிலம்பே; நல்லோர்”* [26]

என வரும் பாடலடிகள் மூலம் திருமணத்திற்கு முன் ஆண் காலில் கழலும் பெண் சிலம்பும் அணிந்துள்ளதையும் பெண்ணுக்குச் சிலம்பு கழி நோன்பு சடங்கு நடைப்பெற்றது போல ஆண்களுக்குக் கழல் நீக்குதல் தொடர்பான சடங்கு நடைபெறவில்லை என்றே தோன்றுகின்றது. காலில் உள்ள சிலம்பினைக் கொண்டு தான் பெண் மணமானவர், ஆகாதவர் என்பதை மக்கள் தெரிந்து கொண்டனர் என்பதும் புலனாகிறது. ஆனால் பரிபாடலில் பரத்தை, தலைவியிடம் புணர்ச்சி இன்பத்திற்கு விலையாக வளையலையும் மாலையையும் தந்தான் நாளை உன் காலிற் கிடக்கும் சிலம்பினையும் கழற்றி தருவான் என்பதை,

*“மாலை அணிய விலை தந்தான் மாதர் நின்*
*கால் சிலம்பு கழற்றுவான் சால”* [27]

என்ற பாடலில் திருமணத்திற்குப் பின்பும் பெண் காலில் சிலம்பு அணிந்திருந்ததை அறிய முடிகிறது.

**“குமரிக்கு சிலம்பு அடையாளம் என்பதால் குமரிக் கழிவுக்கும் சிலம்பு கழிவு வேண்டப்படும். எனவே திருமணத்திற்குச் சிலம்புகழி நோன்பு காரணமாயிற்று. சடங்காயிற்று,**

**இன்றியமையாத விழாவாயிற்று இது. சங்கச் சமுதாய வழக்கு"** [28]

என்கின்றார். வ.சுப. மாணிக்கம்.

## பொருளீட்டும் உரிமை

சங்க காலத்தில் ஆடவர்கள் காதலையும், வீரத்தையும் இரு கண்களாகப் போற்றினாலும் வினையே அவர்களுக்கு உயிராகக் காணப்பட்டது. அறம் புரியவும், இல்லறம் சிறக்கவும், சுற்றம் பேணவும் பொருளீட்டலைப் பற்றுக்கோடாகக் கொண்டனர்.

வணிகர் வேளாளர் ஆகிய இருவரும் பொருளீட்டுவதற்காகப் பிரியும் உரிமையுடையவர். இதை,

***"பொருள்வயிற் பிரிதலும் அவர்வயின் உரித்தே"*** [29]

என்றும்,

பொருள் தேடுவதற்காகப் பிரிந்து செல்லும் கால அளவு ஓராண்டு என்பதை,

***"ஏனைப் பிரிவும் அவ்வியல் நிலையும்"*** [30]

என்றும் தொல்காப்பியம் இலக்கணம் வகுத்துள்ளது.

## திருமணத்திற்காகப் பொருளீட்டுதல்

களவில் நிகழும் இருவகைப் பிரிவுகளுள் ஒன்று வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதலாகும். தலைவன் மிகப்பெரும் செல்வர் குடியில் பிறந்திருந்தாலும் மூதாதையர் வழி வந்த பொருளைக் கொண்டு மணம் முடித்தல் ஆண்மைக்கு இழுக்கு என்று எண்ணினர். அதற்காகப்

பொருள் தேடச் செல்லுதல் என்பது தலைவனுக்குரிய இயல்பும் அக்கால மரபுமாகும்.

விரைந்து திருமணம் செய்துக் கொள்ள வேண்டி தலைவியை விட்டுப் பிரிந்து நெடுந்தூரம் பொருளீட்ட சென்ற தலைவன் குறித்துச் சென்ற கார்காலம் வந்தது. விரைந்து வந்து மணம் முடிப்பான் என்று தலைவிக்குத் தோழி ஆறுதல் மொழி கூறுவதை,

*"தழங்குரல் ஏறொடு முழங்கி வானம்*
*இன்னே பெய்ய மின்னுமால் தோழி*
*வெண்ணெல் அருந்திய வரிநுதல் யானை*
*தண்நறுஞ் சிலம்பின் துஞ்சும்*
*சிறுயிலைச் சந்தின வாடுபெருங் காட்டே"* [31]

என்று நற்றிணைப் பாடல் உணர்த்துகின்றது.

தலைவன் மணம் செய்துக் கொள்ளும் பொருட்டுப் பொருள் தேடச் சென்று மீண்டு வரும் வரையில் தலைவி பிரிவுத் துயரினைத் தாங்கும் தன்மையற்றவளாக இருக்கும் தலைவி உடன் அழைத்துச் செல்லுமாறு தோழி கூறுவதை,

*"அன்பிலர் அகறிர் ஆயின் என்பரம்*
*ஆகுவது அன்றுஇவள் அவலம் நாகத்து*
*அணங்குடை அருந்தலை உடலி வலன்ஏர்பு*
*ஆர்கலி நல்லேறு திரிதருங்*
*கார்செய் மாலை வரூஉம் போழ்தே"* [32]

என்ற பேரிசாத்தனார் பாடல் வழி அறியமுடிகிறது.

## இல்லறம் நடத்த பொருளீட்டல்

இல்லறம் இனிதாகவும் இன்பமாகவும் அமைய வேண்டுமானால் பொருள் தேவை. ஏற்ற அளவு பொருள் இல்லாதார் வாழ்க்கைத் துன்பம்

நிறைந்ததாகவே காணப்படும். இதை நன்குணர்ந்த பண்டைத் தமிழர் பொருளீட்டு உரிமையினை மேற்கொண்டு இல்லத்தைச் சிறப்பித்தனர். இதை,

*"நெடுஞ்சேண் சென்று வருந்துவர் மாதோ*
*எல்லி வந்த நல்லிசை விருந்திற்குக்*
*கிளரிழை அரிவை நெய்துழந்து அட்ட*
*விளர்ஊண் அம்புகை எறிந்த நெற்றிச்*
*சிறுநுண் பல்வியர் பொறித்த*
*குறுநடைக் கூட்டம் வேண்டு வோரே"* [33]

என்ற இளந்தேவனாரின் பாடல், மகிழ்ச்சியோடு இல்லறம் நடத்துவதற்குப் பொருள் இன்றியாமையாதது என்று உலகியல் நடப்பினைத் தோழி தலைவிக்கு உணர்த்துகிறாள்.

ஆண்கள் வினைமேற் சென்று பொருளீட்டும் மனதினை உடையவர்கள். அவர்களைத் தடுக்காமல் சென்று வர விடுதலே அதற்குரிய பண்பாகும் என்று தலைவி கூறுவதை,

*"நன்றெனப் புரிந்தோய் நன்றுசெய் தனையே*
*செயல்படு மனத்தர் செய்பொருட்கு*
*அகல்வர் ஆடவர் அதுஅதன் பண்பே"* [34]

எனவும்,

இன்பமும் இளமையும் நிலையில்லாதன. எனவே பொருளீட்டச் செல்லும் எண்ணத்தினை ஒழித்து தலைவியுடன் தங்கி இன்பம் எய்துக என்று தோழி கூறுகிறாள். இதை,

*"வைகல் தோறும் இன்பமும் இளமையும்*
*எய்கணை நிழலின் கழியும்இவ் உலகத்துக்*
*காணீர் என்றலோ அரிதே அதுநனி"* [35]

என்ற பாடலில், தலைவன் பொருள் தேடுவதில் விருப்பம் கொண்டவனாக இருப்பதை உணர முடிகிறது.

### அறம் செய்வதற்காகப் பொருளீட்டல்

வறுமையால் வாடி இரப்போர்க்கு ஈயாமல் தாம் மட்டுமே உண்டு களித்திருக்கும் எண்ணம் நம் பண்டைத் தமிழரிடையே காணப்படாத ஒரு பண்பு. இதை,

*"தொலைவுஆகி, இரந்தோர்க்குஒன்று ஈயாமை*
*இளிவுஎன,"* [36]

*"இல்என இரந்தோர்க்குஒன்று ஈயாமை இளிவுஎனக்"* [37]

*"இடன்இன்றி இரந்தோர்க்குஒன்று ஈயாமை இளிவுஎனக்"* [38]

என்ற கலித்தொகைப் பாடல் வரிகளில் செல்வத்துப் பயனே ஈதல் என்ற கருத்தினை தலைவன் அறச்செயல் மேற்கொள்ள பொருள் தேடும் எண்ணத்தினை உடையவன் என்பதை அறிய முடிகிறது.

நாடு விட்டு நாடு கூட்டமாகச் சென்று பொருளீட்டும் உரிமையினைப் பண்டைத் தமிழ் மக்கள் பெற்றிருந்தனர் என்பதை,

*"ஆறுகடி கொள்ளும் வேறுபுலம் படர்ந்து*
*பொருள்வயின் பிரிதல் வேண்டும் என்னும்*
*அருள்இல் சொல்லும் நீசொல் லினையே"* [39]

என்று கலித்தொகை எடுத்துக் காட்டுகின்றது.

### கடல் கடந்து வாணிகம் செய்யும் உரிமை

நாட்டின் பொருளாதாரத்தைப் பெருக்கக் கூடிய வழி முறைகளில் வாணிகம் சிறப்பான இடத்தைப் பெற்ற திகழ்கின்றது. உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களையும் இயற்கை வளங்களினால் கிடைக்கும் பொருட்களையும்

தமது பயன்பாட்டிற்குப் பயன்படுத்தியது போக எஞ்சியவற்றை உள்நாட்டிலும் வெளி நாட்டிலும் விற்பனை செய்தனர். அது அவர்களின் உரிமை என்று எண்ணப்பட்டது ஆகும். இதனை,

**"அனைத்துக் குடிமக்களும் ஏதேனும் வேலையில் ஈடுபட அல்லது ஏதேனும் தொழில் அல்லது வர்த்தகம் அல்லது வணிகத்தில் ஈடுபட உரிமை பெற்றிருக்கிறார்கள்"**

என்று இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு 19 (1) (எ) வர்த்தகம் மற்றும் தொழிலில் ஈடுபடுவதற்கான உரிமையை அளித்திருக்கின்றது.

வணிகம் நீரின் வழியாகவும் நிலத்தின் வழியாகவும் மேற்கொள்ளப்பட்டது என்பதை முந்நீர் வழக்கம் என்று தொல்காப்பியர் கூற்றினால் அறியமுடிகிறது.

**நீர் வழி வாணிகம்**

பண்டைத் தமிழர்கள் இரு வழி வணிகத்திலும் சிறந்து விளங்கியமையைப் பழந்தமிழ் இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

*"வானம் ஊன்றிய மதலை போல,*
*ஏணி சாத்திய ஏற்றுஅருஞ் சென்னி,*
*விண்பொர நிவந்த, வேயா மாடத்து*
*இரவில் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி*
*உரவுநீர் அழுவத்து ஓடுகலம் கரையும்*
*துறைபிறக்கு ஒழியப் போகி"* [40]

என்ற பாடலில் கடல் கடந்து சென்று வியாபாரம் செய்து விட்டு வரும் மரக்கலங்களைக் கரைக்கு வருவதற்கு வழிகாட்டும் விண்ணைமுட்டும் கலங்கரை விளக்கம் இருந்திருக்கின்றதைச் சுட்டிக் காட்டுகின்றது. மேலும், நீர் பெயற்று என்றும் துறைமுகப்பட்டினத்தில் பால் போன்ற வெண்மை நிறமுடைய குதிரைகள் பிற நாட்டில் இருந்து இறக்குமதி செய்யப்பட்டது.

வட நாட்டில் இருந்து கொண்டு வரப்பட்ட பொன்மணிகளைக் கொண்ட மரக்கலங்கள் கடற்கரையில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. இதை,

*“ பாற்கேழ்*
*வால்உளைப் புரவியொடு வடவளம் தரூஉம்*
*நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை,”* [41]

என்ற பாடலடிகளால் அறிய முடிகிறது.

வணிகர்கள் கூட்டமாகச் சென்று வியாபாரம் செய்து வந்தனர் என்பதை,

*“எல்லிடைக் கழியுநர்க்கு ஏமம் ஆக*
*மலையவும் கடலவும் மாண்பயம் தரூஉம்*
*அரும்பொருள் அருந்தும் திருந்துதொடை நோன்தாள்”* [42]

மேற்கண்ட பாடலடிகள் உணர்த்துகின்றன.

காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்தில் ஏற்றுமதி இறக்குமதி வெகுவாக நடைப்பெற்று வந்ததையும் பொருட்களுக்குப் புலி முத்திரை பொறித்ததையும், பண்டகச் சாலையில் சுங்கம் வசூலிப்போர் இருந்ததையும் கடியலூர் உருத்திரங்கண்ணனார் எடுத்துக் காட்டுகிறார்.

**பண்டமாற்று**

சங்க காலத் தமிழர் மக்களின் வியாபார முறையில் பணத்திற்கு அல்லது பொருளுக்கு மாற்றாகப் பண்டங்களை ஒருவருக்கொருவர் மாற்றிக் கொண்டனர். இதை,

*“தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்*
*மீன் நெய்யொடு நறவு மறுகவும்*
*தீங் கரும்போடு அவல் வகுத்தோர்*
*மான் குறையொடு மது மறுகவும்”* [43]

என்ற குறிஞ்சி நில மக்கள் தேனையும் கிழங்கையும் கொடுத்து நெய்தல் மக்களிடமிருந்து மீனையும் கள்ளையும், மருத நில மக்கள் கரும்பு, அவலுக்கு ஈடாக மான் இறைச்சியினையும் மதுவையும் பெற்றதைப் பொருநராற்றுப்படையும், உப்பை விலைக்கூறி விற்று அதற்குப் பதிலாகத் தமக்கு தேவையான பொருள்களை உமணர்கள் வாங்கிச் சென்றனர் என்பதை,

*"சில்பத உணவின் கொள்ளை சாற்றி,*
*பல்எருத்து உமணர் பதிபோகு நெடுநெறி"* [44]

என்று பெரும்பாணாற்றுப்படையும்,

*"வெள்ளை உப்பின் கொள்ளைசாற்றி*
*நெல்லொடுவந்த வல்வாய்ப் பஃறி"* [45]

எனப் பட்டினப்பாலையும் பண்டமாற்று முறை நிகழ்ந்ததைச் சுட்டி நிற்கின்றன.

### நுகர்வோர் உரிமை

பணத்தையோ பொருளினையோ கொடுத்து மாற்றாக வாங்கும் பொருட்கள் தரமுடையதாகவும், அளவு குறையாமலும் பெற்றுக் கொள்வதற்கு நுகர்வோர் ஒவ்வொருவரும் உரிமையுடையவராவர். நுகர்வோர் என்பதற்கு,

**"எவரொருவர் சொந்த பயனுக்காக மறுபயன் அளித்து எந்த பொருட்களையும் வாங்குகிறாரோ அல்லது எந்த சேவையையும் ஏற்கிறாரோ அவரே நுகர்வோர் ஆவர்"**

என்று நுகர்வோர் பாதுகாப்புரிமைச் சட்டம் 1986 பிரிவு 2 (1) (d) வரையரைத் தருகின்றது.

சங்க காலத்தில் வாழ்ந்த வணிகர்கள் தம் கடமையை உணர்ந்து நுகர்வோரின் உரிமையினைப் பேணிக் காத்துக் கடைபிடித்தொழுகினர். இதை,

*"அறநெறி பிழையாது ஆற்றின் ஒழுகிக்*
*குறும்பல் குழுவின் குன்றுகண் டன்ன*
*பருந்துஇருந்து உகக்கும் பல்மாண் நல்இல்*
*பல்வேறு பண்டமோடு ஊண்மலிந்து கவின்"* [46]

என்று மதுரைக் காஞ்சியும்,

*"நெடுநுகத்துப் பகல்போல*
*நடுவுநின்ற நல்நெஞ்சினோர்*
*வடுஅஞ்சி வாய்மொழிந்து*
*தமவும் பிறவும் ஒப்ப நாடிக்*
*கொள்வதூஉம் மிகைகொளாது கொடுப்பதூஉம் குறைகொடாது*
*பல்பண்டம் பகர்ந்து வீசும்"* [47]

எனப் பட்டினப்பாலையும்

*"குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்*
*அத்தகு திருவின் அருந்தவ முடித்தோர்"* [48]

என்ற சிலம்பின் பாடலடிகளும் சங்க கால வணிகர்களின் சிறப்பினைப் பறைச்சாற்றி நிற்கின்றன. இதை,

**"'தம்முடையவற்றையும், பிறருடையவற்றையும் ஒன்று போல் மதிக்க வேண்டும்' ஒன்றை மற்றவரிடமிருந்து பெறும் பொழுது பெற வேண்டிய அளவிற்கு அதிகமாகப் பெற்று விடக் கூடாது. மற்றவர்க்குக் குறைவாகக் கொடுத்து விடக் கூடாது. இது தான் உண்மையான வணிகமுறை என்று**

**பட்டினப்பாலை சுட்டும் நெறி, தனிமனித உரிமைகளுக்கும் பொருந்தும்"[49]**

என்று சூ. இன்னாசி குறிப்பிடுகின்றார்.

வாணிகத்தின் நோக்கம் இலாபம் என்றாலும் பிறரிடமிருந்து அதிகமான பொருளைப் பெற்றுக் கொண்டு குறைவான பொருளைக் கொடுக்காது, விற்பனை செய்யப்படும் பொருளின் விலையையும் இலாபத்தையும் வெளிப்படையாகக் கூறி நேர்மையான முறையில் வணிகர்கள் வியாபாரம் செய்து வந்தனர். இதனையே,

***"வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்***
***பிறவுந் அமபோற் செயின்"*** [50]

என்கின்றார் வள்ளுவர்.

**சுற்றுச்சூழல் காப்புரிமை**

எவ்விதப் பாகுபாடுமின்றி இயற்கை வளங்களின் பயனை நுகரவும் அவ்வளங்களைப் பாதுகாக்கவும் உரிமை பெற்றவன் மனிதன். மாண்புடன் கூடிய வாழ்வு என்பது சுகாதாரமான சுற்றுச்சூழலை அனுபவிக்கவும் மாசுக்களிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் உரிமையினை உள்ளடக்கியதே. அவ்வாறான மாசற்ற சூழலை உருவாக்கிக் கொடுக்க வேண்டியது அரசாள்வோரின் கடமை.

சங்க காலப்புலவர்கள் மனித உரிமை சிந்தனைகளைக் கொண்டவர்களாக இருந்திருக்கின்றனர். போரினால் ஏற்படும் அழிவுகளையும் சுற்றுச்சூழல் மாசு மற்றும் மக்களின் அழிவுகளை மனதில் கொண்டோராய் விளங்கினர். ஆகையால் போரில் கண்ட காட்சிகளை உவமை உருவகங்களுடன் பாடி மன்னர் மனதில் மாற்றத்தினை ஏற்படுத்த விரும்பினார்கள் என்பதைப் பழந்தமிழ் நூல்கள் நன்குணர்த்துகின்றன.

நீரினையும் நிலத்தினையும் பெருக்கி சுற்றுச்சூழலைக் காத்து வேளாண்மையைப் பெருக்க வேண்டும் என்பதை,

*"அடுபோர்ச் செழிய! இகழாது வல்லே*
*நிலன் நெளி மருங்கில் நீர்நிலை பெருகத்*
*தட்டோர் அம்ம இவண்தட்டோரே*
*தள்ளா தோரிவண் தள்ளா தோரே"* [51]

அணைகளைக் கட்டி நீர்நிலைகளைப் பெருக்க வேண்டும் என்று குடபுலவியனார் பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு அறிவுறுத்தியதையும், மேலும்,

*"ஆம்பல் வள்ளத் தொடிக்கை மகளிர்*
*குன்றுஏறிப் புனல் பாயின்*
*புறவாயால் புனல் வரையுந்து;"* [52]

என வரும் பாடலடிகளில் கிணற்றினை வெட்டி மதகினை அமைத்து நீரினைத் தேக்கி உழவினை மேற்கொண்டதையும் அறியமுடிகிறது.

*"குளந்தொட்டுக் கோடு பதித்து வழிசீத்து*
*உளந்தொட்(டு) உழவயல் ஆக்கி - வளந்தொட்டுப்*
*பாகு படும் கிணற்றோ(டு) என்றிவ்வைம் பால் படுத்தான்*
*ஏகும் சுவர்க்கத் தினிது"* [53]

என்ற சிறுபஞ்சமூலத்தின் பாடலடிகளில் குளம் வெட்டி நீரினைப் பங்கிட்டுக் கொடுப்பவர் சொர்க்கத்திற்குப் போவர் என்று கூறுவதோடு ஏரிகள் அமைக்கப்பட வேண்டியதன் முக்கியத்துவத்தையும் வலியுறுத்துகின்றது.

இயற்கையோடு இயைந்த வாழ்வினை மேற்கொண்ட பழந்தமிழர்கள் சுற்றுச்சூழல் காப்புணர்வினை நன்கு உணர்ந்திருந்தனர். இயற்கையினையே அரண்களாகத் தமக்கு ஏற்படுத்திக் கொண்டதோடு அவைகளை அழிவிலிருந்து காப்பாற்றியும் வந்தனர். இனிவரும் தலைமுறையினர் மாசற்ற சுற்றுச்சூழலைப் பெறுவர் என்பது ஐயத்திற்குள்ளானதே. இதை,

**"சுற்றுச்சூழல் சீர்கேடு காரணமாக விளையக் கூடிய ஆபத்திலிருந்து மனித சமுதாயத்தைக் காப்பதற்கான ஒரே வழி நமது மரபின்படி மீண்டும் மரங்களையும் செடி, கொடிகளையும் வழிப்பாட்டுணர்வுடன் பேணி பாதுகாப்பது தான்"** [54]

என்று கூறுகின்றார் ஏ.ஆர். ராஜகோபாலன்.

**மத்திய பிரதேச மாநில அரசு எதிர் கெடியா தோல் நிறுவனம்** என்ற வழக்கில்,

**"சுற்றுச்சூழல் காற்று மற்றும் நீர் மாசு படுத்தப்படுவது இந்திய அரசியல் சட்டத்தின் உறுப்பு (21) உத்திரவாதம் அளித்துள்ள வாழ்வதற்கான உரிமையை மீறுவதற்கு சமமாகும். சுகாதாரமான சூழ்நிலைமை என்பது ஆரோக்கியமான வாழ்வின் ஒரு ஒருங்கிணைந்த தோற்றமாகும். மனிதாபிமான மற்றும் ஆரோக்கிய சூழ்நிலை இல்லாத போது மனித மாண்புடன் வாழும் உரிமை என்பது கானல் நீர்" (AIR 2003 7 SCC389)**

என்று உச்சநீதிமன்றம் சுற்றுச் சூழல் பாதுகாப்பிற்கான உரிமையை வலியுறுத்தியுள்ளது.

மேலும்,

**"அரசியல் சட்டத்தின் உறுப்பு 21 உத்திரவாதமளித்துள்ள வாழ்வைத் துய்ப்பது மற்றும் அதனை அடைவது அதை நிறைவேற்றுவது என்பதானது இயற்கையினுடைய வெகுமதிகளைப் பாதுகாத்து பராமரிப்பது என்பது பற்றிக் கூறுகிறது. அவையின்றி வாழ்வை அனுபவிக்க முடியாது**

**என்பதுடன் சுற்றுச்சூழல் பாதிப்பு என்பது வாழ்விற்கான அடிப்படை உரிமையை மீறுவதாகும்"**

என்று M.K. **ஜனார்த்தனம் எதிர் திருவள்ளூர் மாவட்ட ஆட்சியர் (2002–1–LW–262)** என்ற வழக்கில் சென்னை உயர் நீதிமன்றம் சுற்றுச்சூழல் காப்பின் மேன்மையை வலியுறுத்தியது.

## விளையாட்டு

உள்ளம் உறுதி பெற அறக்கருத்துக்கள் நிலைக்களனாக இருப்பது போலவே உடல் வலிமை பெற விளையாட்டு இன்றியமையாதது. இவை வெறும் பொழுதுபோக்கு என்ற நிலையினையும் தாண்டி மக்களின் பண்பாடு கலாச்சாரத்தின் குறியீடாகவும் காணப்படுகிறது. இதை சங்க காலத் தமிழர் நன்கு உணர்ந்தவர்களாக உடலினையும் உள்ளத்தினையும் வலிமையானதாக வைத்திருந்தனர். ஆண், பெண், குழந்தைகள் என்று அனைவரும் விளையாட்டில் ஈடுபட்டனர். வீரம் சார்ந்த விளையாட்டுகள் ஆண்களால் பெரிதும் விரும்பப்பட்டன. பெண்களும் அதை வரவேற்றனர்.

சங்க காலப் பெண்களும் குழந்தைகளும் இவ்விளையாட்டு உரிமையினைக் கைவரப் பெற்றிருந்தனர். இதை,

> **"வீட்டின் புறத்தே போந்து விளையாடும் பருவத்து இளமகளிர் தம் தோழியர்களுடன் கூடி விளையாடி மகிழாது வீட்டின் கண்ணே அடைப்பட்டிருத்தல் அறனும் ஆகாது என அறிஞர் பலர் அறிவுறுத்தினர். அதனால் இளமகளிர் எல்லாரும் புதுப்புனலாடியும், பூக்கொய்தும் மாலை முதலிய தொகுத்தணிந்தும் விளையாடி மகிழ்ந்தனர்"**[55]

பெண்கள் மணலில் சிறு வீடு கட்டி விளையாடினர். இது 'வண்டல்'

எனப்பட்டது இதை.

*"ஒண்தொடி மகளிர் வண்டல் அயரும்*
*தொண்டி அன்ன என் நலம்தந்து"* [56]

எனக் குறுந்தொகையும்,

*"இளையோர் வண்டல் அயரவும்"* [57]

எனப் பொருநராற்றுப்படையும் குறிப்பிடுகின்றது.

சிறுமியர் சிறுவீடு கட்டிச் சிறு சோறு சமைத்துப் பிள்ளை வளர்த்து விளையாடும் ஒருவகை விளையாட்டினை விளையாடியதை,

*"தாதின் செய்த தண்பனிப் பாவை*
*காலை வருந்தும் கையாறு ஓம்பு' என*
*ஓரை ஆயம் கூறக் கேட்டும்"* [58]

என்றும்,

*"உரவுக்கடல் பொருத விரவுமணல் அடைகரை*
*ஓரை மகளிர் ஓராங்கு ஆட்ட"* [59]

எனவும் குறுந்தொகை எடுத்துக்காட்டுகின்றது. மேலும்,

*"விளையா டாயமொடு ஓரை ஆடாது*
*இளையோர் இல்லிடத்து இற்செறிந் திருத்தல்"* [60]

என நற்றிணையும் பெண்கள் ஓரையாடியதைக் குறிப்பிடுகின்றது.

ஓரை விளையாட்டென்பது சிறுமியர் சிறுவீடு கட்டி விளையாடும் விளையாட்டு என்று தமிழண்ணல் விளக்கம் தருகிறார் (குறு.உரை, ப.81). இது ஒரு மகளிர் விளையாட்டு. இது ஆயம் என்றும் சொல்லோடு தொடர்ந்து ஆளப்படுகின்றது. பஞ்சாய்ப்பாவை கொண்டு மகளிராடும் விளையாட்டு என்று பின்னத்தூர் சு. நாராயணசாமி ஐயர் அவர்களின் விளக்கமும் இங்கு கவனிக்கத்தக்கது.

சிவப்புநிறச் சாயத்தால் சேலையிட்ட மரப்பானையையும் பாவையையும் ஏந்தி பெண்கள் விளையாடியதை,

*"சுடர்விரி வினைவாய்ந்த தூதையும் பாவையும்*
*விளையாட அரிப்பெய்த அழகுஅமை புனைவினை"* [61]

என்று கலித்தொகை உணர்த்துகிறது.

பெண்கள் பந்தாடி களைப்படைந்த பின்னர் கழற்சிக்காயைக் கொண்டு கழற்சி ஆடியதை,

*"வான்தோய் மாடத்து, வரிப்பந்து அசைஇ,*
*கைபுனை குறுந்தொடி தத்த, பைபய*
*முத்த வார்மணல் பொற்கழங்கு ஆடும்"* [62]

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது. கடற்கரை மணலில் புன்னைக் காயை மறைத்து வைத்துப் பின் கண்டு பிடித்து விளையாடினர். இதை,

*"விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி*
*மறந்தனம் துறந்த காழ்முறை அகைய"* [63]

என நற்றிணை எடுத்துக்காட்டுகின்றது.

சிறுவர்கள் வேப்பமரத்தின் கீழ் கோடுகளை இட்டு விளையாடியும், நெல்லிக்காயினைக் கொண்டு பாண்டியும் விளையாடினர் என்பதை,

*"பொரியரை வேம்பின் புள்ள நீழல்*
*கட்டளை அன்ன வட்டரங்கு இழைத்துக்*
*கல்லாச் சிறாஅர் நெல்லிவட்டு ஆடும்"* [64]

என்று நற்றிணைக் குறிப்பிடுகின்றது. மூன்று உருளைகளைக் கொண்ட வண்டிகளை உருட்டி சிறுவர்கள் விளையாடி மகிழ்ந்ததை,

*“பொற்கால் புதல்வர் புரவிஇன்று உருட்டும்*
*முக்கால் சிறுதேர் முன்வழி விலக்கும்”* [65]

எனப் பட்டினப்பாலையும்

சிறுவர்கள் சிறுதேர் உருட்டி விளையாடியதை,

*“பொலம்பிறை உள்தாழ்ந்த புனைவினை உருள்கலன்”* [66]

என்று கலித்தொகையும் குறிப்பிடுகின்றது.

**சமய உரிமை**

மனிதனின் புறவாழ்க்கை முறை மாறிய போது அக வாழ்க்கை முறையும் மாறுகிறது. வாழ்க்கையோடு இரண்டறக் கலந்து விட்ட சமய வழிபாடும் காலப்போக்கில் மாறுதலுக்குட்படுகின்றன. தாம் பெற்றிருந்த நம்பிக்கைக்கு ஏற்ப சமயக் கொள்கைகளும் கோட்பாடுகளும் ஏற்படுத்தப்படுகின்றன. சட்டங்கள் இல்லாத அக்காலத்தை அறநெறி பண்படுத்தி வளப்படுத்தியிருக்கின்றன.

சமய வழிப்பாட்டில் தன்னலத்தை விடப் பொது நலமே கருத்திற் கொள்ளப்படுகிறது. மக்கள் தங்களுக்குள் ஏற்படும் பிணக்குகளை நீக்கி ஒற்றமையுடன் வாழச் செய்யவே சமயம் தலைப்படுகிறது. இதை,

**“சட்டம் மனிதனின் புற ஒழுக்கங்களைத் தான் வடிவமைக்கும் மதம் மட்டுமே அவனுக்குள் இருக்கும். குணாதிசயங்களை வடிவமைக்க முடியும்”** [67]

என்கின்றார் சி.எஸ். தேவ்நாத்.

**“பொது ஒழுங்கு, ஒழுக்கம் மற்றும் நலவாழ்வு ஆகியவற்றுக்கும் இந்தப் பகுதியின் மற்றைய வகையங்களுக்கும் உட்பட்டு நபர்கள் அனைவரும் தமது**

**மனச்சாட்சிப்படி செயற்பட மற்றும் தமது மதத்தை தழுவ மேற்கொள்ள பரப்புவதற்குச் சுதந்திரம் உடையவராவர்"**

என்று இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் உறுப்பு (25) மனச்சாட்சிப்படி செயற்பட மற்றும் தமது மதத்தைத் தழுவ, மேற்கொள்ள, பரப்புவதற்குள்ள சுதந்திர உரிமையை அளிக்கின்றது.

அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனத்தின் உறுப்பு (18)

**"ஒவ்வொருவரும் சுதந்திரமாக சிந்திப்பதற்கும், மனசாட்சிப்படி நடப்பதற்கும் விரும்பிய மதத்தைப் பின்பற்றுவதற்கும் உரிமை உண்டு. ஒருவர் தனது மதத்தை அல்லது நம்பிக்கையைத் தனியாகவோ மற்றவர்களுடன் சேர்ந்தோ மாற்றிக் கொள்ளும் உரிமை உண்டு. தனது மதம், நம்பிக்கை, பழக்க வழக்கங்கள், வணங்கும் முறை போன்றவற்றை மற்றவர்களுக்கு வெளிப்படுத்தும் சுதந்திரமும் அனைவர்க்கும் உண்டு"** மேலும்,

**"ஒவ்வொருவரும் தனது சிந்தனை மற்றும் மனசாட்சிப்படி நடந்து கொள்வதற்கு உரிமை உண்டு. தாம் விரும்பும் மதத்தை, நம்பிக்கையைத் தம் விருப்பப்படி சுதந்திரமாகவோ, தனியாகவோ, கூட்டாகவோ தனி இடத்திலோ, பொது இடத்திலோ கடைப்பிடிப்பதற்கு உரிமை உண்டு. தம்முடைய நம்பிக்கைப்படி வணங்குவதற்கும் அதைப் போதிப்பதற்கும் உரிமை உண்டு. கட்டாயத்தின் மூலம் எவருடைய நம்பிக்கை மதம் ஆகிய எதனையும் மாற்றுதல் கூடாது"**

என்று வாழ்வியல் மற்றும் அரசியல் உரிமைகள் மீதான சர்வதேச உடன்படிக்கையின் உறுப்பு (18) கூறுகின்றது.

தொல்காப்பியர் காலத்தில் திருமால், முருகன், இந்திரன், வருணன், கொற்றவை போன்ற பல தெய்வ வழிபாட்டினை மக்கள் கைக்கொண்டனர்.

சங்க காலத்தில் பல சமய வழிபாடு பரவி இருந்ததையும் எந்த சமயத்தையும் ஏற்றுக் கொள்ளவும் மக்களுக்கு உரிமை இருந்தது. சமயங்களின் பெயரால் மக்களுக்குச் சண்டை சச்சரவு எப்பொழுதும் உருவாகவில்லை. சமயப் பொறையுடைமையுடன் சங்கத் தமிழர் வாழ்ந்து வந்தனர். இதை,

> **"சங்க காலம் சமயக் காலம் அன்று. சங்க காலத் தமிழன் கடவுளை நெஞ்சத்து வைத்து உள்ளினரன்றி சிறு மன்றம் கண்டு தொழுதனரன்றிக் கடவுளுக்கு அரண்மனை போற்கோயிலும், பிற ஆரவாரங்களும் புறமாக அமைக்கவில்லை. அன்று சமயவுணர்வு இருந்ததன்றிச் சமயப் பூசலும் எழுச்சியும் இயக்கமும் இல்லை. சமயம் பரப்புவதென்று தனி நிலையங்களும் நீதியும் இல்லை"**[68]

என்கின்றார் வ.சுப. மாணிக்கம்.

காஞ்சி மாநகரத்தில் பல சமயத்தைச் சார்ந்த மக்களும் பல இனத்தினரும் வருகையைத் தந்து தொழும் நிலையில் பழமையான வெற்றி பொருந்திய மூதூர்கள் பல இருந்தன என்பதை,

> *"புலவுக்கடல் உடுத்த வானம் சூடிய*
> *மலர்தலை உலகத் துள்ளும் பலர்தொழ,*
> *விழவுமேம் பட்ட பழவிறல் மூதூர்"* [69]

எனப் பெரும்பாணாற்றுப்படையும், இந்திர விழாவின் போது மக்கள் வேறு வேறு வகையான கடவுளர்களுக்கு விழா எடுத்து வழிப்பட்டிருந்தனர். இதனை,

*“பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்*
*அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்*
*வால்வளை மேனி வாலியோன் கோயிலும்*
*நீல மேனி நெடியோன் கோயிலும்*
*மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்*
*மாமுது முதல்வன் வாய்மையின் வழாஅ*
*நான்மறை மரபின் தீமுறை யொருபால்*
*நால்வகைத் தேவரும் மூவறு கணங்களும்*
*பால்வகை தெரிந்த பகுதித் தோற்றத்து*
*வேறுவேறு கடவுளர் சாறுசிறந்த தொருபால்*
*அறவோர் பள்ளியும் அறனோர் படையும்*
*புறநிலைக் கோட்டத்துப் புண்ணியத் தானமும்”* [70]

என்று சிலப்பதிகாரமும்,

*“பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச்*
*சிறந்து புறங்காக்கும் கடவுள் பள்ளியும்,”* [71]

என வரும் பாடலடிகளில் கடவுள் பள்ளி என்று கூறப்படும் பௌத்தப் பள்ளியும்,

*“பெரியோர் மேஎய் இனிதின் உறையும்*
*குன்றுகுயின் றன்ன அந்தணர் பள்ளியும்”* [72]

என்ற பாடல் வரிகளால் அந்தணர் பள்ளி இருந்ததையும்,

*“வண்டுபடப் பழுநிய தேனார் தோற்றத்து*
*பூவும் புகையும் சாவகர் பழிச்சச்”* [73]

எனும் மேற்கண்ட பாடலடிகளில் மண் பள்ளி இருந்ததையும் அறிய முடிகிறது. மேலும், மக்கள் அனைவரும் அவரவர்கேற்ற கடவுளர்களைத் தொழுது சமயங்களைச் சார்ந்தொழுகினர் என்றும் அறிந்து கொள்ள முடிகின்றது. இதனை,

**"பண்டைத்தமிழ் மக்கள் தனித்தனியே அவரவர்கள் விரும்பிய தெய்வங்களை வணங்கி வந்தனர். அவர்கள் ஒன்றாகக் கூடி குறிப்பிட்ட தெய்வத்தைக் கொண்டாடினர். அவர்கள் தங்கள் விருப்பப் படி தனித்தனியே வணங்கிய தெய்வத்தை வழிபடு தெய்வம் என்று அழைத்தனர்"**[74]

என்கின்றார் சாமி சிதம்பரனார். வழிபடு தெய்வத்தை குல தெய்வத்தை என்று இக்காலத்தில் பேசப்படுவதை அறியலாம். மணிமேகலை காலத்தில் ஐந்து வகையான சமயங்கள் இருந்திருக்கின்றன என்பதை,

*"ஐவகைச் சமயமு மறிந்தன லாங்கென்"* [75]

என்ற அடிகளால் அறிந்து கொள்ள முடிகின்றது. மணிமேகலை கேட்டுணர்ந்த ஐவகை சமயங்களோடு பௌத்தமும் சேர்ந்து அறுவகை சமயங்கள் மணிமேகலை காலத்தில் இருந்தது இதனை,

**"மணிமேகலை ஆசிரியர் காலத்தே தமிழகத்தில் அறுவகைச் சமயங்கள் இருந்தமை விளங்கும். நாவரசர், ஞானசம்பந்தர் முதலாயினர் காலத்தே விளங்கியிருந்த சமயங்கள் இம்மணிமேகலையாசிரியர் காலத்தே இருந்ததிலே"**[76]

என்ற ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் கருத்துடன் ஒப்பு நோக்க இனிது விளங்குகின்றது. மேலும்,

*"ஆற்றுளிநிறைந்த அறுவகைச் சமயமும்"* [77]

என வரும் பெருங்கதையின் அடிகள் அறுவகைச் சமயங்கள் தமிழகத்தில் இருந்ததை எடுத்துரைக்கின்றன.

மணிமேகலை காலத்தில் இருந்த சமயப் பூசல் சங்க கால மக்களிடையே காணப்படவில்லை என்பது வெள்ளிட மலை.

**“சங்க இலக்கியங்களை நுணுகி ஆராயின் தமிழ்நாட்டிலே சமயம் எவ்வாறு வளர்ச்சியும் மாற்றமும் அடைந்து வந்தது என்பது புலனாகும். கொற்றவை முருகன் ஆகிய பழந் தெய்வங்களோடு நாகரிக கலப்பின் பயனாகச் சில பழைய தெய்வங்கள் புதிய உருவிலும் சில புதிய தெய்வங்கள் பழைய வடிவிலும் தோன்றுவதைக் காணலாம்”[78]**

என்று சமயம் மாற்றமடைந்ததை எடுத்துக் காட்டுகின்றார் க. கைலாசபதி.

மனிதனைப் பண்படுத்துவதும், ஒழுக்கமுள்ளவனாக மாற்றுவதும், பழி பாவங்களிலிருந்து நீக்கி நன்னெறிப்படுத்துவதும் அனைத்து சமயங்களின் நோக்கம் மனிதனை மனிதனாக மதிக்க வேண்டும். அன்பு செலுத்த வேண்டும் என்பதையே சமயங்கள் போதிக்கின்றன. மனிதனை மனிதனாக மதிக்காத, மதிக்கக் கற்றுக் கொடுக்காத எந்தவொரு மதத்திற்கும் ‘மதம்’ பிடித்திருக்கின்றது என்றே துணிய முடிகிறது. இன்று மதத்தின் பெயரால் சண்டைகளும், சச்சரவுகளும், மேலோங்கி நிற்கின்றதைப் போன்று சங்க காலத்தில் இல்லை என்பது எண்ணத்தக்கது.

இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு (25) ஆனது,

**“பொது ஒழுங்கு ஒழுக்கம் மற்றும் நல்வாழ்வு ஆகியவற்றுக்கும் இந்தப் பகுதியின் மற்றைய வகையங்களுக்கும் உட்பட்டு நபர்கள் அனைவரும் தமது மனச்சாட்சிப்படி செயற்பட மற்றும் தமது மதத்தைத் தழுவ மேற்கொள்ள, பரப்புவதற்குச் சுதந்திரம் உடையவராவர்”**

என்று சமயச் சுதந்திரத்திற்கு உத்திரவாதம் அளிக்கின்றது.

**பெண்களுக்கான உரிமைகள்**

வாழ்க்கை எனும் கடலினைக் கடக்க ஆண் படகு எனின் பெண் துடுப்பினைப் போன்றவள். வாழ்க்கையில் ஏற்படும் உயர்வுக்கும், தாழ்விற்கும், இன்பத்திற்கும், துன்பத்திற்கும் ஆணிற்கு நிகராகச் சம பங்கு உரிமை படைத்தவள். ஆணின் வளர்ச்சியில் பெண்களின் பங்கு அளவிட முடியாதது. இல்லத்தினைக் காக்கும் பொறுப்பு ஆணுக்கு இருப்பினும் பெண்களே இல்லத்தினை ஆள்பவளாகக் காணப்படுகின்றாள். எனவே 'இல்லாள்' எனப்பட்டாள். தாய், தாரம், மகள் என அனைத்து நிலைகளிலும் சிறப்பு பெற்று உயர்ந்து நிற்பவளாக இருப்பினும் உலகம் தோன்றிய காலம் முதற்கொண்டு இன்றளவும் இன்பம் தரும் கருவியாகவும், போகப் பொருளாகவும் கருதி அடிமைப்படுத்தப்படுவதால் உரிமைக்காகப் போராடுபவர்களாகவே இருந்து கொண்டு வருகின்றனர். இதிகாசங்களும், புராணங்களும், இலக்கியங்களும் பெண்களை இழிவாகவே கருதியிருக்கின்றன. பெண்களைப் போற்றிப் பாதுகாக்காத சமூகம் உயர்வடையாது.

> **"பொய்யுரை மொழிதல், ஆராயாது வலிந்து செய்தல், வஞ்சகம், அறிவின்மை, பேராசை, தூய்மையின்மை, இரக்கமின்மை, செருக்கு ஆகிய இவ்வெட்டும் மகளிர்பால் இயற்கையாக உள்ள தீமைகள்"**[79]

என்று தீமையின் மொத்த உருவமாக பெண் சித்தரிக்கப்பட்டு இருக்கிறாள்.

> **"மகளிற் பாற் பொய்மை, பகுத்தாராயச் செய்கை, அறிவின்மை மிக்க காமம் ஆகிய இவையுள்ளனவாதலால் பங்குறித்தன்றி அம்மகளிரோடு ஒரே படுக்கையில் துயிலாகாது"**[80]

என்று சுக்கிரநீதி குறிப்பிடுகின்றது. மேலும்,

**“பெண்மகள் இரைந்து பேசுதல், கடுஞ்சொற் கூறல், பலமுறை கூவியழைத்தல், இன்னாச் சொற்கூறல், எவரோடாயினும் கலகம் விளைவித்தல், பயனில் சொற்களைக் கூறல் ஆகிய இவை இல்லாதிருத்தல் வேண்டும்”**[81]

என்று பெண்களுக்கான கட்டுப்பாடுகளைப் பட்டியலிட்டுக் காட்டுகிறது சுக்கிரநீதி. மேலும்,

**“ஆணை விடப் பெண்ணிற்கு பசி இரண்டு மடங்கும், வெட்கம் நான்கு மடங்கும், துணிச்சல் ஆறு மடங்கும், உடலுறவு வேட்கை எட்டு மடங்கு அதிகம்”**[82]

என்று சாணக்கிய நீதி எனும் அர்த்த சாஸ்திரம் குறிப்பிடுவதாக சி.எஸ். தேவ்நாத் குறிப்பிடுகின்றார்.

பண்டை காலத்தில் பெண்கள் சமமாகவே நடத்தப்பட்டு வந்திருந்தனர். இனக்குழு சமுதாயத்தில் ஒருவனுக்கு மட்டும் உரியவளாகி ‘ஒருத்தி’ என்றழைக்கப்பட்டாள். இடைக் காலத்தைத் தொடர்ந்து வந்த காலம் கட்டுப்பாடுகளை விதித்து பெண்ணினத்தை அடிமையாக எண்ணியது. இதனை,

**“வேத காலத்திலும் பழந்தமிழர் காலத்திலும் பெண்கள் தங்கள் உரிமைகளை நிலை நாட்டி வாழ்ந்து காட்டினார்கள். அவ்வுரிமை ஏறக்குறைய இடைக் காலம் வரை தொடர்ந்தது எனலாம். பின் தோன்றிய ஸ்மிருதி காலத்தில் பெண்களுக்கான உரிமைகள் கட்டுப்பாடுகள் என்ற பெயரால் நசுக்கப்பட்டன. அன்றைய சமுதாய மாற்றமும் சூழல்களும் பெண்ணடிமைக்கு வித்திட்டன”**[83]

என்கின்றார் மு. விவேகானந்தன்.

எந்த ஒரு சமுதாயத்தின் உயர்வு தாழ்வும் அச்சமுதாயத்தில் வாழும் பெண்களின் வளர்ச்சி மற்றும் அவர்கள் பெற்றிருக்கக் கூடிய உரிமையினைப் பொறுத்து அமைகின்றன. காலந்தோறும் சமுதாயம் பெண்களை இழிவாகவே நடத்தி வந்திருக்கின்றன. ஆண்களுக்குப் பணிவிடை செய்யும் தாதிகளாகவும் போகத்திற்குரியவளாகவும் பெண் கருதப்பட்டிருக்கிறாள். இதை,

> **“ஸ்திரிகளுக்கு விவாகத்தை, உயநயநனமாகவும் பார்த்தாவுக்கு பணிவிடை செய்வதைக் குரு குலத்தில் வேத மோதுவதாகவும், வீட்டைக் காப்பாற்றுவதை சமிதா தானமாகவும் சொல்லப்படுகிறது”**[84]

என மனுதர்மம் பெண்களுக்குரிய கடமையினை வலியுறுத்துகின்றது.

பிறப்பு முதல் இறப்பு வரை அனைத்து நிலைகளிலும் ஆணுக்குப் பெண் கட்டுப்பட்டு நடக்க வேண்டியவளாகவும் ஆணின் பாதுகாப்பின்றிச் சுதந்திரமாக செயல்பட முடியாதவளாகவும் இருக்க வேண்டும் என்று நிர்பந்திக்கப்பட்டிருக்கின்றாள். இதை,

> **“மாதர் இளமைப் பருவத்தில் பிதாவனாலும் யௌவனத்திற் கணவனாலும், மூப்பில் மைந்தனாலும், காக்கத்தக்கவராகையால் எக்காலமும் மாதர் சுவாதீன முடையவரல்லர்”**[85]

என்று மனுதர்மம் கூறுகின்றது. மேலும்,

‘வீட்டுக்கு வேண்டிய பாத்திர முதலியவற்றை கொள்ளுதற்காகக் கொடுத்த பொருளைக் காப்பாற்றுவது, செலவிடுவது, பாத்திர முதலிய பொருளைச் சுத்தி செய்வது, வீடு விளக்குவது, தேவ பூசை முதலியவற்றிற்குதவியான காரியஞ்செய்வது, அடுக்களைக் காரியம்,

வீட்டுப்பாத்திரம், படுக்கை முதலானவைகளைப் பார்ப்பது இவை முதலிய அவசியமான காரியங்களை மனைவிக்குக் கற்பித்து அவருடைய மனம் வேறிடத்திற் செல்லாத படி செய்க' (9:11)

'மாதர் ஆடவரிடத்தில் அழகையும், பருவத்தையும் விரும்பாமலே ஆண் தன்மையை மாத்திரம் முக்கியமாக எண்ணி அவர்களைப் புணருகிறார்கள்' (9:14) 'படுக்கை, ஆசனம், அலங்காரம், காமம், கோபம், பொய், துரோக சிந்தை இவற்றினை மாதர் பொருட்டே மநுவானவர் கற்பித்தார்' (9:17)

'மாதர்களுக்கு ஜாதகர்ம முதலியவை மந்திரத்தோடு கிடையாது, இவர்களுக்கு மனச்சுத்தியுங் கிடையாது, பாவத்தைப் போக்கிற மந்திரோபதேசமில்லை. ஆகையால் பொய்யைப் போல் அபரிசுத்தாளாயிருக்கிறார்கள்' (9:18) 'மாதர்கள் பெரும்பாலும் விபசார தோஷமுள்ளவர்களென்று அநேக சுருதிகளிலுஞ் சாஸ்த்திரங்களிலுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன' (9:19)

'பிள்ளை பெறுவது, பெற்ற பிள்ளையைக் காப்பாற்றுவது, நாடோறும் வந்த விருந்தினர் முதலானவரை உபசரிப்பது இவை முதலியவைகளுக் கெல்லாம் மாதர்களே காரணமாக இருக்கிறார்கள் என்பது பிரத்தியக்ஷமாகவேயிருக்கிறது (9:27).

மலடியான மனைவியை எட்டு வருஷத்திற்கு மேலும் சாப்பிள்ளை பெறுபவளை பத்து வருஷத்திற்கு மேலும், பெண்ணையே பெறுபவளை பதினொரு வருஷத்திற்கு மேலும், தீங்கு சொல்பவளை அப்பொழுதேயும் நீக்கி வேறு விவாகஞ் செய்த கொள்க. இந்த மனைவியர்களுக்கு மனமகிழ்ச்சிப் பொருள் கொடுக்க வேண்டியதில்லை (9:81)

'தானாகப் புருஷனை வரித்துக் கொள்ளுகிறவள் தந்தை, தாய், உடன் பிறந்தவர் இவர்கள் தனக்கு முன் கொடுத்த பூஷணங்களை எடுத்துக் கொள்ளக் கூடாது எடுத்துக் கொண்டால் திருடியாவாள்' (9:92) என்று மனுதர்ம சாஸ்திரத்தில் பெண்ணுரிமை முற்றிலுமாக மறுக்கப்பட்டு அடிமை நிலையில் நடத்தப்பட வேண்டியது தர்மமாக கற்பிக்கப்பட்டு வந்தது.

**சங்க காலத்தில் பெண்ணுரிமை**

தொல்காப்பியர் காலத்தில் பெண்கள் உரிமைகள் பெற்று சுதந்திரமானவர்களாகக் காணப்படவில்லை. கல்வி கற்பதற்கும், தூது காரணமாகவும், பகை காரணமாகவும் பொருள் தேடுவதற்காகவும் தொல்காப்பியம் வகுக்கும் பிரிவுகளில் மகளிர் குறிப்பிடபடாமை இதற்குச் சான்று.

கடல் வழியாக தலைவன் பிரிந்து செல்லும் போது தலைவியை உடன் அழைத்துச் செல்லும் வழக்கம் இல்லை. கடல் கடந்து செல்லும் உரிமை பெண்களுக்கு மறுக்கப்பட்டு வந்திருக்கின்றது. இதை

***"முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை"*** [86]

என்ற நூற்பாவின் மூலம் அறிந்துக் கொள்ள முடிகிறது. மேலும்,

> **"பொருளுக்காக நாடு கடந்து செல்லுதல் மீன் பிடித்தலுக்காகப் படகில் செல்லுதல், அரசர்களுக்காகப் போரில் பங்கேற்க செல்லுதல் ஆகிய மூன்றிலிருந்தும் பெண் விதிவிலக்குப் பெற்றிருந்தாள்"**[87]

என்னும் தாயம்மாள் அறவாணன் அவர்களின் கூற்றும் தொல்காப்பியர் காலச் சமுதாயத்தில் பெண்களின் நிலையை உறுதி செய்கின்றது. இக்காலத்தில் பெண்கள் தனியாகக் கடல் கடந்து சென்று அயல்நாட்டில் வேலை செய்து பொருளீட்டுவதை காண முடிகிறது. சங்க காலத்தில்

பெண்கள் தம் கணவருடன் பொருளீட்டச் செல்வதை சமூகம் அங்கீகரிக்கவில்லை. அதனால் தலைவியை உடன் அழைத்துச் செல்லாமல் செல்லும் வழியின் தன்மையினைச் சுட்டிக் காட்டி தட்டிக் கழித்தனர். இதனை.

*“எல்வளை எம்மொடு நீவரின் யாழநின்*
*மெல்லியல் மேவந்த சீறடித் தாமரை*
*அல்லிசேர் ஆயிதழ் அரக்குத்தோய்ந் தவைபோலக்*
*கல்உறின் அவ்வடி கறுக்கந அல்லவோ*
*நலம்பெறு சுடர்நுதால் எம்மொடு நீவரின்*
*இலங்குமாண் அவிர்தூவி அன்னமென் சேக்கையுள்*
*துலங்குமான் மேல்ஊர்திக் துயிலேற்பாய் மற்றுஆண்டை*
*விலங்குமான் குரல்கேட்பின் வெருவுவை அல்லையோ*
*கிளிபுரை கிளவியாய் எம்மொடு நீவரின்*
*தளிபொழி தளிரன்ன எழில்மேனி கவின்வாட*
*முளிஅரில் பொத்திய முழங்கு அழல் இடைபோழ்ந்த*
*வளியுறின் அவ்எழில் வாடுவை அல்லையோ*
*எனவாங்கு”* [88]

என்ற பாடலடிகளில் தலைவியை தன்னுடன் அழைத்துச் சென்றால் அழகிய பாதங்கள் கல்லில் பட்டு கறுத்து விடும். தீக்காற்று மேனியில் பட்டு வாடி விடும் என்றெல்லாம் எடுத்துக் கூறி தலைவியை அழைத்துச் செல்ல மறுத்ததை காண முடிகிறது. மேலும்,

*“மணிதிகழ் விறல்மலை வெம்ப, மண்பகத்*
*துணிகயம் துகள்பட்ட தூங்குஅழல் வெஞ்சுரம்*
*கிளிபுரை கிளவியாய்! நின் அடிக்கு எளியவோ*
*தளிபு உறுபு அறியாவே காடுஎனக் கூறுவீர்”* [89]

என வரும் பாடலடிகளும் இதற்குச் சான்றாக அமைகின்றன.

பொருளீட்டச் செல்லும் தலைவன் தன்னுடன் தலைவியை அழைத்துச் செல்லாததற்கு கூறும் காரணங்கள் அனைத்தும் சங்க காலச் சமுதாயம், பெண்களை போகப் பொருளாகவும் இல்லறப் பணிகளை செய்யும் பணிப்பெண்ணாகவும், கணவனின் ஏவல்படி நடக்கும் கைப்பாவையாகவும் எண்ணியது தெளிவாக உணர முடிகிறது.

**மடலேறுதல்**

பெண்களுக்கு அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு, கற்பு போன்றவைகள் அழகு தரும் அணிகலன்கள் என்றெல்லாம் பெண்ணை உயர்த்துப்பாடி பெண்ணுரிமையைப் பறித்து அடக்கி வைத்தனர் என்பதை தமிழ் இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது. இதனை,

*"அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்*
*நிச்சமும் பெண்பாற்குரிய என்ப"* [90]

என்று தொல்காப்பிய கூறுகின்றார்.

தனக்கு பிடித்த பெண்ணின் அன்பை பெறுவதற்கு ஆண்கள் மடலேறுதலை பற்றுக் கோடாகக் கொண்டனர். சமுதாயம் அதை ஏற்றுக் கொண்டது. பெண்ணுக்கு அவ்வுரிமை மறுக்கப்பட்டிருக்கிறது. அது அவளுக்கு அழகு தரும் செயல் அன்று என்று விலக்கி வைத்தது என்பதை,

*"எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேல்*
*பொற்புடை நெறிமை இன்மை யான"* [91]

என்கின்றார் தொல்காப்பியர். இதனை,

*"கடலன்ற காமம் உழந்தும் மடலேறாப்*
*பெண்ணின் பெருந்தக்கது இல்"* [92]

என்று திருவள்ளுவரும் கூறுகிறார்.

ஒரு தலைக் காதலால் உள்ளம் கருகிய ஆண்கள் தங்கள் காதலை வெளிப்படுத்தவும் காதலிக்கப்படும் பெண்ணின் அன்பினைப் பெறவும் இம்முறையினைக் கையாண்டனர் பெண்கள் தம் காதலை நிலை நிறுத்துவதற்கு உரிமையற்றவர்களாகக் காணப்பட்டனர்.

சங்க காலத்தில் ஆண் மக்கள் தங்களைத் தாங்களே வருத்திக் கொண்டு பெண்ணின் அன்பை பெற முயற்சித்தனரே தவிர பெண்ணை வருத்தி துன்பப்படுத்தினரல்லர். இக்காலத்தில் பெண்ணின் அன்பைப் பெற முடியாமல் போகும் நேரத்தில் கொலையும் செய்ய துணிகின்றனர் என்பது ஊடகங்கள் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது. இச்செயலைப் பழந்தமிழர் கனவிலும் நினையாதவர்களாக காணப்பட்டு பண்பு நலனில் சிறந்தனர்.

## பெற்றோரிடம் காதலை சொல்வதற்கான உரிமை

பெண்கள் மலரினும் மென்மையானவர்கள் உயிரை விட நாணத்தில் சிறந்து விளங்குபவர்கள் என்றெல்லாம் பசலை மொழிகள் பேசப்பட்டு பெண் அடிமைத்தனத்தை பேணி வளர்த்தது பண்டைத் தமிழ்ச் சமூகம். பெண்கள் காதலிக்கும் உரிமையைப் பெற்றனறன்றி தன்னுடைய காதலை பெற்றோரிடம் சொல்லும் உரிமை பெற்றனர் என்று சொல்வதற்கில்லை. தலைவி கொண்ட காதல் ஒழுக்கத்தை தோழி செவிலித்தாயிடம் சொன்னாள் அவள் நற்றாய்க்கும், நற்றாய் வீட்டில் மூத்த ஆடவற்கும் உரைத்தனர். அது கேட்டு வெகுண்டழுந்து பின் அமைதியாயினர் என்பதை,

*"அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட*
*என்னையர்க்கு உய்த்துரைத்தாள் யாய்*
*அவரும், தெரிகணை நோக்கிச் சிலைநோக்கி கண்சேந்து*
*ஒரு பகல் எல்லாம் உருத்து எழுந்து ஆறி*

*இருவர்கண் குற்றமும் இல்லையால் என்று*
*தெருமந்து சாய்த்தார் தலை"* [93]

என்ற பாடல் உணர்த்துகின்றது. மேலும்,

*"அல்லல் களைந்தனன் தோழி நம்நகர்*
*அருங்கடி நீவாமை கூறின் நன்றுஎன*
*நின்னொடு சூழ்வல் தோழி நயம்புரிந்து*
*இன்னது செய்தால் இவள்என*
*மன்னா உலகத்து மன்னுவது புரைமே"* [94]

என வரும் கலித்தொகைப் பாடலில் தன் காதலை பெற்றோருக்கு அறிவிக்கும் படி தலைவி தோழிக்கு உரைப்பதைக் காண முடிகிறது. இதனை,

> **"களவியல் பாடல்களின் பெரும் பகுதி தலைவி தோழியரின் அச்சத்தையும் மனப்பதற்றத்தையும் இயலாமையையும் விவரிக்கும் போக்கு எதைக் குறிப்பிடுகின்றது? சங்கப் பெண்ணின் உரிமைகள் கட்டுப்படுத்தப்பட்டு விட்ட நிலையையே இவை குறிப்பிடுகின்றன"**[95]

என்கின்றார் சிலம்பு. நா. செல்வராசு.

இக்காலத்தில் இப்போக்கு முற்றிலும் மாறுபட்ட நிலையினை அறிய முடிகிறது. பெண்கள் தன் காதலை பெற்றோரிடம் தைரியமாக எடுத்துச் சொல்லி காதலித்தவனை மணம் முடிப்பதும் பெற்றோர் எதிற்கும் நேரத்தில் உடன்போக்கு மேற்கொள்வதும் நடைமுறையில் காண முடிகிறது.

சங்க இலக்கியங்களில் காணப்படும் நொது மலர் வரைவு, வெறியாட்டு போன்ற முதலியவற்றைச் சுட்டிக் காட்டுகின்ற பாடல்கள் அனைத்தும் தலைவி தான் கொண்ட காலை பெற்றோரிடம் சொல்வதற்கு உரிமை இல்லை என்பதையே காட்டுகின்றது.

**கண்டிக்கும் உரிமை**

பழந்தமிழ்ச் சமூகம் ஆணாதிக்கச் சமூகமாகவே இருந்திருக்கின்றது. ஆணின் செயல்கள் ஒழுக்கக் கேடானதும் போற்றத் தகாத செயலாக இருந்தாலும் அதை சமூகம் குற்றமாக கருதுவதில்லை. ஆண்கள் பரத்தமையை நாடி ஒடுவதைக் கண்டாலும் அதை நேரிடையாகக் கண்டிக்கும் உரிமையற்றவளாக பெண்கள் இருந்தனர்கள். இதனை,

> **“சங்க கால சமூகத்தில் குடும்பத்தில் கணவனாகயிருக்கும் ஆண் குடும்பத்துக்கு வெளியே காமக்கிழத்தி காதற் பரத்தை முதலான பெயர்களில் பல பெண்களோடு பாலியல் சேர்க்கை கொள்வதிலிருந்து அவனை தடுக்கும் வழக்கமோ சட்டமோ கிடையாது. இத்தகைய மீறல்களை அன்றைய சமூகம் பொருட்படுத்தவில்லை. பாலியல் உறவுகள் ஒழுக்கக் கேடானவையாக அன்று பழக்கப்படவில்லை”[96]**

என்கின்றார் ராஜ்கௌதமன்.

> ***“கரைசேர் வேழம் கரும்பில் பூக்கும்***
> ***துறைகேழ் ஊரன் கொடுமை நன்றும்***
> ***ஆற்றுக தில்ல யாமே***
> ***தோற்க தில்லஎன் தடமென் தோளே” [97]***

என வரும் பாடலில் தலைவனின் செயலைக் கண்டு தன்னையே தேற்றிக் கொள்ளும் தலைவியின் நிலை எண்ணத்தக்கது.

சங்க காலத்தில் பரத்தையர் பிரிவு கண்டு பெண்கள் கோபம் கொண்டாலும் அதை காட்டிக் கொள்ளாமல் தலைவனிடம் ஊடல் கொள்வதையே பரத்தையர் மாட்டுப் பிரிவு பாடல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

பரத்தையிடமிருந்து திரும்பி வந்த தலைவனிடம் தலைவி கண்டிக்கும் துணிச்சலற்றவளாய் இப்பிறப்பு நீங்கி மறுபிறவியிலாவது உன் மனதுக்கு உகந்தவளாக ஆகுவேனாக என்னும் தலைவியின் உள்ளக் கொதிப்பினை

*"அணிற்பல் அன்ன கொங்குமுதர் முண்டகத்து*
*மணிக்கேழ் அன்ன மாநீர்ச் சேர்ப்ப!*
*இம்மை மாறி மறுமை யாயினும்*
*நீஆ கியர்என் கணவனை*
*யான்ஆ கியர்நின் நெஞ்சுநேர் பவளே"* [98]

என்ற பாடலால் அறியமுடிகிறது.

**கற்பு நிலை**

பெண்ணடிமையைத் தூக்கி நிறுத்தும் மற்றொரு படிகல் கற்பு. சங்க காலம் தொடங்கி நிகழ்காலம் வரையில் கற்பு நிலை தொடர்ந்து பெண்களுக்கு வலியுறுத்தப்பட்டு வருகிறது. இப்பண்பினைக் கொண்டே பெண் அடிமைப்படுத்தப்படுகிறாள். பெண்ணுரிமையும் இவ்வொளியில் மங்கிப் போய் விடுகிறது. உயிரைக் காட்டிலும் நாணம் சிறந்தது. நாணத்தைக் காட்டிலும் கற்பு சிறந்தது என்று கற்பு நிலை போற்றப்படுவதை

*"உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்*
*செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றெனத்"* [99]

என்கின்றது தொல்காப்பியம்.

**"நிலவுடைமை ஆதிக்கம் தோன்றுகின்ற காலங்களிலெல்லாம் பெண்கள் ஆடவனின் கட்டுப்பாட்டுக்குள் அடங்கி யிருக்கின்றனர் என்பதை உலக வரலாற்றுப் போக்கு உணர்த்துகிறது. நிலத்திற்கு உடையவனான ஆடவன் பெண்ணைத் தனக்குரிய உடைமைப் பொருளில் ஒன்றாகக் கருதுகிறான் என்பது உண்மையாகும். தமக்குரிய உடைமைப்**

**பொருள், தமக்குரிய போகப் பொருள் தமக்கு அடங்கி நடக்க வேண்டிய ஓர் உயிர் என்றே பெண்ணை அவன் மதிப்பிடுகிறான். இதனால் பெண்ணைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் காக்க வேண்டிய அவசியம் அவனுக்கு ஏற்படுவதால் அவருக்கு உயர்ந்த மதிப்புகளைக் கூறி அம்மதிப்புகளையே அவளை காக்கும் கவசமாக ஆக்கி விடுகிறான்"[100]**

**மேலும்,**

*"நாணலது இல்லாதக் கற்பின் வாள்நுதல்*
*மெல்லியல் குறுமகள் உள்ளிச்"* [101]

என்று புறமும்,

*"முல்லை சான்ற கற்பின்*
*மெல்லியல் குறுமகள் உறைவின் ஊரே"* [102]

என வரும் பாடலடிகளும் பெண்களின் கற்பு சிறப்பினை வலியுறுத்துகிறது.

சுதந்திர நாட்டில் பெண்ணுரிமையைப் பேணிப் பாதுகாக்கும் பெண்கள் கற்பு, சமயம், இனம், பண்பாடு என்ற பெயர்களால் களங்கப்படுத்தி பெண்ணுரிமையை பறிக்கும் செயல் இன்றளவும் நடைபெற்று வருவதை மறுக்க இயலாது.

**கைம்மை நிலை**

சங்க காலப் பெண்கள் கற்பு நெறியில் சிறந்து விளங்கினர். கணவன் இறந்ததை அறிந்தவுடன் தானும் உயிர் விடுதல் தலை கற்பு எனவும் உடன்கட்டை ஏறுதல், இடை கற்பு எனவும், வாழ்நாள் முழுவதும் கைம்மை நோன்பு நோற்பது கடை கற்பு எனக் கற்பு நிலை மூன்றாக வகைப்படுத்தப்படுகிறது.

கணவனை இழந்த கைம்பெண்களின் பெரும்பாலான உரிமைகள் மறுக்கப்பட்டதாகக் காணப்படுகின்றது. உணவு, உடை போன்றவைகளில் மிகுந்த கட்டுப்பாட்டினை சமூகம் விதித்திருந்தது. உடன்கட்டை ஏறுதல் பெருமைக்குரியதாகவும் கைம்பெண் வாழ்வு கொடுமை நிறைந்த துன்பம் மிகுந்ததாகக் காணப்பட்டது. இதை,

> **"சமுதாயத்தில் பெண்களுக்கு நல்ல சுதந்திரமிருந்தது. புகழ்பெற்ற பல பெண் புலவர்கள் இருந்தார்கள். உடன்கட்டை ஏறுதல் பாராட்டுக்குரிய சம்பவமாக இருந்த போதிலும் அரச குடும்பங்களில் கூட அது அதிகமாக பழக்கத்தில் காணப்படவில்லை. கணவனை இழந்த பெண்ணின் வாழ்க்கை துன்பம் நிறைந்திருந்தது. வாழ்க்கையின் நற்பயன்கள் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. அவள் வசதியின்றி வாழ வேண்டியது ஒரு கடமையாக ஏற்பட்டது"[103]**

என்று நீலகண்டன் குறிப்பிடுகின்றார்.

கணவனை இழந்த பெண்கள் விதவைக்கோலம் பூண்டொழுகினர் தலைமுடி மழிக்கப்பட்டிருந்தது. வளையல்கள் நீக்கப்பட்டது. குளிர்ந்த நீர் அருந்துதல், பானையின் அடிப்பகுதியில் நீரில் கிடந்த சோற்றுப் பருக்கைகளை உண்ணுதல் வெள்ளை எள் துவையலுடன் தாளிதம் செய்யாத புளியிட்டு காய்ச்சிய வேளைக் கீரையை உணவாகக் கொண்டு கல் பரப்பிய படுக்கையில் பாயில்லாமல் படுத்தல் போன்றவை கடமைகளாகக் காணப்பட்டது.

சமுதாயத்தில் கைம்நோன்பு என்பது அவமானச் சின்னமாகக் கருதப்பட்டதாலும், கைம்மை நோன்பினை கடைப்பிடிக்கும் முறை கொடுமையானதாகவும் இருந்ததையும் அதை வெறுத்து பெண்கள்

உடன்கட்டை ஏறுதலை மேற்கொண்டு உயிர் விடுதல் மேலானது என்று எண்ணம் மேலோங்கி இருந்தது. இதை

*"பல்சான் றீரே பல்சான் றீரே,*
*செல்கெனச் சொல்லாது ஒழிகென விலக்கும்*
*பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே,*
*....................... தீயும்ஓர் அற்றே"* [104]

என்ற பெருங்கோப்பெண்டு பாடலில் காண முடிகிறது. இதனை,

*"பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்*
*மார்பகம் பொருந்தி ஆங்கமைந் தனரே"* [105]

என்று புறப்பாடலடிகளும் சுட்டிக் காட்டுகின்றன.

மேற்கண்ட பாடல்களில் சமுதாயத்தில் கைம்மை பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளுக்கு அஞ்சி உடன்கட்டை ஏறத் துணிந்தனர் என்று தோன்றுகின்றது.

போரில் ஈடுபட்டு உயிர் நீத்த வீரர்களின், மன்னர்களின் மனைவிகள் மட்டுமே கைம்மை நோன்பு நோற்றதாக புறப்பாடல்கள் வழி அறிய முடிகிறது. இயற்கை மரணத்தை சேர்ந்தொழுகும் ஆண்களின் மனைவிகள் தீயில் பாய்ந்து இறத்ததாகவோ, கைம்மை நோன்பு நோற்றதாகவோ பாடல்கள் இல்லை.

பெண்கள் கணவன் இறந்த பின்பு மறுமணம் செய்துக் கொண்டதாப் பாடல்கள் எங்கும் காணப்படவில்லை. பாலியல் நுகர்வு உரிமை முற்றிலும் பறிக்கப்பட்டதாகவே அறிய முடிகிறது.

இதை,

**"கணவன் இறந்த பின்னர் பெண்ணின் பாலியல் உடற் கூற்றுச் செயல்பாடு தடை செய்யப்படுகின்றது. சங்க**

**காலத்தில் அரசியல் பொருளாதார தளங்களில் அதிகாரம் பெற்றிருந்த சமூக மட்டத்தில் இந்த தடை அமலில் இருந்தது அல்லது அந்த மட்டத்தை மட்டுமே புலவர்கள் பதிவு செய்தார்கள். பாலியல் உடற்கூற்றுச் செயல்பாடு கணவனை இழந்த பெண்ணிற்கு நிரந்தரமாக மறுக்கப்பட்ட நிலையே கைம்மை நிலை"**[106]

என்ற ராஜ்கௌதமன் கூற்றும் எண்ணத்தக்கது.

இனக்குழு மறைந்து நிலவுடைமை சமுதாயத்தில் பெண்கள் உரிமைகள் மறுக்கப்பட்ட நிலையில் ஆண்களைப் போல் சுதந்திரமாக இல்லாமல் கல்வி, போர், குடும்பம், சொத்து, பொருள், சமுதாயம் என அனைத்து நிலைகளிலும் உரிமையற்றவளாக இருந்ததை அறிய முடிகிறது. இதனை,

**"தமிழ்ச் சமுதாயம் குடும்பம், கல்வி, பொருள், போர், அரசு என அனைத்து தளத்திலும் பெண்ணை விலக்கி வைத்தமையால் தனக்கு இருந்த பலத்தில் சம பாதியைத் தானே வெட்டிக் கொண்டது என்றே கருத வேண்டியுள்ளது"**[107]

என்ற க.ப. அறவாணன் அவர்கள் கருத்தும்.

**'நினைத்தவிடமெல்லாம் சுற்றித்திரியும் போக்குரிமை ஆடவர்க்குத் தமிழ்ச் சமுதாயத்து உண்டு அன்ன உரிமை குல மகளிர்க்கும் குமரியர்க்கும் இல்லை"**[108]

என்ற வ.சுப. மாணிக்கம் கூறும் கருத்தும் ஒப்புநோக்கத்தக்கது.

**மகப்பேறு உரிமை**

செல்வங்களிலெல்லாம் தலைசிறந்த செல்வமாகக் கருதப்படுவது மக்கட் செல்வமேயாகும். அன்புறு காமத்தின் அடையாளம். குடும்பத்தின் குதுகலம். ஆண்மையையும், பெண்ணின் தாய்மை நிலையினையும் உலகிற்கு பறைசாற்றும் உயிருள்ள சாட்சி. கவலைகளை மறக்கச் செய்யும் அற்புத சக்தி. வரலாற்றுப் பதிவின் எச்சம். இத்தகைய பேறினைப் பெறாதவர்கள் குழலின் ஓசையையும் யாழின் ஓசையினையும் இனிதெனக் கூறுவர் என்று திருவள்ளுவர்,

*“குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்*
*மழலைச்சொல் கேளா தவர்”* [109]

என்று குறிப்பிடுகிறார். இதனையே,

*“யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா*
*பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க்*
*கருளவந் தனவாற் புதல்வர்தம் மழலை*
*என்வாய்ச் சொல்லு மன்ன வொன்னார்*
*கடிமதி லரண்பல கடந்த*
*நெடுமானஞ்சிநீ யருளன் மாறே”* [110]

என்ற புறப்பாடலும் வலியுறுத்துகின்றன.

ஒருவன் அளவு கடந்த செல்வத்தைப் பெற்றிருந்தாலும் குழந்தைச் செல்வம் இல்லையெனின் வாழும் நாளும் இல்லை என்னும் நாளாகும் என்று பிள்ளை செல்வத்தின் சிறப்பு கூறுவதை,

*“படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்*
*உடைப்பெருஞ் செல்வராயினு மிடைப்படக்*
*குறுகுறு நடந்து சிறுகை நீட்டி*
*இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்*
*நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்தும்*

*மக்குறு மக்களை யில்லோர்க்குப்*
*பயக்குறு யில்லைத் தாம் வாழு நாளே"* [111]

என வரும் பாடல் எடுத்துக்காட்டுகின்றது.

சங்க காலத்தில் மட்டுமல்லாது இக்காலத்திலும் இவ்வுரிமை பெண்கள் திருமணத்தின் வாயிலாகவே பெறுகின்றனர். திருமணம் இன்றி பெண் கருத்தரித்தலை சமுதாயம் ஏற்றுக் கொள்ளவில்லை. மாறாகப் பழியெனவே பறைசாற்றியது. இதனை,

**"கருத்தரிக்கும் பக்குவத்தை உடல் ரீதியில் அடைந்து விட்ட பெண் அதனை குடும்பத்திற்குள் சமூக அங்கீகரிப்போடு செயல்படுத்த வேண்டியது நாகரீக சமுதாயத்தின் கட்டுப்பாடு ஆகும். ஓர் ஆணின் மனைவி என்ற குடும்ப / சமூக தகுதியை ஒரு பெண் ஈட்டிய பிறகே கருத்தரிக்கும் உரிமையைப் பெறுகிறாள்"**[112]

என்கிறார் ராஜ்கௌதமன்.

சங்க காலத்தில் இவ்வுரிமை குல மகளிர்க்கன்றி பரத்தைபர்களுக்கு இவ்வுரிமை இருந்ததாகத் தெரியவில்லை. தன்னால் நேசிக்கப்படுகிற தலைவனின் குழந்தையைக் கண்டு கொஞ்சி விளையாடிப் பரிசுப் பொருட்களை தந்ததுடன் தன்னுயிர் என எண்ணினர். தலைவனின் மகனை தன் மகனெனவே பரத்தையர் எண்ணினர். இதை,

*"பொலங்கலம் சுமந்த பூண்தாங்கு இளமுலை,*
*வருக மாளஎன் உயிர்எனப் பெரிதுஉவந்து*
*கொண்டனள் நின்றோள் கண்டு, நிலைச் செல்லேன்"* [113]

என்ற அகநானூற்றுப் பாடலாலும்,

*"நீருள் அடைமழை ஆயிதழ்ப் போதுபோல் கொண்ட*
*குடைநிழல் தோன்றும்நின் செம்மலைக் காணூஉ*

*இவன்மன்ற யான்நோவ, உள்ளம் கொண்டு உள்ளா*
*மகனல்லான் பெற்ற மகன் என்று அகன்நகர்*
*வாயில் வரையிறந்து போத்தந்து தாயர்*
*தெருவில் தவிர்ப்பத் தவிர்ந்தனள் மற்றுஅவர் தத்தம்*
*கலங்களுள் கையுறை என்று இவற்கு*
*ஒத்தவை ஆராய்ந்து அணிந்தார்"*[114]

என்ற கலித்தொகைப் பாடலடிகள் பரத்தை தலைவனுடைய குழந்தைக்கு பரிசுப் பொருள் தந்து கொஞ்சி விளையாடியதை காண முடிகிறது.

**பரத்தையர்**

கணிகையர், பொதுமகளிர், பொருட்பெண்டிர், வரைவின் மகளிர் என பல பெயர்களால் குறிப்பிடப்படும் பரத்தையர் நெறியான வாழ்க்கை முறையிலிருந்து ஏதோ ஒரு காரணத்திற்காக மாறுபட்டு நிற்பவர்கள். இவர்கள் ஆடல், பாடல் போன்ற கலைகளில் தேர்ச்சி பெற்றவர்கள் சமுதாயத்தில் செல்வ நிலையில் இருக்கும் ஆடவர்களை தம் பால் இழுத்துக் கொள்வதற்கு உடலமைப்பு மட்டுமல்லாமல் இத்தகு கலைகளில் பயிற்சியும் தேர்ச்சியும் அவசியமானது. குல மகளிர் போன்று ஒருவனுக்கு ஒருத்தி என்ற நிலையில் இவர்கள் வாழ்க்கை அமைந்திருக்கவில்லை. பலருடன் சேர்ந்து வாழும் இயல்பினர்.

தொல்காப்பியர் காலத்து மட்டுமன்றி சங்க காலத்திலும் ஆடவர்கள் இவர்கள் பால் மயக்குற்று தலைவியை மறந்து இன்பம் துய்த்து வந்திருக்கின்றனர். இவர்கள் சமுதாயத்தின் அங்கமாக கருதப்பட்டாலும் இழிவான நிலையில் சமூகம் அவர்களை எண்ணவில்லை. இதனை,

**"ஆணின் பொருளும் பெண்ணின் மெய்யும் பண்டமாற்றாதலைப் பண்டைச் சமுதாயம் பார்த்துக் கொண்டிருந்தது. நாற்றுகளுக்கிடையே தோன்றும்**

**களையெனக் கருதாது. வரப்பில் வளரும் பூஞ்செடிப் போல பரத்தையர்களைக் கருதிற்று"**[115]

என்று வ.சுப. மாணிக்கம் கூறுகின்றார்.

இல்லத்திற் தலைவன் தலைவி ஊடலுக்குக் காரணமாக பரத்தையர் இருந்து வந்ததையும் அவ்வூடல்களைத் தீர்க்கும் வாயில்களாக பாங்கன், தோழி, பாணன் முதலியோர் இருந்ததையும் அறியமுடிகிறது. சமுதாயத்தில் எல்லா ஆண்களும் பரத்தையர் நாடிச் செல்லவில்லை என்றும் ஒரு சிலர் அவ்வாறு சென்றவழி இடித்துரைத்து திருத்த முற்பட்டிருக்கின்றனர். இதை,

**"சமுதாயத்தில் அன்று எல்லா ஆடவரும் பரத்தையர் ஒழுக்கம் மேற்கொள்ளவில்லை என்பதும் அதனை மேற்கொண்ட சில ஆடவர்களையும் குடும்பத்தில் மூத்தவரோ அல்லது சமுதாயத்தில் பெரியவர்களோ கண்டித்துள்ளனர் என்பதும் தலைவியின் பேச்சால் தெரியவருகிறது"**[116]

என்பர் சுப. அண்ணாமலை. மேலும்,

**"கணவனும் மனைவியும் ஒத்து இணங்கி வணங்கிப் போம்போது கணவனது பரத்தமையைச் சமுதாயம் ஒரு பொருட்படுத்துவதில்லை. மாறிய நிலையில் மனைவியைத் துறந்து பரத்தையே பொருளாக ஆடவன் மதி மயங்கிய நிலையில் சமுதாயம் அன்னவனை இகழ்கின்றது. திருத்த முற்படுகின்றது"**[117]

என்பார் வ.சுப. மாணிக்கம்.

சங்க காலத்தில் பரத்தையர்க்கான உரிமைகள் மறுக்கப்பட்டதாக பாடல்கள் காணப்படவில்லை. தன் உடல் அழகும் ஆசை வார்த்தைகளும் அவர்களின் மூலதனமாக இருந்தது. குறித்த இடத்திற்கு தலைவன்

வாராமையால் தலைவனின் இல்லம் சென்று கதவைத் தட்டி வளையோசையினால் தம் வரவை தெரிவித்ததை

*"களையாநின் குறிவந்துஎம் கதவஞ்சேர்ந்து அசைத்தகை*
*வளையின் வாய்விடல் மாலை மகளிரை நோவேமோ"*[118]

என்று கலித்தொகைப் பாடலடிகள் எடுத்துக் காட்டுகின்றது.

சங்க காலத்தில் பரத்தையர் பிரிவின் பொருட்டு தலைமகள் ஊடலை மேற்கொள்வதும் பின்பு ஊடல் தணிதும் இயல்பாகக் காணப்பட்டது.

பரத்தையின் பொருட்டு பிரிந்து சென்ற தலைவனை நோக்கி அவள் (பரத்தை) உன்னோடு நீடூழி வாழ்க என்று தலைவியால் வாழ்த்தப் பெற்றாள் என்பதை,

*"பூப்போல் உண்கண் பெயர்ப்ப நோக்கிச்*
*சென்றனற் வாழிய மடந்தை நுண்பல்"* [119]

என்ற நற்றிணைப் பாடலால், பரத்தையர் சமுதாயத்தில் வாழ்வியல் உரிமை பெற்றுச் சிறந்ததை அறியமுடிகிறது.

## தொகுப்புரை

- சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வுகள் இருந்தாலும் ஆண் பெண் சமத்துவம் மற்றும் சமத்துவ உரிமை வலியுறுத்தப்பெற்றது.
- சடங்குகள் செய்யும் உரிமைகள் இருந்தன.
- கடல் கடந்து வாணிபம் செய்து பொருளீட்டும் உரிமையினை ஆண்கள் பெற்று இருந்தனர். பெண்களுக்கு அவ்வுரிமை மறுக்கப்பட்டது.
- பண்டமாற்று முறையிலும் வணிகம் நடைபெற்றது.
- நுகர்வோர் உரிமை பாதுகாக்கப்பட்டது.

- ❖ சுற்றுச்சூழலைப் பாதுகாத்து மக்கள் இயற்கையோடு இயைந்து வாழும் வாழ்விற்கு வகை செய்ய மன்னர்களுக்குப் புலவர்கள் அறிவுத்தினர்.
- ❖ சமுதாயத்தில் மக்கள் அனைவரும் விளையாடும் உரிமை பெற்றிருந்தனர்.
- ❖ அனைத்து சமயங்களையும் போற்றிச் சமயக் காழ்ப்புணர்ச்சியற்றவர்களாகத் திகழ்ந்தனர்.
- ❖ பெண்களின் பெரும்பாலான உரிமைகள் சமுதாயத்தால் மறுக்கப்பட்டு வந்திருக்கின்றது.
- ❖ மகப்பேறு உரிமை பெண்களுக்கு இருந்தது எனினும் பரத்தையருக்கு அவ்வுரிமை இருந்ததாகக் காணப்பெறவில்லை.
- ❖ பரத்தையர்கள் சமுதாயத்தால் வெறுத்து ஒதுக்கப்படாமல் சம உரிமை பெற்று திகழ்ந்தனர்.

அனைத்து மக்களுக்குமான சமத்துவம், ஆண் பெண் சமத்துவம் சடங்குகள், பொருளீட்டும் உரிமை, கடல் கடந்து வாணபம் செய்யும் உரிமை, பண்டமாற்று முறையில் வாணிகம் செய்யும் உரிமை, நுகர்வோர் பாதுகாப்பு உரிமை, சுற்றுச் சூழல் பாதுகாப்புரிமை விளையாட்டு உரிமை, சமயச் சார்பின்மை, மகப்பேறு உரிமை பரத்தையர்கான உரிமை முதலிய சமூகப் பண்பாட்டுப் பொருளாதார உரிமைகளை மக்கள் பெற்றிருந்தனர் என்பது இவ்வியலில் கண்டறியப்பெற்ற உண்மைகளாகும்.

# குறிப்புகள்

1. ஜான் சாமுவேல், (தமிழாக்கம்), முகமது செரிபு, நா., மனித உரிமைகள் விவாதம் தொடர்கிறது, ப.40.
2. சுப்ரமணியம், மா., சட்டத்தமிழ், ப.57.
3. பாண்டியன், ஆ., மனித சமுதாயமும் மனித உரிமை மீறல்களும், ப.15.
4. ஜான் சாமுவேல், (தமிழாக்கம்), முகமது செரிபு, நா., மனித உரிமைகள் விவாதம் தொடர்கிறது, ப.39.
5. சுப்ரமணியம், மா., சட்டத்தமிழ், ப.39.
6. முத்தையா, கே., சங்க காலச் சமுதாயம், ப.6.
7. சிதம்பரனார், சாமி., பத்துப் பாட்டும் பண்டைத் தமிழரும், பக்.47–48.
8. வானமாமலை, நா., தமிழர் பண்பாடும் தத்துவமும், ப.150.
9. புறம். 192.
10. மேலது, 194.
11. மேலது 55:11–16
12. நான்மணி. 3:1
13. புறம். 189:5–6
14. துரைசாமிப்பிள்ளை, ஔவை, புறநானூறு மூலமும் உரையும், ப.411.
15. சிதம்பரனார், சாமி., பழந்தமிழர் வாழ்வும் வாக்கும், ப.88.
16. பதிற்றுப். 65:10
17. மேலது, 90:50
18. மேலது, 89:19–20.
19. மேலது, 88:36.

20. மேலது, 70:15–16.

21. மேலது, 42:7.

22. புறம். 3:6.

23. அகம். 315:7–8.

24. மேலது 321:15–16.

25. ஐங்குறு. 399.

26. குறுந். 7:1–2.

27. பரி. 20:79–80.

28. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல், ப.31.

29. தொல். அகத். 35.

30. தொல். கற்பியல் 188.

31. நற். 7:5–9

32. மேலது 37:7–11

33. மேலது 41:5–10

34. மேலது 24:7–9

35. மேலது 46:1–3

36. கலித். 2:11

37. மேலது 2:15

38. மேலது 2:19

39. மேலது 21:3–5

40. பெரும்பாண். 346–351

41. மேலது 320–321

42. மேலது 66–68

43. பொருநர். 214–217

44. பெரும்பாண், 64–65

45. பட்டினப். 29–30

46. மதுரைக். 500–503

47. பட்டினப். 206–211

48. சிலம்பு. 2:8–9

49. இன்னாசி, சூ., சமயப் பொதுமை, ப.50.

50. குறள் 120.

51. புறம்.18:27–30.

52. மேலது 352:5–7.

53. சிறுபஞ்ச. 66.

54. ராஜகோபாலன், ஏ.ஆர்., தண்ணீர் தண்ணீர் உலகளாவிய போராட்டங்கள், ப.50.

55. அறவாணன், க.ப., தமிழ் மக்கள் வரலாறு, ப.65.

56. குறுந். 238:3–4.

57. பொருநர். 187.

58. குறுந். 48:1–3.

59. மேலது 316:4–5.

60. நற். 68:1–2.

61. கலித். 59:5–6.

62. பெரும்பாண். 333–335.

63. நற், 172:1–2.

64. மேலது, 3:2–4.

65. பட்டினப். 24–25.

66. கலித். 81:3.

67. தேவ்நாத், சி.எஸ்., அடிப்படை மனித உரிமைகள், ப.15.

68. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல், ப.222.

69. பெரும்பாண். 409–411

70. சிலம்பு. 5:170–181

71. மதுரைக். 466–467

72. மேலது 473–474

73. மேலது 475–476

74. சிதம்பரனார், சாமி., பழந்தமிழர் வாழ்வும் வாக்கும், ப.6.

75. மணி. 27:289.

76. வேங்கடசாமி, நா.மு., துரைசாமிப் பிள்ளை, ஔவை, மணிமேகலை உரை, ப.சசரு

77. பெருங்கதை. 1:36

78. கைலாசபதி, க., பழந்தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.12.

79. கதிரேச செட்டியார், மு., சுக்கிரநீதி (தமிழாக்கம்), அத்தியாயம் 3:163

80. மேலது, 3:168

81. மேலது, 4:18

82. தேவ்நாத், சி.எஸ்., சாணாக்கிய நீதி எனும் அர்த்த சாஸ்திரம், ப.6.

83. விவேகானந்தன், மு., மகளிர் மேன்மைகளும் சட்ட உரிமைகளும், ப.35.

84. வீரமணி, கி., மனு, அசல் மனுதரும சாஸ்திரம், ஆய்வுரை, 2:67.

85. மேலது 9:3

86. தொல். அகத். 37

87. தாயம்மாள் அறவாணன், தமிழ் மக்கள் பண்டும் நேற்றும், ப.17.

88. கலித். 13:10–21.

89. மேலது, 20:5–8.

90. தொல். களவியல் 95.

91. தொல். அகத். 38.

92. குறள். 1137.

93. கலித். 39:20–25.

94. மேலது, 54:16–20.

95. செல்வராசு, சிலம்பு. நா., சங்ககால மரபுகள் கட்டுடைப்பும் கட்டமைப்பும், ப.58.

96. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும், தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.15.

97. ஐங்குறு. 12.

98. குறுந். 49.

99. தொல். களவியல் 23:1–2.

100. இராசரெத்தினம், கு., சங்க இலக்கியத்தில் பொது மக்கள், பக்.29–30.

101. புறம். 196:13–14.

102. நற். 142:10–11.

103. நீலகண்டன், தமிழர் வரலாறும் பண்பாடும், பக்.94–95.

104. புறம். 246.

105. மேலது, 62:13–14.

106. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும், தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.79.

107. அறவாணன், க.ப., தமிழ் மக்கள் வரலாறு, ப.271.

108. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல், ப.41.

109. குறள். 66.

110. புறம். 92.

111. புறம். 188.

112. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும், தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.82.

113. அகம். 16:9–11.

114. கலித். 84:10–17.

115. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல், ப.222.

116. அண்ணாமலை, சுப., கலித்தொகை மூலமும் உரையும், ப.271.

117. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல், ப.223.

118. கலித். 68:8–9.

119. நற். 20:6–7.

இயல் - ஐந்து

# மனித உரிமைகள் அன்றும் இன்றும்

## முன்னுரை

மாற்றம் என்ற ஒன்றை தவிர அனைத்தும் காலத்திற்கேற்ப மாறும் தன்மையுடையன. மன்னராட்சி காலத்தில் ஒரு வரையறைக்குள் கட்டுப்பட்டு குறுகி இருந்த உரிமைகள் மக்களாட்சி மற்றும் காலச் சூழலில் பல்வேறு மாற்றங்களுக்கு உட்பட்டு அதன் எல்லைகளும் பரந்து விரிந்து நின்றன. அறங்களாகவும், ஒழுக்க நெறிகளாகவும் கற்பிக்கப்பட்டும், உணர்த்தப்பட்டும் வந்த வாழ்வியல் பண்புகளான உரிமைகள் இயற்றப்பட்ட சட்டங்களின் மூலம் நிலை நாட்டப்படுகின்றன. பண்டைத் தமிழர்கள் சட்டம் என்பதை அறிந்திருக்கவில்லை. உரிமைகளை ஒழுக்க நெறிகளாக வாழ்வில் கடைப்பிடித்து ஒழுகினர்.

> **“சட்டமென்பது எக்காலத்துக்கும் செல்லத்தக்க நிலை கொண்ட விதிகளின் தொகுப்பாகப் பிழைபடப் பழந்தமிழருக்குப் பொருள்படவில்லை. மாறாக சட்டத்தை தாம் வாழும் சூழலுக்குக் கட்டுப்பட்ட நெறி முறைகளின் ஒரு தொகுப்பாகவே அவர்கள் புரிந்து கொண்டனர்”**[1]

என்பர் வி.ஆர்.எஸ். சம்பத்.

வழக்கங்களையும் மரபுகளையும் பேணிக்காத்து காலங்காலமாக நிலவி வந்த கட்டுப்பாடுகளையும் ஏற்றத்தாழ்வுகளையும் புறந்தள்ளி, அடிமைச் சங்கிலியை உடைத்தெறிந்து புதியதோர் உலகினை படைக்க சட்டங்கள் முயன்றன. அடிமைத்தனமும், எதேச்சாதிகாரப் போக்கும் சட்டத்தின் பார்வையில் கருகிப்போயின. உரிமைகளின் பாதுகாவலனாக

நீதிமன்றங்கள் செயல்படத் தொடங்கின. சட்டமன்றங்களும், பாராளுமன்றமும் உரிமையின் தேவையினை அறிந்து சட்டங்கள் இயற்றின.

சங்ககாலம் ஏற்றத்தாழ்வுகள் கொண்ட சமுதாயமாக இருந்தாலும் உரிமைகளும் கடமைகளும் வலியுறுத்தப்பட்டு வந்தன. குற்றங்கள் அதிகரித்த போது தண்டனைகள் கடுமையாகக்கப்பட்டன. அடிமை முறை கல்வியுரிமை, இற்செறித்தல் மூலம் ஒழிப்பு, கல்வியுரிமை, இற்செறித்தல் மூலம் பெண்களின் உரிமை பறிக்கப்படல், சொத்துரிமை, களவு மணங்களின் தன்மை, கலப்பு மணம், உரிமைகள் மற்றும் கடமைகளின் பரிணாம வளர்ச்சி மற்றும் மனித உரிமைகளைப் பாதுகாக்க இந்திய நாட்டில் இயற்றப்பட்ட சட்டங்கள் மற்றும் நீதிமன்றத் தீர்ப்புகள் போன்றவைகளின் துணைக் கொண்டு ஆராய்வது இவ்வியலின் நோக்கம்.

## குற்றமும் தண்டனையும்

தண்டனைகள் குற்றங்கள் செய்பவரைத் திருத்தி மேலும் குற்றங்கள் செய்யாதவாறு தடுப்பதற்கன்றி கொடுமைப்படுத்துவதாக அமைந்து விடக் கூடாது. சங்க காலத்தில் சிறிய குற்றங்களுக்கு மிகப் பெரிய தண்டனைகள் மன்னனால் வழங்கப்பட்டிருக்கின்றன.

ஆற்றில் மிதந்து வந்த மாங்காயைத் தின்றதற்காக அவள் தந்தை தொன்னூற்றொன்பது யானைகளோடு அப்பெண்ணின் எடைக்குச் சமமான எடையுடைய பொன்னால் செய்யப்பட்ட பாவையைத் தண்டமாகச் செலுத்துவதை ஏற்காமல் நன்னன் என்ற மன்னன் கொலை தண்டனை அளித்திருக்கிறான் என்பதை,

*"மண்ணிய சென்ற ஒண்ணுதல் அரிவை*
*புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு*

*ஒன்பதிற்று ஒன்பது களிற்றொடு, அவள்நிறை*
*பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்"* [2]

என்ற பாடலடிகளால் அறிந்து கொள்ள முடிகிறது.

திருட்டு குற்றத்திற்குத் தண்டனையாகத் தான் சுமக்க முடியாத அளவிற்குப் பொதியைத் தலையில் ஏற்றி ஊரில் உள்ள வெள்ளிடை மன்றத்தைச் சுற்றிவரச் செய்தனர் என்பதை,

*"உடையோர் காவலும் ஓரீஇய வாகிக்*
*கட்போர் உளர்வனிற் கடுப்பத் தலையேற்றிக்*
*கொட்பி னல்லது கொடுத்த லீயாது*
*உள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமும்"* [3]

என்று சிலம்பும் எடுத்தியம்புகின்றது.

சங்க காலத்தில் ஆன்முலையறுத்தல், மகளின் கருச் சிதைத்தல் போன்றவைகள் பெருங்குற்றங்களாகக் கருதப்பட்டன. காதலித்து ஏமாற்றி பின் மணம் செய்ய மறுத்ததால் தலைவி நீதிமன்றத்தை நாடியதும், குற்றத்தை விசாரித்து உண்மை அறிந்து, ஏமாற்றியவனைத் தளிர்கள் நிறைந்ததும் மூன்று கவடாய் உள்ளதுமான மரக்கிளையில் அவனைக் கட்டி வைத்து அவன் தலையில் சுண்ணாம்பைக் கொட்டி தண்டித்தனர். இதை,

*"முறிஆர் பெருங்கிளை செறியப் பற்றி*
*நீறு தலைப்பெய்த ஞான்றை"* [4]

என அகநானூற்று பாடல் குறிப்பிடுகின்றது.

**"எவரையும் சித்ரவதைக்கு உட்படுத்தலாகாது கொடிய மனித தன்மையற்றதும் இழிவுபடுத்துவதுமான நடவடிக்கைக்கு அல்லது தண்டனைக்கு உட்படுத்தலாகாது"**

அனைத்துலக மனித உரிமை பிரகடனம் உறுப்பு (5) என்று குறிப்பிடுகிறது.

## தண்டனை குறைப்பு

குற்றம் செய்பவரைத் தண்டித்தல் மட்டும் முறையான நீதி முறையாகாது. குற்றத்தை ஒப்புக் கொள்ளும் போது தண்டனைகளைக் குறைப்பதும் நீதி முறையின் தன்மை. இதை,

*“வந்தடி பொருந்தி முந்தை நிற்பின்*
*தண்டமும் தணிதி பண்டையில் பெரிதே”* [5]

எனப் புலவர்கள் வலியுறுத்தியுள்ளதை அறிய முடிகிறது.

சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்பதே மக்களாட்சியின் தத்துவம். சங்க காலத்தில் மன்னனும் மக்களும் சமமாகவே கருதப்பட்டனர். மன்னன் தவறு செய்யினும் அதற்கானத் தண்டனையைத் தானே அளித்துக் கொண்டதைப் பழந்தமிழ் இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன. ஆராயாமல் தீர்ப்பு அளித்த பாண்டிய மன்னன் நீதி பிறழ்ந்ததை எண்ணியவுடன் உயிர் துறந்ததையும், கன்றினைக் கொன்றதற்காகத் தன் மகனைத் தேர்க்காலில் இட்டு தண்டித்த மனுநீதி சோழனையும், கணவன் வெளியூர் சென்றிருந்த பொழுது இரவு நேரத்தில் தன் வீட்டுக் கதவினைத் தட்டியவனைத் தண்டிக்க வேண்டும் என்று மக்கள் கொடுத்த தண்டனையை ஏற்று கையைத் துண்டித்துக் கொண்ட பொற்கைப் பாண்டியனையும் வரலாறு புகழ்ந்துரைத்துக் கொண்டிருக்கின்றது.

வழக்கினை ஆராய்ந்து விசாரித்தறிந்து தண்டனை வழங்குவது மட்டுமல்லாமல் வழக்கில் தொடர்புடைய இருவரையும் சமாதானப்படுத்தி வைத்ததையும் அதனை வழக்குத் தரப்பினர் ஏற்றுக் கொண்டதையும் பொருநராற்றுப்படையில் காண முடிகிறது. இதை,

*“அவைபுகு பொழுதில் தம்பகை முரண் செலவும்”* [6]

என்ற பாடலடி மூலம் அக்காலத்தில் நீதிமன்றம் இக்காலத்து இசைவுத் தீர்ப்பாயம் போன்று (Arbitrary Tribunal) செயல்பட்டதையும் மன்னன் இசைவுத் தீர்ப்பாளராக இருந்து வந்ததையும் அறிய முடிகிறது. மன்னனும் காட்சிக்கு எளியராய் மக்களோடு சேர்ந்து வாழ்ந்து வந்தான். இதை,

*"மன்னன் மக்களிடமிருந்து தம்மைப் பிரித்துக்*
*கொண்டவர்கள் அல்லர்"* [7]

என்கின்றார் கா. சுப்ரமணியன்.

நீதிமன்றத்தில் நீதிபதிகள் முறை பிறழ்ந்து ஒரு சார்பாகத் தவறாகத் தீர்ப்பளித்தாலும், அரசனின் செங்கோல் ஆட்சித் தவறினாலும் கண்ணீர் விடும் பாவை மன்றம் இருப்பதால் மன்னனும் நீதிபதிகளும் தங்களின் பொறுப்புணர்ந்து கடமையாற்ற வேண்டும் என்பதை,

*"அரைசுகோல் கோடினும் அறங்கூ றவையத்து*
*உரைநூல் கோடி ஒருதிறம் பற்றினும்*
*நாவொடு நவிலாது நவைநீ ருகுத்துப்*
*பாவைநின் றழுஉம் பாவை மன்றமும்"* [8]

என்று சிலப்பதிகாரம் சுட்டிக் காட்டுகின்றது.

### பொய் வழக்கு

அறநெறியில் நின்றொழுகும் நன்னெறியாளர் மீது பொய்யாக நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்து அலைக்கழித்து துன்பப்படுத்துவது இக்காலத்தில் உள்ளது போல் சங்க காலத்திலும் நடைபெற்று வந்திருக்கின்றது. இதை,

*"அறனறிந்து ஒழுகும்அங்க ணாளனைத்*
*திறனிலார் எடுத்த தீமொழி யெல்லாம்*
*நல் அவையுட்படக் கெட்டாங்கு"* [9]

என்ற பாடலடிகளில் தொடுக்கப்பட்ட பொய் வழக்கினை நன்றாக ஆராய்ந்துப் பார்த்து நடு நிலைமையோடு நின்று வழக்கைத் தள்ளுபடி செய்திருந்ததையும் நீதியின்பால் மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையினையும் உணர்த்திச் செல்கின்றது. மேலும்,

*"மன்றக் கொடும்பா(கு) உரையாத மாண்பினிதே"* [10]

என்று ஒரு சார்பாக நின்று தீர்ப்பு வழங்காமல் இருக்கும் மாட்சிமை இனிது என்கின்றது இனியவை நாற்பது.

தண்டனை வழங்குவதற்கு முன் குற்றத்தை ஆராய்ந்தறிந்த பின்னரே தண்டனை வழங்குதல் வேண்டும் இல்லையேல் புகழ் உண்டாகாது. இதை,

*"முற்றான் தெரிந்து முறைசெய்தல் முன்இனிதே*
*பற்றிலனாய்ப் பல்லுயிர்க்கும் பாத்துற்றுப் பாங்கறிதல்"* [11]

என்றும்,

நடுநிலைமை இல்லாதார் வாயிலிருந்து வரக் கூடிய வார்த்தைகள் எப்பொழுதிலும் துன்பத்தையே தரும் என்பதை,

*"கொடும்பா(கு) உடையார் வாய்ச்சொல்"* [12]

என்கின்றது இன்னா நாற்பது.

**அடிமை நிலை**

பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் ஆண்டான் அடிமை முறைக்கு வித்திட்டன. இனக்குழு சமுதாயத்தில் உணவும் உடைமையும் அனைவர்க்கும் பொதுவாயிருந்தன. நிலவுடைமை சமுதாயம் தோன்றிய பின்னர் நிலக்கிழார்களும், பண்ணையார்களும் தங்களின் ஆதிக்கத்தைத் தன் கீழ் உள்ளோர் மீது செலுத்த முற்பட்டனர் இந்நிலை தொல்காப்பியர் காலத்திற்கு

முன்னதாகவே இருந்து வந்ததையும் பிறருக்கு அடிமைத் தொண்டு செய்து வாழ்வோரும் பிறர் ஏவல் வழி நின்று வினைபுரிவோரும் ஐந்திணை ஒழுக்கத்திற்கு உரியராகார் என்று தொல்காப்பியர் கூறுவதை,

*"அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்*
*கடிவரை இலபுறத் தென்மனார் புலவர்"* [13]

என்ற நூற்பாவால் அறிய முடிகிறது.

இக்காலத்தில் இருப்பது போன்று உடையவனுக்கே ஆட்சியும் அதிகாரமும் என்ற நிலை சங்க காலத்தில் நிலைத்திருந்தது. இதனை,

**"சங்க காலம் இன்றுள்ள வர்க்க சமுதாயத்தின் முன்னோடிதான் உடைமையாளன் அவன்கீழ் உழைத்தவன் என்ற வர்க்க பிரிவுகள் உடைமையாளனுக்கே ஆட்சி என்பதனுடைய ஆணிவேர் சங்ககாலம்தான். இன்று உடையவன் இல்லாதவன் செல்வன் – வறியவன் என்று இருப்பதுபோலவே சங்க காலத்திலும் மக்கள் பல்வேறு வர்க்கங்களாகப் பிரிந்திருக்கிறார்கள்"** [14]

என்கின்றார் கே முத்தையா. மேலும்,

*"நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்*
*செல்வம் அன்றுதன் செய்வினைப் பயனே;"* [15]

என்ற நற்றிணைப் பாடலில், மருதநிலத்தில் செல்வம் படைத்தவர்கள் ஏராளமான அடிமைகளை, வைத்துக் கொண்டு இருந்தனர் என்பதைச் சுட்டிக் காட்டுகின்றது. இதையே,

**"மருதநில மன்னர்களின் ஆதிக்கங்கள் ஓங்கும் பொழுதெல்லாம் குறிஞ்சியும் முல்லையும் நெய்தலும் அந்த மன்னர்களின் ஆணைகளுக்குப் பணிந்தன. இத்தகைய நிலவுடைமை ஆதிக்கச் சமுதாயத்தையே தொல்காப்பியமும்**

**ஏனைய சங்க இலக்கியங்களும் நமக்குப் படம் படித்துக் காட்டுகின்றன. நிலவுடைமை தோன்றி வளர்ந்ததுடன் சமுதாயத்தில் மன்னர் ஆட்சியும் தோன்றியது அதாவது, உடைமையாளர்களின் வர்க்க ஆட்சி உருவாகியது. அதிலிருந்து ஏனைய பிரிவுகளும் தோன்றின. ஆண்டான் அடிமை என்ற சமூதாயம் உருவாகியது"[16]**

என்ற கே. முத்தையா அவர்களின் கூற்றினையும் ஈண்டு ஒப்பு நோக்க இனிது விளங்கும்.

பெரிய செல்வந்தர்களின் வீடுகளில் குற்றேவல் செய்வோர் குளிரினைப் போக்கும் கருங்காணம் போன்ற மணமுடைய கல்லில் கத்துரி முதலிய கூட்டை அரைத்துப் பணிபுரிந்து வந்ததை,

*"கடியுடை வியல்நகர் சிறுகுறுந் தொழுவர்*
*கொள்உறழ் நறுங்கல் பலகூட்டு மறுக"[17]*

என்று பாடலால் அறியமுடிகிறது. மேற்கத்திய நாடுகளைப் போலவே சங்க காலத்திலும் அதற்கு முன்பும் மக்கள் அடிமைகளாக நடத்தப்பட்டு வந்திருக்கின்றனர். இதனை.

**"அடிமைகளும் ஏவலரும் இருந்தமை பழைய சமூகங்களில் அறிய ஒன்று அன்று. அஃது இயல்பு என்றும் உரோம், பாபிலோனியா, சிரியா, எகிப்து, சீனம், வடவாரிய நாடு, சிந்து சமவெளி ஆகியவற்றில் அடிமை கொள்ளும் முறை இருந்ததென்றும் பழைய நாகரிக நாடுகளின் வரலாறுகளைக் கொண்டு ஆராயுழி தொல்காப்பியர் காலத்தும் அடிமையர் இருந்தனர் என்று கொள்ளுதலே பொருத்தம்"[18]**

என்கின்றார் க.ப. அறவாணன்.

போரில் சிறைப்பிடிக்கப்பட்ட பெண்கள் அடிமைகளாகக் கோவில்களில் பணிபுரிந்ததையும் அவர்கள் கொண்டி மகளிர் என்று அழைக்கப்பட்டதையும் பட்டினப்பாலையில் அறியமுடிகிறது.

அடியோரும் ஏவல் வழி நின்று வினை புரிவோரும் ஐந்திணை ஒழுக்கத்திற்கு உரியராகார் பெருந்திணை, கைக்கிளைக்கே உரியர் என்றும் தலைமக்கள் அனைத்திற்கும் உரியர் என்று தொல்காப்பியர் அடிமைகளின் இயல்பு நிலையினைச் சுட்டிக்காட்டுவதை,

***"ஏவல் மரபின் ஏனோரும் உரியர்***
***ஆகிய நிலைமை அவரும் அன்னர்"*** [19]

என்ற நூற்பா உணர்த்துகின்றது. மேலும்,

***"இரும்பார்க்குங் காலராய் ஏதிலார்க் காளாய்ப்"*** [20]

என்று நாலடியாரும்,

***"வேண்டாது விட்டொழிந்த பெண்பாலும் யாண்டானும்***
***செற்றங்கொண் டாடும் சிறுதொழும்பும் இம்மூவர்"*** [21]

எனத் திரிகடுகமும் அடிமைகளின் நிலையைக் குறிப்பிடுகின்றது.

நிலவுடைமைச் சமுதாயத்தில் அடிமை முறைக்கு அடிப்படை காரணம் நிலம். ஆதலின் அடிமுறை மருத நிலத்தில் தான் தோன்றியிருக்க வேண்டும். நிலமற்ற ஏழைகள் தங்களின் வயிற்றுப் பிழைப்பிற்காக நிலக்கிழார்களிடமும் பண்ணையார்களிடமும் வேலை செய்து வந்தனர். அவர்களின் வறுமையைப் பயன்படுத்திக் கொண்டு அடிமை நிலையில் நடத்தப்பட்டனர். இதனை,

**"சமுதாயத்தின் கீழ்மட்டத்தில் நிலமற்ற ஊழியர்கள் இருந்தார்கள். இவர்களில் பலர் தங்களைப் போஷித்து வந்த எஜமானர்களுக்கு அடிமைகள் போலவே வாழ்ந்து வந்தனர்"** [22]

என்றும்,

**“நிலமற்ற உழவுத் தொழிலாளிகள் அநேகமாக அடிமைகள் போலவே வாழ்ந்து வந்தார்கள். பொதுவாக உயர் குலத்தோர்களுடைய வீடுகளுக்குச் சிறிது தூரத்திற்கு அப்பால் அமைக்கப்பட்ட சிறிய மண் குடிசைகளில் தான் இவர்கள் வாழ்ந்தார்கள். மக்கள் அடிமைகளாக விற்பனைச் செய்யப்பட்ட சம்பவங்களும் உண்டு, சுதந்திரம் அடைந்த ஆண்களும் பெண்களும் பல்வேறு காரணங்களை யொட்டி அடிமைகளாகப் பாடுபட வேண்டியதாயிருந்தது, அடிமைகளிலும் பல்வேறு நிலைகள் இருந்தன”**[23]

என்ற நீலகண்ட சாஸ்திரி அவர்களின் கருத்துக்களில் இருந்து சங்க காலத்திற்குப் பின்பும் இத்தகு அடிமை முறை நடைமுறையில் இருந்து வந்திருக்கின்றதை அறிய முடிகிறது.

அடிமைகளாகக் காணப்படும் ஆண் பெண்களுக்குள் சம உரிமை இருந்து வந்ததையும், சமத்துவம் பேணப்பட்டிருந்தது என்பதை,

**“இந்த நாகரிகம் நிறைந்த நிலப்பகுதியிலே நில உரிமை படைத்தவர்களுக்கு அடங்கி நடக்கும் மக்கள் இருந்தனர். நில உரிமையுள்ளவர்கள் இடும் ஏவலை செய்து வாழும் மக்கள் இருந்தனர் இம்மக்களுக்குள் ஆண் பெண் சம உரிமை ஒன்றாகத்தான் இருந்தது”**[24]

என்கின்றார் சாமி சிதம்பரனார்.

இனக்குழு வாழ்வில் இருந்த ஒற்றுமை உணர்வும், பொதுவுடைமை எண்ணமும் நிலவுடைமைச் சமூகத்தில் மறைந்து, சங்க காலம் தொடர்ந்து இக்காலம் வரையிலும் நிலை கொண்டு இருக்கின்றது. மக்களை மக்கள் சுரண்டும் சமுதாயமாக இன்றையச் சமுதாயம் காணப்படுகின்றது. இதை,

**"பழைய இனக்குழு வாழ்க்கையில் உழைத்து அறுவடை செய்து ஒவ்வொருவரும் ஒரு பங்கு பெற்றனர். இருந்தால் எல்லோரும் உண்டு களித்தனர். இல்லாவிட்டால் எல்லோரும் பசியால் வாடினர். புதிய உற்பத்தி உறவுகளால் இனக்குழுவிலிருந்த பொதுமை உறவுகள் இல்லாமல் போய்விட்டன. மனிதனை மனிதன் சுரண்டும் சமுதாயம் நிலை பெற்றுவிட்டது"[25]**

என்று கூறுவர் நா. வானமாமலை. மேலும்,

வாழ்வியல் மற்றும் அரசியல் உரிமைகளின் மீதான சர்வதேச உடன்படிக்கை பிரிவு (8),

**"அடிமையாக்குதல், அடிமை வணிகம் மற்றும் கட்டாயமாக வேலை செய்ய வைப்பதைத் தடை செய்கிறது"**

என்று கூறுகிறது. இதையே,

**"ஒவ்வொருவரும் அடிமையாக்கப்படுவதற்கோ அல்லது மற்றவரை அடிமையாக்குவதோ கூடாது. அடிமைத்தனமும், அடிமை வணிகமும் எவ்வடிவில் நடத்தப்பட்டாலும் அது தடை செய்யப்பட வேண்டும்"**

என்று அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனம் பிரிவு (4) அடிமைதனத்திற்கு எதிரான உரிமையை வலியுறுத்துகின்றது. மேலும், இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு (23) ஆனது,

**"மனித உயிரினங்களை வாங்குவது, விற்பது, பிச்சை எடுக்கச் செய்வது, வேலைக்கு கட்டாயப்படுத்துவது ஆகியன தடை செய்யப்பட்டுள்ளன. இந்த வகையத்திற்கு முரண்படுவது குற்றமானதும் தண்டனைக்குரியதுமாகும்"**

என்று சுரண்டலுக்கு எதிரான உரிமையை நிலை நாட்டி இருந்தாலும் இன்றளவும் கொத்தடிமைகளாகச் செங்கல் சூளைகளிலும், பண்ணை நிலங்களிலும் மக்கள் வேலைக்கு அமர்த்தப்பட்டு கொடுமைப் படுத்தப்படுவதும், பிள்ளைகளை விற்பனை செய்வதும் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது.

**கல்வி பெறும் உரிமை**

பகுத்தறியும் அறிவின் காரணமாக மற்ற உயிரினங்களிலிருந்து சிறப்பினைப் பெற்றுச் செல்வாக்குடன் காணப்படுபவன் மனிதன். ஆராய்ந்தறியும் அறிவிற்கு அடிப்படையானது கல்வி. உயர்ந்த சிந்தனைக்கும் ஒழுக்க நெறிகளுக்கும் வழிநடத்துவது. சமுதாயத்தில் உயர்ந்த இடத்தினைப் பெற்றுத்தரும் வலிமை கல்விக்கு மட்டுமே உண்டு. வேதகாலங்களில் இக்கல்வி உயர்ந்த குலத்தைச் சார்ந்தவர்களுக்கும் செல்வம் படைத்தவர்களுக்கும் என்று இருந்தது. இதை,

> **“எட்டு வயதில் பிராமணனுக்கும், பதினொரு வயதில் சத்திரியனுக்கும் பன்னிரெண்டு வயதில் வைசியனுக்கும் கல்வி அளிக்க வேண்டும். வயது கணக்கு கருவுற்றதில் இருந்து கொள்ள வேண்டும். ஆனால் அந்தக் கல்வி உரிமை சூத்திரர்களுக்குக் கிடையாது. பாவிகள் பக்கத்தும் சூத்திரர் அருகேயும் பலருக்கு இடையிலும் வேதம் ஓதற்க. சூத்திரன் முன்னிலையில் பிராமணனுக்கு நோன்பு உரைக்கக் கூடாது. ஓமம் செய்த மீதமும் உணவு மீதமும் சூத்திரனுக்குத் தருவது கூடாது. இம்மைப் பயன் நூல்களான பொருளியல் போன்றவைகளையும் சூத்திரனுக்குக் கற்பித்தல் கூடாது. பெண்கள் அவர்கள் எந்த வருணத்தவராக இருந்தாலும் கல்வி கற்கும் உரிமையற்றவர்கள்”**[26]

என்ற மனுநீதி கருத்துக்களைத் தம் நூலில் பதிவு செய்கிறார் சு.பொ. அகத்தியலிங்கம்.

இந்நிலை தொல்காப்பியர் காலத்திலும் நிலைபெற்றிருந்தது என்பதை 'அவற்றுள் ஓதலும் தூதும் உயர்ந்தோர்மேன' என்ற நூற்பாவால் அறிய முடிகிறது.

**"பண்டைக் காலத்தில் பெரும்பாலும் உயர் வகுப்பினரும் செல்வம் படைத்தவருந்தான் கல்வி கற்க முடிந்தது. அந்த நிலை இன்று அழிந்து போய் விட்டது"** [27]

என்கின்றார் சாமி சிதம்பரனார்.

சங்க காலத்தில் கல்வி அனைவருக்கும் பொதுவானதாகக் கருதப்பட்டது. உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்றில்லாமல் விரும்பிய எல்லோரும் கல்வி கற்றிருப்பதை அறிந்த கொள்ள முடிகின்றது.

**"அரசன் முதல் ஆண்டி ஈறாக இருந்த எல்லா நிலை மக்களும் கல்வி கற்க வசதி இருந்தது. குறத்தி, வேட்டுவச்சி, பாடினி முதலிய எல்லோரும் கல்வி கற்றனர். புலமை கருதி மன்னரால் மதிக்கப் பெற்றனர்"** [28]

என்று தம் கருத்தினைப் பதிவு செய்கின்றார் மா. இராசமாணிக்கனார். மேலும்,

**"அரசர், அந்தணர், வணிகர், வேளாளர், குறவர், மறவர், ஆயர் முதலிய தமிழ்ச் சமுதாய மக்கள் அனைவரும் கல்வி கற்க அக்காலத்தில் வசதி இருந்தது"** [29]

என்று லெ.ப.கரு. இராமநாதன் அவர்களின் கூற்றும்,

**"சங்க காலத்தில் கல்வி நல்ல ஆதரவு பெற்று மேலோங்கி இருந்தது. நாட்டில் பெரும்பான்மையான மக்கள் கல்வியறிவு**

**உடையவராய் விளங்கினர். மேலும் அரசர்கள் தமது அரசவையில் கல்வி வல்லவர்களையே சேர்த்து காரியம் நடத்தி வந்தனர். கல்விக்கு முன் எத்தகைய வேறுபாட்டையும் அரசர்கள் கருதுவதில்லை. அரசவையில் கல்வியே முதன்மை பெற்று நின்றது"**[30]

என்ற இளவழகனார் அவர்களின் கூற்றும் இங்கு ஒப்புநோக்கி ஆராயத்தக்கது.

**"இவ்வியற்கை உரிமைகளின் இயல்பை அவற்றின் திறன்களை உணர்வதாலும் நிறைவை அடைந்தாலும் அறியலாம். நல்ல நாகரிகம் படைத்த சமுதாயத்திலும் கூட இவ்வுரிமைகள் நுகர்வில் பல தடைகள் உள்ளன"**[31]

என்று இன்றைய கல்வியுரிமைக்கு வாழ்வியல் களஞ்சியம் விளக்கம் தருகின்றது.

அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனத்தின் உறுப்பு (26) ஆனது.

**"ஒவ்வொருவருக்கும் கல்வி பெற உரிமை உண்டு. கல்விக்குக் குறைந்த பட்சம் அதன் தொடக்க அல்லது அடிப்படை நிலைகளில் இலவசமாக அளிக்கப்படுதல் வேண்டும். தொடக்க நிலை கல்வி கட்டாயமானதாகவும், தொழில்நுட்பக் கல்வி மற்றும் சுயதொழில் கல்வி பொதுவாக அனைவருக்கும் கிடைக்கும்படி செய்யப்படுதல் வேண்டும். மேல்நிலைக் கல்வியானது தகுதியின் அடிப்படையில் அனைவருக்கும் சமமாகப் பெறக்கூடியதாக இருத்தல் வேண்டும். மனிதனை முழுமையாக்குவதாகக் கல்வி அமைய வேண்டும்"**

**“குழந்தைகளுக்கான கல்வியைத் தேர்ந்தெடுப்பதற்கான உரிமை பெற்றோருக்கு அல்லது சட்டபடியான பாதுகாவலுருக்கு வழங்கப்படல் வேண்டும்”**

என்றும் குறிப்பிடுகின்றது. இதனையே,

**“இலவசக் கட்டாயக் கல்வி இரண்டு வருடத்திற்குள் அனைவரையும் சென்றடையும் வண்ணம் இருத்தல் வேண்டும்”**

என்று பொருளாதாரச் சமூக மற்றும் கலாச்சார உரிமைகளின் மீதான சர்வதேச ஒப்பந்தம் (13) மற்றும் (14) ஆகிய பிரிவுகளுள் கூறுகின்றன.

**“ஆறு வயது நிறைவடைகின்ற வரையில் அனைத்து இளங்குழந்தைகளையும் பாதுகாக்கவும் அவர்களுக்குக் கல்வி அளிக்கவும் அரசு முயற்சிக்க வேண்டும்”**

என்று இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு (45) கூறுகின்றது. மேலும்,

**“ஆறு வயது முதல் பதினான்கு வயது வரையுள்ள அனைத்துக் குழந்தைகளுக்கும் இலவசமாகவும் கட்டாயமாகவும் கல்வி வழங்க மாநில அரசாங்கம் சட்டத்தின் வாயிலாக உரிய முறையில் வழிவகை செய்ய வேண்டும்”**

என்று இந்திய அரசியலமைப்புச் சட்டம் கல்வி உரிமையை வலியுறுத்தியுள்ளது.

சங்க காலத்தில் ஒரு குடியில் பிறந்தவர்களானாலும் கல்வியில் சிறந்தவர்களை மதித்து அவர்களின் ஆலோசனைப்படி அரசு நடைபெறும் என்பதையும், கல்வியில் சிறந்தவனைத் தாயும் அதிகமாக விரும்புவாள் என்பதை,

*"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்*
*பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே;*
*பிறப்போ ரன்ன உடன்வயிற்று உள்ளும்*
*சிறப்பின் பாலால் தாயும்மனம் திரியும்*
*ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்*
*மூத்தோன் வருக என்னாது அவருள்*
*அறிவுடை யோனாறு அரசும் செல்லும்*
*வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்*
*கீழ்ப்பால் ஒருவன் கற்பின்*
*மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே"* [32]

என்ற புறநானூற்றுப்பாடலில் கல்வியின் சிறப்பினை ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் எடுத்துக் காட்டுகின்றனர். மேலும்.

*"நிரைகதிர்க் கனலி பாடொடு பகல்செலக்*
*கல்லாது முதிர்ந்தவன் கண்ணிலா நெஞ்சம்போல்*
*புல்லிருள் பரத்தரூஉம் புலம்புகொள் மருள்மாலை,"* [33]

கல்வியறிவில்லாத மன்னன் மூத்த மைந்தன் என்ற உரிமையில் மட்டும் ஆட்சிக்கு வந்தால் குடிகள் வருந்த நேரும் என்று கலித்தொகைச் சுட்டிக் காட்டுகின்றது.

நாடாள்வோர் கல்வி அறிவுடையவர்களாகவும், கேள்வி அறிவில் சிறந்தவர்களாகவும் இருத்தல் வேண்டும். இன்றைய சூழ்நிலையில் கல்வியாளார்கள் அரசியலில் இருந்து விலகி நிற்பதையும், அரசாள்வோருக்கென்று கல்வித் தகுதிகள் ஏதும் நிர்ணயிக்கப்படாததையும், கல்வி பெற்றவர்கள் அரசாட்சியில் இருந்து புறந்தள்ளப்படுவதையும் காண முடிகின்றது.

கல்வி உரிமை ஆண் பெண் என்ற பாகுபாடில்லாமல் அனைவர்க்கும் உரியது என்பதை,

*"குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்*
*மஞ்சள் அழகும் அழகல்ல - நெஞ்சத்து*
*நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்*
*கல்வி அழகே அழகு"* [34]

என்று நாலடியாரும் உணர்த்துகின்றது. இதையே,

**"விலங்கினின்றும் மக்களை வேறு பிரித்து உயர்த்துவது கல்வி அத்தகைய கல்வியை ஆடவர் பெண்டிர் ஆகிய இருபாலரும் பயிலுதல் வேண்டும் என்பது பண்டைத் தமிழ் மக்களின் கொள்கையாகும். பெண்டிர் கல்வி பயிலுவதற்கு உரியரல்லர் என்னும் பிழை பட்ட கொள்கை தமிழறிஞர்க்கு உடன்பாடன்றாம்"**[35]

என்கின்றார் க. வெள்ளைவாரனன்.

"பெண்களுக்குக் கல்வி வேணும் குடித்தனம் பேணுவதற்கே" என்றும் "கல்வியில்லாத பெண்கள் களர் நிலம் போன்றவர்கள் அங்கே புல் விளையலாம் நல்ல புதல்வர்கள் விளைய மாட்டார்கள்" எனவும் பெண் கல்வியை வலியுறுத்துகின்றார் பாரதிதாசன்.

கல்வி கற்பிக்கும் ஆசிரியர் இல்லாத ஊரில் வாழ்வது தீமையை உண்டாக்கும் என்று திரிகடுகமும், ஒரு பிறவியில் தான் கற்ற கல்வியானது தொடர்ந்து வரும் ஏழு பிறவியிலும் அவனைப் பாதுகாக்கும் என்று திருக்குறளும் கல்வியின் சிறப்பினைப் பறைசாற்றுகின்றன.

**"ஆடவர் பெண்டிர் ஆகிய இருபாலர்க்கும் கல்வி பொதுவாயினும் ஆடவர் கல்வி பயிலும் முறை வேறாகவும் பெண்டிர் கல்வி பெறும் முறை வேறாகவும் முன்னையோர் வகுத்திருந்தனர். பொருளீட்டலும் போர் செய்தலும் நாடு காத்தலும் முதலிய புறத்துறைக்குரிய முறையில் ஆடவர்**

**கல்வி பயின்றனர். மனை வாழ்க்கையினை நடத்தலும் அன்பினால் மன அமைதியை வளர்த்தலும் ஆகிய குடும்பப் பணியினை நிகழ்தற்கு ஏற்ற முறையில் மகளிர் தம் வீட்டிலிருந்தே கல்வி பயின்றனர்”[36]**

என்று இருபாலர் கல்விமுறையினைக் குறித்து விளக்கும் க. வெள்ளைவாரணனர் கருத்தும் எண்ணத்தக்கது. ஆனால்,

**“போர்க்களம், அரசு, உரிமை, குடும்பம், தனிநிலை ஆகியவற்றில் பெண்கள் பெற்றிருந்த பின்நிலையை நோக்கும்போது பெண்கள் கல்வியிலும் சமநிலையில் இருந்தனர் என்று வற்புறுத்த இடமில்லை”[37]**

என்கின்றார் க.ப. அறவாணன்.

## குழந்தை நலம் பேணுதல்

குழந்தைகள் குடும்பத்தின் குதுகலம். குழந்தைகளைக் காப்பாற்றுவதும் அவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதும் ஒவ்வொரு பெற்றோரின் கடமை.

**“ஆறு வயதுக்கு உட்பட்ட இளங்குழந்தைகளைப் பாதுகாப்பதற்கும் கல்வி அளிப்பதற்கும் அரசு முயற்சிக்க வேண்டும்”**

என்று இந்திய அரசியலமைப்புச் சட்டப்பிரிவு 45 குழந்தைகளின் பாதுகாப்பினை உறுதி செய்கின்றது.

குழந்தைத் தொழிலாளர்களை மிகவும் ஆபத்தான வேலையில் ஈடுபடுத்தக் கூடாது. குழந்தை தொழிலாளர்களின் மறுவாழ்விற்கு நல நிதியத்தை ஏற்படுத்துதல் வேண்டும். அதில் குற்றம் சாட்டப்பட்ட பணியாண்மையர் ரூ. 20,000/– ஐ வைப்பீடு செய்ய வேண்டும். அந்தக்

குழந்தையின் குடும்பத்தில் வயது வந்தவர்களுக்கு வேலை கொடுத்தல் வேண்டும் என்று குழந்தைத் தொழிலாளர்களைப் பற்றி உச்சநீதி மன்றம் விரிவான வழிகாட்டுதல்களைப் பிறப்பித்தது.

> **"பதினான்கு வயதுக்கு உட்பட்ட குழந்தையைத் தொழிற்சாலை அல்லது சுரங்கத்தில் வேலை செய்ய பணியமர்த்துதல் கூடாது அல்லது அபாயகரமான பணிக்கு அமர்த்துதல் கூடாது"**

என்று இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு (24) குழந்தைகள் தொழிலாளர்களாக பணியமர்த்தப்படுவதை கண்டிக்கின்றது. இது தொடர்பாக குழந்தை தொழிலாளர் தடுப்பு மற்றும் கண்காணிப்பு சட்டம் 1986 ம் ஆண்டு இந்திய அரசால் இயற்றப்பட்டது.

குழந்தைத் தொழிலாளர்களுக்குக் கல்வி, உடல் நலம், ஊட்டச்சத்து ஆகியவற்றை வலியுறுத்தி இந்திய உச்சநீதிமன்றம் M.C. மேத்தா எதிர் தமிழ்நாடு அரசு மற்றும் பந்து முக்தி மோர்சா எதிர் இந்திய அரசு என்ற வழக்கில் கூறியுள்ளது.

> **"குழந்தைகள் சுதந்திரமான முறையில் கண்ணியத்தோடும் நல்வாழ்வுடனும் வளர்வதற்கும் அப்படி வாழ்வதற்கான வசதிகளையும், வாய்ப்புகளை அளிப்பதற்கும், குழந்தைகள் மற்றும் இளைஞர்கள் சுரண்டப் படுவதினின்றும் பாதுகாப்பதற்கும், ஒழுக்கம் மற்றும் பொருளாதாரம் காரணமாக நிராதரவாக விடப்படாமல் காப்பதற்கும் தமது கொள்கையைத் தேர்வு செய்ய வேண்டும்"**

என்று இந்திய அரசியலமைப்புச் சட்டம் பிரிவு 39 குறிப்பிடுகின்றது. மேலும்,

> **"தாய்மை பருவ காலங்களிலும், குழந்தை பருவத்திலும் சிறப்பு கவனமும் உதவியும் அளிக்கப்பட வேண்டும். திருமண பந்தம்**

**வாயிலாகவும் அல்லது வேறு வகையில் பிறந்த குழந்தைக்கும் சமமான சமூக பாதுகாப்பினைப் பெற உரிமை உண்டு"**

என்று அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனம் உறுப்பு (25) கூறுகிறது. இந்தப் பிரிவின் முக்கியத்துவத்தை உணர்ந்த இந்திய நாட்டின் உச்ச நீதிமன்றம்,

**"வேசிகளின் குழந்தைகளைப் பள்ளிக் கூடங்களிலும் தனி விடுதிகளிலும் தனியே பிரித்து வைப்பது அவர்களின் நலனுக்குரியது ஆகாது. வேசிகளுக்குப் பிறந்த குழந்தைகளை, அவர்களின் நலனையும் மற்றும் சமுதாயத்தின் நலனையும் வைத்துப் பார்க்கும் போது அவர்களை மற்றவர்களுடன் கலந்து பழக விட வேண்டும். அவர்களும் இந்தச் சமுதாயத்தின் ஓர் அங்கமாவார்கள்"**

என கௌரவ்ஜெயின் எதிர் இந்திய அரசு என்ற வழக்கில் வரலாற்றுச் சிறப்பு மிக்க தீர்ப்பினை வழங்கியுள்ளது. மேலும்

இளங்குற்றவாளிகளை கைது செய்யப்படும் முறை குறித்து குற்றவியல் நடைமுறைச் சட்டம் பிரிவு (58)

**"பிடியாணையின்றி கைது செய்யப்படும் எல்லா சம்பவங்களிலும் அந்தப் பகுதியில் உள்ள காவல் நிலையப் பொறுப்பாளர்கள் அதைப் பற்றிய தகவல்களை மாவட்ட நீதிபதி முன்போ, சார்பு நீதிபதி முன்போ சமர்பித்து, கைது செய்யப்பட்ட நபர் பிணையில் விடுவிக்கப்பட்டாரா இல்லையா என்பதைக் குறிப்பிட வேண்டும்"**

என்று கூறுகின்றது.

> **"கைது செய்யப்பட்ட குழந்தையின் பெற்றோர் அல்லது பாதுகாப்பாளர் கண்டு பிடிக்கப்பட்டாரானால் அவருக்கு கைது பற்றிய தகவல்கள் கொடுக்கப்பட்டு குழந்தை எந்த நீதிமன்றத்தில் முன் நிறுத்தப்படுகிறதோ அங்கு வருமாறு கூற வேண்டும்"**

என குழந்தைகள் சட்டம் 19 (அ) உரைக்கின்றது. மேலும்,

> **"ஒவ்வொரு குழந்தையும் இனம், நிறம், பால், மொழி, மதம், தேசியம் மற்றும் சமுதாயம் சொத்து பிறப்பு என்ற வேறு பாடும் இல்லாமல் சிறுவர்கள் என்ற வகையிலும் குடும்பம் சமுதாயம் மற்றும் நாட்டின் அங்கத்தினர் என்ற வகையிலும் பாதுகாக்கப்படுவதற்கு உரிமையுடையவர்கள். ஒவ்வொரு குழந்தையும் தேசிய உரிமை பெறவும், குழந்தை பிறந்தவுடன் பதிவு செய்யப்பட்டு பெயரிடவும் உரிமை பெற்றவர்கள்"**

என்று வாழ்வியல் மற்றும் அரசியல் உரிமைகள் மீதான சர்வதேச ஒப்பந்தம் உறுப்பு (24) குழந்தைகளுக்கு பாதுகாப்பினை அளிக்கின்றது. மேலும்

> **"குழந்தைகளுக்கும் இளைஞர்களுக்கும் பொருளாதார மற்றும் சமூக சுரண்டலிருந்து சிறப்பான பாதுகாப்பு வழங்கப்பட வேண்டும். குறிப்பிட்ட வயதிற்கு கீழ் குழந்தையை தொழிலில் அமர்த்துவது தடை செய்யப்பட்டுள்ளது"**

என்று பொருளாதார சமூக மற்றும் கலாச்சார உரிமைகளின் மீதான சர்வதேச உடன்படிக்கை உறுப்பு (10) குறிப்பிடுகின்றது.

சங்க காலத்தில் குழந்தைகள் நலம் பேணப்பட்டு வந்திருக்கின்றது. என்பதை குழந்தைகள் சிறுவர்கள் ஆகியோர் பணியமர்த்தப்பட்டது குறித்து

செய்திகள் இல்லை எனினும் குடிசைத் தொழிலாகவும் குலத் தொழிலாகவும் காணப்பட்ட மண் பாண்டம் செய்யும் தொழிலில் குயவன் வீட்டுச் சிறுவர்கள் ஈடுபடுத்தப்பட்டனர் என்பதை புறநானூறு பாடல் (32) குறிப்பிடுகின்றது.

இக்காலத்தில் குழந்தைகள், குடும்ப வறுமை காரணமாக, வீட்டில் குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளுதல், காடுகளுக்குச் சென்று விறகு வெட்டுதல், மதுக்கடைகள் மற்றும் உணவு விடுதிகள், தீப்பெட்டித் தொழிற்சாலை, பட்டாசு தொழிற்சாலை, கல் குவாரிகள், குப்பை பொறுக்குதல், பிச்சையெடுத்தல், தோல் பதனிடுதல் போன்ற தொழில்களில் ஈடுபடுத்தப்பட்டு வருவது வேதனையளிப்பதாக உள்ளது. குழந்தைகளை விற்பதும் இன்றைய நடைமுறையில் காணப்படுகின்றதை அறிய முடிகிறது.

**இற்செறித்தல்**

சங்க காலப் பெண்கள் காதலுரிமையைக் கைவரப் பெற்றிருந்தனர். எனினும் அவ்வுரிமைக்கு சமுதாயமும் குடும்பமும் கட்டுப்பாடுகளை விதித்திருந்தன. உடன்போக்கு நிகழ்த்தி நடைப்பெற்ற திருமணங்கள் அவ்வளவு எளிதாக நடந்து விட்டது என்று எண்ணுதற்கில்லை. காதலை அறிந்த பெண்ணின் பெற்றோர் வைத்திருக்கும் இற்செறித்தலையும் மீறி பல போராட்டங்களுக்கு இடையில் உடன்போக்குத் திருமணங்கள் நடந்தேறியிருக்க வேண்டும்.

> **“தமிழ்ச் சமுதாய வரலாற்றிலும் தொல் பழங்காலத்துப் பெண்கள் முதல் நிலையில் இருந்தனர் என்பதை மக்களிடையே பெரிய அளவில் புழக்கத்தில் உள்ள தாய் தெய்வ வழிபாடு தெளிவுபடுத்துகின்றது. ஆனால் மெல்ல மெல்ல பெண்கள் பின்னுக்குத் தள்ளப்பட்டு விட்டதைத் தமிழ்ச் சமுதாய வரலாறு பதிவு செய்து வைத்துள்ளது.**

**அகப்பொருள் இலக்கணத்தில் இடம் பெற்றுள்ள இற்செறிப்பு தகுந்த சான்று ஆகும்"[38]**

என்பர் க.ப. அறவாணன்.

ஆணும் பெண்ணும் மறைந்து வாழும் களவு ஒழுக்கத்தை சமூகம் ஏற்றுக் கொள்ளவில்லை என்பது சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.

மறைவாகக் களவொழுக்கம் மேற்கொள்ளும் தலைவிக்கு உண்டான பழிச் சொல்லை அன்னை அறிந்தால் இல்லின்கண் சிறை வைத்து விடுவாள் என அஞ்சம் தலைவியின் நிலையினை,

*"அலரே, அன்னை அறியின் இவண்உறை வாழ்க்கை*
*அரிய வாகும் நமக்கெனக் கூறின்*
*கொண்டுஞ் செல்வர்கொல் தோழி"* [39]

என்ற பாடலடிகளாலும்,

தலைவனுடன் களவில் ஈடுபட்டு இன்பமாக நீராடி மகிழ்ந்த தலைவி தான் வீட்டில் சிறை வைக்கப்படுவதை உணர்ந்து முன்பு போல் மகிழ்ந்திருக்க முடியாது என்ற தன் வருத்தத்தை சிறைப்புறாத் தானாகிய தலைவன் காதில் விழுமாறு கூறியதை,

*"அம்ம வாழி தோழி நம்மலை*
*மணிநிறம் கொண்ட மாமலை வெற்பின்*
*துணிநீர் அருவி நம்மோடு ஆடல்*
*எளிய மன்னால் அவர்க்குஇனி*
*அரிய ஆகுதல் மருண்டனென் யானே"* [40]

என வரும் பாடலாலும்,

தலைவன் மீது கொண்டுள்ள காதலை அறிந்த தாய் தலைவியை இற்றுறித்துள்ளாள் என்பதை தோழி தலைவனுக்கு கூறி விரைந்து திருமணம் செய்ய அறிவுறுத்துவதை,

*"நாரை நல்லினம் கடுப்ப மகளிர்*
*நீர்வார் கூந்தல் உளரும் துறைவ*
*பொங்குகழி நெய்தல் உறைப்ப இத்துறைப்*
*பல்கால் வரூஉம் தேரெனச்*
*செல்லா தீமோ என்றனள் யாயே"* [41]

என்ற ஐங்குறு பாடல்களும் உணர்த்துவதிலிருந்து சங்க காலத்தில் காதலுக்கு ஏதேனும் ஒரு காரணத்தை முன்னிட்டு எதிர்ப்பு இருந்து கொண்டு வந்திருக்கின்றது என்பதையும் பெண்கள் அவ்வெதிர்ப்புக்கு ஆளாகி அல்லற்பட்டதையும் காண முடிகிறது. ஆண்கள் இற்செறிக்கப்பட்டதாக சங்க இலக்கியங்களில் காண முடியவில்லை. சங்க காலப் பெண்களுக்கு வீட்டுக்காவல் சிறையிருப்பாக இருந்ததையும், உரிமை மறுக்கப்பட்டதையும் உணர முடிகிறது. இந்நிலை இக்காலத்தும் பெற்றோர்களிடையே காணப்படுகின்றது.

**"எந்தச் சமுதாயம் நாகரிக வாழ்வில் வாழ்கிறதோ அச்சமுதாயம் பெண்ணுரிமையை மறுத்திருக்கிறது. சாதாரண உழைப்பு வர்க்கத்தினராக இருந்தவர்கள். பெண்ணுக்கு உரிமை தந்து ஆண் பெண் சமம் என்ற நிலையில் வாழ்ந்திருக்கிறார்கள்"**[42]

என்கின்றார் கு. இராசரெத்தினம்.

### சிறை கைதிகளுக்கான உரிமைகள்

சில காரணங்களால் தவிர்க்க முடியாத சூழ்நிலையில் தவறு இழைத்ததன் மூலம் குற்றவாளிகளாகக் கருதப்பட்ட அனைவரும்

அடிப்படையில் மனிதர்கள். அவர்கள் மாண்புடனும் கண்ணியமாகவும் நடத்தப்பட வேண்டியவர்கள். இந்தியாவில் உயர்நீதிமன்றங்களும் உச்சநீதிமன்றமும் பல்வேறு வழக்குகளில் பலவகையான உரிமைகளை அவர்களுக்கு வழங்கியுள்ளது.

**M. ஆசன் எதிர் ஆந்திர பிரதேச அரசு** என்ற வழக்கில், "தண்டனைக் கைதிகள் பத்திரிக்கையாளர்கள் மற்றும் வீடியோகாரர்களுக்குப் போட்டியளிக்கக் கைதி ஒருவர் தயாராக இருந்தால் அவரை அனுமதிக்கவும் அதற்கான வசதிகளை ஏற்படுத்திக் கொடுக்கவும் செய்தல் வேண்டும். மரண தண்டனை அளிக்கப்பட்ட நபர் ஒருவர் இது சம்பந்தமானவற்றில் ஒரு இந்தியக் குடிமகனுக்குக் குறைவாகக் கருதப்பட மாட்டார்" என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு (20) இன்படி,

**"குற்றஞ்சாட்டப்பட்ட காலத்தில் அமலிலுள்ள ஒரு சட்டத்தின்படி குற்றம் எனக் கருதப்படும் செயலுக்காக, அத்தகைய சட்டத்தை மீறிச் செய்யப்படுவதற்கன்றி வேறு எந்த காரணத்திற்காகவும் எந்த நபரும் தண்டிக்கப்படுதல் கூடாது. அத்தகைய குற்றத்திற்காக அமலிலுள்ள சட்டப்படி விதிக்கப்பட வேண்டிய தண்டனையைக் காட்டிலும் அதிகமான தண்டனையை அந்த நபருக்கு அளித்தல் கூடாது."**

**"ஒரே குற்றத்திற்காக ஒரு நபர் ஒருவர் ஒரு முறைக்கு மேல் வழக்க தொடுக்கப்படவோ தண்டிக்கப்படவோ கூடாது. நபர் ஒருவருக்கு எதிரான குற்றத்தில், அவரை அவருக்கு எதிராகச் சாட்சியாக இருக்கக் கட்டாயப்படுத்தல் கூடாது"**

என்று சட்டம் குற்றம் சாட்டப்பட்டவருக்குப் பாதுகாப்பினை அளிக்கின்றது. மேலும்,

> **“குற்றம் சுமத்தப்பட்ட நபர் ஒருவர் ஏழையாக இருக்கும் நிலையில், அவர் தப்பித்துச் செல்ல மாட்டார் என்ற சூழ்நிலையில் அவரை பிணையாளர் இல்லாமல், சொந்தப் பிணையில் விடுவிக்கலாம்”**

என்று **உசைனரா எதிர் உள்துறைச் செயலாளர் பீகார் மாநிலம்** என்ற வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது.

> **“கொடிய வகையில் அல்லது சித்திரவதை செய்யும் வகையில் கொடுக்கப்படும் தண்டனை அரசியலமைப்புச் சட்டத்திற்கு விரோதமானது”**

என **இந்திரஜித் எதிர் உத்திரபிரதேச மாநிலம்** என்ற வழக்கில் உச்சநீதிமன்றம் கொடூரமாக தண்டிக்கும் வகையிலிருந்து பாதுகாப்பாளித்திருக்கிறது. சங்க காலத்தில் ஆற்றில் மிதந்து வந்த மாங்கனியை மங்கை எடுத்து உண்டதற்குக் கொலை தண்டனையை நன்னன் அளித்ததை இங்கு ஒப்பு நோக்க இக்காலத்தில் மனித உரிமைகள் சட்டத்தின் மீதும் பாதுகாக்கப்படுவதை உணர முடிகிறது.

இந்திய அரசியலமைப்புச் சட்டப்பிரிவு (27) ஆனது

> **“விசாரணைக் கைதிகள் அல்லது தண்டனைக் கைதிகள் உடல் ரீதியாகவோ அல்லது உள்ளத்தின் வழியாகவோ சித்திரவதை செய்தல் கூடாது.”**

> **“நீதிமன்றத்தால் அளிக்கப்படாத தண்டனைகளுக்குக் கைதிகளை உட்படுத்துதல் கூடாது. கைதிகளுக்குத் தேவையான ஒழுங்கு கட்டுப்பாட்டுக்கு மேற்பட்ட நிலையில்**

**கைதிகள் மீது ஒழுங்கு கட்டுப்பாட்டைத் திணிக்கக் கூடாது"**

என்று கைதிகள் சித்திரவதைச் செய்யப்படுதலின் மீதான கட்டுப்பாட்டைப் பற்றிக் கூறுகிறது. சேரமான் கணைக்கால் இரும்பொறை சிறையில் நாயினும் கீழாக நடத்தப்பட்டதை, ஈண்டு ஒப்பிட்டுப் பார்க்க இனிது சிறக்கும்.

**கை விலங்கிடுதல்**

எதிரிகளுக்கு எப்படிப்பட்ட சூழ்நிலைகளில் கைக்கு விலங்கிடுதல் என்பதற்கான விதிகளை அல்லது வழிகாட்டுதல்களை மத்திய அரசாங்கம் உருவாக்க வேண்டுமென்று இந்திய உச்சநீதிமன்றம் **பிரேம் சங்கர் சுக்லா எதிர் டெல்லி நிர்வாகம்** வழக்கில் கட்டளையிட்டுள்ளது. இவ்வழக்கில் நீதியரசர் கிருஷ்ணய்யர் வெளியிட்ட தீர்ப்பில், "கை விலங்கிடுவது கேவலமாக தண்டனை வழங்கப்படுவதும் பார்ப்பவரின் முன் கொச்சைப்படுத்தும் செயலாகும். கைவிலங்குகள் கடைசி ஆயுதமாக பயன்படுத்தப்பட வேண்டுமேயன்றி வல்லமையான ஒன்றாக இருக்கக் கூடாது என்று குறிப்பிட்டுள்ளது எண்ணத்தக்கது". மேலும்,

"கைவிலங்கை அதீதமான சூழ்நிலைகளில் போடுவதற்கு மட்டுமே அனுமதிக்கப்பட்டுள்ளது" என்று **சுனில் எதிர் மத்திய பிரதேச அரசு** என்ற வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பு வழங்கியுள்ளது.

**ஏறுதழுவுதல்**

பண்டைத் தமிழர்கள் ஏறு தழுவுதலை விளையாட்டாகக் கொள்ளாமல் வீரத்தின் அடையாளமாகத் திருமணத்தை மேற்கொள்ளும் வாயிலாக அமைத்துக் கொண்டனர். வலிமை நிறைந்த, காளையை அடக்கும் தன்மையுள்ள வீரம் நிறைந்த ஆண்மகனையே கணவனாகப் பெண்கள்

ஏற்றுக் கொண்டனர். ஏறினைக் கண்டு அஞ்சுபவனைப் பெண்கள் விரும்பும் எண்ணம் உடையவர்கள் அல்லர் காதலித்த தலைவியை மணப்பதற்கும் அது வழி ஏற்படுத்தி தந்தது. இதனை,

*"கடாஅக் களிற்றினும் கண்ணஞ்சா ஏற்றை*
*விடாஅதுநீ கொள்குவை யாயின், படாஅகை*
*ஈன்றன ஆயமகள் தோள்"* [43]

என்கின்றது கலித்தொகை. பெற்றோரும் வீரம் செறிந்த காளையை அடக்குபவனுக்கே தம்முடைய பெண்ணை மணம் முடித்துக் கொடுக்க விரும்பினர்என்பதை,

*"பகலிடக் கண்ணியன், பைதல் குழலன்*
*சுவல்மிசைக் கோல்அசைத்த கையன் அயலது*
*கொல்லேறு சாட இருந்தார்க்குஎம் பல்லிரும்*
*கூந்தல் அணைகொடுப்பேம் யாம்"* [44]

என்ற பாடலடிகள் இவ்வுண்மையைப் புலப்படுத்துகின்றன. மேலும்,

*"கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்*
*புல்லாளே ஆய மகள்*
*அஞ்சார் கொலையேறு கொள்பவர் அல்லதை*
*நெஞ்சிலார் தோய்தற்கு அரிய உயிர்துறந்து*
*நைவாரா ஆயமகள் தோள்*
*வளியா அறியா உயிர்காவல் கொண்டு*
*நளிவாய் மருப்பஞ்சும் நெஞ்சினார் தோய்தற்கு*
*எளியவோ ஆய மகள் தோள்?"* [45]

என்ற கலித்தொகைப் பாடலடிகள் வழி சங்க காலப் பெண்கள் வீரம் மிக்க ஆண்மகனையே விரும்பியமையும், கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமையையும் ஒருங்கே பெற்றிருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

## சொத்துரிமை

நாடோடியாய் சுற்றித்திரிந்த நிலையில் சொத்துக்கள் குறித்த சிந்தனை இல்லை. ஓரிடத்தில் தங்கி வாழ எண்ணிய போது தனக்கு, என்னுடையது என்ற சிந்தனை மேலெழுந்தது. நிலவுடைமை சமூகத்தில் இவ்வுரிமை நிலைபெற்று விட்டது. மன்னர்கள் மட்டுமல்லாமல் செல்வந்தர்களும் நிலக்கிழார்களும் செல்வத்தில் மிதந்தனர். கால்நடைகள் மிகப் பெரிய சொத்தாகக் கருதப்பட்டன. சங்க காலத்தில் மன்னனுக்கு இணையாக மக்களில் சிலர் சொத்துரிமை கொண்டவர்களாக இருந்தனர். சிலப்பதிகாரத்தில், கோவலனின் தந்தை பெருஞ்செல்வத்தை உடையவன் என்பதை இளங்கோவடிகள் உணர்த்துகின்றார். வாழ்வின் வளத்தையும் வளர்ச்சியினையும் சொத்துக்களைக் கொண்டே மதிப்பிடப்படுகின்றது.

> **“மனிதன் அடைய நினைக்கின்ற அனைத்து முடிவுகளுக்கும் கருவிகள் இன்றியமையாதன. இக்கருவியைப் பயன்படுத்தும் உரிமை மனிதனுக்கு இல்லாவிடில் அவன் பெற விரும்பும் முடிவுகளுக்குரிய சுதந்திரமும் பயனற்றதாகி விடும். எனவே சொத்துரிமை என்பது மனிதன் கருவிகளைக் கொண்டு வாழ்க்கையின் சுதந்திரமான வளர்ச்சியைப் பெறுதலாகும்.”**[46]

என்று வாழ்வியல் களஞ்சியம் சொத்துரிமைக்கு விளக்கம் தருகின்றது.

இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு 300 (அ)

> **“சட்டத்தால் பாதுகாக்கப்பட்ட ஒருவரின் சொத்தை வேறு நபர் ஒருவர் எடுத்துக் கொள்ளக் கூடாது”**

என்று குறிப்பிடுகின்றது. அதன்படி சொத்துரிமை அரசியலமைப்புச் சட்ட உரிமையாக இன்று நீதிமன்றத்தால் நடைமுறைப்படுத்தப்படுகிறது.

**"ஒவ்வொருவரும் தனியாகவோ கூட்டாகவோ சொந்தமாகச் சொத்து வைத்துக் கொள்வதற்கு உரிமை உண்டு. எவரொருவரது சொத்தையும் ஏதேச்சதிகாரமான முறையில் பறித்துக் கொள்ளுதல் கூடாது"**

என்று அனைத்துலக மனித உரிமைகள் பிரகடனத்தின் உறுப்பு (17) கூறுகின்றது. சங்க காலத்தில் பெரிய செல்வந்தர்கள் அளப்பறிய செல்வத்துடன் செழிமையான வாழ்வினை மேற்கொண்டனர்.

***"பெருங்கண் ஆயம் உவப்பத் தந்தை***
***நெடுந்தேர் வழங்கும் நிலவுமணல் முற்றத்துப்***
***பந்தொடு பெயரும் பரிவி லாட்டி"*** [47]

என்ற பாடலில் சொந்தமாகத் தேர் இயங்குகின்ற பெரிய மணல் வெளியுடன் பெரிய நிலப்பரப்பினைச் சிலர் கொண்டிருந்தனர் என்பதை அறிய முடிகிறது.

இல்லை என்று வந்தவர்களுக்கெல்லாம் வாழ்வளிக்கக் கூடிய அளவிற்குச் செல்வந்தர்கள் இருந்ததை,

***"மையணல் எருத்தின் முன்பின் தடக்கை***
***வல்வில் அம்பின் எய்யா வண்மகிழ்த்***
***தந்தை தன்னூர் இதுவே"*** [48]

என்ற பாடல் குறிப்பிடுகின்றது. மேலும்,

***"செல்வத் தந்தை இடனுடை வரைப்பின்***
***ஆடுபந்து உருட்டுநள் போல ஓடி"*** [49]

என்ற பாடலடிகளினால் தந்தையின் அகன்ற முற்றத்தில் தலைவி பந்து விளையாடியதை அறியமுடிகிறது. மேலும்,

***"கடுநவைப் படீஇயர் மாதோ - களிமயில்***
***குஞ்சரக் குரல குருகோடு ஆலும்***
***துஞ்சா முழவின், துய்த்துஇயல் வாழ்க்கை,***
***கூழுடைத் தந்தை இடனுடை வரைப்பின்,"*** [50]

என்ற பாடலில், தலைவியின் தந்தைக்கு உரிய அகன்ற வளாகத்தில் அங்கு இருக்கக் கூடியோர் செல்வத்தை அனுபவித்து வாழ்ந்து கொண்டிருப்பதையும் நெல் நிறைந்திருக்கின்றதையும் செவிலி உணர்த்துவதைக் காண முடிகிறது.

சோழ நாட்டில் வீட்டின் முற்றத்தில் உலர்ந்து கொண்டிருக்கும் கோழிகளைப் பெண்கள், தங்களின் கனத்த காதணிகளைக் கொண்டு விரட்டிடும் அளவிற்கு செல்வந்தர்கள் இருந்தனர். இதனை,

***"அகல்நகர் வியல்முற்றத்து***
***சுடர்நுதல் மடநோக்கின்***
***நேரிழை மகளிர் உணங்குஉணாக் கவரும்***
***கோழி எறிந்த கொடுங்கால் கனங்குழை"*** [51]

என்ற பத்துப்பாட்டுப் பாடலடிகளில் பெண்களின் செல்வச் சிறப்பை அறிந்து கொள்ள முடிகின்றது. சங்க காலத்தில் ஆண்கள் சொத்துரிமை பெற்றிருந்தனரேயன்றி பெண்களுக்குச் சொத்துரிமை இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால் பிற்காலத்தில் பெண்கள் அவ்வுரிமையை பெற்றிருந்தனர்.

**"தந்தை வாழும் நாளில் தந்தை சொத்தில் மகனுக்கு உரிமை இல்லாதிருந்தது. தந்தை காலத்திற்குப் பின்தான் மகனுக்கு உரிமை உண்டு. திருமணத்துக்கு முன்னுள்ள தந்தையின் சொத்து சமமாக ஆண் பிள்ளைகளுக்கும் தாயின் சொத்து சமமாகப் பெண் பிள்ளைகளுக்கும் பகுத்துக் கொடுக்கப்பட்டது. இருவரும் மணந்து வாழும் காலத்தில் ஈட்டப் பெற்ற செல்வம் தேட்டம் எனப்படும். அது ஆண் பிள்ளைகளுக்கும் பெண் பிள்ளைகளுக்கும் சமமாகப் பகுத்துக் கொடுக்கப்பட்டது. இவ்விதிப்படி ஆணுக்கும்**

**பெண்ணுக்கும் ஏறக்குறைய சமமான சொத்துரிமை ஏற்படுதல் காண்க"[52]**

என்ற கா. சுப்பிரமணியப் பிள்ளை அவர்களின் கூற்று எண்ணத்தக்கது.

**கலப்பு மணம்**

எத்துணையும் பேதமுறாது இரு மணங்கள் கலக்கும் முறையே கலப்பு மணம். சாதிப் பிரிவினையை வேரறுக்கும் காரணிகளில் ஒன்று. சம தர்ம பொதுவுடைமை சமுதாயத்தின் அடிப்படை கூறு. மக்களின் ஒருமைப்பாட்டிற்கு உறுதுணையாவது. இக்காலத்தில் கலப்பு மணத்தை சட்டம் அங்கீகரித்தாலும் தொல்காப்பியர் காலந்தொட்டு கலப்பு மணத்தை சமுதாயத்தால் இன்றளவும் அங்கீகரிக்கப்படவில்லை என்பதைக் கலப்பு மணம் செய்வோர் கொலைச் செய்யப்படுதலை ஆணவக் கொலைகள் என்ற பெயரில் பார்க்க முடிகிறது. ''பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு'' என்று வலியுறுத்துவதையும் தலைவன் தலைவி இருவருக்கும் ஒத்த குடிமையை தொல்காப்பியம் ஒவ்வாத குலத்தில் திருமணம் செய்து கொண்டால் துன்பத்தையே தரும் என்பதையும்,

*"நலத்தகையார் நாணாமை யின்னரவாங் கின்னா*
*கலத்தல் குலமில் வழி"* [53]

இன்னா நாற்பது கூறுகின்றது. தன் குலம் இல்லாது வேறு குலப் பெண்ணை மணம் முடித்தல் என்பது இன்றளவும் மிகப் பெரிய போராட்டமாக இருந்து கொண்டு வருகின்றது.

**"சங்க அக இலக்கிய வரலாற்றில் களவு மணம் அங்கீகரிக்கப்பட்ட மணமாக இல்லை. களவுப் பாடல்கள் வெளிப்படுத்தும் மனித மனப் பதற்றங்களும் அச்சங்களும் இதனை வெளிப்படுத்தும் அலர் தூற்றல், வெறியாடல்,**

**உடன்போக்கு என்று ஒவ்வொரு அகப்பொருட் கூறுள்ளும் ஓர் எதிர்நிலை உணர்வு செயல்படுவதை உணர வேண்டும். இவற்றிற்கெல்லாம் காரணம் ஆடவன் ஒருவன் தன் குலம் அல்லாத வேறு குலத்தில் பெண்ணைத் தேடுவது தான்"**[54]

என்பர் சிலம்பு. நா. செல்வராசு.

**"பல்வேறு குலத்தினர் குலத்தடையின்றிக் கலப்பு மணஞ் செய்வதற்குரிய சட்டம் இன்னும் நிறைவேறவில்லை. அது விரைவில் நிறைவேற வேண்டும். கலப்பு மணச்சட்டம் கைம்பெண் மணத்திற்குத் துணை புரியும். கலப்பு மணம் தமிழர்களுக்குள் இருந்தது என்பது சங்க நூற் செய்யுள்களால் தெரியவருகிறது"**

என்றும்,

***"யாயும் ஞாயும் யாரா கியரோ?***
***எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?***
***யானும் நீயும் எவ்வழி அறிதும்?***
***செம்புலப் பெயல் நீர் போல***
***அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே"*** [55]

என்ற குறுந்தொகை **(40)** பாடலைச் சான்றாகக் காட்டுகிறார் க.சு.பிள்ளை.

சுதந்திரமான நாட்டில் இருவேறு குலத்தைச் சார்ந்த ஆணும் பெண்ணும் காதலிப்பது என்பது வெறும் ஏட்டளவில் ஏற்றுக் கொள்ளப்பட்டாலும் நடைமுறையில் பல்வேறு இன்னல்களையும் இடையூறுகளையும் தாண்டி நடைபெறும் கலப்பு மணங்களும் வாழ்க்கையைத் துவங்கும் முன்பே உயர்குடியினரால் பிரிக்கப்பட்டு விடுகின்றது. ஆடவன் உயர்குலத்தைச் சார்ந்திருப்பின் தாழ்ந்த குலத்தைச் சார்ந்த பெண்களின் வாழ்க்கைச் சீரழிக்கப்பட்டு விடுவதை ஊடகங்கள் வாயிலாக

உணர்த்தப்படுகின்ற உண்மை. சாதிக் கொடுமையை முன்னிறுத்திக் கலப்பு மணங்கள் நிராகரிக்கப்பட்டு காதலர்களின் நெஞ்சில் கனலை மூட்டும் கொடுமைகள் சங்க காலம் தொட்டு நிகழ்ந்து வரும் கொடுமை. இதை,

*"இவளே, கானல் நண்ணிய காமர் சிறுகுடி*
*நீல்நிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு*
*மீன்எறி பரதவர் மகளே, நீயே*
*நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்க்*
*கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே*
*நிணச்சுறா அறுத்த உணக்கல் வேண்டி*
*இனப்புள் ஓப்பும் எமக்குநலன் எவனோ*
*புலவு நாறுதும் செலநின் றீமோ*
*பெருநீர் விளையுள்எம் சிறுநல் வாழ்க்கை*
*நும்மொடு புரைவதோ அன்றே*
*எம்னோரில் செம்மலும் உடைத்தே"* [56]

என்ற பாடல் உணர்த்துகின்றது.

இருவர் குடிகளும் ஒத்த தன்மையுடைய தலைவன் தலைவி பண்புகள், சுற்றத்தினர் இவற்றையெல்லாம் ஒப்பிட்டுப் பார்க்காது நாங்கள் துணிந்து செய்த களவு மணத்தை நீ உணரும்படி கூறினேன் என்னைக் கோபிக்க வேண்டாம் என்று,

*"கொடுப்பின் நன்கு உடைமையும் குடிநிரல் உடைமையும்*
*வண்ணமும் துணையும் பொரீஇ எண்ணாது*
*எமியேம் துணிந்த ஏமம் சால் அருவினை*
*நிகழ்ந்த வண்ணம் நீ நனி உணரச்*
*செப்பல் ஆன்றிசின் சினவா தீமோ"* [57]

எனும் தோழி கூற்றையும், ஈங்கு ஒப்பு நோக்க மனமொத்த காதலர்கள் கலப்பு மணத்தை ஏற்றுக் கொண்டனர் என்பதும் சமுதாயம் ஏற்றுக் கொள்ளவில்லை என்பதும் புலனாகின்றது. மேலும்,

*"நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்*
*கடிய கூறும் வேந்தே; தந்தையும்*
*நெடிய அல்லது பணிந்துமொழி யலனே;*
*இஃதுஇவர் படிவம் ஆயின்"* [58]

என்ற மருதனிள நாகனார் பாடலும்,

*"காணக் காக்கை கலிச்சிறகு ஏய்க்கும்*
*மயிலைக் கண்ணிப் பெருந்தோள் குறுமகள்*
*ஏனோர் மகள்கொல் இவளென விதுப்புற்று*
*என்னொடு வினவும் வெல்வேல் நெடுந்தகை"* [59]

என்ற அரிசில் கிழார் பாடலும்,

*"முழங்குகடல் முழவின் முசிறி அன்ன*
*நலஞ்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்*
*புரையர் அல்லோர் வரையலள் இவளெனத்*
*தந்தையும் கொடாஅன்"* [60]

என்ற பரணர் கூற்றும்,

*"கொற்ற வேந்தர் வரினும் தன்தக*
*வணங்கார்க்கு ஈகுவன் அல்லன், வண் தோட்டுப்"* [61]

என்ற குன்றூர் கிழார் மகனார் பாடலும் ஈண்டு ஒப்புநோக்கத்தக்கது.

கரிய கண்ணையுடைய நெருங்கிய மார்புகளையும் மயக்கம் உண்டாக்கும் பார்வையையும் உடைய மகனைப் பெண் கொடை விரும்பியவர் இரங்கத்தக்கவர் இவள் தமையன்மார் செல்வம் எவ்வளவு பெரிதாயினும் விரும்பார் போர் புரிதலை விரும்பி குடிமை முதலியவற்றால் ஒப்பு ஆகாதவர்க்கு மணக்கொடை தருதல் இல்லை என்பதை,

*"கருங்கண் கொண்ட நெருங்கல் வெம்முலை*
*மையல் நோக்கில் தையலை நயந்தோர்*
*அளியர் வேண்டார் செருப்புகல் வேண்டி*
*நிரல் அல் லோர்க்குத் தரலோ இல்எனக்"* [62]

என்ற அண்டர்நடும்கல்லினாரின் பாடல் வரிகளுடன் கா.சு.பிள்ளை, சிலம்பு நா. செல்வராசு ஆகியோரின் கூற்றோடு ஒப்பு நோக்கிப் பார்க்க கலப்பு மணத்தைத் சங்கத்தமிழ்ச் சமூகம் ஏற்கவில்லை என்றே தோன்றுகின்றது.

## பெண்ணுரிமை பாதுகாப்பு

சங்க காலம் முதல் இக்காலம் வரையில் பெண்கள் தங்கள் உரிமைகளை இழந்து அடிமைகளாக நடத்தப்பட்டு வருகின்றனர். இழந்த உரிகைமளை மீட்டெடுக்க பெண்ணினம் போராடிக் கொண்டு வருவதையும் இந்தியாவில் இயற்றப்பட்டச் சட்டங்கள் அவ்வுரிமை மீட்புக்கு ஆதரவு கரம் நீட்டுவதையும் காண முடிகிறது.

### சமத்துவ உரிமை

“எந்த நபருக்கும் சட்டத்தின் முன் சம உரிமையையும் இந்திய நிலவரையில் சட்டத்தின் மூலம் சமமான பாதுகாப்பை அரசு மறுக்கக் கூடாது” என்று இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு (14) பெண்களுக்குச் சமத்துவ உரிமையை அளிக்கின்றது.

இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு (15) சமயம், இனம், சாதி, பாலினம் அல்லது பிறந்த இடம் காரணமாக அரசு பெண்களை வேறுபடுத்துதலுக்குத் தடை விதிக்கிறது. உறுப்பு (15) (3) ஆனது அரசு, மகளிர் மற்றும் குழந்தைகளுக்காகச் சிறப்பு வகையங்களை உருவாக்குவதைத் தடை செய்யாது என்று குறிப்பிடுகின்றது.

### சுதந்திர உரிமை

இந்திய அரசியலமைப்புச் சட்டப் பிரிவு (19) வழங்கும் சுதந்திர உரிமை பெண்களுக்கும் உண்டு என்பதை உறுதி செய்கின்றது.

**அரசியல் உரிமை**

ஆண்கள் போன்று பெண்களும் பொது வாழ்வில், அரசியலில் ஈடுபடவும், தேர்தலில் போட்டியிடவும், பொது இடங்களில் பணிபுரியவும் அரசினை விமர்சிக்கவும் அரசாங்க வேலைகளில் பங்கு பெறவும் உரிமை உடையவராவர்.

**சமூக உரிமைகள்**

பெண்கள் திருமணம் செய்துக் கொண்டு குடும்பம் அமைத்துக் கொள்வதற்கும், திருமணத்தின் போதும், திருமணமுறிவின் போதும் ஆணைப் போன்று பெண்களுக்கும் சம உரிமை உண்டு. சமுதாயத்திடமிருந்தும் அரசிடமிருந்தும் பாதுகாப்புப் பெறும் உரிமையை பெண்கள் பெற்று இருக்கின்றனர்.

**கல்வியுரிமை**

இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு (29)ன் படி ஆணுக்கு அளிக்கப்படும் அனைத்துக் கல்வி வசதிகளும் பெண்களுக்கு உண்டு என்பதை உறுதி செய்கின்றது.

**சொத்துரிமை**

இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு (300) ஆனது பெண்களுக்குச் சொத்துரிமையை அளிக்கின்றது. 1956 ம் ஆண்டு இந்திய வாரிசு உரிமைச் சட்டப்படி இந்துப் பெண்களுக்கு மூதாதையர் சொத்தில் பங்கு உண்டு என்று கூறப்பட்டுள்ளது. 1989 தமிழக அரசின் இந்து வாரிசு உரிமைச் சட்டத்திருத்தத்தின்படி தந்தையின் சொத்தில் ஆணுக்குரிய பங்கு போலவே சம அளவு பங்கு பெற பெண்கள் உரிமை படைத்தவர்களாவர்.

## மறுமணம் செய்யும் உரிமை

சங்க காலத்தில் பெண்கள் மறுமணம் செய்துக் கொள்வதற்கு உரிமையுடையவர்கள் அல்லர். அது குலப்பெண்களுக்குரிய மரபு அன்று. சமுதாயம் கட்டுப்பாடுகளை விதித்திருந்தது என்பதை கைம்மை நோன்பு கடைபிடித்தல் மற்றும் உடன்கட்டை ஏறுதல் தொடர்பான பாடல்கள் வழி அறிய முடிகிறது. ஆயினும் இக்காலத்தில் 1956 ம் ஆண்டு இயற்றப்பட்ட இந்து திருமண விவாகரத்து மற்றும் மறுமணச் சட்டப்படி பெண்கள் மறுமணம் செய்து கொள்ளவும், 18 வயது நிரம்பிய பெண்கள் நீதிமன்றத்தில் முறையாக திருமண முறிவு பெற்று மீண்டும் மறுமணம் செய்து கொள்ள உரிமை படைத்தவர்களாவர்.

## பொருளாதார உரிமை

ஆணைப் போலவே பெண்களும் வேலை வாய்ப்பு, பயிற்சி பெறுதல் சமமான வேலைக்கு சம ஊதியம் பெறும் உரிமை, குறிப்பிட்ட நேரம் வேலை செய்யும் உரிமை போன்றவைகளில் சம உரிமை பெற்றிருக்கின்றனர். மேலும், மகப்பேறு உரிமை, மகப்பேறு உதவி பெறும் உரிமை, பெண்களை கேலியாகச் சித்தரிப்பதற்கு எதிரான உரிமை, பொது வேலைகளில் பெண்களுக்கு சிறப்பு ஒதுக்கீடு பெறும் உரிமை முதலிய உரிமைகளைப் பெற பெண்கள் சம உரிமை பெற்றுள்ளனர்.

மேற்கண்ட உரிமைகள் அனைத்தும் பெண்கள் பாதுகாப்பிற்கென்று மத்திய, மாநில அரசுகளால் இயற்றப்பட்டச் சட்டத்தின் வாயிலாகப் பெற்றுச் சிறக்கின்றனர்.

**களவு மணங்களின் போக்கு**

தலைவி தலைவனுடன் சேர்ந்து உடன் போக்குச் சென்றபோதும் திருமணம் நடைப்பெற்றது என்பதை,

*"கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே*
*புணர்ந்துடன் போகிய காலை யான"* [63]

எனும் தொல்காப்பிய நூற்பா மூலம் சங்ககாலத்திற்கு முன்பே தலைவனும், தலைவியும் தம்முள் அன்பு கொண்ட பின் பெற்றோர் திருமண செய்விக்க இசைவு மறுக்கும் போது உடன்போக்குச் சென்று மணம்புரிந்தனர். அது சிறந்த ஒழுக்கமாகவும் அறமெனவும் சான்றோரால் குறிக்கப்பட்டது. உடன்போக்கு (Elopped) தற்காலத்தில் ஓடிப் போதல் என்றும் அவ்வாறு செல்லும் காதலியைச் சமுதாயம் இழித்தும் பழித்தும் சமுதாயம் பேசுகின்றது. சங்க காலத்தில் பெண்கள் காதலிக்கும் உரிமை பெற்றிருந்தும் காதலித்தவனையே கைப்பிடித்து இல்வாழ்க்கை எனும் கடலில் பயணம் மேற்கொள்ள குடும்பமும் சமுதாயமும் தடுத்ததன் விளைவே உடன்போக்கு. நெஞ்சத்தை ஒருவனுக்கும் மஞ்சத்தை மற்றொருவனுக்கும் பகிர்ந்தளிக்கும் குணம் சங்க காலத் தமிழ் பெண்களிடையே காணப்படவில்லை. எவ்வித எதிர்ப்பையும் எதிர்கொண்டு காதலனுடன் கரம் கோர்க்க எண்ணியதன் காரணமாகவும் அலர், அம்பல் தோன்றி அச்சம் மிகுந்த காலத்தும், களவினை அறிந்த பெற்றோர் இச்செறித்தல் கூடும் என்ற எண்ணமும் உடன்போக்குக்குக் காரணமாக அமைந்திருக்கலாம். மேலும்,

*"ஒருதலை உரிமை வேண்டினும் மகடூஉப்*
*பிரிதல் அச்சம் உண்மை யானும்"* [64]

என்று தொல்காப்பியர் உடன்போக்கு நிகழும் இடங்களைச் சுட்டியிருப்பதும் உணரத்தக்கது.

உடன் போக்கினைச் சங்க காலச் சமுதாயம் எதிர்த்ததாக வெளிப்படையான குறிப்புகள் காணப்படவில்லை என்றாலும் தலைமகள் உடன்போக்கு மேற்கொள்கின்ற வழியின் துயரத்தினையும் அச்சத்தினையும் சங்கப் பாடல்கள் வழி காணும் போது களவு மேற்கொண்ட தலைவன் தலைவியின் காதலுரிமையைக் கட்டுப்படுத்தவே எண்ணியிருக்கின்றது என்பதை,

> **"தலைவனும் தலைவியும் சேர்ந்து மண வாழ்க்கையைத் தொடங்குவது மகிழ்ச்சிக்குரியது. ஆனால் சங்க உடன்போக்குப் பாடல்கள் துன்பத்தையும் இழப்பையும் வெளிப்படுத்தி அவற்றைக் கொடுமை நிறைந்த வறட்சியான பாலையின் பின்புலத்தில் விவரித்த மரபு மேல் சமூக அமைப்பின் உளவியல் வெளிப்பாடு என்று கொள்ளும் வேண்டும்"** [65]

என்றும்,

> **"சுதந்திரக் காதல் வாழ்வுக்குத் தொடக்கத்தில் அமைந்த கட்டுப்பாட்டையே களவு என்னும் குறியீடு உணர்த்துகிறது. தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியத்திலும் இடம் பெற்றுள்ள உடன்போக்கு என்ற அகத்துறையும் அந்நாளில் பெற்றோர் தம் மக்களின் ஆண் பெண் சுதந்திரக் காதலைத் திருமணம் வரை விட மறுத்ததன் விளைவே தலைவனும் தலைவியும் ஊரை விட்டு உடன் போக்கு செல்ல நேரிட்டது"**[66]

என்ற தாயம்மாள் அறவாணன் அவர்களின் கூற்றையும் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது.

பாலை நிலத்தின் வழியே உடன்போக்கு மேற்கொண்ட தலைவன் தலைவியைக் கண்டு வழி செல்வோர் கொடுமையான இப்பாலை நிலத்தின் வழியே அழைத்துக் கொண்டு செல்லும் தலைவன் இடியைக் காட்டிலும் கொடுமையானவன் என்று தலைவனைப் பழிப்பதை,

*"மரல்நோக்கும் இண்டுஇவர் ஈங்கைய சுரனே*
*வையெயிற்று ஐயள் மடந்தை முன்னுற்று*
*எல்லிடை நீங்கும் இளையோன் உள்ளம்*
*காலொடு பட்ட மாரி*
*மால்வரை மிளிர்க்கும் உருமினும் கொடிதே"* [67]

என்ற பெரும் பதுமனாரின் பாடல் வரிகளாலும்,

ஒன்றும் அறியாதவளாக வளர்ந்த என் மகள் பாலை நிலத்தின் வழியே செல்லும் போது வெய்யிலின் கொடுமையால் கண் சிவந்து ஒளி மழுங்கி அழுவாளே என்று வருத்தம் மேலோங்கிய நிலையில் நற்றாயின் புலம்பலை,

*"நயந்த காதலற் புணர்ந்தனள்; ஆயினும்*
*சிவந்தொளி மழுங்கி அமர்த்தன கொல்லோ*
*கோதை மயங்கினும் குறுந்தொடி நெகிழினும்*
*காழ்பெய் அல்குல் காசுமுறை திரியினும்*
*மாண்நலம் கைஅறக் கலுழும்என்*
*மாயக் குறுமகள் மலர்ஏர் கண்ணே"* [68]

என்றும்,

*"மையணற் காளை பொய்புக லாக*
*அருஞ்சுரம் இறந்தனள் என்பதன்*
*முருந்துஏர் வெண்பல் முகிழ்நகை திறத்தே"* [69]

குழந்தை மனம் மாறாத தலைவி காளையுடன் அவன் கூறி பொய்ம் மொழிகளை நம்பி முறுவலுடன் பாலை நிலத்தே சென்றாள். இத்தகைய

இளமைத் தன்மையுடைய என் மகள் இல்லறம் நடத்தும் பொறுப்பினை எப்படி ஏற்பாள் என்று அஞ்சி அவளது பரிவினைத் தாங்க மாட்டாதவளாய் நற்றாயின் உள்ளக் குமுறலையும், நற்றிணைப் பாடல் எடுத்துக் காட்டினாலும் மாறுபட்ட மனநிலையை உடைய வேறொரு நற்றாய்,

*"மாலைவிரி நிலவில் பெயர்புறங் கண்டாற்கு*
*மாயிருந் தாழி கவிப்பத்*
*தாஇன்று கழிகஎற் கொள்ளாக் கூற்றே"* [70]

என்ற நற்றிணைப் பாடல் வழி தலைவியைத் தேடி சென்றவர்கள் அவளை மீட்டு வருவதை என் கண்ணால் காண வேண்டுமா? அதற்கு முன்னால் என் உயிரைக் கொண்டு செல்லாத எமனே நீ அழிவாயாக என்று கோபக் கனல் தோய்ந்த மொழிகளால் அரற்றுவதையும் அறியமுடிகிறது. தலைவி உடன்போக்கு சென்ற காரணத்தால் திருமணத்தின் முன் தலைவி பால் நிகழ்த்துகின்ற சடங்கான சிலம்பு கழி நோன்பினை நான் காணும் பேறு வாய்க்கவில்லையே என்ற மற்றொரு நற்றாயின் கவலை நிறைந்த குரளினை,

*"வெயில்காய் அமையத்து இமைக்கும் அத்தத்து*
*அதர்உழந்து அசையின கொல்லோ ததர்வாய்ச்*
*சிலம்பு கழீஇய செல்வம்*
*பிறருழைக் கழிந்தஎன் ஆயிழை அடியே?"* [71]

கயமனார் பாடல் வழி உணர்ந்துக் கொள்ள முடிகிறது.

மேலும்,

*மள்ளர் கொட்டின் மஞ்ஞை ஆலும்*
*உயர்நெடும் குன்றம் படுமழை தழீஇச்*
*சுரம்நனி இனிய ஆகுக தில்ல*
*அறநெறி இதுவெனத் தெளிந்தஎன்*
*பிறைநுதல் குறுமகள் போகிய கானே"* [72]

என்ற பாடலில் பிணை போன்ற நெற்றியையுடைய தலைவி உடன்போக்கு அறநெறி தான் என்று தலைவனோடு சென்றிருக்கின்றாள். அவள் சென்றிருப்பது காட்டு வழி ஆதலால் பாலை நிலத்தில் வாழும் மறவர்கள் பறைக் கொட்டுக்கு ஏற்ப மயில்கள் ஆடும் மலைகளில் ஓடும் மேகங்கள் மழை பெய்து என் மகள் சென்று கொண்டிருக்கும் பாலை வழி இனிமையுடையதும் ஆகுமாக என்று தலைவிக்காக இரங்கும் நற்றாயினையும்,

*"நினைத்தொறும் கலிழும் இடும்பை எய்துக*
*புலிக்கோள் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை*
*மான்பிணை அணைதர ஆண்குரல் விளிக்கும்*
*வெஞ்சுரம் என்மகள் உய்த்த*
*வம்பமை வல்வில் விடலை தாயே"* [73]

என்று தன் மகளைக் கூட்டிச் சென்ற தலைவனின் தாயும் தன்னைப் போலவே நினைத்து நினைத்து அழுவானாக என்று தலைவனின் தாயைச் சபிக்கும் நற்றாயின் மனநிலையினையும்,

*"நாடொறும் கலிழும் என்னினும் இடைநின்று*
*காடுபடு தீயின் கனலியர் மாதோ*
*நல்வினை நெடுநகர் கல்லெனக் கலங்கப்*
*பூப்புரை உண்கண் மடமகள்*
*போக்கிய புணர்த்த அறனில் பாலே"* [74]

என்ற பாடலில் பொலிவு மிக்க தன் மகளைத் தலைவனோடு உடன்போக வைத்தது. நீதி அறியாத கெட்ட விதியானது நாள்தோறும், அழும் என்னைப் போல காட்டு வழியில் சிக்கிக் காட்டுத் தீயில் வெந்து அழியுமாக என்று விதியினை சபித்திடம் மற்றொரு நற்றாயின் மனநிலை என மூன்று வகையான நற்றாயின் மனநிலைகளை ஐங்குறுநூறு படம் பிடித்துக் காட்டுவதிலிருந்து மூவரும் தன் மகளும் தலைவனும் ஒன்றாக வாழ

வேண்டும் என்ற எண்ணத்தை ஒருங்கே பெற்று இருப்பதைக் காண முடிகிறது.

> **“காலப் பரிணாமத்தில் உடன்போக்கு மறுதலிக்கப் பெற்ற ஆரம்ப கட்ட சமூக அமைப்பில் பாடப்பட்டதே சங்க இலக்கிய உடன்போக்குப் பாடல்கள் எனலாம்”**[75]

என்கின்றார் சிலம்பு நா. செல்வராசு.

தலைவியின் களவு ஒழுக்கத்தை தனக்கு அறிவித்திருந்தால் விரும்பிய தலைவனையே மணம் செய்வித்து இருப்பேன் எனவும் தான் திருமணம் செய்விக்க உதவாமல் தவறி விட்டாய் என்று தோழியை நொந்து பேசும் தாயின் ஆற்றாமையை

***“தன்அமர் ஆயமொடு நன்மண நுகர்ச்சியின்***
***இனிதாம் கொல்லோ தனக்கே பனிவரை***
***இனக்களிறு வழங்கும் சோலை***
***வயக்குறு வெள்வே லவற்புணர்ந்து செலவே”*** [76]

எனும் மேற்கண்ட ஐங்குறுநூறு பாடலும்

ஊரில் வசிக்கும் பெண்கள் சிலர் தலைவியைப் பற்றிப் பழிச்சொல் கூறுவதை கேட்டும் அதைப் பற்றிப் பெரிதாக எண்ணாமல் பேசாமல் இருந்து விட்டு தலைவியின் கூந்தலில் புதிய நறுமணம் வீசுவதற்குக் காரணம் சொல்லாமல் தலைவி சென்றதையும் பெரிதாக நினைக்காமல் அவளைப் பாதுகாக்காமல் உடன்போக விட்ட தன்னை குற்றமுடையவளாக எண்ணினர்.

இதை,

***“அம்பல் மூதூர் அலர்வாய்ப் பெண்டிர்***
***இன்னா இன்னுரை கேட்ட சின்னாள்***

*அறியேன் போல உயிரேன்*

*நறிய நாறும்நின் கதுப்புஎன் றேனே"* [77]

என விளக்கும் நற்றிணைப் பாடலடிகள் மூலம் தாயின் பொறுப்பினை உணர்ந்து கொள்ள முடிகிறது.

பிறப்பால் கட்டுப்பாடற்று விளங்கிய மனித சமுதாயத்தில் ஒவ்வொரு நிலைகளிலும் கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகின்றன. சமுதாயம் கட்டமைப்புக் கருதிச் சில தடைகளையும், மரபுகளையும் திணிக்கிறது. அவை தனிமனிதனின் விடுதலை உணர்வுகளுக்கும் நியாயமான ஆசைகளுக்கும் உண்டாகும் தடையை எதிர்த்து முயன்று புதிய வேகத்துடன் செயல்பட முயன்று வெற்றி பெற எண்ணுகின்றான். சமுதாய கட்டமைப்பிற்கும் தனி மனித விருப்பத்திற்கும் இடைப்பட்ட போராட்டத்தில் தனிமனித விருப்பம் வீறு பெறும் போது உடன்போகும் துணிவு பிறக்கின்றது.

> **"உடன்போக்கை துயரமாக விவரித்தமையை ஒரு வகையான சமூகளவில் உணர்வாகத்தான் கொள்ளுதல் வேண்டும். உடன்போக்கை உடன்பாட்டு முறையில் பாடாமல் எதிர்மறை நிலையில் துயரம் நிறைந்ததாகப் பாடியமைக்கும் இதுவே காரணமாகும்"**[78]

என்ற சிலம்பு நா. செல்வராசுவின் கூற்றினை இக்கால உடன்போக்கு நிகழ்ச்சிகளுடன் ஒப்பு நோக்கும் போது சங்ககாலம் முதல் இன்று வரை உடன்போக்குக்குச் சமூக எதிர்ப்பு இருந்து கொண்டே வருகின்றது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

### உரிமைகளும் கடமைகளும்

உரிமைகளும் கடமைகளும் ஒட்டிப் பிறந்த இரட்டைக் குழந்தைகளாகும் எங்கெல்லாம் உரிமைகள் பேசப்படுகின்றதோ

அங்கெல்லாம் கடமைகள் தலை தூக்குகின்றன. சங்க இலக்கியத்தில் புலவர்கள் மன்னர்களுக்கு கூறும் கருத்துக்கள் மற்றும் அறிவுரைகள் அனைத்தும் மன்னர் தம் கடமைகளாகக் காணப்படுகின்றது.

*"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே*
*சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே*
*வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லர்க்கு கடனே*
*நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே*
*ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்*
*களிறுஎறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"*

(புறம். 312)

என வரும் புறப்பாடல் தமிழ்ச் சமுதாயத்தில் ஒவ்வொருவருக்கும் உள்ள கடமைகளைப் பட்டியலிட்டுக் காட்டுகின்றது. தற்காலத்தில் இந்திய நாட்டின் குடிமகன் என்ற முறையில் ஒவ்வொருவருக்கும் கடமைகள் உள்ளது என்பதை,

இந்தியக் குடிமக்கள் ஒவ்வொருவரும்

அ) அரசியலமைப்புச் சட்டத்திற்குக் கட்டுப்பட்டு நடக்கவும் மற்றும் அதன் குறிக்கோளுக்கும் அமைப்புக்கும், தேசியக் கொடி, தேசிய கீதத்திற்கு மரியாதை கொடுக்கவும்,

ஆ) நமது தேசிய விடுதலைப் போராட்டத்திற்குத் தூண்டுகோலாக அமைந்துள்ள புனிதமான கொள்கைகளைப் போற்றவும் பின்பற்றவும்,

இ) இந்தியாவின் இறையாண்மையையும், ஒற்றுமையையும், ஒருமைப்பாட்டையும், நிலை நிறுத்தவும் பாதுகாக்கவும்,

ஈ) நாட்டினைப் பாதுகாக்கவும், தேசப் பணியாற்றவும் அழைக்கும் பொழுது வந்து அப்பணிகளை ஆற்றவும்,

உ) சமயம், மொழி, வட்டாரம் அல்லது பிரிவுகளுக்கிடையிலான வேற்றுமையைக் கடந்து இந்திய மக்களிடையே பொதுவான சகோதர நேயத்தையும், இணக்கத்தையும், உண்டாக்கவும், பெண்களின் கண்ணியத்தைச் சிறுமைப்படுத்துகிற செயலை விட்டுவிடவும்,

ஊ) நமது கூட்டுக் கலாச்சாரத்தின் மிக உயர்ந்த பாரம்பரியத்தை மதிக்கவும், பாதுகாக்கவும்,

எ) காடுகள், ஏரிகள், ஆறுகள் மற்றும் வனவிலங்குகள் உள்ளிட்ட இயற்கைச் சூழ்நிலைகளைப் பாதுகாக்கவும் மேம்படுத்தவும், வாழும் உயிரினங்களிடத்தில் இரக்கங் காட்டவும்,

ஏ) அறிவியல் நிலை, மனித நேயத்தை வளர்க்கவும், ஆராய்வு, ஊக்கம் மற்றும் சீர்திருத்தம்,

ஐ) பொதுச் சொத்தைப் பாதுகாக்கவும், வன்முறையை விட்டொழிக்கவும்,

ஒ) தேசம் முன்னேற்றப் பாதையில் முனைந்து பல சாதனைகளை நிகழ்த்திடுகின்ற வகையில் துறைதோறும் தனிப்பட்ட முறையிலும் கூட்டாகவும் சிறப்படைய முயற்சிக்கவும் தொண்டாற்றவும்,

ஓ) நிலவரத்திற்கேற்ப குழந்தையின் பெற்றோர் அல்லது காப்பாளர், அந்த குழந்தை ஆறு வயது முதல் பதினான்கு வயது வரையில் கல்வி கற்க வசதியை ஏற்படுத்தித் தருவதற்கும் கடமைப்பட்டவர்கள்.

என்று இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு **51** (அ) பட்டியலிட்டுக் காட்டுகின்றது.

**தற்கொலை**

உலகில் பிறந்த அனைத்து உயிரினங்களும் ஒரு நாள் இறப்பதென்பது உலகத்தியற்கை. இயற்கையாக உடலை விட்டு உயிர் பிரிந்து

போதலன்றி தாமாக உயிரினை மாய்த்துக் கொள்வதற்கான உரிமை எந்த ஒரு உயிரினத்திற்கும் இல்லை. இந்திய அரசியலமைப்புச் சட்டம் உறுப்பு (21) ஆனது.

> **“சட்டத்தால் உருவாக்கப்பட்ட நடைமுறையிலன்றி மற்றைய வகையில் ஒரு நபரின் உயிரையோ தனிமனித சுதந்திரத்தையோ பறித்தல் கூடாது”**

என்று உயிருக்கும் தனிப்பட்ட உரிமைக்கும் பாதுகாப்பு அளிக்கின்றது.

தன்னைத் தானே வருத்திக் கொண்டு தன் உயிரினை போக்கிக் கொள்ளுதலை சான்றோர் வெறுத்து ஒதுக்கியதோடு அச்செயலை கண்டிக்கவும் செய்தனர். இதை,

> ***“நாடல் சான்றோர் நம்புதல் பழிஎனின்***
> ***பாடுஇல கலுழும் கண்ணொடு சாஅய்ச்***
> ***சாதலும் இனிதே காதல்பும் தோழி***
> ***அந்நிலை அல்ல ஆயினும் சான்றோர்***
> ***கடன்நிலை குன்றலும் இலர்என்று உடன்அமர்ந்து”***

என வரும் பாடலடிகளில் தலைவனைக் காணாது அழுத நிலையில் சாவினை ஏற்றுக் கொள்ளுதல் தனக்கு இனிதேயாகும் என தலைவி கூறுவதை நோக்கத்தக்கது.

“தற்கொலை முயற்சிக்குத் தண்டனை அளிப்பது அரசியலைமைப்புச் சட்டம் உறுப்பு (21) க்கு முரணானதாகாது” என்று **கியான்கர் எதிர் பஞ்சாப் மாநிலம்** என்ற வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்து தற்கொலை செய்து கொள்வதற்கு உரிமை இல்லை என்பதை தெளிவுப்படுத்தியது.

## தொகுப்புரை

- ❖ சிறிய குற்றங்களுக்குக் கொடுமையான தண்டனைகள் வழங்கப்பெற்றது.
- ❖ குற்றங்களை ஒப்புக் கொள்ளும்போது தண்டனைகள் குறைக்கப்பட்டது.
- ❖ நீதிமன்றத்தில் பொய்வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.
- ❖ சமுதாயத்தில் செல்வந்தர்கள் செழிப்புடனும் அடிமைகளைக் கொண்டு வாழ்ந்து வந்தனர். அடிமைகளுக்கு வசதிவாய்ப்பு மறுக்கப்பட்டது.
- ❖ கல்வி கற்பதற்கு அனைவரும் உரிமை பெற்றிருந்தனர்.
- ❖ சொத்துரிமை ஆண்களுக்கு இருந்தன, பெண்களுக்கு அவ்வுரிமை மறுக்கப்பட்டது. சில பெண்கள் செல்வ செழிப்புடன் வாழ்ந்து வந்தனர்
- ❖ சமுதாயத்தில் கலப்பு மணம் ஏற்றுக்கொள்ளப்படவில்லை.
- ❖ இக்காலத்தில் குழந்தைகள் நலன் குறித்து நீதிமன்றம் அறிவுறுத்தும் அரசின் கடமைகள் சங்க காலத்தில் காணப்பெறவில்லை.
- ❖ சிறைக்கைதிகளுக்கான உரிமைகள் இப்போது வலியுறுத்துவது போன்று சங்க இலக்கியங்களில் வலியுறுத்தப்படவில்லை.
- ❖ கைவிலங்கிட்டு சித்திரவதை செய்வதிலிருந்து இக்காலத்தில் விலக்கு அளிப்பது போன்று சங்க காலத்தில் காணப்பெறவில்லை.
- ❖ இப்போழுது பெண்களின் உரிமைகளுக்கு சட்டம் பாதுகாப்பு அளிப்பது போன்று சங்ககாலத்தில் பெண்கள் சில உரிமைகளைப் பெற்றிருந்தனர்.

- ❖ உரிமைகளும் கடமைகளும் வலியுறுத்தப்பட்டன.
- ❖ தற்கொலை செய்துக் கொள்ள இக்காலச் சட்டம் தடை செய்வது போன்று சங்க காலத்தில் சான்றோர்களால் கண்டித்து உணர்த்தப்பெற்றது.

போன்றவைகள் குறித்த விளக்கங்கள் மற்றும் இன்றைய நடைமுறை சட்டங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தறியப்பட்டது.

# குறிப்புக்கள்

1. சம்பந்தர், வி.ஆர்.எஸ்., தமிழ்நாட்டில் நீதிமுறை – ஒரு வரலாற்று பார்வை, ப.4.
2. குறுந். 292:1–4.
3. சிலம்பு. 5:114–117.
4. அகம். 256:19–20.
5. புறம். 10:5–6.
6. பொருநர். 188.
7. சுப்ரமணியன், க., சங்க காலச் சமுதாயம், பக்.50–51.
8. சிலம்பு. 5:135–138.
9. கலித். 144:70–72.
10. இனியவை. 30:2.
11. மேலது, 35.2–3.
12. இன்னா. 6:5.
13. தொல். அகத். 25.
14. முத்தையா, கே., சங்க காலச் சமுதாயம், ப.6.
15. நற். 210:5–6
16. முத்தையா, கே., சங்க காலச் சமுதாயம், ப.7.
17. நெடுநல். 49–50
18. அறவாணன், க.ப., அற்றை நாட்காதலும் வீரமும், பக்.113–114.
19. தொல். அகத். 26
20. நாலடி. 122:1

21. திரி. 55:2–3

22. நீலகண்ட சாஸ்திரி, தமிழர் வரலாறும் பண்பாடும், தமிழில் சிட்டி, ப.100.

23. மேலது, பக்.104–105.

24. சிதம்பரனார், சாமி., பழந்தமிழர் வாழ்வும் வாக்கும், பக்.87–88.

25. வானமாமலை, நா., தமிழர் பண்பாடும் தத்துவமும், ப.149.

26. அகத்தியலிங்கம், அ.பொ., மனித உரிமைகள், பக்.27–28.

27. சிதம்பரனார், சாமி., பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், ப.6.

28. இராசமாணிக்கனார், மா., தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.102.

29. இராமநாதன் செட்டியார், லெப.கரு., சங்காலத் தமிழர் வாழ்வு, ப.43.

30. இளவழகன், சங்க நூற்கட்டுரைகள் (அ) பழந்தமிழர் நாகரிகம், ப.ஙகூ, ச0.

31. வாழ்வியல் களஞ்சியம், தஞ்சை, மெக்கன்சி, ப.5.

32. புறம். 183.

33. கலித். 130:5–7.

34. நாலடி. 131.

35. வெள்ளைவாரனன், க., சங்ககாலத் தமிழ் மக்கள், ப.65.

36. மேலது, ப.66.

37. அறவாணன், க.ப., தமிழ் மக்கள் வரலாறு, ப.270.

38. மேலது, ப.26.

39. நற். 4:5–7.

40. ஐங்குறு. 224.

41. மேலது, 186.

42. இராசரெத்தினம், கு., சங்க இலக்கியத்தில் பொதுமகளிர், ப.39.

43. கலித். 101:36–38.

44. மேலது, 101:39–42.

45. மேலது. 103:66–70.

46. வாழ்வியல் களஞ்சியம் தஞ்சை கென்சி, ப.5.

47. நற். 140:5–7

48. மேலது 198:9–11

49. மேலது 324:6–7

50. அகம். 145:14–17

51. பட்டினப். 20–23

52. சுப்பிரமணியப் பிள்ளை, கா., தமிழர் சமயம், பக்.149–150.

53. இன்னா. 19:3–4.

54. செல்வராசு, நா. சிலம்பு, சங்க கால மரபுகள் கட்டுடைப்பும் கட்டமைப்பும், ப.31.

55. பிள்ளை, க.சு., தமிழர் சமயம், ப.139.

56. நற். 45:1–11.

57. குறிஞ்சிப். 30–34.

58. புறம். 349:1–3.

59. மேலது, 342:1–3.

60. மேலது, 343:10–13.

61. மேலது, 338:8–9.

62. மேலது, 345:10–14.

63. தொல். கற். 141.

64. தொல், பொருளி. 221.

65. செல்வராசு, ந. சிலம்பு, சங்க இலக்கியமும் சமூகவியலும், ப.73.

66. தாயம்மாள் அறவாணன், தமிழ் மக்கள் பண்டும் நேற்றும், ப.23.

67. நற். 2:6–10.

68. மேலது, 66:6–11

69. மேலது, 179:8–10.

70. மேலது, 271:10–12.

71. மேலது, 279:8–11.

72. ஐங்குறு. 371.

73. மேலது, 373.

74. மேலது, 376.

75. செல்வராசு, நா. சிலம்பு, சங்க இலக்கியமும் சமூகவியலும், ப.67.

76. ஐங்குறு. 379.

77. நற். 143:8–11

78. செல்வராசு, நா. சிலம்பு, சங்க இலக்கியமும் சமூகவியலும், ப.67.

# முடிவுரை

மனிதன் வாழ்வதற்கு உயிர் இன்றியமையாதது போன்று உயிர் வாழ்வதற்கு உரிமை இண்றியமையாதது. உரிமைகள் இல்லாத வாழ்க்கை உயிரில்லாத உடல் போன்றது. தன்னலமின்மையும் பொது நலநோக்கும், அனைவரும் உரிமையுடன் வாழ வழி செய்யும். மனிதனைச் செம்மைப்படுத்தும் கருவிகளுள் முதன்மையானது இலக்கியங்கள் ஆகும். உலக மொழிகளிலெல்லாம் முதன்மைப் பெற்றதும் வளமான வாழ்வினையுடையதுமான தமிழ்மொழியில் தோன்றிய இலக்கியங்கள் உலகப் பொதுமைக் கருத்துகளைத் தன்கைத்தே கொண்ட கருத்துக் கருவூலங்கள் பரந்த பார்வையால் உலகினை அளந்த தமிழ்மக்கள் எண்ணத்தில் சிறந்து விளங்கினர் என்பதை சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. தம் நாடு, தம்மக்கள், தம்மொழி தம் இனம் என்று குறுகியப் பார்வையினைக் கொண்டவர்களாக மட்டுமல்லாமல் உலக மக்கள் அனைவரையும் பொதுவில் வைத்துப் பார்க்கும் குணம் கொண்டவர்கள். வளமான வாழ்வியல் விழுமங்களையும், பண்பாட்டுக் கூறுகளையும், அறக்கருத்துக்களையும் உள்ளடக்கிய சங்க இலக்கியங்களைக் களனாகக் கொண்டு “சங்க இலக்கியத்தில் வாழ்வியல் உரிமைகள்” எனும் தலைப்பில் நிகழ்த்தப்பெற்ற இவ்வாய்வில் கண்டுணர்ந்த முடிவுகள்.

❖ பண்டைத் தமிழ் மக்களிடையே பால், இனம் சாதியை அடிப்படையாகக் கொண்ட ஏற்றத் தாழ்வுகள் காணப்பட வில்லை. மனித நேயம் மக்கள் மனதில் நிறைந்து காணப்பட்டது.

❖ இனக் குழுக்களாகப் பிரித்து வாழ்ந்த காலத்தில் மக்களிடையே காணப்பட்ட வழக்கங்களே சட்டங்களாக நிலைப் பெற்றது.

- ❖ மனிதர்கள் அனைவரும் உரிமைகளுடன் பிறக்கிறார்கள் அவ்வுரிமைகள் மாற்றியமைக்கத்தக்கன அல்ல.
- ❖ மனித உரிமைகள் நம் நாட்டிற்குப் புதியவை அல்ல சங்க இலக்கியங்களில் அறக்கருத்துக்களாகவும் வாழ்வியல் பண்புகளாகவும் கருக் கொண்டுள்ளன.
- ❖ சங்க கால மக்கள் மாண்புடன் கூடிய நோயற்ற அமைதியான வாழ்வினை மேற் கொண்டனர்.
- ❖ பெண்கள் போருக்கு செல்லும் உரிமை பெற்றவர்கள் அல்லர். போரின்போது பாசறையில் தங்கி சேவை புரியும் உரிமையைப் பெற்றிருந்தனர்.
- ❖ காதலிக்கும் உரிமையை ஆண் பெண் இருபாலரும் பெற்று இருந்தனர்.
- ❖ சங்க காலத்தில் தனிக்குடும்பங்கள் காணப்பட்டதன்றித் கூட்டுக் குடும்ப வாழ்க்கை முறை காணப்படவில்லை எனினும் ஒற்றுமை நிலவியது.
- ❖ கொடைப்பண்பில் மன்னர்கள் மட்டுமல்லாமல் புலவர்களும், பெண்களும் சிறந்து விளங்கினர்.
- ❖ உணவு உறைவிட உரிமை வலியுறுத்தப்பட்டது.
- ❖ சங்க காலத்தில் ஆணாதிக்கம் மேலோங்கி இருந்து.
- ❖ ஆண்கள் பிள்ளைப் பேற்றிற்காக முதல் மனைவியின் சம்மதத்துடன் இரண்டாம் திருமணம் செய்துக் கொண்டிருந்தனர். இரு தாரமணம் பெண்களிடையே காணப்படவில்லை.
- ❖ ஆண்கள் பொருள் கொடுத்துப் பெண்ணை திருமணம் செய்துக் கொண்டனர்.

- பெற்றோர் சம்மதத்துடன் மணம் முடிக்க எண்ணம் கொண்டோராய் இருந்தனர். பெற்றோர் மணம் செய்விக்க மறுக்கும் தருணத்தில் உயிர்விடத் துணிவராகவும் காணப்பட்டனர்.
- பேச்சுரிமையும், கருத்துரிமையும், மன்னன் தவறு செய்யும் நேரத்தில் இடித்துரிக்கும் உரிமையைப் புலவர்கள் கைவரப்பெற்றிருந்தனரன்றி மக்கள் மன்னனுக்கு இடித்துரைக்கும் உரிமையைச் சங்ககாலத்தில் பெற்றிருக்கவில்லை.
- நட்புரிமை பேணப்பட்டது.
- சங்ககாலத்தில் மக்கள் ஒன்றாகக் கூடும் உரிமையினையும் விரும்பிய இடங்களுக்கு சென்று வரும் உரிமையினைப் பெற்று இருந்தனர்.
- மக்கள் பல்வேறு தொழில்களைச் செய்யும் உரிமை பெற்று இருந்தனர்.
- மக்களுக்குப் பொழுது போக்கு உரிமை இருந்தது.
- மக்கள் தன்நாட்டை விட்டு வேறு நாட்டிற்குச் சென்று வாழும் குடியுரிமையைப் பெற்றிருந்தனர்.
- சங்க கால மன்னர்கள் வழிவழியாக அரசுரிமையை வாரிசுரிமையின்பாற் பெற்றனர். சாதாரண குடிமக்கள் அவ்வுரிமையைப் பெறவில்லை.
- வாக்களிக்கும் உரிமையை ஏழை பணக்காரன் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற பாகுபாடு இல்லாமல் அனைவரும் பெற்றிருந்தனர். வாக்களிப்போர் தேர்தலில் போட்டியிடுபவர் குறித்த செய்திகள் சங்க இலக்கியத்தில் இடம் பெறவில்லை.
- மக்களிடமிருந்து வரி பெறப்பட்டது கண்டித்து மக்களை வருத்தி வரி பெறப்படுவதைப் புலவர்கள் மன்னனுக்கு காண்பித்து உணர்த்தினர்.

- ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் மன்னனுக்கு ஆலோசனைக் கூறுவதற்கு மட்டுமே உரிமை படைத்தவர்கள். இறுதி முடிவு மன்னனின் விருப்பத்தின்படியே இருந்தது.
- நீதி பெறும் உரிமை அனைத்தும் குடிமக்களுக்கும் இருந்தது. நேரிடையாக மன்னனைக் கண்டு முறையிடும் உரிமைப் பெற்றிருந்தனர்.
- தேவைப்படும் நேரத்தில் அளிக்கப்படும் நீதியே உண்மையான நீதி காலம் கடந்து பெறப்படும் நீதி மறுக்கப்பட்ட நீதிக்குச் சமம் என்பதை புலவர்கள் மன்னருக்கு அறிவுறுத்தினர்.
- தொல்காப்பியர் காலத்தில் சமுதாயத்தில் உயர்ந்தோர் மட்டும் துதுக்கு உரியவராகக் காணப்பட்டனர். சங்க காலத்தில் சாதரண குடிமகன் கூட போர் நிமித்தமாக இரண்டு அரசர்களுக்கும் இடையே துதாகச் சென்றிருக்கின்றனர்.
- போரின் போது அறம் கடைப்பிடிக்கப்பட்டது.
- சங்க காலத்தில் குற்றச் செயலில் ஈடுபட்டு மன்னிப்புப் பெற்று விடுதலையடைந்ததாக சங்க இலக்கியத்தில் காணப்பட வில்லை, தன் வீரத்தைக் கண்டு அஞ்சி நடுங்கும் பகைவருக்கு அரசன் மன்னிப்பு வழங்கி இருக்கின்றனர். சாதாரண குடிமக்கள் மன்னிப்பு பெற்றதாக காணப்பெறவில்லை.
- நீதி மறுக்கப்படும் போது தனக்காகத் தானே வழக்காடும் உரிமையை மக்கள் பெற்றிருந்தனர். நீதிபதிகள் குறித்த செய்திகள் காணப்படுகின்றனவேயன்றித் தனக்காக மற்றொருவர் வழக்காடுகின்ற நிலை காணப்படவில்லை.
- போரில் சிறைப்பிடிக்கப் பட்டவர்கள் மிகவும் கீழ்த்தரமாகக் கொடுமையாக நடத்தப்பட்டனர். அதற்குப் பெண்களும் விதிவிலக்கல்ல.

- அரசு பணியில் சேரும் உரிமை அனைவருக்குப் இருந்தது மாற்றித்திறனாளிகள், அயல் நாட்டினரும் அவ்வுரிமையைப் பெற்றுனர்.
- அரசினை விமர்சிக்கும் உரிமையைப் புலவர்கள் பெற்றனர். சங்கால மக்கள் பெற்றிருக்கவில்லை.
- குற்றம் இழைத்தவர்கள் மீதான விசாரணை வெளிப்படையாக நடந்தது.
- வழக்கினை விசாரித்து தீர்ப்பு கூறும் நீதிபதிகளாக உயர்குடியினரே இருந்தனர் என்பது அறியப்படுகின்றது.
- மக்கள் அனைவருக்குமான பாதுகாப்புரிமை புலவர்களால் வலியுறுத்தப்பட்டது.
- மக்களிடையே ஏற்றத்தாழ்வுகள் காணப்பட்டது சமுதாயத்தில். சமத்துவம் இருந்ததாகக் கருதுவதற்கில்லை.
- மக்களனைவருக்கும் பொருளீட்டும் உரிமை இருந்தது.
- மக்களிடையே நுகர்வோர்உரிமை பாதுகாக்கப்பட்டது.
- சுற்றுச் சூழல் காப்புரிமையைப் புலவர்கள் மன்னனுக்கு அறிவுறுத்தியுள்ளனர்.
- சங்க காலத்தில் ஆண் பெண் குழந்தைகள் அனைவரும் விளையாட்டுரிமையில் சிறந்து விளங்கினர்.
- சங்க கால மக்களிடையே சமையப் பொறைவுடைமை காணப்பட்டது. சமயங்கள் பெயரால் சண்டைகள் நிகழ்ந்ததாகக் காணப்பெறவில்லை விரும்பிய மதத்தைப் பின்பற்றும் உரிமைப்பெற்று இருந்தார்கள்.
- பெண்கள் சமுதாயத்தில் சாதரணமாகவே நடத்தப்பட்டனர். பெண்கள் போகப்பொருளாக எண்ணப்பட்டனர்.

- கடல் கடந்து செல்லும் உரிமை பெண்களுக்கு மறுக்கப்பட்டிருக்கின்றது, ஆண்கள் பொருளீட்டச் செல்லும் போது பெண்களை உடன் அழைத்து செல்வது இல்லை. பெண்கள் சிறிய அளவில் வியாபாரம் செய்தனரன்றிப் பெரிய அளவில் வியாபாரம் செய்து பொருளீட்டியதாகக் காணப்பெறவில்லை.

- பெண்களுக்கு மடலேறும் உரிமை இல்லை, காதலை நேரிடையாகத் தம் பெற்றோரிடம் சொல்லும் உரிமை மறுக்கப்பட்டது.

- தலைவன் பரத்தையர் பிரிவு மேற் கொள்ளும் போது அவனைக் கண்டிக்கும் உரிமை பெண்களுக்கு இல்லை சிறிய அளவில் கோபம் கொண்டு ஊடல் கொள்பவளாகவே காணப்படுகின்றனர்.

- கற்புநிலை பெண்களுக்கு வலியுறுத்தப்பட்டது. கைம்மை நிலை பெண்களுக்குப் பெருமை எனக் கற்பிக்கப்பட்டது. கைம்மை நோன்பு நோற்கும் பெண்கள் துன்பம் நிறைந்த வாழ்வினை மேற்கொண்டனர்.

- மகப்பேறு உரிமை பெண்களுக்கு இருந்தது. எனினும் பரத்தையர்களுக்கு இருந்ததாக காணப்பெறவில்லை.

- பரத்தையர், சமுதாயத்தில் உரிமை பெற்றவர்களாகவே காணப்படுகின்றனர். சமுதாயம் அவர்களைப் புறக்கணித்ததாகத் தெரியவில்லை.

- சிறிய குற்றங்களுக்குக் கொடுமையான தண்டனைகள் வழக்கப் பெற்றன. குற்றத்தை ஒப்புக் கொள்ளும் போது தண்டனை குறைக்கப்பட்டிருக்கின்றது.

- சங்க காலச் சமுதாயத்தில் பொய்வழக்குப் போடும் நிலை இருந்துள்ளது நன்கு விசாரித்தறிந்து நீதி மன்றம் அவ்வழக்கை தள்ளுபடி செய்திருக்கின்றது.

- சங்க காலத்தில் சமுதாயம் ஏற்றத் தாழ்வுகள் நிறைந்கக் காணப்பட்டது. செல்வந்தர்கள் வறியவர்களை அடிமைகளாகக் கொண்டிருந்தனர்.
- கல்வி பெறும் உரிமை பொதுவாக அனைவருக்கும் இருந்ததை அறிய முடிகிறது.
- நாடாள்வோர் கல்வி அறிவு பெற்றவர்களாக இருக்க வேண்டும் என்று வலியுறுத்தப்பெற்றது.
- சொத்துரிமை அனைவருக்கும் இருந்தது. பெண்கள் சொத்துரிமை பெற்றிருந்ததாகக் காணப்பெறவில்லை.
- கலப்பு மணம் சமுதாயத்தால் ஏற்றுக்கொள்ளபடவில்லை.
- காதலிக்கும் பெண்கள் சிலர் பெற்றோரால் இற்செறிக்கப் பட்டிருந்தனர்.
- சிறைக்கைதிகளுக்கு இன்று சட்டத்தால் அளிக்கப் பெற்றுள்ள பல்வேறு உரிமைகள் சங்க காலத்தில் இருந்ததாகக் காணப் பெறவில்லை.
- இன்று பெண்ணுரிமை பாதுகாப்பு சட்டத்தால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது.
- சங்க காலத்தில் உரிமைகளைப் போலவே கடமைகளும் வலியுறுத்தப் பெற்றன. புலவர்கள் மன்னனுக்கு கூறும் அறிவுரைகள் யாவும் கடமையை மறைமுகமாக வலியுறுத்த எழுந்தனவேயாகும்.
- சங்க இலக்கியத்தில் பெரும்பாலான அரசியல் உரிமைகளை மக்கள் பெற்றிருந்தனர் என்று அறியப்படுகின்றது.
- சங்க காலத்தில் மக்கள் சமூகப் பண்பாட்டு உரிமைகளைப் பெற்றுச்சிறந்தனர்.

❖ சங்க இலக்கியத்தில் அரசியல் உரிமைகள், சங்க இலக்கியத்தில் சமூகப்பண்பாட்டுரிமைகள், சங்க இலக்கியங்களில் பெண்ணுரிமைச் சிந்தனைகள் காப்பியங்களில் மனித உரிமைகள் எனும் தலைப்புகளில் தனித்தனி ஆய்வு நிகழ்த்தப்பெறின் சங்க இலக்கியங்களில் பொதிந்துள்ள நுண்மைகள் வெளிப்படும் என்பது திண்ணம்

# துணைநூற்பட்டியல்

## முதன்மை நூல்கள்


1. அண்ணாமலை, சுப., – **கலித்தொகை உரை,**
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர்,
முதற்பதிப்பு ஏப்ரல் 2003.

2. இளங்குமரன், இரா., – **புறநானூறு உரை,**
கோவிலூர். மடாலயம்,
கோவிலூர், முதல் பதிப்பு,
ஏப்ரல் 2003.

3. சாரங்கபாணி, இரா., – **பரிபாடல் உரை,**
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர், முதல் பதிப்பு,
ஏப்ரல் 2003.

4. சிங்கார வடிவேலன், அர., – **ஐங்குறுநூறு உரை,**
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர், முதல் பதிப்பு,
ஏப்ரல் 2003.

5. சுப்ரமணியன், ச.வே., – **பத்துப்பாட்டு உரை,**
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர், முதல் பதிப்பு,
ஏப்ரல் 2003.

6. **தமிழண்ணல்** – **குறுந்தொகை உரை,**
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர், முதல் பதிப்பு,
நவம்பர் 2003.

7. **பரிமணம், அ.மா.,** – **பதிற்றுப்பத்து உரை,**
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர், முதல் பதிப்பு,
நவம்பர் 2003.

8. **மகாதேவன், கதிர்.,** – **நற்றிணை உரை,**
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர், முதல் பதிப்பு,
நவம்பர் 2003.

9. **மீனவன், நா.,** – **அகநானூறு உரை,**
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர், முதல் பதிப்பு,
நவம்பர் 2003.

**துணைமை நூல்கள்**

1. **அகத்தியலிங்கம், ச.பொ.,** – **மனித உரிமைகள்,**
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை,
நான்காம் பதிப்பு 2004.

2. **அப்பாத்துரை, கா.,** – **குடியாட்சி, பூம்புகார் பதிப்பு,**
சென்னை 2004.

3. **அப்பாத்துரை, கா.,** – **தமிழன் உரிமை,**
பானு பதிப்பகம்,
திருச்சி, முதல் பதிப்பு 2007.

4. **அறவாணன், க.ப.,** – **அற்றை நாட்காதலும் வீரமும்,**
தமிழ் கோட்டம், சென்னை,
முதற்பதிப்பு 1978.

5. **அறவாணன், க.ப.,** – **தமிழ் மக்கள் வரலாறு,**
தமிழ் கோட்டம்,
சென்னை 1978.

6. **ஆறுமுகம், அ.,** – **சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை அரசு,**
பாவேந்தர் பதிப்பகம், திருச்சி.

7. **இராசமாணிக்கனார், மா.,** – **ஆற்றங்கரை நாகரிகம், (தமிழ்நாடு),**
ராமையா பதிப்பகம்,
முதல் பதிப்பு 2011

8. **இராசரெத்தினம், கு.,** – **சங்க இலக்கியத்தில் பொது மக்கள்,**
நாம் தமிழர் பதிப்பகம்,
சென்னை,
இரண்டாம்பதிப்பு செப்டம்பர்2011

9. **இராசராம் துரை.,** – **பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்,**
தெளிவுரை, முல்லைநிலையம்,
சென்னை – 17,
மறுபதிப்பு 2007.

10. இராமானுஜம், இதயகீதம்., – **இலக்கியத்தில் மனிதநேயம்,**
கலைவாணி வெளியீடு,
சென்னை. 1992

11. இராஜமுத்திருளாண்டி பேரா., – **இலக்கியத்தில் மனித, உரிமைகள்,**
குமரன் பதிப்பகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு 2008

12. இராஜமுத்திருளாண்டி பேரா., – **மனித உரிமை**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை,
ஜீன் 2009.

13. இளங்கோவடிகள் – **சிலப்பதிகாரம்,**
ராமையா பதிப்பகம்,
சென்னை, ஏழாம் பதிப்பு 2014.

14. இளவழகனார் – **பண்டைத்தமிழர் இன்பியல்**
வாழ்க்கை, கழக வெளியீடு,
சென்னை, செப்டம்பர், 1960.

15. எங்கல்ஸ் – **குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
இரண்டாம் பதிப்பு ஆகஸ்ட் 2011.

16. ஏழுமலை, சு., – **தமிழ் இலக்கியங்களில் மனித மதிப்புகள்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை – 2009.

17. ஐயாத்துரை, C., – **மனித உரிமைகள்,**
கங்கா பப்ளிகேஷசன்,
புதுக்கோட்டை, ஜுன் 2012.

18. கதிரேச செட்டியார், மு., – **சுக்கிரநீதி (தமிழாக்கம்)**
பெருமாள் புத்தகாலயம்,
சென்னை. 2012

19. கந்தசாமி, மா., – **தொன்மைத் தமிழக வரலாறு**
நாம் தமிழர்,
முதல் 2013

20. கந்தையா பிள்ளை, ந.சி., – **தமிழர் சரித்திரம்,**
அமிழ்தம் பதிப்பகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு 2002,

21. கந்தையா பிள்ளை, ந.சி., – **தமிழர் பண்பாடு,**
காமராஜர் பதிப்பகம்,
சென்னை, பதிப்பு ஆண்டு 1999.

22. கந்தையா பிள்ளை, ந.சி., – **தென்னிந்திய குலங்களும் குடிகளும்**
நாம் தமிழர்,
நான்காம் பதிப்பு 2014

23. காவேரி, அ., – **சட்டத்தமிழ்,**
மணிவாசகர் பதிப்பகம்,
முதற்பதிப்பு ஜூலை 2002.

24. குழந்தை, புலவர்., – **தொல்காப்பிய காலத் தமிழர்,**
சாரதா பதிப்பு,
மூன்றாம் பதிப்பு மார்ச் 2012

25. கேசவன், கோ., – **மண்ணும் மனித உறவுகளும்,**
சென்னை, புக் ஹவுஸ்,
சென்னை, 1979.

26. கோவிந்தன், கா., – **ஆரியர்க்கு முற்பட்ட தமிழ்ப் பண்பாடு,**
இராமையா பதிப்பகம்,
மூன்றாம் பதிப்பு 2015.

27. கோவிந்தன், கா., – **இலக்கிய வளர்ச்சி,**
அன்னை பதிப்பகம்,
சென்னை 2011.

28. கோவிந்தன், கா., – **காலந்தோறும் தமிழகம்,**
ராமையா பதிப்பு,
முதற்பதிப்பு 2014

29. சசிவல்லி, – **தமிழர் திருமணம்,**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
2003.

30. சண்முக சுந்தரம், வை., – **நம் பண்டை நீதி நடைமுறைகள்,**
கலைக்கருவூலம், சென்னை,
முதற்பதிப்பு டிசம்பர் 1988.

31. சண்முக சுப்ரமணியம், மா., – **சட்டத்தமிழ்,**
கழகப்பதிப்பு,
சென்னை 1985.

32. சாத்தனார் – **மணிமேகலை,**
சாரதா பதிப்பகம்,
சென்னை 7 ஆம் பதிப்பு 2014.

33. சாந்தகுமார், எஸ்., – **மனித உரிமைகள்,**
மக்கள் கண்காணிப்பகம்,
மதுரை. 2006.

34. சாலினி இளந்திரையன் – **சங்கத்தமிழரின் மனித நேய மணி நெறிகள்,**
1995.

35. சிதம்பரனார், சாமி., – **பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும்**

36. சிதம்பரனார், சாமி., – **பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்,**
நம் தமிழர் பதிப்பகம்,
சென்னை – 5,
முதற்பதிப்பு ஜூலை 2012.

37. சிதம்பரனார், சாமி., – **பழந்தமிழர் வாழ்வும் வாக்கும்,**
சாய் விக்ரம் பப்ளிகேஷன்ஸ்,
சென்னை 2013.

38. சிதம்பரனார், சாமி., – **புறநானூறு தமிழர் நாகரிகம்,**
மூன்றாம் பதிப்பு 2015,
நாம் தமிழர் பதிப்பகம்,
சென்னை–5.

39. **சுப்பிரமணிய பிள்ளை, கா., – தமிழர் சமயம்,**
பாரி நிலையம், முதற்பதிப்பு 2010.

40. **சுப்பிரமணியம், கா., – சங்ககாலச் சமுதாயம்,**
ஆய்வுக் கட்டுரைகள்,
நீயு செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, நான்காம் பதிப்பு,
மே 1987.

41. **சுப்பையன், அ., – மனித குடும்பத்தின், மாற்றமுடியாத உரிமைகள்,**
மங்கையர்கரசி பதிப்பகம்,
சிதம்பரம், 1989.

42. **செந்துறை முத்து, – சங்ககால சமுதாயச் சிந்தனைகள்**
அருள் மொழி பதிப்பு.
சென்னை.

43. **சிலம்பு செல்வராசு, ந., – சங்க இலக்கியமும் சமூகவியலும்,**
நீயு செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை 2002.

44. **சௌந்தரபாண்டியன், சு., – தமிழும் சமுதாயமும்,**
பூங்காவனம் பதிப்பு,
சென்னை, 2006.

45. **தர்மராஜ், ஜெ., – மனித உரிமைகள்,**
டென்சி பப்ளிகேஷன்ஸ்,
சிவகாசி. 2014.

46. தாய்யம்மாள் அறவாணன் – **தமிழ் பெண்கள் பண்டும் நேற்றும்**
தமிழ் கோட்டம்,
சென்னை.

47. திருநாவுக்கரசு, க.த., – **தமிழ்ப் பண்பாடு**
உலக தமிழாராய்ச்சி மன்றம்,
சென்னை, 2009.

48. திருநாவுக்கரசு, க.த., – **திருக்குறள் நீதி இலக்கியம்,**
சென்னைப் பல்கலைக்கழகம்,
1977.

49. திருவள்ளுவர் – **திருக்குறள்,**
புலியூர் கேசிகன் உரை,
பும்புகார் பதிப்பு சென்னை,
பன்னிரண்டாம் பதிப்பு 2002.

50. தீபா, மோ., – **மனித உரிமைகள்,**
பல்லவி பதிப்பகம்,
ஈரோடு. 2008.

51. துரைசாமிப்பிள்ளை,
ஔவை, சு., – **புறநானூறு விளக்கவுரை,**
கழக வெளியீடு,
டிசம்பர் 1996

52. தேவ்நாத், சி.எஸ்., – **அடிப்படை மனித உரிமைகள்,**
நர்மதா பதிப்பகம்,
ஆகஸ்டு 2014.

53. **தேவநேயப் பாவாணர், ஞா.,– பண்டைத் தமிழ் நாகரீகமும் பண்பாடும்**
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு மார்ச் 2009.

54. **தேவநேயப் பாவாணர், ஞா.,– பழந்தமிழாட்சி,**
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை,
முதல்பதிப்பு ஜனவரி 2012.

55. **தொல்காப்பியர், – தொல்காப்பியம் (புலியூர்க்கேசிகன் தெளிவுரை)**
பாரி நிலையம்.
ஒன்பதாம் பதிப்பு 1996

56. **நாஞ்சில் ஆனந்தன். – சங்க இலக்கியத்தில் மனித உரிமைகள்,** கண்மணி பதிப்பகம்,
திருச்சி முதல் பதிப்பு, டிசம்பர்,
1999.

57. **நீதிநாயகம் சாவந்த், பி.பி., – மனித உரிமைகள் பின் தள்ளப்படுகின்றன**
சோக்கோ அறக்கட்டளை,
மதுரை, நவம்பர், 2014.

58. **நீலகண்ட சாஸ்திரி, – தமிழர் பண்பாடும் வரலாறும்,**
ஸ்ரீ செண்பகா பதிப்பகம்,
சென்னை. டிசம்பர் 2015.

59. பசுமைக்குமார், – **எவை மனித உரிமைகள்,**
அறிவுப் பதிப்பகம்,
சென்னை,
முதல் பதிப்பு ஜூன் 2008.

60. பாக்கியமுத்து, தி., – **தமிழ் நாவல்களில் மனித உரிமைகளும் மக்கள் போராட்டங்களும்,**
கிறித்துவ இலக்கிய கழகம்,
சென்னை, 1980.

61. பாலசுந்தரம், தி.சு., – **சங்க நூற்கட்டுரைகள்,**
கழக வெளியீடு, சென்னை,
1942.

62. பாலசுந்தரம், தி.சு., – **நாலடியார் உரை,**
கழக வெளியீடு, சென்னை.
எட்டாம் பதிப்பு 1987.

63. பாலசுப்ரமணியன், கு.வெ., – **சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள்,**
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
முதல்பதிப்பு, 1994.

64. பாலதண்டாயுதம், – **இலக்கியத்தில் மனித உரிமைகள்,**
அலைகள் வெளியீட்டகம்,
சென்னை.

65. பாலையன், அ.ப., – **பழந்தமிழகத்தில் நில உரிமை,**
நாம் தமிழர் பதிப்பகம்,
முதல் பதிப்பு 2014.

66. **பாஸ்கல் கிஸ்பாட், எஸ்.ஜெ.,**– **சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள்,**
தமிழ் வெளியீட்டுக்கழகம்,
முதல்பதிப்பு,
மார்ச், 1964.

67. **மகபூப்பாட்ஷா, அ.** – **உச்சநீதிமன்றத்தின் மனித உரிமை தீர்ப்புகள்,**
சோக்கோ அறக்கட்டளை,
மதுரை. முதற்பதிப்பு ஏப்ரல் 2001.

68. **மாணிக்கம். வ.சுப.,** – **தமிழ் காதல்,**
ஹந்து பப்ளிகேஷன்ஸ்,
சென்னை,
முதல் பதிப்பு,
ஜீன் 2009.

69. **மாதையன், பெ.,** – **இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும்,**
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்,
சென்னை.

70. **மாதையன், பெ.,** – **சங்க இலக்கியத்தில் குடும்பம்,**
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ், முதல்
சென்னை, பதிப்பு, ஜீன், 2010.

71. **மாதையன், பெ.,** – **சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம்,**
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்,
இரண்டாம் பதிப்பு,
சென்னை, மார்ச், 2010.

72. **முத்துலக்குமி, வே.,** – **தமிழரின் வாழ்வியல் நெறிகள்,**
அனிதை பதிப்பகம்,
திருச்சி 2004.

73. **முத்தையா, கே.,** – **சங்க காலச் சமுதாயம்,**
பாரதி புத்தகாலையம், சென்னை,
ஐந்தாம் பதிப்பு 2009.

74. **ராஜ் கௌதமன்,** – **பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும்**
தமிழினி,
முதல் பதிப்பு, நவம்பர், 2006.

75. **வள்ளி நாயகம், தி.நெ.,** – **சட்டமும் சமுதாயமும்,**
எழில் பதிப்பகம், 2000.

76. **வானமாமலை, நா.,** – **தமிழர் பண்பாடும் தத்துவமும்,**
அலைகள் வெளியீட்டகம்,
ஜீலை, 2008.

77. **வித்யானந்தன், சு.,** – **தமிழர் சால்பு,**
பாரி புத்தகப் பண்ணை,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 1971.

78. **விவேகானந்தன், மு.,** – **மகளிர் மேன்மைகளும் சட்ட உரிமைகளும்,**
ஏகம் பதிப்பகம்,
டிசம்பர் 2004.

79. விஸ்வநாதன், வ.நா., – **மனித உரிமைகள்,**
பாவை பப்ளிகேஷன்ஸ்,
சென்னை.
மூன்றாம் பதிப்பு ஜூன் 2010.

80. வீரமணி, கீ., – **அசல் மனுதர்ம சாஸ்திரம் ஆய்வுரை**
திரவிட கழக இயக்க வெளியீடு
சென்னை
ஐந்தாம் பதிப்பு 2016

81. வெள்ளைவாரனன், க., – **சங்க காலத்தமிழ் மக்கள்,**
நாம் தமிழர் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1956.

82. வேங்கடாசலம். புலமை., – **இந்திய அரசியலமைப்புச் சட்டம்**
கிரி லா ஹவுஸ், ஆறாம் பதிப்பு,
ஜனவரி, 2015.

83. வேங்கடாசாரி, எ.ஜி., – **மனித உரிமைகள்,**
தமிழகம்,
சென்னை 1959.

84. ஜான் சாமுவேல், ஜி, – **கலையும் கலைக் கோட்பாடுகளும்,**
விஜய் பிரிண்ட்சர்வீஸ் வெளியீடு,
சென்னை. முதல் பதிப்பு 1984.

85. ஜெகதீசன், ஆ., – **இலக்கியத்தில் மனித உரிமைக் கோட்பாடுகள்,**
தாமரை பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்,
சென்னை.
முதல் பதிப்பு செப்டம்பர் 2008.

86. **ஜெயராஜன், P.R.,** – **மனித உரிமைகளும் மனித உரிமைகள் பாதுகாப்புச் சட்டமும்,** ஸ்ரீபதிராஜன் பப்ளிகேஷன்ஸ், சேலம். 2002

87. **ஹேமலதா, ஆர்.,** – **தமிழன் எக்ஸ்பிரஸ் வார இதழ் புலப்படுத்தும் மனித உரிமை மீறல்கள்,** பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, முதல் பதிப்பு டிசம்பர் 2007.

அகராதிகள்

1. **சண்முகம் பிள்ளை, மு.** – தமிழ்–தமிழ் அகர முதலி, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை. 1985

2. **கதிரைவேல் பிள்ளை** – **தமிழ் மொழி அகராதி**

3. .............................. – **தமிழ் லெக்சிகன்** சென்னைப் பல்கலைக்கழகம், 1936

**ஆய்வுக்கோவை**

1. **ஜோசப், ஆ.** (பதிப்பாசிரியர்) – **தமிழ் இலக்கியத்தில் மனித உரிமைகள்,** தமிழ்த்துறை, தூயவளவனார் கல்லூரி, திருச்சி. முதல்பதிப்பு 2002.

**ஆய்வேடு**

1. **அரிகிருட்டிணன், ஆ.,** – **பாரதிதாசன் பாடல்களில் மனித உரிமைகள்**
முனைவர்பட்ட ஆய்வேடு,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை,
ஜனவரி 2008.

2. **கலைமணி, க.,** – **சங்க இலக்கியத்தில் மனித, உரிமைகள்,**
முனைவர்பட்ட ஆய்வேடு,
சென்னைப் பல்கலைக்கழகம்,
2012.

3. **முத்துவேல், மு.,** – **சட்டத்தமிழ் ஓர் ஆய்வு**
முனைவர்பட்ட ஆய்வேடு,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.

**ஆங்கில நூல்கள்**

1. **Adil-ul-yasin** - **Archana Upadhyay**
**Human Rights**
Akansha Publishing
House, 2004.

2. **Bajwa. G.S.** - **Human rights in India**
Ammol PublicationsPvt.Ltd,
New Delhi, 1995.

3. **Humphrey. P.** - **The Universal Declaration of Human Rights Its History** Impct and Judical Character Martinus Nijhoff, 1979

4. **Justice Krishna Iyar. V.R.-** **Human rights and in human wrongs,** B.R. Publishing Co, Delhi, 1990.

5. **Sen. A.N.,** - **Human Rights.,** Srisai law Publications Faridabad, 2002.

# பின்னிணைப்பு - I

அனைத்துலக மனித உரிமைகளின் பிரகடனம் 1948 ஆம் ஆண்டு டிசம்பர் 10 ஆம் நாள் ஐக்கிய நாடுகளின் பொதுப் பேரவை ஒருமனதாக ஏற்றுக் கொண்டது. இது முகப்புரையுடன் 30 உறுப்புகளைக் கொண்டது.

உறுப்பு (1) : கண்ணியம் உரிமைகள் ஆகியவற்றில் சமமாகவும் சுதந்திரமுள்ளவர்களாகவும் எல்லா மனிதர்களும் பிறக்கிறார்கள். அவர்கள் பகுத்தறிவும் மனச்சாட்சியும் படைத்தவர்கள் சகோதர உணர்ச்சியுடன் ஒருவர் பால் ஒருவர் நடந்து கொள்ள வேண்டியவர்கள்.

உறுப்பு (2) : இனம், நிறம், பால், மொழி, மதம், அரசியல் அல்லது வேறு கருத்து. தேசிய அல்லது சமூகக் நலங்கள் சொத்து, பிறப்பு அல்லது வேறு அந்தஸ்து என்ற எவ்விதமான பாகுபாடுமின்றி இந்தப் பிரகடனத்தில் கூறப்பட்டுள்ள எல்லா உரிமைகளையும், சுதந்திரங்களையும் அனுபவிக்கும் உரிமை ஒவ்வொருவருக்கும் உண்டு.

உறுப்பு (3) : ஒவ்வொரு நபரும் வாழ உரிமை பெற்றவர். சுதந்திரமாகவும், உடல் பாதுகாப்பாகவும் வாழ உரிமையுண்டு.

உறுப்பு (4) : அடிமை நிலையில் அல்லது அடிமையை ஒத்த நிலையில் எவரையும் வைத்திருக்கலாகாது. அடிமைத் தனமும் அடிமை வணிகமும் எல்லா வகையிலும் தடுக்கப்பட வேண்டும்.

உறுப்பு (5) : எவரையும் சித்ரவதைக்கு உட்படுத்தலாகாது கொடிய மனிதத் தன்மையற்றதும் இழிவுபடுத்துவதுமான நடவடிக்கைக்கு அல்லது தண்டனைக்கு உட்படுத்தலாகாது.

உறுப்பு (6): எல்லாவிடங்களிலும் சட்டப்படி நடத்தப்பட வேண்டிய நபர் என்று அங்கீகாரம் பெறுவதற்கு ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு.

உறுப்பு (7) : சட்டத்தின் முன் எல்லோரும் சமம். எவ்விதமான பாகுபாடுமின்றி சட்டத்தின் சம பாதுகாப்புக்கு எல்லோரும் உரித்தானவர்கள் இந்தப் பிரகடனத்தை மீறி பாகுபாடு செய்யப்பட்டாலும் அப்படி செய்ய வேண்டுமென தூண்டப்படுவதற்கு எதிராகவும் சம பாதுகாப்புப் பெற எல்லோருக்கும் உரிமையுண்டு.

உறுப்பு (8) : அரசியலமைப்புச் சட்டம் அல்லது வேறு சட்டம் சமர்பிக்கும் அடிப்படை உரிமைகளை மீறிய செயல்கள் தொடர்பாகத் தகுதியுள்ள தேசிய மன்றங்கள் மூலம் சிறப்பான நிவாரணம் பெற ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு.

உறுப்பு (9) : எதேச்சையாகக் கைது செய்வது, காவலில் வைப்பது, நாட்டை விட்டு வெளியேற்றுவது ஆகியவற்றிற்கு எவரையும் உட்படுத்தலாகாது.

உறுப்பு (10) : எதிர் வழக்காடுவதற்கு அவசியமாக எல்லா உத்தரவாதங்களுடன் கூடிய வெளிப்படையான விசாரணையில் சட்டப்படி குற்றவாளி என்று நிரூபிக்கப்படும் வரை தண்டனைக்குரிய குற்றச்சாட்டுக்கு உள்ளாகிய ஒவ்வொரு நபரும் குற்றமற்றவர் என்று கருதப்படுவதற்கு உரிமையுள்ளவர்.

உறுப்பு (11) : ஒரு செயல் அல்லது செயல்படாமையானது, அது நிகழ்ந்த போது தேசிய அல்லது சர்வ தேசிய சட்டப்படி தண்டனைக்குரிய குற்றமாக இருக்கவில்லையென்றால் அந்த குற்றத்தை இழைத்ததாக எவரொருவரும் குற்றவாளியாக்கப் படக் கூடாது. தண்டனைக்குரிய குற்றம் செய்யப்பட்ட காலத்தில், அக்குற்றத்திற்கு பொருந்தக் கூடிய தண்டனையை விட அதிகமான தண்டனையை அளித்தல் கூடாது.

உறுப்பு (12) : அந்தரங்க, குடும்ப, வீட்டு, கடிதம் போக்குவரத்து போன்றவைகளில் எவரொருவரும் எதேச்சதிகாரமாக குறிக்கிடலாகாது. அவரது மரியாதையையும், நற்பெயரையும் தாக்கலாகாது. அத்தகைய குறுக்கீடுகள் அல்லது தாக்குதல்களினின்று சட்டத்தின் பாதுகாப்பினைப் பெற ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு.

உறுப்பு (13) : ஒவ்வொரு நாட்டின் எல்லைக்குள் சுதந்திரமாக எங்கும் சென்று வர ஒவ்வொரு நபருக்கும் உரிமையுண்டு.

தன் நாடு உட்படவேறு எந்த நாட்டை விட்டு வெளியே செல்லவும் தன் நாட்டிற்குத் திரும்பவும் ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு.

உறுப்பு (14) : பிற நாடுகளில் அடைக்கலம் கோரவும் தண்டனையற்று பாதுகாப்பை அனுபவிக்க ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு.

அரசியல் தன்மையற்ற குற்றங்களை இழைத்திருந்தாலும் ஐ.நாவின் நோக்கங்களுக்கும் கோட்பாடுகளுக்கும் முரணான செயல்கள் விஷயத்திலும் இந்த உரிமையை கோரிப் பெற இயலாது.

உறுப்பு (15) : ஒவ்வொருவரும் ஒரு நாட்டைச் சார்ந்து வாழ உரிமை உண்டு தேசிய இனவுரிமையை பெற ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு.

நாட்டின் குடியுரிமையை எவரிடமிருந்தும் எதேச்சையாகப் பறித்து விடலாகாது. தன் நாட்டு குடியுரிமையை மாற்றிக் கொள்ளும் உரிமையையும் எவருக்கும் மறுக்கக் கூடாது.

உறுப்பு (16) : முழு வயதடைந்த ஆண்களும் பெண்களும் இனம், நாடு, மதம் ஆகிய கட்டுப்பாடுகளின்றித் திருமணம் செய்துக் கொண்டு குடும்பம் நடத்த உரிமையுள்ளவர்கள். திருமணம் செய்துக் கொள்வது மணவாழ்க்கை மணமுறிவு ஆகியவற்றில் அவர்களுக்கு சம உரிமையுண்டு.

திருமணம் முடித்துக் கொள்பவர்களின் சுதந்திரமான மற்றும் முழு இசைவுடன் நடத்தப்பட வேண்டும்.

சமூகத்தில் இயற்கையான அடிப்படையான குழு அமைப்பு குடும்பம் ஆகும். சமுதாயமும் அரசும் அதற்கு பாதுகாப்பு அளிக்க வேண்டியவை.

உறுப்பு **(17)** : தனியாகவும் பிறருடன் கூட்டு சேர்ந்தும் சொத்தை வைத்துக் கொள்ள ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு.

எவருடைய சொத்தையும் எதேச்சையாகப் பறித்து விடலாகாது.

உறுப்பு **(18)** : சிந்தனை, மனச்சாட்சி, மத சுதந்திர உரிமை ஒவ்வொருவருக்கும் உண்டு. மதத்தை அல்லது நம்பிக்கையை மாற்றிக் கொள்வதற்குள்ள சுதந்திரமும் இதில் அடங்கும். தனியாக அல்லது பிறருடன் சமுதாயமாகச் சேர்ந்து வெளிப்படையாக அல்லது தனிமையில் தன் மதத்தைத் தோற்றுவிக்கவும் அதை போதிக்கவும் பின்பற்றவும், வணங்கவும் கடைப்பிடிப்பதற்கும் உள்ள உரிமையும் இதில் அடங்கும்.

உறுப்பு **(19)** : ஒரு கருத்தை கொள்ளவும் அதை எடுத்துரைக்கும் ஒவ்வொருவருக்கும் சுதந்திரம் உண்டு. குறுக்கீடின்றி கருத்தை நிலை நிறுத்தும் உரிமை இதில் அடங்கும் எல்லையைக் கடந்து தகவல்களைக் கோரிப் பெறவும் அளிக்கவும் சுதந்திரமுண்டு.

உறுப்பு **(20)** : அமைதியாகக் கூடவும், ஒன்று சேர்ந்து சங்கம் அமைத்துக் கொள்ளவும் ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு.

சங்கத்தில் சேர வேண்டும் என எவரும் நிர்பந்திக்கப்படக் கூடாது.

உறுப்பு **(21)** : தன் நாட்டின் அரசாங்கத்தில் நேரடியாகவோ (அல்லது) சுதந்திரமாகவோ தேர்ந்தெடுக்கும் பிரதிநிதிகளைக் கொண்டு பங்கு பெற ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு.

தன் நாட்டில் அரசு வேலைகளில் பங்கு பெற ஒவ்வொருவருக்கும் சமவுரிமை உண்டு.

மக்களின் விருப்பமே அரசாங்க அதிகாரத்தின் அடிப்படையாக இருக்க வேண்டும். குறிப்பிட்ட கால இடைவெளிகளுடன் உண்மையான தேர்தல் மூலம் மக்களின் விருப்பம் வெளிப்பட வேண்டும். எல்லோருக்கும் சம ஒட்டுரிமையுடன் இரகசியமாக வாக்கெடுப்பு அல்லது அதற்குச் சமமான வாக்குப்பதிவு முறைகளில் தேர்தல் நடைபெற வேண்டும்.

உறுப்பு **(22)** : சமுதாய உறுப்பினர் என்ற வகையில் சமூகப் பாதுகாப்பு பெற ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு. தன் மதிப்பிற்கும் தன் தனி ஆளுமையின் மேம்பாட்டிற்கும் சுதந்திரமாக வளர்ச்சியுறவும் இன்றியமையாத பொருளாதார சமுதாய மற்றும் கலாச்சார உரிமைகளை அந்தந்த நாட்டின் அமைப்புக்கும் வாய்ப்புக்கும் இசைந்த வகையிலும் தேசிய முயற்சியின் மூலமாகவும் சர்வதேச ஒத்துழைப்பைக் கொண்டும் அடைவதற்கு ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு.

உறுப்பு **(23)** : வேலை உரிமை என்ன வேலை செய்ய வேண்டும் என்பதை நிர்பந்தமின்றி தேர்வு செய்து கொள்ள நியாயமான சாதகமான வேலை நிலைமைகளுக்கு எதிராகப் பாதுகாப்பினைப் பெற ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு.

சம வேலைக்கு சம ஊதியம் என பாகுபாட்டின்றி அனை வரும் பெற உரிமை உண்டு.

பெறும் ஊதியம் நியாயமானதாகவும், போதுமான தாகவும், தானும் தன் குடும்பமும் மனித மதிப்புடன் வாழ்வதை உறுதி செய்வதாகவும் இருக்க வேண்டும்.

தொழிற்சங்கங்கள் அமைக்கவும் அவற்றில் சேரவும் உரிமை.

உறுப்பு (24) : ஓய்வுக்கும் உழைப்பில்லா நேரத்திற்கும் உரிமை. வேலை நேரத்திற்கு நியாயமான வரம்பு, காலம், நேரம் சம்பளத்துடன் கூடிய விடுமுறை பெற ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு.

உறுப்பு (25) : தானும் குடும்பமும் ஆரோக்கியமான நல்வாழ்வு நடத்துவதற்குப் போதுமான வாழ்க்கை நிலை, உணவு, உடை, இருப்பிடம், மருத்துவம், பாதுகாப்பு, சமூக நல வசதிகள், வேலையில்லாமை, நோய், உடற்ஊனம், கைம்மை, முதுமை, தன் சக்தியை மீறிய சந்தர்ப்பங்களில் பிழைப்புக்கான வாய்ப்பு இல்லாது போதல் ஆகியவற்றுக்கான எதிரான பாதுகாப்புரிமையுண்டு.

தாய்மையும் குழந்தைப் பருவமும் தனி கவனமும் உதவியும் பெறும் உரிமை தன் குழந்தைத் திருமண உறவின் மூலமாகப் பிறந்தாலும் இல்லாமல் போனாலும் கூட உரிமை உண்டு.

உறுப்பு (26) : கல்வி பெறும் உரிமை, ஆரம்ப கல்வி உரிமை, தொழில் நுட்ப உயர் பள்ளிக் கல்வி, பொதுப் படையாக அனைவருக்கும் கிடைக்க வேண்டும் தகுதியின் அடிப்படையில் மேல் நிலைக் கல்வி எல்லோருக்கும் கிட்டுவதாக இருக்க வேண்டும்.

அக்கல்வி, நட்பும் சகிப்புத் தன்மையும் வளரச் செய்ய வேண்டும்.

பெற்றோர்கள் தங்களது குழந்தைகளுக்கு அளிக்கப்படும் கல்வியின் வகையை முன் கூட்டியே தேர்ந்தெடுத்துக் கொள்ள உரிமை உண்டு.

உறுப்பு (27) : சமுதாயத்தின் வாழ்வில் சுதந்திரமாகப் பங்கு பெறவும், கலைகளை அனுபவிக்கவும் அறிவியல், கலை வளர்ச்சியிலும் அது தரும் நலன்களிலும் பங்கு பெற உரிமை.

தனது அறிவியல் கலை இலக்கியத்துறைப் படைப்புகள் மூலம் தன் அறவழியிலான பொருள் வகை நலன்களுக்குப் பாதுகாப்பு பெறும் உரிமை.

உறுப்பு (28) : இந்தப் பிரகடனத்தில் உள்ள உரிமை சமுதாய மற்றும் சர்வதேச ஒழுங்கமைவை அடைந்து பயன் பெற ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு.

உறுப்பு (29) : ஒவ்வொருவரும் சமூகத்திற்கு ஆற்ற வேண்டிய கடமைகள் உண்டு. அதில் மட்டுமே ஒருவரது ஆளுமையின் தடையற்ற முழு வளர்ச்சி சாத்தியமாகும்.

ஒருவர் தனது உரிமைகளையும் சுதந்திரங்களையும் பயன்படுத்தும் பொழுது மற்றவர்களின் உரிமைகளுக்கும் சுதந்திரங்களுக்கும் உரிய அங்கீகாரத்தையும் மரியாதையையும் பெற்றுத்தரும் நோக்கத்திற்காகவும் மற்றும் ஒரு மக்களாட்சி சமுதாயத்தில் நிலவும் அறம், பொது ஒழுங்கு மற்றும் பொது நலத்தின் நியாயமான தேவைகளை எதிர் கொள்வதற்காகவும் சட்டத்தால் மட்டும் முழுமையாகத் தீர்மானிக்கப்பட்ட வரம்புகளுக்கு அவர் உட்படுத்தப்படுவார்.

இந்த உரிமைகளும் சுதந்திரங்களும் ஐக்கிய நாடுகளின் நோக்கங்களுக்கும் மற்றும் கொள்கைகளுக்கும் முரணாக எந்நிகழ்விலும் பயன்படுத்தலாகாது.

உறுப்பு 30 : இந்தப் பிரகடனத்தில் உள்ள உரிமைகளையும் சுதந்திரத்தையும் அழிக்க நோக்கம் கொண்டு எந்தச் செயலும், அரசும், தனி நபரும் ஈடுபடுவதற்கு உரிமை இருப்பதாக இந்தப் பிரகடனத்தில் உள்ள எதுவும் உட்கிடையாகப் பொருள் தருவதாக விளக்கம் கொள்ளலாகாது.

# பின்னிணைப்பு II

மனித உரிமைகள் பாதுகாப்புச் சட்டம் 1993

பிரிவு 1 : குறுந் தலைப்பும் தொடக்கமும்

பிரிவு 2 : வரையறைகள்

பிரிவு 3 : தேசிய மனித உரிமைகள் ஆணையம் ஒன்றை அமைத்தல்

பிரிவு 4 : தலைவர் மற்றும் பிற உறுப்பினர்கள் நியமனம்

பிரிவு 5 : ஆணையத்தின் உறுப்பினர் ஒருவரை நீக்குதல்.

பிரிவு 6 : உறுப்பினர்களின் பதவிக்காலம்

பிரிவு 7 : சில சூழ்நிலைகளில் உறுப்பினரே தலைவராகச் செயற்படுதல் (அல்லது) அவரது பணிகளை ஆற்றுதல்.

பிரிவு 8 : உறுப்பினர்களின் பணிக்கான விதிமுறைகளும் நிபந்தனைகளும்

பிரிவு 9 : காலியிடம் முதலியன ஆணையத்தின் நடவடிக்கைகளைச் செல்லுபடியற்ற தாக்குதல் கூடாது.

பிரிவு 10 : ஆணையத்தால் நடைமுறை ஒழுங்கு படுத்தப்படல்

பிரிவு 11 : ஆணையத்தின் அலுவலர்களும் பிற ஊழியர்களும்

பிரிவு 12 : ஆணையத்தின் பணிகள்

பிரிவு 13 : விசாரணை தொடர்பான அதிகாரம்

பிரிவு 14 : புலனாய்வு

பிரிவு 15 : ஆணையத்திடம் நபர்களால் செய்யப்படும் வாக்கு மூலங்கள்

பிரிவு 16 : குந்தகமாகப் பாதிக்கப்படலாம் எனப்படக் கூடிய நபர்களின் வாதம் கேட்கப்படுதல் வேண்டும்.

பிரிவு 17 : புகார்களின் மீதான விசாரணை

பிரிவு 18 : விசாரணைக்குப் பிறகான நடவடிக்கைகள்

பிரிவு 19 : ஆயுதப் படைகள் குறித்த நடைமுறை

பிரிவு 20 : ஆணையத்தின் ஆண்டு மற்றும் சிறப்பு அறிக்கைகள்

பிரிவு 21 : மாநில மனித உரிமைகள் ஆணையங்களை அமைத்தல்.

பிரிவு 22 : மாநில ஆணையத்தின் தலைவர் மற்றும் பிற உறுப்பினர்களின் நியமனம்

பிரிவு 23 : மாநில ஆணையத்தின் உறுப்பினர் ஒருவரை நீக்குதல்

பிரிவு 24 : உறுப்பினர்களின் பதவிக்காலம்

பிரிவு 25 : சில சூழ்நிலைகளில் உறுப்பினரே தலைவராகச் செயற்படுதல் அல்லது அவரது பணிகளை ஆற்றுதல்.

பிரிவு 26 : மாநில ஆணையத்தின் உறுப்பினர்களின் பணிக்கான விதிமுறைகளும் நிபந்தனைகளும்

பிரிவு 27 : மாநில ஆணையத்தின் அலுவலர்களும் பிற ஊழியர்களும்

பிரிவு 28 : மாநில ஆணையத்தின் ஆண்டு மற்றும் சிறப்பு அறிக்கைகள்

பிரிவு 29 : தேசிய மனித உரிமைகள் ஆணையத்திற்குத் தொடர்புடைய சில வகை முறைகள் மாநில ஆணையங்களுக்குப் பொருந்தும்

பிரிவு 30 : மனித உரிமைகள் நீதிமன்றங்கள்

பிரிவு 31 : சிறப்பு அரசு குற்றவியல் வழக்குரைஞர்

பிரிவு 32 : மத்திய அரசால் உதவித் தொகையளிப்பு

பிரிவு 33 : மாநில அரசால் உதவித் தொகையளிப்பு

பிரிவு 34 : கணக்குகளும் தணிக்கையும்

பிரிவு 35 : மாநில ஆணையத்தின் கணக்குகளும் தணிக்கையும்

பிரிவு 36 : ஆணையத்தின் அதிகார வரம்பிற்கு உட்படாதவைகள்

# பின்னிணைப்பு – III

## தேசிய மனித உரிமைகள் ஆணையத்திடம் புகார் செய்வதற்கான மாதிரிப் படிவம்

### அ) புகார்தாரரின் விபரங்கள்

1. பெயர் :
2. பால் : ஆண் ☐ பெண் ☐
3. மாநிலம் :
4. முழு முகவரி :
5. மாவட்டம் :
6. பின்கோடு :

### ஆ) சம்பவ விவரங்கள்

1. சம்பவம் நடந்த இடம் (கிராமம் / நகரம்) :
2. மாநிலம் :
3. மாவட்டம் :
4. சம்பவ தினம் :

### இ) பாதிக்கப்பட்டவருடைய விவரங்கள்

1. பாதிக்கப்பட்டவர் பெயர் :
2. மாநிலம் :
3. பாதிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை :
4. முழு விலாசம் :
5. மாவட்டம் :
6. பின்கோடு :
7. மதம் :
8. சாதி :

9. பால் :

(தாழ்த்தப்பட்டோர் / இதர பின் தங்கிய வகுப்பினர் / பொது)

10. வயது :

11. ஊனமுற்ற நபரா :

ஈ) விபரங்கள் சுருக்கமாக / மனித உரிமைகள் சம்பந்தப்பட்ட குற்றச்சாட்டுகள்

உ) புகாரானது ஆயுதப் படைகள் / துணை ராணுவப் படையைச் சேர்ந்தவருக்கு எதிரானதா?

ஆம் ☐ இல்லை ☐

ஊ) இத்தகைய புகார் இதற்கு முன்பு ஏதாவது நீதிமன்றம் / மனித உரிமைகள் ஆணையம் முன்பு தாக்கல் செய்யப்பட்டுள்ளதா?

எ) எந்த அரசாங்க ஊழியருக்கெதிராகப் புகார் செய்யப்படுகிறதோ அவருடைய பெயர் வேலை மற்றும் விலாசம்

ஏ) அரசாங்க ஊழியர் பதிலளிக்க வேண்டிய உயரதிகாரி / அதிகாரிகள் பெயர், பதவி மற்றும் விலாசம்

ஐ) முறையீடு / எதாவது நிவாரணம் ஏதேனும் கேட்டிருப்பின் அவை.

# சங்க இலக்கியத்தில்

# வாழ்வியல் உரிமைகள்

முனைவர் (பிஎச்.டி.) பட்டப் பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெற்ற ஆய்வேடு

ஆய்வாளர்
**ப. எழிலன்,** எம்.ஏ., எம்.ஃபில்., பி.எல்.,
முனைவர் பட்ட ஆய்வாளர்
(பகுதிநேரம்)
தமிழ்த்துறை

நெறியாளர்
முனைவர் **கி. ஆதிநாராயணன்,** எம்.ஏ., எம்.ஃபில், பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
அரசினர் ஆடவர் கலைக்கல்லூரி (தன்னாட்சி)
நந்தனம், சென்னை–600 035.



**தமிழ்த்துறை**
**அரசினர் ஆடவர் கலைக் கல்லூரி**
**(தன்னாட்சி)**
நந்தனம், சென்னை - 600 035.

**ஜனவரி – 2017**

# முடிவுரை

மனிதன் வாழ்வதற்கு உயிர் இன்றியமையாதது போன்று உயிர் வாழ்வதற்கு உரிமை இண்றியமையாதது. உரிமைகள் இல்லாத வாழ்க்கை உயிரில்லாத உடல் போன்றது. தன்னலமின்மையும் பொது நலநோக்கும், அனைவரும் உரிமையுடன் வாழ வழி செய்யும். மனிதனைச் செம்மைப்படுத்தும் கருவிகளுள் முதன்மையானது இலக்கியங்கள் ஆகும். உலக மொழிகளிலெல்லாம் முதன்மைப் பெற்றதும் வளமான வாழ்வினையுடையதுமான தமிழ்மொழியில் தோன்றிய இலக்கியங்கள் உலகப் பொதுமைக் கருத்துகளைத் தன்கைத்தே கொண்ட கருத்துக் கருவூலங்கள் பரந்த பார்வையால் உலகினை அளந்த தமிழ்மக்கள் எண்ணத்தில் சிறந்து விளங்கினர் என்பதை சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. தம் நாடு, தம்மக்கள், தம்மொழி தம் இனம் என்று குறுகியப் பார்வையினைக் கொண்டவர்களாக மட்டுமல்லாமல் உலக மக்கள் அனைவரையும் பொதுவில் வைத்துப் பார்க்கும் குணம் கொண்டவர்கள். வளமான வாழ்வியல் விழுமங்களையும், பண்பாட்டுக் கூறுகளையும், அறக்கருத்துக்களையும் உள்ளடக்கிய சங்க இலக்கியங்களைக் களனாகக் கொண்டு "சங்க இலக்கியத்தில் வாழ்வியல் உரிமைகள்" எனும் தலைப்பில் நிகழ்த்தப்பெற்ற இவ்வாய்வில் கண்டுணர்ந்த முடிவுகள்.

- ❖ பண்டைத் தமிழ் மக்களிடையே பால், இனம் சாதியை அடிப்படையாகக் கொண்ட ஏற்றத் தாழ்வுகள் காணப்பட வில்லை. மனித நேயம் மக்கள் மனதில் நிறைந்து காணப்பட்டது.
- ❖ இனக் குழுக்களாகப் பிரித்து வாழ்ந்த காலத்தில் மக்களிடையே காணப்பட்ட வழக்கங்களே சட்டங்களாக நிலைப் பெற்றது.

- ❖ மனிதர்கள் அனைவரும் உரிமைகளுடன் பிறக்கிறார்கள் அவ்வுரிமைகள் மாற்றியமைக்கத்தக்கன அல்ல.
- ❖ மனித உரிமைகள் நம் நாட்டிற்குப் புதியவை அல்ல சங்க இலக்கியங்களில் அறக்கருத்துக்களாகவும் வாழ்வியல் பண்புகளாகவும் கருக் கொண்டுள்ளன.
- ❖ சங்க கால மக்கள் மாண்புடன் கூடிய நோயற்ற அமைதியான வாழ்வினை மேற் கொண்டனர்.
- ❖ பெண்கள் போருக்கு செல்லும் உரிமை பெற்றவர்கள் அல்லர். போரின்போது பாசறையில் தங்கி சேவை புரியும் உரிமையைப் பெற்றிருந்தனர்.
- ❖ காதலிக்கும் உரிமையை ஆண் பெண் இருபாலரும் பெற்று இருந்தனர்.
- ❖ சங்க காலத்தில் தனிக்குடும்பங்கள் காணப்பட்டதன்றித் கூட்டுக் குடும்ப வாழ்க்கை முறை காணப்படவில்லை எனினும் ஒற்றுமை நிலவியது.
- ❖ கொடைப்பண்பில் மன்னர்கள் மட்டுமல்லாமல் புலவர்களும், பெண்களும் சிறந்து விளங்கினர்.
- ❖ உணவு உறைவிட உரிமை வலியுறுத்தப்பட்டது.
- ❖ சங்க காலத்தில் ஆணாதிக்கம் மேலோங்கி இருந்து.
- ❖ ஆண்கள் பிள்ளைப் பேற்றிற்காக முதல் மனைவியின் சம்மதத்துடன் இரண்டாம் திருமணம் செய்துக் கொண்டிருந்தனர். இரு தாரமணம் பெண்களிடையே காணப்படவில்லை.
- ❖ ஆண்கள் பொருள் கொடுத்துப் பெண்ணை திருமணம் செய்துக் கொண்டனர்.

- பெற்றோர் சம்மதத்துடன் மணம் முடிக்க எண்ணம் கொண்டோராய் இருந்தனர். பெற்றோர் மணம் செய்விக்க மறுக்கும் தருணத்தில் உயிர்விடத் துணிவராகவும் காணப்பட்டனர்.
- பேச்சுரிமையும், கருத்துரிமையும், மன்னன் தவறு செய்யும் நேரத்தில் இடித்துரிக்கும் உரிமையைப் புலவர்கள் கைவரப்பெற்றிருந்தனரன்றி மக்கள் மன்னனுக்கு இடித்துரைக்கும் உரிமையைச் சங்ககாலத்தில் பெற்றிருக்கவில்லை.
- நட்புரிமை பேணப்பட்டது.
- சங்ககாலத்தில் மக்கள் ஒன்றாகக் கூடும் உரிமையினையும் விரும்பிய இடங்களுக்கு சென்று வரும் உரிமையினைப் பெற்று இருந்தனர்.
- மக்கள் பல்வேறு தொழில்களைச் செய்யும் உரிமை பெற்று இருந்தனர்.
- மக்களுக்குப் பொழுது போக்கு உரிமை இருந்தது.
- மக்கள் தன்நாட்டை விட்டு வேறு நாட்டிற்குச் சென்று வாழும் குடியுரிமையைப் பெற்றிருந்தனர்.
- சங்க கால மன்னர்கள் வழிவழியாக அரசுரிமையை வாரிசுரிமையின்பாற் பெற்றனர். சாதாரண குடிமக்கள் அவ்வுரிமையைப் பெறவில்லை.
- வாக்களிக்கும் உரிமையை ஏழை பணக்காரன் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற பாகுபாடு இல்லாமல் அனைவரும் பெற்றிருந்தனர். வாக்களிப்போர் தேர்தலில் போட்டியிடுபவர் குறித்த செய்திகள் சங்க இலக்கியத்தில் இடம் பெறவில்லை.
- மக்களிடமிருந்து வரி பெறப்பட்டது கண்டித்து மக்களை வருத்தி வரி பெறப்படுவதைப் புலவர்கள் மன்னனுக்கு காண்பித்து உணர்த்தினர்.

- ❖ ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் மன்னனுக்கு ஆலோசனைக் கூறுவதற்கு மட்டுமே உரிமை படைத்தவர்கள். இறுதி முடிவு மன்னனின் விருப்பத்தின்படியே இருந்தது.
- ❖ நீதி பெறும் உரிமை அனைத்தும் குடிமக்களுக்கும் இருந்தது. நேரிடையாக மன்னனைக் கண்டு முறையிடும் உரிமைப் பெற்றிருந்தனர்.
- ❖ தேவைப்படும் நேரத்தில் அளிக்கப்படும் நீதியே உண்மையான நீதி காலம் கடந்து பெறப்படும் நீதி மறுக்கப்பட்ட நீதிக்குச் சமம் என்பதை புலவர்கள் மன்னருக்கு அறிவுறுத்தினர்.
- ❖ தொல்காப்பியர் காலத்தில் சமுதாயத்தில் உயர்ந்தோர் மட்டும் தூதுக்கு உரியவராகக் காணப்பட்டனர். சங்க காலத்தில் சாதரண குடிமகன் கூட போர் நிமித்தமாக இரண்டு அரசர்களுக்கும் இடையே தூதாகச் சென்றிருக்கின்றனர்.
- ❖ போரின் போது அறம் கடைப்பிடிக்கப்பட்டது.
- ❖ சங்க காலத்தில் குற்றச் செயலில் ஈடுபட்டு மன்னிப்புப் பெற்று விடுதலையடைந்ததாக சங்க இலக்கியத்தில் காணப்பட வில்லை, தன் வீரத்தைக் கண்டு அஞ்சி நடுங்கும் பகைவருக்கு அரசன் மன்னிப்பு வழங்கி இருக்கின்றனர். சாதாரண குடிமக்கள் மன்னிப்பு பெற்றதாக காணப்பெறவில்லை.
- ❖ நீதி மறுக்கப்படும் போது தனக்காகத் தானே வழக்காடும் உரிமையை மக்கள் பெற்றிருந்தனர். நீதிபதிகள் குறித்த செய்திகள் காணப்படுகின்றனவேயன்றித் தனக்காக மற்றொருவர் வழக்காடுகின்ற நிலை காணப்படவில்லை.
- ❖ போரில் சிறைப்பிடிக்கப் பட்டவர்கள் மிகவும் கீழ்த்தரமாகக் கொடுமையாக நடத்தப்பட்டனர். அதற்குப் பெண்களும் விதிவிலக்கல்ல.

- அரசு பணியில் சேரும் உரிமை அனைவருக்குப் இருந்தது மாற்றித்திறனாளிகள், அயல் நாட்டினரும் அவ்வுரிமையைப் பெற்றுனர்.
- அரசினை விமர்சிக்கும் உரிமையைப் புலவர்கள் பெற்றனர். சங்கால மக்கள் பெற்றிருக்கவில்லை.
- குற்றம் இழைத்தவர்கள் மீதான விசாரணை வெளிப்படையாக நடந்தது.
- வழக்கினை விசாரித்து தீர்ப்பு கூறும் நீதிபதிகளாக உயர்குடியினரே இருந்தனர் என்பது அறியப்படுகின்றது.
- மக்கள் அனைவருக்குமான பாதுகாப்புரிமை புலவர்களால் வலியுறுத்தப்பட்டது.
- மக்களிடையே ஏற்றத்தாழ்வுகள் காணப்பட்டது சமுதாயத்தில். சமத்துவம் இருந்ததாகக் கருதுவதற்கில்லை.
- மக்களனைவருக்கும் பொருளீட்டும் உரிமை இருந்தது.
- மக்களிடையே நுகர்வோர்உரிமை பாதுகாக்கப்பட்டது.
- சுற்றுச் சூழல் காப்புரிமையைப் புலவர்கள் மன்னனுக்கு அறிவுறுத்தியுள்ளனர்.
- சங்க காலத்தில் ஆண் பெண் குழந்தைகள் அனைவரும் விளையாட்டுரிமையில் சிறந்து விளங்கினர்.
- சங்க கால மக்களிடையே சமையப் பொறைவுடைமை காணப்பட்டது. சமயங்கள் பெயரால் சண்டைகள் நிகழ்ந்ததாகக் காணப்பெறவில்லை விரும்பிய மதத்தைப் பின்பற்றும் உரிமைப்பெற்று இருந்தார்கள்.
- பெண்கள் சமுதாயத்தில் சாதரணமாகவே நடத்தப்பட்டனர். பெண்கள் போகப்பொருளாக எண்ணப்பட்டனர்.

- கடல் கடந்து செல்லும் உரிமை பெண்களுக்கு மறுக்கப்பட்டிருக்கின்றது, ஆண்கள் பொருளீட்டச் செல்லும் போது பெண்களை உடன் அழைத்து செல்வது இல்லை. பெண்கள் சிறிய அளவில் வியாபாரம் செய்தனரன்றிப் பெரிய அளவில் வியாபாரம் செய்து பொருளீட்டியதாகக் காணப்பெறவில்லை.

- பெண்களுக்கு மடலேறும் உரிமை இல்லை, காதலை நேரிடையாகத் தம் பெற்றோரிடம் சொல்லும் உரிமை மறுக்கப்பட்டது.

- தலைவன் பரத்தையர் பிரிவு மேற் கொள்ளும் போது அவனைக் கண்டிக்கும் உரிமை பெண்களுக்கு இல்லை சிறிய அளவில் கோபம் கொண்டு ஊடல் கொள்பவளாகவே காணப்படுகின்றனர்.

- கற்புநிலை பெண்களுக்கு வலியுறுத்தப்பட்டது. கைம்மை நிலை பெண்களுக்குப் பெருமை எனக் கற்பிக்கப்பட்டது. கைம்மை நோன்பு நோற்கும் பெண்கள் துன்பம் நிறைந்த வாழ்வினை மேற்கொண்டனர்.

- மகப்பேறு உரிமை பெண்களுக்கு இருந்தது. எனினும் பரத்தையர்களுக்கு இருந்ததாக காணப்பெறவில்லை.

- பரத்தையர், சமுதாயத்தில் உரிமை பெற்றவர்களாகவே காணப்படுகின்றனர். சமுதாயம் அவர்களைப் புறக்கணித்ததாகத் தெரியவில்லை.

- சிறிய குற்றங்களுக்குக் கொடுமையான தண்டனைகள் வழக்கப் பெற்றன. குற்றத்தை ஒப்புக் கொள்ளும் போது தண்டனை குறைக்கப்பட்டிருக்கின்றது.

- சங்க காலச் சமுதாயத்தில் பொய்வழக்குப் போடும் நிலை இருந்துள்ளது நன்கு விசாரித்தறிந்து நீதி மன்றம் அவ்வழக்கை தள்ளுபடி செய்திருக்கின்றது.

- ❖ சங்க காலத்தில் சமுதாயம் ஏற்றத் தாழ்வுகள் நிறைந்கக் காணப்பட்டது. செல்வந்தர்கள் வறியவர்களை அடிமைகளாகக் கொண்டிருந்தனர்.
- ❖ கல்வி பெறும் உரிமை பொதுவாக அனைவருக்கும் இருந்ததை அறிய முடிகிறது.
- ❖ நாடாள்வோர் கல்வி அறிவு பெற்றவர்களாக இருக்க வேண்டும் என்று வலியுறுத்தப்பெற்றது.
- ❖ சொத்துரிமை அனைவருக்கும் இருந்தது. பெண்கள் சொத்துரிமை பெற்றிருந்ததாகக் காணப்பெறவில்லை.
- ❖ கலப்பு மணம் சமுதாயத்தால் ஏற்றுக்கொள்ளபடவில்லை.
- ❖ காதலிக்கும் பெண்கள் சிலர் பெற்றோரால் இற்செறிக்கப் பட்டிருந்தனர்.
- ❖ சிறைக்கைதிகளுக்கு இன்று சட்டத்தால் அளிக்கப் பெற்றுள்ள பல்வேறு உரிமைகள் சங்க காலத்தில் இருந்ததாகக் காணப் பெறவில்லை.
- ❖ இன்று பெண்ணுரிமை பாதுகாப்பு சட்டத்தால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது.
- ❖ சங்க காலத்தில் உரிமைகளைப் போலவே கடமைகளும் வலியுறுத்தப் பெற்றன. புலவர்கள் மன்னனுக்கு கூறும் அறிவுரைகள் யாவும் கடமையை மறைமுகமாக வலியுறுத்த எழுந்தனவேயாகும்.
- ❖ சங்க இலக்கியத்தில் பெரும்பாலான அரசியல் உரிமைகளை மக்கள் பெற்றிருந்தனர் என்று அறியப்படுகின்றது.
- ❖ சங்க காலத்தில் மக்கள் சமூகப் பண்பாட்டு உரிமைகளைப் பெற்றுச்சிறந்தனர்.

- சங்க இலக்கியத்தில் அரசியல் உரிமைகள், சங்க இலக்கியத்தில் சமூகப்பண்பாட்டுரிமைகள், சங்க இலக்கியங்களில் பெண்ணுரிமைச் சிந்தனைகள் காப்பியங்களில் மனித உரிமைகள் எனும் தலைப்புகளில் தனித்தனி ஆய்வு நிகழ்த்தப்பெறின் சங்க இலக்கியங்களில் பொதிந்துள்ள நுண்மைகள் வெளிப்படும் என்பது திண்ணம்